

# ஸ்திரீபால சிகிச்சை



டாக்டர்:
S. A. சின்னப்பா, M. D. (ஹோமியோ)
அவர்கள் இயற்றியது.



# STHIRI BALA SIGITCHAI

# ஸ்திரீபாலசிகிச்சை

இஃது

ஸ்திரீகளுக்கும், பாலர்களுக்கும் தனிப்பட சம்பவிக்கும்
ரோகங்களையும் அவற்றிற்கான செய்முறை,
கைமுறை, ஆங்கிலமுறை, ஆதிய
மும்முறைகளிலும் சிகிச்சை
களை விளக்கி

டாக்டர். S. A. சின்னப்பா, M. D. (ஹோமியோ)

அவர்களாலியற்றப் பெற்றது.



B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
திருமகள்விலாச அச்சியந்திரசாலை,
சென்னை.

---

 1932. [Price Rs 3-8-0.

# முகவுரை

# PREFACE

மக்கட் பிறப்பிலும் மாதர் பிறப்பு மாண்பு மிக்கது. மாதர் பிறப்பிலும் பல மக்களை பெற்ருற்குச் சிறப்பு மிக்கது. பல மக்களைப் பெறுதற்கு உடல் நலன் தேடுதல் யாவர்க்கு முற்றது. உடல் நலன் தேடா தொழியின் உயிர்வாழ்த லரிது. அஃதினைப்பற்றியே, உயிர் வாழ்தற்கும், மரணத்திற்கு மிடையே சம்பவிக்கும் பிணியாகிய கூற்றுவனை யகற்றுவதற்கு முன்னிருந்த முனிவர்களும், மகரிஷி களும் உற்றுணர்ந்து, கற்று தேர்ந்து உலகில் மக்களை உய்விக்கு முபாயமாகிய உத்தம வைத்திய முறைகளை உணர்த்தி மறைந்தனர்.

பிற்காலத்தினர் அம் முறைகளைக் கைநழுவ விட்டு மேலை நாட்டு முறையில் மையல் கொண்டு, தாய் தேச சாஸ்திரங்களை புறக்கணித் தனர். அதன் பயனாய் இன்றைக்கு நம் தம் பூர்வீக வைத்திய சாஸ்திர கலையானது க்ஷீணித்துவிட்டதெனின் மிகைப்படாது. மேலை நாட்டு வைத்திய முறையும், சுயதேச சிகிச்சா முறையும் ஒன்றென்பதை அறிவாளிக ளறியாதிலர்.

எவ்வாருயினும், நம் சுயதேச பாஷையில் சவிஸ்தாரமான வைத்திய நூற்கள் இல்லை யென்பதை மறுப்பாரு மிலர். அதனி லும், ஸ்திரீ ஜாதிக்கேற்பட்ட தனித்தனி வியாதிகளுக்கும், பாலர் களுக்குற்ற பல பிணிகளுக்கும் சிகிச்சை செய்முறைகளைக் கூறும் நூற்கள் ஒன்றுமில்லை யெனின் அது மிகையாகாது. ஆதலால், அப் பெருங் குறையை நீக்குவான் வேண்டி, என்னின் சிற்றறிவுக் கேற்ற முறையில், அற்ப அநுபவத்திற் கண்ட உண்மைகளை விளக்கி, திரட்டி **ஸ்திரீ பால சிகிச்சை** என்ற இந்நூலை உலகார்த்த மாக வெளியிடத் துணிந்தேம்.

ஸ்திரீ பால சிகிச்சையாய இந்நூலில் மாதர்களுக்குண்டா யிருக்கும் ஜனநேந்திரிய விகல்பத்தினு லேற்படும் பல பிணிகளையும், பாலர்களின் திரேக வங்கஸ்திர மின்மையா லேற்படும் பல ரோகங் களையும் விளக்க அவற்றிற்கான ஆங்கில தமிழ் சிகிச்சைகளை சம்பூரணமாகவும், யாவரு மெளிதில் கையாண்டு இலகுவான வித மாகவும் வரையப்பட் டிருக்கிறது.

இயல்பாகவே மாதர்கள் நாணமுடையவர்கள். அன்னார்களுக் கேற்படும் ரோகங்களை சவிஸ்தாரமாக பிற ஆடவ மருத்துவரிடம் கூற சங்கூஜமுற்று வருந்துகின்றன ரென்பதை யறியாதாரில்லை. ஆதலால், கற்றறிந்த மாதர்க ளொவ்வொருவரும் தாங்களே பிறர் சகாயமின்றி சிகிச்சை செய்துகொள்ளத் தக்கவிதமா யுபதேசிக்கும் நூல் "ஸ்திரீ பால சிகிச்சை" ஒன்றுதா னென்பதை அநுபவ வாயி லாகக் கண்டறியலாம்.

யாம் முதல் முதல் தொகுத்த நூல் இந்த ஸ்திரீ பால சிகிச் சையேயாகும்; இதற்குப்பின் மருத்துவர்களுக்கும், மருத்துவ மாண வர்களுக்கும் இன்றியமையாதவிதமாக மேலை நாட்டு வயித்திய நுண் ணிய ஆராய்ச்சிக் கேற்றவிதமாகவும் ஆயுர் வேத, சித்த வயித்திய சாஸ்திரத்தின் உட்பொருட்களையும் ஒருங்கே திரட்டி, விளக்கி அறியாதவர்களையும் அனைத்துமறிந்த வயித்தியனுக்கும் ஆற்ற லளிக் கும் விதமாய் அரிய பெரிய மறை பொருள்களைக் கூறும். **"சிகிச்சா சாரம்"** என்ற நூலை வெளியிட எண்ணியுள்ளோம்.

இந்த ஸ்திரீ பால சிகிச்சையை விரைவில் முடிக்கவேண்டு மென்று துரிதமாக வேலைகள் நடத்தப்பட்டதால், சிற்சில விடங் களில் ஆங்கில தமிழ் எழுத்துப் பிழைக ளேற்பட்டுவிட்டதற்கு வருந்துகின்றோம். எனினும், அவைகள் அதிகமின்மையால் தனித்த தொரு "பிழைத் திருத்தம்" சேர்த்தல் அவசியமின் றென்றெண்ணி விடுத்தோம். பெரும் பொருளிலும் களங்கமுண்டெனில், என் சிற்றறிவால் தொகுக்கப்பட்ட இந்நூலில் சிற்சில குறைக ளிருப்பி னும், அவைகளைக் கழூஉவி நன்கமைத்துக்கொள்ளுதல் அறிவாளி கள் கடனும்.

கடைசியாக யாம் எந்த நோக்கத்துடன் இந்நூலை வெளியிடத் துணிந்தோமோ அந்த உன்னத பயனை இந்நூலினு லனைவரு மடைந்து இன்புற்று வாழ்ந்து யாமும் இதுபோன்ற பல பிரயோசன முள்ள உயரிய நூற்களை தமிழுலகிற்குதவும் வண்ணம் யெபக்கு ஊக்கமளித் தாசீர்வதிக்கும்படியாகவும் பிரார்த்திக்குறோம்.

**சண்முகநாதபுரம்.**
**29-8-32.**

**ஆக்கியோன்.**

# ஸ்திரீ பால சிகிச்சை

# TREATMENT FOR DISEASE OF WOMEN AND CHILDREN

---

## ஜனநேந்திரிய புற அவயவங்கள்

## EXTERNAL ORGANS OF GENERATIONS

ரோகம் என்பது மக்களில் ஆண் பெண் என்ற இரு வகுப்பிற்கும் பொதுவானதாகும். ஆனல் ஆண்களினின்றும் பெண்களுக்கு அவர்களின், கர்ப்பாசய சம்பந்தமாகவும்; ஜனநேந்திரிய விகல்ப்பத்தின் சம்பந்தமாகவும், பலத் தனிப்பட்ட ரோகங்கள் சம்பவிக்கின்றன. அவ்விதமாக ஸ்திரீகளுக்குண்டாகும் ரோகங்களைக் கூறுமுன் அவர்கள் ஜனநேந்திரிய அமைப்பைப்பற்றிக் கொஞ்சம் சொல்லவேண்டியது அவசியமென்று எண்ணுகிறேன்.

ஸ்திரீ ஜனநேந்திரியங்களில் - கடிதடம் (Mons Veneris) என்பது மாதர் இரு துடைகளும், அடிவயிறும் சந்திக்கும் பாகத்தில் பிதுக்கமாக, மயிரடர்ந்திருப்பதுதான். இக் கடிதடமானது மர்மஸ்தான எலும்(Pubis)பின் மேல் எடுப்பாக கிணம் கிறைந்து சற்று மேடாகக் காணப்படும். இந்த மேட்டின் நடுவில் பள்ளமாகவும், பிளவாகவும் காணப்படுவதே அல்குல், உபஸ்தம், துய்யம் அல்லது யோனித்துவாரம் (Canal of vagina-Vulva) என்று சொல்லப்படும். இதுதான் மற்றெல்லா ஜனநேந்திரிய உருப்புகளிலும் பிரதானமானதாகும். சம்போகத்திற்கு; புணர்ச்சிக்கு; சிற்றின்பசுகத்திற்கு; மூலப்பொருளாகவும், சிசு உற்பத்திச்செய்வதற்கு, விந்துவை கருக்குழியில் கொண்டு சேர்க்கும் மூலவழியாகவு மிருக்கிறது. இந்த யோனித்துவாரமானது ரப்பர் போன்று விரிந்து சுருங்கும் பிரக்கிருதி வாய்ந்ததாய் பல நரம்புக் கூட்டங்களினல் பின்னப்பட்டதா யிருக்கிறது. ஸ்திரீகள் பிரசவிக்கும் சமயம், அதிகமாக விரிந்து கொடுத்துப் பழயபடிச் சுருங்கி விடுகிறது.

யோனித்துவாரத்தின் பக்கத்திற் கொன்ருக மடிந்து நீண்டு எழும்பியுள்ள சருமங்களை உதடுகள், நிதம்பங்கள் (Labia Majora) என்று சொல்லப்படும். இவைகளில் கிணம் கிறைந்திருப்பதினல் ரோமங்கள் முளைத்திருக்கும். நிதம்பங்களின் உட்புறத்தில் யோனிலிங்கத்தின் தொடர்பாக விடபம் வரையில் இரண்டாக மடிந்த ஒரு ஜவ்வு மடிப்பு, அது உள்ளுதடு என்று சொல்லும், (Labia Minora) உள் நிதம்பங்களிருக்கும். கன்னியழியாதப் பெண்

களுக்கும், சம்போகமின்றி யிருக்கும் பெண்களுக்கும், இந்த உள்ளுதடுகள் மேல் நிதம்பங்களால் மறைக்கப்பட்டிருக்கும். பிள்ளை பெற்றவர்களுக்கும், வயது சென்றவர்களுக்கும் வெளியில் மடிந்து தெரியும். இவ் வுதடுகளானவை ஆசனத் துவாரத்தின் பக்கமாகக் கீழ் இறங்கி ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டிருக்கும். இதுவே விடபம் (Fourchette) என்று சொல்லப்படும். பிரசவிக்கும் சமயம் சிசுவின் சிரசு உதயத்தினல், இவ் வடிபாகம் கிழிந்து போகும். அதற்கே விடபக்கிழிவு (Laceration of Perineum) என்பர். இதனைக் கவனமாய்ப் பார்க்காதுபோனல் புண்ணுகிப் பல ஹிம்ஸைகள் உண்டாகலாம்.

யோணிக்கும் கருப்பையிக்குமிடையே மிக நுண்ணிதமான ஓர் சவ்வு, (Hymen) அது யோனிப்படலமென்றுக் கூறுவர். இதன் மத்தியிலுள்ள துளையின வழியாகவே மாதாந்திர சூதகம் வெளிப்படும். இத்துவாரமில்லாதிருப்பின் கிரமமாய் வெளியாக வேண்டிய சூதகம் தடைப்பட்டு, இன்னலை விளைவிக்கும். இந் நுண்ணிதச் சவ்வானது முதல் சம்போகக் காலத்தில் கிழிவுபட்டு விடுகிறது. அப்போதுதான் புதிதாகச் சம்போகிக்கும் பெண்களுக்கு வலியுண்டாகிறது. இந்த யோனிப்படலமானது சிலருக்குத் தடிப்பாகவும், சிலருக்கு மெல்லியதாகவுமிருக்கும். இதனல் புணர்ச்சிக்கும் சிசு உற்பத்திக்கும் இடையூறு ஏற்படலாம். சிலருக்கு இயற்கையிலேயேனும், வியாதியினுலேனும் இப்படலமானதில்லாதிருக்கலாம். இந்தயோனிப்படலம் மூன்றுவிதமாகவிருப்பதாகச் சொல்லப்படுகிறது. சிலருக்குத் துளையில்லாமலும் (Imperforate) சிலருக்குப் பல துளைகளையுடையதாக (Crileriform) வும், மற்றும் சிலருக்கு (Annular) சவ்வின் மத்தியில் ஒரே சிறுதுளை உள்ளதாகவும் இருக்குமென்று சொல்லப்படுகிறது. யோனித்துவாரமானது சாதாரணமாகத் திரேக பிரக்கிருதிக்குத் தக்கபடி நீளமாகவும் குறுகலாகவும் இருக்கலாம். இதையே புழக்கை என்பர். இப்புழக்கையானது முன்பக்கத்திலிருந்து சினைப்பையின் கடைசி வரையில் ஏறக்குறைய ஆறு அங்குலத்திற்குக் குறையாமலும், பன்னிரண்டங்குலத்திற்கு அதிகமாகாமலும் இருக்கும்.

கடிதடத்திற்குக்கீழ் உள்கிதம்பங்களுக்கு மேலாக, தாமரை மொட்டுப் போன்று இருக்கின்ற உருப்பை யோனிலிங்கம் (Clitoris) சுழிமுனை, மோக்துள், என்று கூறுவர். ஸ்திரீகளுக்குப் போக காலங்களில் இன்பத்தைத் தரும் இடம் இதுவே. ஆடவர்களுக்கு ஆண்குறியில் எவ்வாறு நரம்புகள் கூட்டங் கூட்டமாய் பின்னிக்கொண் டிருக்கின்றனவோ, அவ்வாறே மாதர்களுக்கு யோனிலிங்கத்தில் நரம்புகள் கூட்டமாகப் பின்னிக்கொண்டிருப்பதினல் அவ்விடத்தில் அதிகமான கூச்சம் ஏற்படுகிறது. இதற்கேதாவது கெடுதல் நேர்ந்துவிட்டால் மாதர்களுக்குப் போக இச்சையே அற்றுப் போகும், ஆனல் ஆண்களுக்கு மூத்திரம் வருவதுபோல் பெண்களுக்கு

யோனித் துவாரத்திலிருந்து சிறுநீரானது வராமல் தனிப்பட்ட வழியாக வருகிறது.

யோனிலிங்கத்தின் கீழும் மேலும் உள்ள பள்ளங்களில் மூத்திரதாரையின் துவாரம் காணப்படும். இதன் வழியாகத்தான் மூத்திரம் வெளிப்பட்டு யோனித் துவாரத்தின் வழியே வந்து விழுகிறது. இதற்குத்தான் **மூத்திரத் தாரை** (Urethra) என்று சொல்லப்படும். இந்த நீர் தாரையானது மூத்திரப்பையிலிருந்து $1\frac{1}{2}$-அங்குல நீளமுள்ளதாய் யோனிலிங்கத்திற்கு $\frac{3}{4}$-அங்குல தூரத்தில் அமைந்திருக்கிறது.

## ஜனநேந்திரிய உட்புற அவயவங்கள்

## INTERNAL ORGANS OF GENERATIONS

யோனித்துவாரத்திலிருந்து கர்ப்பாசயம் வரையில் செல்லும் பாதைக்குக் **கர்ப்பக்குழல்** (Vagina) எனப்படும். இதன் வெளிப்புற அடைப்பானது (Posterior Wall) விடபத்துடன் சம்பந்தப்பட்டு, ஆசனவாய்க்கு $1\frac{1}{2}$-அங்குலத்திற்குமேல் இணைக்கப்பட்டிருக்கிறது. இதன் நீளம் சற்றேறக்குறைய நான்கு அங்குலங்களாக இருக்கலாம். கர்ப்பக்குழலின் உட்புற அடைப்பானது சற்றேறக்குறைய $1\frac{1}{2}$-அங்குல நீள முள்ளதாய், நீர்த்தாரையுடனும் மூத்திரப்பையுடனும் சம்பந்தப்பட்டிருக்கும். இதற்கு (Anterior Wall) உட்புற **கர்ப்பக்குழல்** என்பர். தொய்வாகச்செல்லும் கர்ப்பக்குழல் பெருங்குடல் உட்புற சுவற்றோடு இணைக்கப்பட்டிருக்கிறது. கர்ப்பக்குழலின் தலைப்பை, **கர்ப்பப்பாதை வளைவு** (Vault of Vagina) என்பர். கர்ப்பக்குழல் மூன்றுவித சதைப்பொருளால் மூடப்பட்டிருக்கிறது. முதலாவது, மெல்லிய சவ்வுகளினால் வெளிபக்கம் மூடப்பட்டும்; இரண்டாவது, கனதியில்லாத சதைப்பொருளால் மூடப்பட்டும், மூன்றாவது, பொடிநரம்புகளாலும், பசைப்போன்ற வஸ்துக்களாலும் மூடப்பட்டு மிருக்கின்றன. கர்ப்பமுண்டாயிருக்கும் சமயங்களில் இரண்டாவதான சதைப்பொருள் விருத்தி யடைந்து கர்ப்பக்குழலை வலுசெய்கின்றது.

**கருப்பையானது** (Uterus-Womb) அடிவயிற்றுக்குள் மலக்குடலுக்கும், மூத்திரப்பைக்கும், மத்தியில் தொங்கிக்கொண்டிருக்கும். இதற்குக் **கருக்குழி, கர்ப்பாஸயம்** எனப் பல பெயருண்டு. இப்படி மலக்குடலுக்கும், மூத்திரப்பைக்கும் மத்தியில் அமைக்கப்பெற்றிருப்பதினால், கருக்குழியிலுண்டாகும் கர்ப்புத்துக்கு, வெளியில்படும் அடிக்குத்துகளினால் சேதமுண்டாகாது. கருப்பையானது விரியவும், சுருங்கவும் ஏதுவாக யிருப்பதினால், கர்ப்பாஸயத்தில் பிண்டம் பெருக்கப் பெருக்க கர்ப்பாசயமும் விரிந்து இடம் கொடுக்கின்றது. கர்ப்பாசயமானது கூண்டுபோல் ஏறக்குறைய மூன்று அங்குல நீளமும் இரண்டு அங்குல அகலமும்; கனத்தில் ஒரு அங்குலமுமாக

அமைந்திருக்கும். கன்னிப்பருவத்தில் $1\frac{1}{2}$-ராத்தல் எடையுள்ளதாகவிருக்கும். இக் கர்ப்பக் கோளறையானது, பிரசவித்த ஸ்திரீகளுக்கு 2-ராத்தல் நிறையுள்ளதாகி விடுகிறது. முக்கியமாகக் கர்ப்பப்பையை மூன்று பாகமாகப் பிரிக்கப்படும். (1) **அடிபாகம்** (Fundus) இது கர்ப்பப்பையின் அகன்ற பாகத்திற்குச் சொல்லப்படும். இந்த பாகத்தையே சினைப்பாதையின் தலைபாகத்தில் இணைக்கப்பட்டிருக்கிறது. (2) **உடல்** (Body) இந்தப்பாகம், மத்தியபாகமாகவுள்ளது. (3) **கழுத்து** (Cervix), இதுவே சிறுத்திருக்கும் கீழ்பாகமாகும். இது உருண்டையாக ஒரு அங்குல நீளத்திலுள்ளது. இது மூலை வாட்டமாகக் கர்ப்பக் குழலுடன் இணைக்கப்பட்டிருக்கும். இதிலுள்ள துவாரத்திற்கு **கருப்பைவாய்** (Osuteri) எனப்படும். குழந்தைகள் பெற்றவர்களுக்கு இந்தக் கருப்பை வாயானது நீளவட்டமாகவும், பிரசவியாத கன்னிகைகளுக்கு நல்ல வட்டமாகவு மிருக்கும். கருப்பையின் பிரதான தொழில், மாதாந்திர ருதுவை சுரப்பிக்கிறதும், கரு உற்பத்தியானபோது வளர்ப்பதுமான சுவாவப்பிரக்கிருதியுடையதாக விருக்கிறது. கருப்பைக்கும், இரைப்பைக்கும் சம்பந்தமிருக்கிறதென்று தெரிந்து கொள்ளுவதும் முக்கியமானதாகும். இதனால்தான் கருப்பகாலத்தில் ஸ்திரீகளுக்குக் காலை வாந்தி, ஒக்காளம், அன்னத்துவேஷம் முதலியவைகள் உண்டாகின்றன.

**சினைப்பை**:—(Ovaries) கருப்பையின் பக்கத்திற் கொன்றாக இணைக்கப்பட்டிருக்கும், இலுப்பைக் கொட்டைப்போன்று திரண்டு வெண்மையாக வெவவேறு பைகளில் இருக்கும் இரண்டு பிஜங்களேயாகும். இதை **நாதாசயங்கள், கருக்கூடுகள், ஸ்திரீபீஜங்கள், முட்டைப்பைகள், சினைப்பைகள்** எனக் கூறுவர். ஆடவர்களுக்குப் பீஜம் யெவ்வாறு சுக்கிலம் உற்பத்திசெய்ய உதவுகின்றனவோ, அவ்வாறே சுரோணிதம் உண்டுபண்ண இந்த இரண்டும் உபயோகமாகுகின்றன. இவைகள் நீளத்தில் $1\frac{1}{2}$-அங்குலமுள்ளதாகவும், அகலத்தில் ஒரு அங்குல முள்ளதாகவும் அமைந்திருக்கின்றன. சினைப்பையின் எடை $1\frac{1}{2}$-அல்லது 2-டிராம் இருக்கலாம். இவைகளின் உருவங்கள் பிரஷ்டைக்காலங்களிலும், கருப்பற்றியிருக்கும் காலங்களிலும், பெரிதாகி மற்றைப்போது சுவாபரூபத்தை யடைகின்றன. ஒவ்வொரு சினைப்பையிலும் எறக்குறைய ஐம்பதினாயிரம் முட்டைகள் அதாவது **நாதக்குமிழ்கள்** (Greaflan Vesicles) காணப்படுமென்றாலும், நன்றாகப் பக்குவப்பட்டவைகள் பத்து முதல் மும்பது வரையில்தான் யிருக்கும். இவைகள் முத்துக்கள் போன்றிருக்கும். அளவில் ஒரு அங்குலத்தை 180-பாகமாக வகுத்தால் எவ்வளவு சிறிதாயிருக்குமோ அவ்வளவு பொடியாக விருக்கும். அணுதரிசினியினால் பார்த்தால் நாதகக்குமிழிலுள்ள **நாதமானது** (Ovum) குமிழ்போன்று தோன்றும். அந்தக் குமிழினுள் மங்கலாக விருக்கும் புள்ளிக்குக் கரு (Yolk) என்பர். மாதாந்திர ருது காலங்களில் இந்த நாதக்குமிழ் முற்றி வெடித்து, நாதவாகியின் குஞ்சம்

போன்ற முனையானது, கருப்பையைப் பிடித்துக்கொள்ளும். அக்காலங்களில் வெளிப்படும் நாதமானது, நாதவாயிலின் வழியேயிறங்கிக் கருக்குழியில் விழுந்து ஸ்ரோணிதத்தோடு சேர்ந்து, யோனித்துவாரத்தின் வழியாக வெளிப்பட்டு விடும்.

**சினைப்பாதை:—**(Fallopian Tubes) இது கருப்பையின் பக்கத்திற்கொன்றாக நீண்டு, ஒரு முனை கருப்பையின்மேல் முனையோடும், மற்றொன்று குஞ்சம்போல் விரிந்து அந்தரமாயு மிருக்கும். இவற்றை நாதவாகி, நாதக்குழல் அல்லது சினைப்பாதை என்றெல்லாம் கூறுவர். இது மூன்று நான்கங்குல நீளமுள்ளதாய், சிறு உட் துவாரமுமுள்ளதாய்க் கருக்குழியோடு சம்பந்தப்பட்டிருக்கும்.

## சூதகம்

## MENSES

கர்ப்பக்கோளறையின் உட்புற அமைப்புகள் எண்ணிறந்த நுண்ணிய இரத்த நரம்புகளால் பொருத்தப்பட்டிருக்கிறது. அவ்விதமான பொருத்து நரம்புகளில் உண்டாகும் ஓர்வித கழிப்பொருளே சூதகமென்று கூறப்படும். இதைப் பெண்கள் பரிபக்குவமடைந்த அறிகுறியாக முதல் முதல் காணப்பட்டு, பிறகு 28-நாட்களுக்கொருமுறை வழக்கமாக முதல் சூதகம் கண்டதிலிருந்து 30-வருஷங்கள் வரையில் வெளியாகிவரும். பெண்கள் பக்குவமடைந்தார்களென்றால், சிசு உற்பத்தியாவதற்கு தகுதியானார்கள் என்று தான் அருத்தம். அப்போதுதான் அவர்களின் கருக்குழி வலிமையடைந்து, சினைப் பைகளின் நாதக்குமிழ்கள் முற்றிக் கர்ப்பமடைவதற்குச் சரீரசக்தியை அடைந்திருப்பதாக அறியலாம். அந்தச் சமயம் பெண்கள் பெரும் சரீர மாறுதல்களை யடைகின்றனர். தங்கள் சிறுவயதில் அறியாத நாணமான உணர்ச்சிகளையும், திரேகத்தில் அதிக கூச்சத்தையும் அடைகின்றனர். மார்பானது திரண்டு புதிய தோற்றத்தைத் தருவதோடு, மர்மஸ்தானங்களில் மயிர்முளைத்துப் பக்குவவதிகளாக ஆகுகின்றனர்.

முதல் சூதகம் கண்டதிலிருந்து மூன்றாண்டுகள்வரை பெண்கள் கர்ப்பகோளங்கள் வலுவை அடைவதில்லை. கரு பற்ற தகுதியுடையவர்களாகிறார்களே தவிர, கருப்பையின் வலிமை குறைவாகவும், கருவை வளர்க்கும் சத்து குறைந்தும், பிரசவிக்கப் போதுமான தைரியம் இல்லாமலுமிருக்கிறார்கள். பக்குவமடைந்த மூன்றாண்டுகளுக்குள் கருத்தரிப்பது கஷ்டம்தான். ஒருக்கால் கருத்தரித்தாலும் அகாலப்பிரசவமாகமுடியும். அப்படியின்றி பூரண கர்ப்பமாகி சிசு ஜனித்தாலும் போதிய பலத்துடனின்றி, அகாலமரணத்தை யடையும். சிறுவயதில் கர்ப்பவதிகளாவதினால் தாய்மார்களும், பலயீனம் படுவதோடின்றி, வாலிப மரணத்திற்கும் ஆளாகிறார்கள்.

உஷ்ணதேசமாகிய நம் இந்து தேசத்தில் பெண்கள் ஒன்பதுமுதல் 12-வயதுக்குள் ருதுவாவார்கள். சரீர சௌக்கியமுள்ள பெண்களுக்கு வெளிப்படும் சூதகமானது நல்ல சிகப்பு நிறமாக வாகிலும், குசும்பா வர்ணமாக வாகிலு மிருக்கும். சூதகமானது சிலருடைய திரேக பிரகிருதிக்குத் தக்கவாறு மூன்று தினங்களுக்குள் நின்றுவிடும்; மற்றும் சிலருக்கு மூன்றுதினங்களுக் கதிகமாகவு மிருந்து நிற்கும். பொதுவாக சூதகம் 4-முதல் 7-நாள்வரை படுமென்று சொல்லலாம். முதல் ருதுவான பெண்களுக்கு 9-நாள் வரையும், 16-நாள்வரையும் இருப்பதுண்டு. பொதுவாக மாதாந்திர தீட்டானது 28-நாளைக் கொருதரம் அவசியம் காணவேண்டியதென்றாலும், திரேகப்பிரகிருதியின் காரணமாக ஒன்றல்லது இரண்டுநாள் முன்பின்னாகக் காணலாம். அது குற்றமாகாது. நீண்டலாகி, கட்டோடு சூதகம் நின்று மறுபடி 15-தினத்திற்குள் சூதகம் படுமானால் ரோகம் என்றுதான் சொல்லவேண்டும். சூதகமானது, கிரமமாய் வெளிப்படுவதினால் ஸ்திரீ ஜாதிக்கே திரேக நன்மையைத் தருவதோடு, கருவுற்றிருக்கும் காலத்தில் கருவை வளர்க்கவும், குழந்தை பெற்றபின், சிசு ஆகாரமாகிய பாலாகவும் மாறி உதவிசெய்கிறது. கருவுற்றிருக்கும் ஸ்திரீகளுக்கும், சிசுக்களுக்குப் பால் கொடுக்கும் மாதர்களுக்கும், ருதுவாகாத சிறுவர்களுக்கும், சூதகத்தை விருத்திசெய்து வெளிப்படுத்தும். ருதுவர்த்தனகார- (எம்மனகாக் Emmenagogue) குணமுள்ள மருந்துகளைக் கொடுக்கக்கூடாது.

## கர்ப்பம்

## PREGNANCY

மாதர்கள் வீட்டு விலக்கமாவதற்கு சில தினங்களுக்கு முன்னாவது பின்னாவது கருப்பையிலுள்ள நாதக்குமிழ்கள் ஒன்றிரண்டு முற்றி வெடித்து வெளிப்படுகிற நாதமானது, சினைப்பையிலிருந்து இறங்கி கருக்குழியில் விழுந்திருக்கும். அந்தச் சமயம் சம்போகம் செய்வதால், ஆணின் விந்துக் கிருமிகள் நாதத்தோடு சேர்ந்து கருத்தரிக்கும். இக் காலங்களில் சூதகமானது வெளிப்படாது. கருவுற்றிருக்கும் ஸ்திரிகளுக்கு, இயற்கையைவிட திரேகம் பூரிப்படையும்; நாடிப் பெருத்துப் படபடப்புடன் நடக்கும்; காலையில் வாந்தியுண்டாகும்; கண்கள் மஞ்சளாகவேனும் நீலநிறமாகவேனும் இருக்கும்; மயக்கம் காணும்; எச்சில் பெருகும்; ஸ்தனம் விம்மி பெருக்கும்; ஸ்தனத்தின் மத்தியில் காணும் விருத்தமானது கருத்திருக்கும்; ஸ்தனங்களில் முடிச்சுகள்போற் றோன்றும்; வயிறு படிப்படியாய்ப் பெரிதாகும்; மூன்றும் மாதம் பிண்டத்தின் சலனம் தாய்க்குத் தெரியும்; ஆனால், கர்ப்பமுண்டாயிருக்கும் விவரம் ஒன்றும் தெரியாமலே சில மாதர்களுக்குக் கர்ப்பம் வளர்வதுண்டு. எப்படியிருப்பினும், புருஷனுடன் வாழ்க்கையிலிருக்கும் சுக தேகியான ஒரு பெண்ணின் தீட்டானது நின்றுவிட்டால் கர்ப்பமென்றுதான் நிச்சயிக்கவேண்டும்.

## பொய்க் கர்ப்பம், மெய்க் கர்ப்பம்

## MOLE PREGNENCY AND PREGNENCY

பொய்க் கர்ப்பமானது, நாதவிந்துக் கிருமிகளால் ஏற்பட்டதேபோல் சகல அறிகுறிகளு மிருந்தாலும், வயித்திய முறையில் அதனை சோதிப்பதனுல் தெரிந்துகொள்ளலாம். மாதாந்தர வீட்டு விலக்கக் காலங்களில் கிரமமாய் வெளியாகவேண்டிய சூதகமானது அதிகமான வாயுவைக்கொண்டு, சூதகத்தை வெளிவிடாது கட்டிப்போலாக்கிவிடும். இக் கட்டியும் சிசுவைப்போலவே அசைவதுமுண்டு. தக்க மருந்துகள் உண்பதினுல் கட்டி கரைந்து வெளிப்பட்டுவிடும். சிலருக்குப் பிரசவ வேதனைபோன்றே இடுப்பு வலியும் கண்டு கட்டி விழுந்துவிடுவது முண்டு. இதைக் கவனித்துச் சிகிச்சை செய்யப்படாவிட்டால் அசம்பாவிதமாக மாறிவிடும். கர்ப்பமானது மூன்று மாதங்களுக்கு முன் அசையாது. பொய்க் கர்ப்பம் பிரதமத்திலேயே சலனத்துடனிருக்கும். கர்ப்பமானுல், அடிவயிறு சிறுகச் சிறுகப் பெருகும். பொய்க் கர்ப்பமானுல், ஆரம்பத்திலேயே வயிற்றைப் பெரிதாக்கிவிடும். கர்ப்பமானுல், அடிவயிற்றை அழுத்திப்பார்க்க, கல்போல் அழுந்தாதிருக்கும். அழுந்தினுலும், மெது மெதுவாகவே பழைய ஸ்திதியை யடையும்; ஆனுல், பொய்க்கர்ப்பம், ஒரு விரலால் அழுத்த அழுந்தி, விரலையெடுத்த உடனே பள்ளம் மறைந்துவிடும். இன்னும் பொய்க் கர்ப்பம், மெய்க் கர்ப்பம் என்றறிய, கர்ப்பவதியின் மூத்திரத்தை அசையாமல் ஒரு பாத்திரத்தில் பிடித்து, நான்கு நாள் வரை வைத்திருந்து அதை வடிகட்டிப் பார்த்தால், நுண்ணிய கிருமிகள் காணப்படும். பொய்க் கர்ப்பமாகில் கிருமிகள் காணப்படாது.

இரவில் கர்ப்பஸ்திரீ படுக்கைக்குப்போகு முன், மேற்றேல் நீக்கிய வெள்ளைப்பூண்டின் ஒரு பல்லை யோனித் துவாரத்தில் உட்செலுத்தி வைத்திருந்து விடிந்தவுடன் எடுத்துப்பார்க்க, வாசனையின்றி இருக்குமானுல் கர்ப்பமென்றறியலாம். பொய்க் காப்பமானுல், வெள்ளைப்பூண்டின் மணம் மாருதிருக்கும். இப் பொய்க் கர்ப்பத்தையே சூதகவாயு; சூதககட்டி; பொய்க்கர்ப்பம்; சூதககுன்மம்; இரத்தவாத குன்மக்கட்டி என்று சொல்லுவர். இதற்கு ஏற்ற சிகிச்சையை இரத்தவாத குன்மக்கட்டி என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

கர்ப்பம் ஒருக்காலும் 11 மாதங்களுக்குமேல் இருப்பதில்லை; ஆனுல், பொய்க் கர்ப்பமானுல் வருட கணக்கிலுமிருக்கும்.

## பிண்டோற்பத்தி

## DEVELOPMENT OF FOETUS

முதல் மாதத்தில் கருவானது யாதொரு பருமனையும் அடையாமல் ஒரு அங்குலத்தில் மூன்றில் ஒரு பாகமுள்ள அளவாகப் புழுப்போன்றிருக்கும். இதை

மூடிக்கொண்டிருக்கும் சவ்வுக்குப் (Amnion) பனிக்குட உட்புற சவ்வு என்று கூறுவர். இதனுள் பனி நீர் என்ற தண்ணீர் இருக்கும். இதன் மேல் புறத்திற்குச் சோரியன் (Chorion) மேல்புற சவ்வு என்றும் கூறுவர். இம் மாதக் கடைசியில் கருவின் அளவானது முக்கால் அங்குலமாக வளர்ந்து, முப்பத்தைந்து கிரைன்ஸ் எடையுள்ளதாக விருக்கும். முதல்மாதக் கடைசியில் ஸ்திரீகளுக்கு வாயில் எச்சில் அதிகமாக ஊறி, வாந்தியை உண்டு பண்ணும். ஆகாரத்தின்மேல் வெறுப்படையச்செய்யும். அடிவயிற்றில் சிறு வலியாக விருக்கும்.

இரண்டாம் மாதத்தில் கருவானது ஒன்றரை அங்குல நீளமுள்ளதாக விருக்குமென்றாலும், உருவம் ஒன்றும் தோன்றாது உருண்டையாகவிருக்கும். இப்போது இதன் எடை 3 டிராமாகும். நெஞ்சின் மேல் எலும்பும், தாடையெலும்பும் உற்பத்தியாயிருக்கும். சிரசானது உடலைவிட பெரியதாக இருக்கும். இம் மாதக் கடைசியில் முதல் மாதத்தில் உண்டாகிய குறிப்புகளோடு, முலைக் காம்பைச்சுற்றி கருப்புவட்டமாகவிருக்கும். ஸ்தனங்கள் விம்மி வலிபுண்டாகும். ஸ்தனத்தை அழுத்திப்பார்க்க முடிச்சுபோன்ற சழலைகள் தோன்றும். பச்சை நாம்புகள் புடைத்திருக்கும். மசக்கை என்று சொல்லும் தலைசுற்று உண்டாகும். சில ஸ்திரீகளுக்கு வயிற்றுவலி அதிகமாக விருக்கும்.

மூன்றாம் மாதத்தில் பிண்டமானது ஒரு சுண்டெலியின் பருமனுகவும், இரண்டவுன்ஸ் எடையளவுள்ளதாகவு மிருக்கும். கைகால் விரல்கள் தோன்றும். ஆயினும், மலத்துவாரமும் வாயும் திறக்கப்படாதிருக்கும். ஆண் பெண் குறிகள் தோன்றும். இம்மாத கடைசிக்குள் நுரையீரல், கல்லீரல், மண்ணீரல், இரப்பை, குடல் முதலியவைகள் உற்பத்தியாகிவிடும். காதும் மூக்கும் தோன்றும். இருதயகோசத்தின் அறைகள் திறக்கப்பட்டு இரத்த ஓட்டமுண்டாகும். கர்ப்பத்தில் தாய்க்குச் சலனம் தெரியும். இப்போது பிண்டத்தின் நீளம் 4½ அங்குலங்களுக்குக் குறையாமலிருக்கும். கர்ப்பவதிக்கு வயிறும் ஸ்தனங்களும் பெருகும். முலைக்காம்பை நசுக்கினால் பால்போன்ற ஒரு பதார்த்தம் வெளியாகும். சப்த வேணுவை (Stethoscope) அடி வயிற்றில் வைத்து உற்றுக் கேட்டால் இரத்தம் ஓடுவது நன்றாகத் தெரியும். சில கர்ப்பஸ்திரீகளுக்கு இந்த மாதத்தில் வயிற்றை முறுக்கி வலிக்கும் சிலருக்கு இரத்தபேதி உண்டாவதுமுண்டு.

நான்காமாதத்தில் பிண்டமானது ஒரு எலியின் அளவாக பெருத்துவிடும். குறியின் வித்தியாசங்கள் தெளிவா யிருக்கும். வாயும் ஆசனமும் திறக்கப்பட்டுவிடும். கைகால் விரல்களில் நகங்கள் தோன்றும். பித்தப்பையுண்டாகி மேற்குடலில் மலமிருக்கும். சதைபிடித்து வளர்ந்து, சருமம் சிவந்த நிறமாக விருக்கும். தலையில் ரோமம் காணப்படும். இக்காலத்தில் சிசு ஜனித்தால் சற்று நேரம் உயிரோடிருந்து இறந்துவிடும். சிசு ஆறு அங்குல நீளமுள்ளதாயும்,

4 முதல் 6 அவுன்ஸ் எடையுள்ளதாயு மிருக்கும். சிசு அசைவது கர்ப்ப ஸ்திரீகளுக்கு நன்ருகத் தெரியும். சப்தவேணுவை (Stethoscope) தொப்புள் சமீபத்தில் வைத்துக்கேட்டால், இருதய நடை நன்ருகப்புலப்படும். இப்போது சிசுவின் இருதய நடையானது ஒரு நிமிஷத்திற்கு 130 முதல் 150 வரையிருக்கும். இப்போது சில ஸ்திரீகளுக்கு அடிவயிறு வலித்து, யோனித்துவாரத்தின் வழியாக இரத்தம் காணப்படுவதுண்டு.

ஐந்தாம் மாதத்தில் சிசுவிற்கு நகமும், தலைமயிரும் நன்ருகத் தெரியும். தோல் மிருதுவாயிருக்கும்; இருதயம் குண்டிக்காய் பெரிதாகியிருக்கும். தலை பெரிதாகி சரீரத்திற்குத் தகுந்தாப்போல் ஆகிவிடும். பித்தப்பை நன்ருகவிருக்கும். மூளையின் வெள்ளை வஸ்து உண்டாகியிருக்கும். ஐந்தாம் மாதக் கடைசியில் சிசுவின் அங்கங்கள் எல்லாம் பூரணமாயிருக்கும். சிசுவானது 7 முதல் 11 அவுன்ஸ் எடையோடும், 10 முதல் 11 அங்குல நீளத்தோடுமிருக்கும். இப்போது சர்ப்பஸ்திரீகளுக்கு அடிவயிறு பெரிதாகி முன்னுக்கு வந்திருக்கும். மர்மஸ்தானத்தில் விரலை விட்டு தூக்கினுல் உதய ஜலத்தில் சிசு மேல் கிளம்புவது நன்ருகத் தெரியும். இக்காலத்தில் சில ஸ்திரீகளுக்கு வயிறு அதிகமாய் வலிக்கும். சிலருக்குப் படுத்திருந்தும் உட்கார்ந்திருந்தும் எழுந்திருக்கும்போது, கைகால்களைச் சுண்டியிழுத்து பிடித்துக்கொள்ளும். சிலருக்குக் கால் பாதங்களில் வெடிப்புக் கண்டு எரிச்சல் உண்டாகும்.

ஆரும் மாதத்தில் கண்ணிமைகள் தெரியும்; ஆனுல், ஒட்டிக்கொண்டிருக்கும். கால் விரல் சிவந்து பெரிதாகவிருக்கும். பித்தப்பையில் பித்தம் சேர்ந்திருக்கும்; ஆனுல், கசப்பிராது. பீஜங்கள் குண்டிக்காய்க்குச் சமீபித்திருக்கும். பெருங்குடலில் மலமிருக்கும். சிசுவின்பேரில் மாவு (Vernix Caseosa) பாசி போன்ற வழுவழுப்பான வஸ்து படிந்திருக்கும். ஆரு மாதத்தில் சிசுவானது 12 முதல் 13 அங்குல நீளமுள்ளதாய் இரண்டு ராத்தல் எடையுடையதாயிருக்கும். கர்ப்ப ஸ்திரீகளின் அடிவயிறு பெருத்து தொப்புள் உயரத்திற்கு வந்திருக்கும். இக்காலத்தில் குழந்தை பிறந்தால் இரண்டுமணி நேரங்களுக்குமேலிராது. இக்காலங்களில் சில கர்ப்ப ஸ்திரீகளுக்குக் குடல் அழற்சி கண்டு சுற்றி வலிக்கும். சிலருக்கு வயிறு முறுமுறுக்கி வலிக்கும். சிலருக்கு நீர் சுருக்குக் காணும்.

ஏழாமாதத்தில் சிரசில் மூளை அழுத்தமாகிவிடும். கண்ணிமைகள் திறந்து கொள்ளும்; மூத்திரக் குண்டிக்காய் கெட்டிப்பட்டுவிடும். பீஜம் கீழ் இறங்கியிருக்கும். எலும்புகள் வலுபெற்றிருக்கும். சிசு 14 அங்குல நீளமுள்ளதாயும், 3 ராத்தல் எடையுள்ளதாயுமிருக்கும். இக்காலத்தில் குழந்தைப் பிறந்தால் பிழைத்துக்கொள்ளும்; ஆனுல், வெகு ஜாக்கிரதையாக வளர்க்கப்படவேண்டும். கர்ப்ப ஸ்திரீகளுக்கு அடிவயிறு பெருத்துத் தொப்புளுக்கு இரண்டங்குலம் முன்

வந்திருக்கும். இக்காலங்களில் சில கர்ப்ப ஸ்திரீகளுக்கு வயிறுவலி அதிகமாகும், சிலருக்குப் பொய்ப் பிரசவவேதனையும் தோன்றும்.

எட்டாமாதத்தில் சிசுவின் சிரசில் மூளை வலுவடைந்து, அதில் செந்நிற நரம்பு ரேகைகள் காணப்படும். திரேகம் சிவந்து ரோமத்துவாரங்களும், ரோமக் குருத்துகளும் நுண்ணிதமாகத் தோன்றும். மேனி முழுவதும் மாவு அதிகமாய் படர்ந்திருக்கும். பீஜங்கள் சற்று கீழிறங்கியிருக்கும். இப்போது சிசு 16 அங்குலம் நீளத்தோடு 4 ராத்தல் எடையுள்ளதாயிருக்கும். மர்மஸ்தானத்தில் விரலைவிட்டுப் பார்க்க, சிசுவின் தலை தென்படும். இப்போது சில ஸ்திரீகளுக்குப் பசி மந்திக்கும். சிலருக்குக் கைக்காலசதி ஏற்படும்.

ஒன்பதாம் மாதத்தில், சிசு பூரண அமைப்பை அடைந்து விடுகிறது. பெண் சிசுவைப்பார்க்கிலும், ஆண் சிசு கொஞ்சம் எடை அதிகமாகவேயிருக்கும். மூளை வெண்மையாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆகியிருக்கும். மலம் ஆசனத்தில் இருக்கும். ரோமங்கள் நன்றாய் வளர்ந்திருக்கும். ஆண் குழந்தையுடைய பீஜமானது, எட்டாமாதத்திலிருந்த விடத்திலிருந்து மெதுவாகக் கீழிறங்கி, பீஜ கோடித்துவாரங்கள் வழியாக வந்து, அண்டப்பையில் சேர்ந்துவிடும். பெண் சிசுக்களுக்குக் குறிகள் தெளிவாகத் திறந்து, யோனி உள் உதடுகளை மேலுதடுகள் மூடிக்கொண்டிருக்கும். இப்போது சிசுவின் நீளம் 18 அங்குலமாகவிருக்கும். எடையில் $6\frac{3}{4}$ ராத்தல் இருக்கும். கர்ப்ப ஸ்திரீகளின் வயிறு நெஞ்சுக்குழி வரையில் பெருத்திருக்கும். சில ஸ்திரீகளுக்குக் கர்ப்பம் வலியாகத் தோன்றும்.

பத்தாமாதம்: இதன் ஆரம்பத்திலோ, அல்லது மாத நடுவிலோ பிரசவம் ஏற்படும். இம்மாதமுதலில் சிசு ஏறக்குறைய 22 அங்குல நீளமுள்ளதாகவும், $7\frac{1}{2}$ ராத்தல் எடையுள்ளதாகவுமிருக்கும். இக்காலத்தில் கர்பப ஸ்திரீகளுக்கு யோனியிலிருந்து பிசின்போன்ற வெள்ளைநிற திரவம் கசிந்துகொண்டிருக்கும். இது பிரசவத்திற்கு ஆரம்பம் என்று காட்டும்படியாகவிருக்கிறது. இம்மாதங்களில் சில கர்ப்ப ஸ்திரீகளுக்கு சீதபேதி காண்பதுண்டு.

## ஆண் பெண் சிசுக் குறிகள்

## DIAGNOSIS OF SEX IN WOMB

கருப்பையிலிருப்பது ஆண் சிசுவா, பெண் சிசுவா என்பதைச் சற்றேறக் குறைய வெளித்தோற்றங்களிலிருந்தே நிதானிக்க முடியும். அது அநேகமாக சரியான குறியாகத்தானிருக்கிறது.

கர்ப்பிணிக்கு நிதானமான பசி, வலதுபக்க மூலை அதிகமாய் விம்மியிருத்தல், முலையை நசுக்கினுல் கலங்கலும் வெண்மையுமான பதார்த்தம் வெளிப்படல், மூத்திரம் பலவர்னமா யிருத்தல், சிசுவானது வலதுபக்கத்தில் இருப்பதாகத்

தோன்றுதல், எழுந்திருக்கும்போதும், உட்காருமபோதும், வேலைகளை செய்யும் போதும், வலது கையையே ஊன்றிக்கொள்ளுதல், முதலிய கர்ப்பிணியின் வெளித்தோற்றக் குறிகளால், வயிற்றிலிருப்பது ஆண்சிசு வென்றும்; கர்ப்ப ஸ்திரிக்கு அதிக சோம்பலேற்படுதல், இடது முலை விம்முதல், அற்ப ஆகாரங்களில் விருப்பம், கள்ளப்பசி, முகம் நிறமங்கல், எழுந்திருக்கும்போதும், உட்காரும் போதும், வேலைகள் செய்யும்போதும், இடது கையையே ஊன்றிக்கொள்ளுதல், முதலிய குறிகளினால் வயிற்றிலிருப்பது பெண் சிசுவென்றும் நிதானிக்க முடியும்.

## பிரசவ காலங்கள்

## DURATION OF DELIVERY

இள வயதுடைய ஆண் பெண் சம்பந்தத்தா லேற்படும் கர்ப்பமானது, பிரசவகாலத்தின் அளவு குறைவாகவும், வயது சென்றவர்களால் ஏற்படும் கர்ப்பங்களுக்குப் பிரசவ காலமானது சற்று நீடிக்கும் என்றும் டாக்டர் சார்லஸ்கிளே (Dr. Charlesclay) அபிப்ராயப்படுகிறார். எவ்வாறிருந்தாலும், கர்ப்பம் தரித்த 280-நாட்களுக்குள்ளும், 300-நாட்களுக்கு மேலும் பிரசவங்களாவதில்லை. அதாவது:—நாற்பது வாரத்தில் சிசு ஜனனமாகும். ஏதோ நூற்றில் ஒரு பிரசவம் இங்கு குறிப்பிட்ட காலங்களுக் கதிகப்படலாம். எப்படி இருந்தாலும் பதினொரு மாதத்திற்கு அதிகப்படாதென்றே கூறலாம்.

## பிரசவ வகைகள்

## KINDS OF PARTURATION

(1) கருத்தரித்துச் சம்பூரணமாக ஒன்பதுமாதம் முடிந்தபின் கர்ப்பவதிக்கு இடுப்புவலி கண்டு யாதொருவித கஷ்டமுமின்றி சிரசு உதயமாகி, 24-மணி நேரத்திற்குள் தாயும் பிள்ளையும் வேறுபட்டு விடுவதற்கு **கிரமப்பிரசவம், சுகப்பிரசவம்** (Natural Labour) என்று கூறப்படும்.

(2) கிரமப் பிரசவத்திலிருந்து இது சற்று வித்தியாசமாகி வெகுநேரம் கர்ப்பஸ்திரீ தாங்கமுடியாத வாதனைப்பட்டுச் சிசு ஆயுத உதவியினலல்லாமல் தானே வெளிப்படுவதற்குத் **தாமதப்பிரசவம், அசமந்தப்பிரசவம்** (Tedious labour) என்று கூறுவார்.

(3) கர்ப்பஸ்திரீகளுக்கு ஒன்பது மாதம் சென்றபிறகு, இடுப்பு வலியினல் 24-மணிநேரத்திற் கதிகமாய் கஷ்டப்பட்டும், சிரசு உதயமாகாமலும், உதயமாஞலும், சிசுவை வெளிதள்ளக் கஷ்டப்பட்டும்; ஆயுதங்களினல் வெளிப்படுத்தும் படியாக நேர்ந்தாலும், **கஷ்டப்பிரசவம், அசாத்தியப்பிரசவம்** (Difficult Labour) என்றும் கூறப்படும்.

(4) கர்ப்பவதிகளுக்கு இடுப்புவலி கண்டு, 24-மணி நேரத்திற்குள் சிரசு உதயமாவதற்குப்பதிலாக, நஞ்சுக்கொடி முதலில் வெளி வருவதற்கும், ஆசனம், கால், கை, உதயமாவதற்கும் **கிரமாதீதப் பிரசவம், நிஷ்கிரமப் பிரசவம்** (Preternatural Labour) என்றும் கூறுவர்.

(5) கர்ப்பவதிகளுக்கு ஒன்பது மாதத்திற்குப் பிறகு கை கால் வலிப்பு, பெரும்பாடு, ஜன்னிப்போன்ற பயங்கர பற் கடிப்புகள், ஓர் நிலையிலில்லாது பிரக்ஞை மறந்து உருளல், இவற்றுடன் ஏற்படும் பிரசவத்திற்கும், இரட்டை பிள்ளை பெறுவதற்கும், **விபரீதப் பிரசவம், துவைதப்பிரசவம்** (Complex Labour) என்றும் கூறுவர்.

## பிரசவ சமயங்கள்
## STAGES OF LABOUR

(1) கர்ப்ப ஸ்திரீகளுக்கு இடுப்புவலி கண்டு, கர்ப்பப்பையின் கழுத்து, (Cervix) கொஞ்சம் விரிந்திருக்கும் சமயம் **முதற்பாத** (First stage) மென்று சொல்லப்படும்.

(2) கர்ப்பப்பையின் கழுத்து, (Cervix) பூராவும் விரிந்தது முதல் குழந்தை வெளிப்படும் வரை, **இரண்டாம்பாத** (Second stage) மென்று சொல்லப்படும்.

(3) பிரசவமானபின்பு, நஞ்சுக்கொடி, அழுக்கு, சவ்வு முதலியவைகள் வெளியாகிறவரையில் **மூன்றம்பாத** (Third stage) மென்றும் சொல்லப்படும்.

## இடுப்பு வலி
## PAINS OF LABOUR

(1) பொய் வலி, (FalsePain) இந் நோயானது சிலருக்குப் பிரசவ மாதங்களில் காணப்படுவதுண்டு. இது சிறுகுடல், பெருங்குடல் இவைகளில் உண்யிருக்கும் புண்களினுலாவது, (Intestinal Irritations - Enteritis) பிரசவ காலங்களில் உண்டாகும் பலயீனத்தினுலாகிலும், பசிமந்தம், மலபந்தம் இவைகளினுலாவது, கர்ப்பப்பையில் குளிர்ச்சிச் சேருவதினுலாவது இந் நோய் உண்டாகலாம்.

பொய் வலி, பிரசவ வலியைப்போ லல்லாமல், வயிற்றின் பல விடங்களிலும் வலிக்கும். சிலசமயம் சுருக்கென்று குத்தியும் வலிக்கும். யோனியிலிருந்து வெளிப்படும் பிசிபிசிப்பான சளிபோன்ற திரவம் வெளிப்படாது. நினைத்து நினைத்து இந்த வலியேற்படும். கர்ப்பாசயம் சுருங்கும் சக்தி வாய்ந்திருக்காது. கர்ப்பாசயத்தின் முகம் விரியாதிருக்கும். பனிக்குடம் ஏற்பட்டிருக்காது.

(2) நிசவலி, (True Pain) பிரசவநோயானது முதலில் நடுமுதுகில் ஆரம்பிக்கும். பிறகு இடுப்பைச் சுற்றி வலிக்கும். பின் வயிற்றில் வலி உண்டாகி, தொடை நரம்புகளைப் பற்றியிழுத்துவலிக்கும். கருப்பையின் வாயை பெரிதாக்கிப் பனிக்குடத்தை வெளிக்குத் தள்ளுவதற்காகக் கருப்பை சுருங்கும் சமயம் இந்நோய் உண்டாகிறது. இந்நோய் விட்டுவிட்டு வந்தாலும், வெகு நேரம் வலித்துக்கொண்டிருப்பதுண்டு. சிலருக்கு வலியுண்டாகும் சமயம் வாந்தியாவதுண்டு. இது நல்லதென்றே கொள்ளவேண்டும். நாடி படபடப்பாக அடித்துக்கொள்ளும். முகம் சிவந்துத் தோணும். திரேகாதியந்தமும் வியர்த்து, கால்கள் திமிர்த்துக்கொள்ளும். கருப்பையின் வாய் விரியும்சமயம், உடம்பு பதஷ்டமுண்டாகும். கருப்பையின் கழுத்துப் போதியபடி விரிந்த பிறகும், பனிக்குடம் உடைந்து, உதயஜலம் வெளிப்பட ஒரு பெரியவலி உண்டாகும்.

## பிரசவகாலங்களில் கவனிக்கவேண்டியவைகள்

## NOTES ON CONDUCTING LABOURS

கர்ப்ப ஸ்திரீகளுக்கு இடுப்புவலி கண்டால் முதலில் அதை பிரசவ வலியா அல்லது பொய்வலியா என்பதை கண்டுகொள்ளவேண்டும். பிரசவத்திற்காக அழைக்கப்பட்டவுடன், யோனிக்குள் விரலைவிட்டு பரீக்ஷிக்க முயலக்கூடாது. நாடி நடையையும், கர்ப்பிணியின் திரேகம் தழற்சி கொடுத்திருக்கிறதா வென்பதையும் கவனிக்கவேண்டும். மலபிரவர்த்தி சரிவர ஆகி இருக்கிறதா வென்பதையும் தெரிந்துகொள்ளவேண்டும். பின்னர் பிரசவ வலிதான் என்று தீர்மானித்தபின்பு, வலதுகையின் ஆள்காட்டி விரலில் கொஞ்சம் விளக்கெண்ணையைத் தடவிக்கொண்டு, யோனி வழியேவிட்டு, கர்ப்பாசயத்தின் வாய் விரிந்திருக்கும் நிலைமையும், உதயமாகும் உருப்பு இன்னதென்பதையும், தெரிந்துகொள்ளவேண்டும்.

பின்னர் மலக்கட்டிருப்பதாகத் தெரிந்துகொண்டால், ஆசனக் குழலால் (Enema) தண்ணீரை உட்செலுத்தி மலத்தை வெளியாக்கவேண்டும். முதல் பாதத்தில் கர்ப்பிணி சற்று உலாவிக்கொண்டிருந்தால் நன்மையாகும். ஆயாசம், பசிமயக்கம் யேதேனும் உண்டானல், இலேசாக ஜீரணிக்கும், மாமிச சத்து; (Soup) பால் அதிகம் கலந்த தேத்தண்ணீர்; காச்சினபால்; நன்ருய் கனிந்தப் பழங்கள்; முதலிய சிற்ருகாரங்களைக் கொடுத்து உற்சாகத்துடனிருக்கும்படி செய்யவேண்டும். படுத்துக்கொள்ளுவது சவுகரியமாயிருந்தால் படுத்துக்கொள்ளலாம்.

பிரசவ வலியை யுண்டுபண்ணவேண்டுமென்று, மூடத்தனமாக முக்கிக்கொண்டிருக்கும்படி செய்தால், சரியானகாலத்தில் குழந்தையை வெளிபடுத்த போதிய சக்தியில்லாமல் களைத்துப் போய்விடும். சிலருக்கு இடுப்புவலி கண்

முக்கும்போதெல்லாம், மலம் வருவதைப்போல் தோன்றும். இதனால் கர்ப்பிணி கஷ்டப்படுவதாய் தெரிந்தால், 15-துளி அபினி பாவன திரவத்தை (Tincture Opium) கொஞ்சம் தண்ணீரில் சேர்த்து, ஆசனத்தில் பீச்சங்குழலால் (Syringe) அடிக்கவேண்டும். பிரசவத்திற்காகத் தயார் செய்யப்பட்டிருக்கும் அறை காற்றோட்டமுள்ளதாக விருக்கவேண்டும். பிரசவிக்கும் ஸ்திரீயும், மருத்துவச்சியும் தவிர மற்றவர்கள் எவரும் இருக்கக்கூடாது.

இரண்டாம்பாதம், அதாவது பனிக்குடம் உடைந்து சிரசு உதயமாகிறபோது வஸ்திரங்களை களைந்து திர்வாணப்படுத்தவேண்டியது. கர்ப்பிணியை ஓர் கட்டிலின்பேரில் பிட்டங்கள் ஓரத்தில் இருக்கும்படியாகப் படுக்கச்செய்து முழங்கால் இரண்டையும் வயிற்றோடு அணைத்து வைத்துக்கொள்ளும்படி செய்ய வேண்டும்; ஆனால், கால் இரண்டையும் ஒன்றாகச்சேர்த்து வைத்துக்கொள்ளக் கூடாது. இதற்கு இரண்டு கால்களுக்குமிடையில் ஒரு தலையணையை வைத்துக்கொள்ளச் செய்யலாம். பின்னர் கட்டிலுக்குமேல் நோய்வரும் சமயம் பிடித்துக்கொள்ள வசதியாய் ஒரு துணியையாவது, வலுவான கயிற்றையாவது கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கவேண்டும். இரண்டாம் பாதத்தில் கர்ப்பவதிக்குப் பசி, ஆயாசம், உண்டானால் உணவு ஒன்றும் கொடுக்கக்கூடாது; ஆனால், தேத்தண்ணீர் கொடுத்து உற்சாகமாக்கிக்கொள்ளலாம். தாகத்திற்கு வெந்நீர் கொடுக்கலாம்.

நெடுநேரமாகப் பிரசவவேதனைப் பட்டுக்கொண்டிருந்தும், கருப்பையின் கழுத்து சரியானவிதமாக விரிந்துவிட்ட பிறகும், பனிக்குடம் உடையாமல் பிரசவம் தாமதப்படும் பக்ஷத்தில், வலதுகையின் ஆள்காட்டி விரலை, யோனிக்குட் செலுத்தி, பனிக்குடத்தை விரலால் குத்தி, உதயநீரை வெளியாக்கிவிட வேண்டியது. இப்படிக்கில்லாமல் இடுப்புவலி கண்டவுடன் சீக்கிரமாய் பிரசவிக்கும்படியாய் பனிக்குடத்தை உடைத்துவிடுவதால், ஸ்திரீகளுக்கு வாழ்நாளெல்லாம் துன்பப்படும்படியான வியாதிகளேதேனும் உண்டாகிக்கொண்டேயிருக்கும்.

சிரசு உதயமானபிறகு உடல் சீக்கிரம் வெளிப்பட்டுவிடும்படியாக சிரசைப் பிடித்திழுப்பது கொடிய செய்கையாகும். கருப்பையின் இயற்கை சுருக்கத்தினாலேயே சிசு வெளிப்படும்படியாக விட்டுவிடவேண்டியது. சிரசு வெளிப்படும்போது விடபக்கிழி வேற்படாதிருக்க, சிசுவின் சிரசை விடபத்தின்மேல் விடாமல் பார்த்துக்கொள்ளவேண்டியது. சிரசு வெளியாகும்போது சிரசை வலதுகையால் யேந்தி தானாகத் திரும்பும்படியாகவிட்டுக் கொடுத்துக்கொண்டிருக்கவேண்டியது.

சிரசு வெளியாகும்போது, சிசுவின் கழுத்தை நாபிக்கொடி சுற்றிக்கொண்டிருக்கிறதாவென்பதை கையால் தடவிப்பார்க்கவேண்டியது. அப்படிச் சுற்றிக்

கொண்டிருக்கும் பக்ஷத்தில், மெதுவாக அந்நாபிக்கொடியை தோளின்மேல் தள்ளிவிடவேண்டும்.

சிரசு உதயமாகி சற்றுநேரம் வலியின்றியிருந்து மறுபடியும் வலிகண்டு உடல் வெளிப்பட்டுவிடும். சிரசு உதயமாகி சற்று அதிகநேரமாகியும், உடல் வெளிப்படாமலும், சிசுவுக்கு ஆபத்து வாலாமென்று தோன்றினாலும், பிரசவிக்கும் ஸ்திரீயின் வயிற்றின்மேல் உள்ளங்கையை வைத்து சூடுபறக்கத் தேய்க்க வேண்டும். இப்படிச் சூடுபறக்கத் தேய்த்தும் வலிகண்டு சிசு வெளிப்படவில்லையானால், ஒரு ஆளை கருப்பை நழுவாமல் பிடித்துக்கொள்ளும்படியாக செய்து, இடதுகையினால் சிசுவின் தலையைப் பிடித்துக்கொண்டு, வலது கைவிரலை யோனிக்குள் செலுத்தி உடலை பிடித்துக்கொண்டு மெதுமெதுவாக இழுத்து வெளியாக்கவும். முரட்டுத்தனமாக பிடித்திழுத்தால் கருப்பை சுருங்க அதிக நேரம் பிடிப்பதோடு, இரத்தமும் அதிகமாய் வெளிப்படும்.

பிரசவித்த ஸ்திரீகள் இரண்டுமணி நேரத்திற் கொருதரமாவது நீர் கழிக்க வேண்டும். அசையாமல் படுத்திருக்க திட்டம் செய்திருக்கும் காலங்களில் படுத்துக்கொண்டே நீர் விடலாம். நீரிறங்கத் தடைப்பட்டால் கம்பளியை வெந்நீரில் நனைத்து பிழிந்து அடிவயிறு, மர்மஸ்தானம் முதலிய விடங்களில் ஒத்திடம் கொடுக்கவேண்டும். அப்படிக்கில்லையானால், நீர்த்தாரைக்குள் சிலாக்கை (Catheter) விட்டு நீரை வெளியாக்கவேண்டும்.

பிரசவித்த ஸ்திரீகளுக்கு 24-மணி நேரத்தில் ஒருதடவையாகிலும் மலம் கழியவேண்டும். அப்படி யில்லாவிட்டால் இலகுவான விரேசனகாரிகள் (Cathartics) கொடுக்கலாம். அல்லது வெந்நீரைப் பீச்சங்குழலால் (Enema) ஆசனத்தின் வழியே செலுத்தி மலசுத்தி செய்யும்படி செய்யவேண்டும்.

## பிரசவம்

## DELIVERY-PARTURATION

தலைப்பிள்ளைப்பேறு எப்போதும் கொஞ்சம் கஷ்டமாகவேயிருக்கும். பிரசவமாதற்குச் சிலநாளைக்கு முன்பே, கர்ப்பஸ்திரீயினுடைய யோனியிலிருந்தும், கர்ப்பாசயத்தின் வாயினின்றும் சளிபோன்ற ஒருவிதமான மினு மினுப்பான திரவம் கசிந்துகொண்டே யிருக்கும். இதில் இரத்தக் கோடுகள் காணப்படும். இக்காலங்களில் கருப்பை கீழிறங்கி வயிறு தளர்ச்சி யடையும். மலசலம் எப்போதும் போலல்லாமல் அடிக்கடி கழியும். இவ்வித குறிகளெல்லாம் பிரசவநோய் காணுவதற்குமுன் அறிகுறிகளாகும். சிலருக்கு இக் குறிகள் முற்றிலும் காணாமலே இடுப்புவலி காண்பதுமுண்டு.

இடுப்புவலி ஆரம்பித்துக் கருப்பையின் வாய் சரியானவிதமாக விரிந்த பிறகு ஒரு பெரும் வலி கண்டு பனிக்குடம் உடைந்து உதயஜலம் வெளிப்

படும். இது இரண்டாம் பாதத்தின் ஆரம்பம். பின் அதிக வேதனையோடு ஒரு முக்கல்கண்டு சிரசு உதயமாகும். பின்னர் வலி விட்டுவிட்டுக் கண்டு குழந்தை பிரசவமாகும்.

மூன்றும் பாதத்தில் நோய் நின்றுவிடும். இந்தச் சமயம் கருப்பையின் மேல் கையை வைத்துப் பார்த்தால் அது துவண்டு சுருங்குவது நன்றாகத் தெரியும். கருப்பையானது சுருங்காமல் முன்னிருந்ததுபோலவே யிருக்குமானால் சப்தவேணுவை (Stethescope) வைத்து உற்றுக் கேட்கவேண்டும். இரட்டைப் பிரசவமாயிருந்தால் இதனால் அறிந்துகொள்ள முடியும். சிசு ஜனித்த சிறிது நேரம் வலி யில்லாதிருக்கும். சீக்கிரத்தில் மறுபடியும் வலி கண்டு நஞ்சுக் கொடிகள் (Placenta) வெளியாகி விடும். சிசு வெளியான 20-30-நிமிஷங்களில் வயிற்றில் வலி கண்டு நஞ்சு, அழுக்கு முதலியவைகள் வெளிப்படும். எப்படியானாலும் ஒருமணி நேரத்திற்குமேலும் நஞ்சுக்கொடி வெளிப்படாதிருந்தால், **நஞ்சுப்பிடித்தம்** (Retention of Placenta) என்ற தலைப்பின் கீழுள்ள சிகிச்சையைச் செய்யவேண்டும். ஏகதேசங்களில் நஞ்சும் சிசுவுடனே வெளிப்பட்டுவிடும். இவ்வித சுகப் பிரசவங்களில் நாம் அதிகமாய் ஒன்றும் செய்ய நேருவதில்லை. இதில் நாம் ஏதேனும் செய்தால் தீங்குதான் நேரிடும்.

## தாமதப் பிரசவம்

## TEDIOUS LABOUR

சிலருக்கு இயற்கையிலேயாயினும் வியாதியினாலாயினும் யோனி சிறுத்துப்போ யிருப்பினும், யோனிக்குள்ளிருக்கும் யோனித்திரை; யோனிப்படலம்; (பக்கம் 2-பார்க்கவும்.) (Hymen) என்ற சவ்வு தடித்துப்போய் தக்க சமயம் அகன்றுபோகா திருப்பினும், பனிக்குடத்தின் சவ்வு கனத்து அழுத்தமா யிருப்பினும், பனிநீர் இயற்கைக்கு அதிகப்பட்டு இருப்பினும், பனிக்குடமே யின்றி இருப்பினும், பிரசவகாலத்திற்கு முன்பே பனிநீர் வெளிப்பட்டுப்போ யிருப்பினும், கருப்பை அதிக நேரம் சென்று சுருங்கும் இயல்புடையதாக இருப்பினும், கருப்பையின் வாய் விரியும் தன்மை யில்லாதிருப்பினும், கருப்பை இடமாறிப்போ யிருப்பினும், வெகு பால்யம், வெகு விருத்தாப்பியம், வெகு பலயீனம் முதலிய காரணங்களாக விருப்பினும், கர்ப்ப காலத்தில் தேகம் அதிக உஷ்ணமாக வைத்திருப்பினும், ஜன்னியினால் சுயபுத்தியற் றிருப்பினும், இடுப்புவலி போதிய அளவாக யேற்படாது போவதா யிருப்பினும், பிரசவிப்பதற்குத் தாமதங்களின் காரணமாகும்.

பதஷ்டமின்றி தாமதத்தின் காரணத்தைக்கண்டுபிடித்துத் தக்க சிகிச்சை செய்யவேண்டும். மலபந்த மிருந்தால் ஆசனத்தின் வழியாய் (Enema) பீச்சாங்குழல் அடித்து மலசுத்தி செய்விக்க வேண்டியது. பசியிருந்தால் கார

மற்ற சிற்ருகாரங்கள் கொடுத்துக் கொள்ளலாம். அளவுக் கதிகமாக பனிநீர் இருப்பதாகத் தெரிந்தால், நகத்தால் குத்தி பனிநீரை வெளிப்படுத்தலாம். கருப்பையின் வாய் விரியக்கூடாமலிருந்தால், வாயில் விரலை விட்டு வாந்தி பண்ணும்படிச் செய்யலாம். அல்லது ஒரு அவுன்ஸ் சுத்த ஜலத்தில் மூன்று கிரைன்ஸ் வமன உப்பு (Tartar ematic) கலந்து கொடுத்து வாந்தி பண்ணச் செய்யலாம். கருப்பை இடமாறியிருந்தால், கர்ப்பிணியைத் திரும்பிப் படுக்கும் படிச் செய்யலாம். முன்பக்கம் சாய்ந்திருந்தால் மல்லாக்காய்ப் படுக்க வைக்க லாம். இப்படிச் செய்யும்போது வயிற்றின்மேல் துணிசுற்றி இருக்க வேண்டும். பிரசவகாலத்திற்குமுன் பனிநீர் வெளிப்பட்டுப் போய்விட்டால் சிகிச்சை செய் யும் வழியில்லை. அதனுல் கெடுதலுமில்லை. சற்றுத் தாமதித்தாகிலும் சிசு பிறந்துவிடும். அதுவரை காத்திருக்க வேண்டுவதுதான். பலயீனத்தால் இடுப்புவலி அதிகமாய் யேற்படாமலிருந்தால், இடுப்பு அடிவயிறு முதலிய வற்றைக் கையினுல் அழுத்தித் தேய்க்கலாம். நித்திரை செய்தாலும், ஆகாரம் சாப்பிட்டாலும் இடுப்புவலி அதிகரிக்கும். இவ்வித உபாயங்களினுல் வலி காணுதிருந்தால், பொடிசெய்த எக்ஸ்டிராக்ட் எர்காட் (Extract Ergot) என் னும் மருந்தில் 20-கிரைன்ஸை ஒரு அவுன்ஸ் வெந்நீரில் கரைத்து மூடிவைத் திருந்து குளிர்ந்தபின் கொடுக்கலாம். அரைமணி நேரத்திற்கொருதரம் இந்த மருந்தை 2-3 தரம் கொடுத்தால் இடுப்புவலி அதிகரித்து விடும். கருப்பையின் வாய் நன்ருக விரிந்திருக்கும்போது இந்த மருந்தைக் கொடுக்கக்கூடாது. கருப் பையின் வாய் விரிந்திருந்தும், மற்றைய உபாயங்களினுலும் நன்மை ஏற்படா விட்டால் ஆயுதப்பிரயோகத்தினுல் குழந்தையை வெளிப்படுத்த வேண்டும்.

## கஷ்டப் பிரசவம்

## DIFFICULT LABOUR

கர்ப்பிணியின் இடை சிறுத்துப்போய் யிருப்பதினுலும், மர்ம ஸ்தான எலும்பு அதிகமாய் நெறுங்கியிருப்பதினுலும், மூத்திரம் கிரமமாய் இறங்காமல் மூத்திரப் பையில் நீர் நிறைந்து, சிசு வெளிப்படும் மார்க்கங்களை அடைத்துக் கொண்டிருப்பதினுலும், சிசுவின் சிரசு இயற்கைக்கு அதிகமாய் பெருத் திருப்பதினுலும், சிசுவின் அங்க எலும்புகள் கனத்துப்போயிருப்பதினுலும், சிசுவின் தலை திரும்பி யிருப்பதினுலும், நாபிக்கொடி யானது சிசுவைச் சுற்றிக்கொண்டிருப்பதினுலும், சிசுவின் வயிறு பெருத்துப்போ யிருப்பதி னுலும், சிசுவின் முகம் உதயமாவதினுலும் கஷ்டப் பிரசவத்திற்குக் காரணங்க ளாக வேற்படலாம். இக் காரணங்கள் எதினுலாவது பிரசவிக்கக் கஷ்டப்பட் டால், சிசுவை ஆயுதப்பிரயோகத்தினுலல்லாமல் உபாயமான சிகிச்சைகளினுல் வெளிப்படுத்த முயன்ருல் யாதொரு பிரயோஜனமும் கிடைக்காது.

## கிரமாதீதப் பிரசவம், விபரீதப் பிரசவம்

## PRETERNATURAL LABOUR, COMPLEX LABOUR

இவைகள் என்னவென்பதை 11-பக்கம் பிரசவ வகைகள் என்ற தலைப்பின் கீழ் குறிக்கப்பட்டிருக்கிறது. இவைகளை சாதாரணமாக எவரும் எளிதில் தெறிந்துசெய்ய முடியாதென்பதாலும், சித்திரப்படமின்றி விளக்குவது அசாத்தியமென்பதாலும், இந்நூல் சிகிச்சை முறையைமட்டும் கூறும்படியாகத் தொகுக்கப்பட்டமையாலும், இதில் அவைகளை விளக்குவது சரியல்லவாதலாலும் இதில் குறிக்காமல் விடப்பட்டிருக்கிறது.

## பிரசவித்தவுடன் செய்யவேண்டியவைகள்

## MANAGAMENT IMMEDIATE AFTER PARTURATION

சிசு வெளிப்பட்டபின், தாயின் வயிற்றைப் பரிசோதித்து, இரட்டை பிள்ளைகள் இருப்பதும், இல்லாததும் தெரிந்துகொண்டு, துணியை 1½-அடி அகலத்தில்மடித்து பிரசவித்த ஸ்திரீயின்வயிற்றை நான்குசுற்றுச்சுற்றிக் கட்டி விடவேண்டும். நஞ்சுக்கொடி, அழுக்கு முதலியவைகள் முற்றிலும் வெளிப்பட்டவுடன், சுற்றியிருக்கும் துணியை நன்றாய் அழுத்திக் கட்டவேண்டும். இந்தச் சமயம் களைப்பாயிருந்தால் விரைவில் ஜீரணிக்கத் தகுந்த ஆகாரங்களை ஆறவைத்துக் கொடுக்கலாம். பிரசவித்தபின் ஸ்திரீ 3-மணிநேரம் அசையாமல் படுத்திருக்கவேண்டும். அப்படிப் படுக்காமலும், படுத்து புரண்டு யெழுந்திருந்தும் உட்கார்ந்துகொண்டி ருந்தால், இரத்தப்பெருக்கு உண்டாகிவிடும். அல்லது கர்ப்பாயசம் வெளியில் பிதுங்கிவிடும். இவ்விதமாக மூன்று நாட்களுக்குக் குறையாமல் படுக்கையில் இருக்கவேண்டும். 15-நாட்களுக்குப் பின்னுல்தான் நடமாடச் செய்யவேண்டும்.

பிரசவித்த பின் தோஷகுணங்கள் ஏதேனுமிருக்குமாகில் தகுந்த சிகிச்சைகள் செய்யவேண்டும். பிரசவித்த ஸ்திரீக்குக் குளிர்ச்சிக் கொண்டு விடாதபடி ஒரு அவுன்ஸ் பிராந்தி (Brandy) கொடுக்கலாம். பிராந்தியைப் பிரசவித்த 3-4-நாட்களுக்குமட்டும் காலை மாலை கொடுக்கலாம். நீடித்துச் சாப்பிட்டால் பல பிணிகளை உண்டாக்கிவிடும். அபினிப் பாவன திரவம் (Tincture Opuim) 5-துளி ஒரு அவுன்ஸ் தண்ணீரில்கலந்து கொடுத்தால், நாடி நடையை கிதானப்படுத்தியும், மேல்மூச்சை சமாசப்படுத்தியும், நித்திரையையுண்டுபண்ணியும் பிரசவித்ததினுலான களைப்புகளையும் மாற்றிவிடும். பரிமள நவாச்சார சாராயம் (Spirit Ammonia Aromatic) 10-துளியை ஒரு அவுன்ஸ் சுத்த தண்ணீரில் கலந்து கொடுக்கலாம். அல்லது கஸ்தூரிப் பாவன திரவத்தில் (Tincture Musk) ஒரு அவுன்ஸ் தண்ணீரில் 10-துளி கலந்து கொடுப்பது மிகவும் சிரேஷ்டமானதாகும். அடிவயிற்றில் வலிவேதனைகள் இருக்கு

மானுல் அபினிப் பாவன திரவத்தில் (Tincture Opuim) 10-துளி ஒரு அவுன்ஸ் தண்ணீரில் கலந்து கொடுக்கவேண்டும். அதிகமான இரத்தப் பெருக்கிருக்கு மானுல், எர்காட் ஜலசத்து (Liquid Exract Ergot) என்னும் மருந்தில் 30-துளி ஒரு அவுன்ஸ் தண்ணீரில் கலந்து கொடுக்கவேண்டும்.

## பிரசவித்த ஸ்திரீகளின் பராமரிப்பு

## MANAGEMENT AFTER BRITH

பிரசவித்ததிலிருந்து நாலுநாள் வரையில், கோதுமைக்கஞ்சி, சவ்வரிசிக் கஞ்சி, அரோரூட் மாவு (Arrowroot flour) கஞ்சி, சுட்ட ரொட்டி (Roast Bread) பிஸ்கோத்துகள் (Biscuits), காய்ச்சிய பால், காப்பி முதலியவை களையே ஆகாரமாகக் கொடுத்துவரவேண்டும். ஜீரணிக்க கஷ்டப்படும் ஆகாரங்க ளாகிய சோறு, உப்புமா, இட்டலி, தோசை முதலியவைகளைக் கண்டிப்பாகக் கொடுக்கக்கூடாது. அவ்வித கடின ஆகாரங்களைக் கொடுப்பதினுல்தான், அதி சாரம் கண்டு விபரீதமுண்டாக்கி விடுகிறது. நாலுநாளைக்குப் பின் உஷ்ணம் தணிந்தபின் பழைய அரிசியைக் குழையக்குழைய வடித்து, மிளகுரசம்.(Pepper Water) பருப்பு ரசம், (Doll Soup) மாமிச ரசம் (Soup) இவைகளில் ஏதே னும் விட்டு பிசைந்து கொடுக்கவேண்டும். சோற்றை ஆகாரமாகக் கொடுக்கு முன் மலக்கட்டிருந்தால் மலத்தை வெளியாக்கிய பிறகுதான் கொடுக்கவேண் டும். பிரசவித்த ஸ்திரீகளுக்குத் தேகாரோக்கியம் சரியானவிதமாக இருக்கும் பக்ஷத்தில் குளிக்கும்படியாகச் செய்யவேண்டியது. நெய் சேர்ந்த பலகார வகைகளையும், கொழுப்பு அதிகமான பதார்த்தங்களையும் பிரசவித்த கொஞ்ச நாள் வரையில் கொடுப்பது கெடுதலை விளைவிக்கும்; ஆனுல், முட்டைகளைக் கொடுப்பது அவ்வளவு கெடுதலைச் செய்யாமல் திரேகத்தைப் போஷிக்கும். பத்தியமான மரக்கறிகளை ஏதேஷ்டயாக அருந்தலாம். சிசுவுக்குப் பால் கொடுப் பதனுல் கரப்பான் நீரைப்பெருக்கும் பூசனிக்காய்போன்ற மரக்கறிகளை உண் ணக்கூடாது. பிரசவித்த ஸ்திரீகளுக்கு வழக்கமாகவேனும், உத்வேகத்தைக் கொடுக்கவேனும் சாராய வகைகளைக் கொடுப்பது மிகவும் கெடுதலாகும். பின்னர் அதுவே வழக்கமாக முடிந்து, சதாகாலம் சாராயபானம் செய்ய நேர்ந்து ஆயுளைக் குன்றச்செய்துவிடும்.

## கருப்பையில் சிசு மரித்திருக்கும் குறிகள்

## SIGN OF DEATH THE FOETUS IN WOMB

கர்ப்பவதிகள் திடீரென்று பயந்துவிடுவதினுலேயும், கர்ப்பத்தோடிருக்கும் போது அடிவயிற்றில் பலமான அடிபட்டு விடுவதினுலேயும், சுவாசபந்தன ரோகங்கள் சம்பவித்திருப்பதினுலேயும், கர்ப்பகாலங்களில் அதி உயரத்தி லிருந்து குதிப்பதினுலேயும், கர்ப்பவதியின் சரீரத்தில் இயற்கையாகத் தங்கி

யிருந்த மேகவியாதிகளினுலேயும், வாதபித்த சிலேத்பன விகல்பத்தினுலேயும், கர்ப்பகாலத்தில் அதிக குளிர்ச்சியுடனும், அதிக சூட்டுடனும் ஆகாரங்களைப் புசிப்பதினுலேயும் கருப்பையில் சிசு மரித்துப் போகலாம்.

சில சமயம் கருப்பையில் சிசு மரிக்கும்போ விருந்தால், கர்ப்பஸ்திரீக்கு மலசலம் கட்டுப்படும், திரேகம் நீலநிறமடையும்; கைகால் அதிகமாகக் கறுத்திருக்கும்; வாய் கெட்ட நாற்றமடிக்கும்; தலை முகம் முதலியவைகள் வீங்கும்; அடிக்கடி களைப்பு முதலியன உண்டாகும். இப்படி எல்லாம் அறிகுறிகள் காணப்படுமானுல், கருப்பையில் சிசு மரித்துப்போகும் என்று தீர்மானிக்கலாம்.

ஏற்கெனவே கருப்பையில் சிசு மரித்திருந்தால், தொப்புளைச்சுற்றியேனும், வயிறு முழுவதேனும், திரேகாதியந்தமேனும் சில்லிட்டிருக்கும். வயிற்றுள் பிண்டம் அசையாது, வயிற்றுப்பிசம் காணும், சுவாசபந்தனப்படும், விடும் சுவாசம் எலி செத்த நாற்றமடிக்கும், ஆயாசம் உண்டாகும், மூத்திரம் துர்நாற்றத்துடன் தடித்திறங்கும். கர்ப்பஸ்திரீ புரண்டு படுக்கும்போது வயிற்றுள் இரண்டு பக்கங்களிலும் ஏதோ ஒன்று கற்போலுருளுவதாகத் தெரியும். பிரசவநோய் கண்டிருந்தாலும் நின்றுவிடும், கண் சொருகும், தொப்புளைச் சுற்றி பசு வெண்ணெயைத் தடவினுல் அது உருகாதிருக்கும்.

வெந்நீரில் கையை ஆவிப்பிடித்துக் கர்ப்பஸ்திரீயின் அடிவயிற்றின்பேரில் வைத்தால் கர்ப்பம் அசையாமலிருக்கும். ஒரு அவுன்ஸ் ஒயினில் (wine) 4 டிராம் லவங்கப்பட்டைத்தூளைக் கலந்து உள்ளுக்குக்கொடுத்தால் பிரசவ வேதனைபோன்று வலி காணுமானுல் சிசு மரித்திருக்கிறதாய்த் தீர்மானிக்கலாம்.

## சிகிச்சைகள்

## TREATMENTS

கீழ்க்கண்ட மருந்துகளைக் கொடுப்பதனுல், இடுப்புவலி கண்டு மரித்த சிசு வெளிப்பட்டுவிடும்.

(1) சணம்புவிரையைத் தண்ணீர்விட்டரைத்து அடிவயிற்றில் பூசிக் கழற்சிக்காய்ப் பிரமாணம் உள்ளுக்கும் கொடுக்கலாம்.

(2) உகாயிலையைக் கறுகவறுத்து ஒருபடி தண்ணீர்விட்டு கால்படியாக வற்ற வைத்து, அதில் மிளகு, பூண்டு, ஓமம், பெருங்காயம் சமமாகப் பொடித்துப் போட்டு காய்ச்சி, 4 அவுன்சுக்குக் குறையாமல் கொடுக்கலாம்.

(3) இந்துப்பும், சங்கன்வேரும் சமமாயரைத்துக் காடி தெளிவில் கலந்து கொடுக்கலாம்.

(4) நிலக்குமிழம்பட்டையைத் தண்ணீரில் அரைத்துக் கொடுக்கலாம்.

(5) பிரண்டைவேரும், குருஞ்சாவேரும் சமனுக அரைத்து அடிவயிற்றில் தடவலாம்.

(6) பெருங்காயமும், உப்பும் சமமாய் பழங்காடியிலரைத்துக் கொடுக்கலாம்.

(7) உத்தாமணிவேரை கழற்சிக்காய்ப் பிரமாணம் பசும்பாலில் அரைத்துப் பாலில் கலக்கிக் கொடுக்கலாம்.

(8) துளசிச்சாறு 3-அவுன்சும், எள்ளெண்ணை 1½-அவுன்சும், புகையூரல் ½-அவுன்சும் சேர்த்துக் கொடுக்கலாம்.

(9) பிராந்தி (Brandy) ஒரு அவுன்சில் 4-டிராம் லவங்கப்பட்டைத் தூள் சேர்த்துக் கொடுத்தால் இடுப்புவலி கண்டு பிள்ளை விழும்.

(10) ஒரு ரூபாயிடை நாயுருவிவேரைப் பச்சைத் தண்ணீரில் அரைத்துக் கொடுக்கலாம்.

(11) அரைபலம் சங்கன்வேரை வெந்நீரில் அரைத்துக் கொடுக்கலாம்.

(12) ஒரு ரூபாயிடை குங்குமப்பூவை பசையாக அரைத்து உருட்டிக் கொடுக்கலாம்.

(13) இரண்டு வெள்ளைப்பூண்டும், ஒரு முருங்கைப் பிஞ்சும் நசுக்கிப் போட்டுக் கஷாயமிட்டு, 4-அவுன்சு கஷாயத்தில் 8-கிரைன்ஸ் அபினியைக் கரைத்துக் கொடுக்கலாம்.

(14) ஒரு அவுன்சு தண்ணீரில் எக்ஸ்ட்ராக்ட் எர்காட் லிக்குட் (Liquid Extract Ergot) 2-டிராம் கலந்து கொடுக்கலாம்.

(15) மாமூதாபிசினை சந்தனக்கல்லில் தண்ணீர்விட்டிழைத்துத் துணியில் தடவி யோனிக்குள் செலுத்தி வைக்கலாம்.

(16) இவைகளினுல் பயனில்லையானுல், ஆயுத பிரயோகத்தினுல் மட்டும் தான் துண்டுபடித்தியாவது, முழுதாகவாவது எடுக்க முடியும்.

## நஞ்சுப்பிடித்தம்

## RETENTION OF PLACENTA

பிரசவித்த அரைமணி நேரத்திற்குள் நஞ்சுக்கொடி விழாவிட்டால் நஞ்சு பிடித்தம் எனப்படும். கருப்பையின் பலயீனத்தினுல் நஞ்சுக்கொடியை வெளிப்படுத்தி சுருங்கச் சக்தியற்றுப்போயிருப்பதினுலேயும், கருப்பை இயற்கைக்கு விரோதமாக சுருங்க ஆரம்பிப்பதினுலேயும், வியாதியினுலேயும், கருப்பையில் நஞ்சு பிடித்துக்கொள்ளும். பிரசவித்த ஒருமணி நேரத்திற்குள்ளாக நஞ்சுக்கொடி வெளிப்படாவிட்டால் பிரசவித்த ஸ்திரிக்குப் பிராணமோசமான வியாதிகள் கண்டுவிடும்.

இவ்வித சமயங்களில் கையினுல் நஞ்சுக்கொடியைப் பற்றி இழுத்து வெளிப்படுத்தினுல் கர்ப்பாயசம் சுருங்காமல் உதிரப்பெருக்கை உண்டாக்கி

விடும். சில சமயம் பேராபத்தும் நேரலாம். நஞ்சுப்பிடித்தம் யேற்பட்டால், வயிற்றை யமுக்கித் தேய்த்து வலி உண்டுபண்ண வேண்டும். அதில் ஒன்றும் பயன்படாவிட்டால், கீழ்கண்ட சிகிச்சைகள் பயனுள்ளதாக விருக்கும்.

(1) குழைப்பாலைவேரை வெந்நீர்விட்டு அரைத்து எலுமிச்சங்காய் பருமன் யெடுத்து எருமை வெண்ணை கொஞ்சம் சேர்த்து நன்றாய்க் குழப்பிக் கொடுக்கலாம்.

(2) வட்டதுத்திவேர், சீரகம், பழம்புளி இம் மூன்றையும் சமனாகச் சேர்த்து கஷாயம் வைத்துக் கொடுக்கலாம்.

(3) வேப்பங்கொழுந்து, முருங்கைக்கொழுந்து, கறிவேப்பிலைக்கொழுந்து இவை மூன்றும் வகைக்கு ஒரு பிடியும், நல்ல முற்றின கடுக்காய் ஒன்றையும் தட்டிப்போட்டு ஒரு படி தண்ணீர்விட்டு எட்டொன்றாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டிக் கொடுக்கலாம்.

(4) எர்காட் ஜலசத்து (Liquid Extract Ergot) ஒரு அவுன்ஸ் தண்ணீரில் ஒரு டிராம்விட்டுக் கொடுக்கலாம்.

இவைகளினால் பிரதி பிரயோஜனம் ஏற்படாவிட்டால் கீழ்கண்டபடி நஞ்சுக்கொடியை வெளிப்படுத்த வேண்டும். பிரசவித்த ஸ்திரிக்கு ஆயாசந் தீர்ந்ததும், இடது கையால் நஞ்சுக்கொடியைப் பிடித்துக்கொண்டு, வலது கை விரல்களை கூர்மையாக சேர்த்துக்கொண்டு, நஞ்சுக்கொடி வழியாக கருப்பைக்குள் கொண்டுபோய், எங்கெங்குப் பிடித்திருக்கிறதோ, அதை மிகவும் கவனத்துடன் தடவிப் பார்த்து, ஒட்டிக்கொண்டிருக்கும் நஞ்சுக்கொடிகளைக் கருப்பையின் மத்தியில் தள்ளிவிட்டு கருப்பைக்குக் காயம் உண்டாகாமல், விரல்களால் பெயர்க்குச் சுருட்டி, நஞ்சுக்கொடி முழுவதையும் வெளிப்படுத்திவிட வேண்டும். இப்படிச் செய்யும்போது வெகு ஜாக்கிரதையாகவும், பதஷ்டமின்றியும் செய்ய வேண்டும்.

நஞ்சுக்கொடியானது இயற்கையாக வெளிப்படாமல் உபகரணங்களினால் வெளிப்படும் பக்ஷத்தில் கருப்பையில் சேஷம் தங்கியிருக்கலாமென்று நினைக்க இடமுண்டு. அவ்விதமாக சேஷம் (அழுக்கு) தங்கியிருக்குமானால் அந்த இடம் புண்பட்டு, விஷமாக மாறி திரேகத்திலூறி காச்சல், ஜன்னி, விப்புருதி முதலியவைகளையும், அஜீரணத்தையும் உண்டாக்குமாதலால், கருப்பையை காண்டீஷ் லோஷன் (Condys Lotion) என்ற கூட்டுக்கழுவு நீரால், பீச்சாங்குழல் கொண்டு சுத்திச்செய்ய வேண்டும். பின்னர் ஆளிவிரையைக் களிக்கிண்டி அடிவயிற்றின்மேல் வைத்துக் கட்டவேண்டும். நஞ்சு முழுமையும் வெளிப்பட்ட பின்பு முன் 18-பக்கத்தில் பிரசவித்தஉடன் செய்யவேண்டியவைகள் என்ற தலைப்பின்கீழுள்ளபடி பிரசவித்த ஸ்திரியின் அடிவயிற்றைக் கையினால் தேய்த்து இடுப்பைச்சுற்றி துணிக்கொண்டு கட்டிவிட வேண்டும்.

தொங்கிக்கொண்டிருந்த நாபிக்கொடியைக் கையால் பற்றி இழுத்ததினலாகிலும், எர்காட் என்ற மருந்தை பிரயோகித்ததினலாகிலும், சில சமயம் கருப்பை சுருங்கி, நஞ்சுக்கொடி வெளிப்படாமல் மூடிக்கொள்ளலாம். இக் காரணங்களால் நஞ்சுக்கொடி வெளியாகவில்லை என்று தீர்க்கமாய் தெரிந்தால், உடனே அபினிப் பாவன திரவம் (Tincture Opuim) 20-துளியை ஒரு அவுன்ஸ் தண்ணீரில் கலந்து கொடுக்க அரைமணி நேரத்தில் கருப்பையின் வாய் திறந்து கொள்ளும். இந்தச் சமயம் மேல் சொல்லிவந்தபடி கையை உட்செலுத்தி நஞ்சுக்கொடியை அப்புறப்படுத்தி முன் சொல்லியதுபோல் சிகிச்சைகள் செய்யவும். பிரசவித்தப்பின் சில ஸ்திரீகளுக்கு நஞ்சு தங்கியிருக்கும்போதும், நஞ்சு வெளிப்பட்ட பின்பும் இரத்தப் பிரவாகம் காண்பதுண்டு. அதற்குத் தக்க சிகிச்சைகள் "பிரசவத்திற்குப்பின் பெரும்பாடு" என்ற தலைப்பின்கீழ் கண்டு தெரிந்துகொள்ளவும்.

## வயிறு பழுத்தல்

## SUPPURATION OF UTERUS AFTE RBRITH

பிரசவத்திற்குப் பின் கிரமமாக வெளிப்பட்டுவிடவேண்டிய நஞ்சுக்கொடியானது வெளிப்படாமல், சிரமப்பட்டு எடுப்பதாலும், நஞ்சுக்கொடி வெளிப்படுவதற்குமுன் கருப்பையின் வாய் மூடிக்கொள்ளுவதினலும், கருப்பையில் நஞ்சு சிறிது தங்கிவிடுகிறது. நஞ்சு தங்கிய இடத்தில் ரணம் உண்டாகி சீழ் பிடித்துவிடும். அப்போது அடிவயிறு புண்பட்டு வலிக்கும். இலேசான ஆகாரம் உட்கொண்டாலும், உண்டவுடன் வயிற்றுவலி அதிகரிக்கும். யோனியின் வழியாக வந்துகொண்டிருக்கும் அழுக்குத் துர்நாற்றமுடனிருக்கும். அந்த அழுக்குடன் சில சமயம் சீழ்போன்ற வஸ்தும் வெளியாகும். காச்சல் இலேசாக அடிக்கும். அடிவயிறு வீங்கியிருக்கும். இதை அலக்ஷியஞ் செய்தால் ரணசன்னி (Septicaemia) கண்டு மரணம்தான் சம்பவிக்கும்.

இதற்கு எவ்வளவுதான் மருந்துகள் கொடுத்தாலும், கருப்பையைச் சுத்தம் செய்யாதவரையில் நன்மை ஒன்றும் எதிர்பார்க்க முடியாது. காண்டீஷ் லோஷனைக் (Condys Lotion) கொண்டு தினம் இரண்டுமுறை கருப்பையைச் சுத்தம் செய்யலாம்.

(1)

| | | | |
|---|---|---|---|
| வேலிப்பருத்தி இலை | பலம் 2 | மிளகு | பலம் 2 |
| சுக்கு | ,, 2 | வெள்ளைப்பூண்டு | ,, 2 |

பொடித்துப்போட்டு கஷாயமிட்டு, மூன்றுநாளைக்குக் கொடுத்து வரலாம்.

(2)

| | | | |
|---|---|---|---|
| மாவிலிங்கப்பட்டை | பலம் $\frac{1}{4}$ | மஞ்சள் | பலம் $\frac{1}{4}$ |
| சிற்றரத்தை | ,, $\frac{1}{4}$ | பனைவெல்லம் (கருப்பங்கட்டி) | , 1 |
| அரிசித்திப்பிலி | ,, $\frac{1}{4}$ | | |

பொடித்துப்போட்டு கஷாயமிட்டு, மூன்றுநாளைக்குக் கொடுத்து வரலாம்.

(3) பொரித்த எள்ளு பலம் 1 பனைவெல்லம் (கருப்பங்கட்டி) பலம் 1

மெழுகுபோலிடித்து, மூன்றுநாளைக்குத் தடவை ஒன்றுக்கு எலுமிச்சங் காய்ப் பிரமாணமாகக் கொடுத்து வரலாம்.

(4) கோவைத்தண்டை இடித்துக் காடியில் ஊறப்போட்டு, வடித்தகாடி அவுன்ஸ் 12-ல்:—

| | | | |
|---|---|---|---|
| சுக்கு | பலம் 1 | வெள்ளைப்பூண்டு | பலம் 1 |
| மிளகு | ,, 1 | அடுப்புக்கரி | ,, 1 |

அரைத்துக்கலக்கி ஒரு சட்டியில் 6 அவுன்ஸ் நல்லெண்ணெய்விட்டு, அதில் ஒரு வெள்ளைப்பூண்டை தட்டிப்போட்டு, பூண்டு சிவந்தவுடன் காடியில் கலக்கி வைத்திருப்பதை விட்டுத் தாளிதம் செய்து மூன்றுநாளைக்குக் காலை மாலை இந்தவிதம் செய்துகொடுத்து வரலாம்.

(5) சிங் சல்பஸ் (Zinc Sulphus) 15 கிரைன்ஸ்
படிகாரம் (Alum) 2 டிராம்
சுடுதண்ணீர் 20 அவுன்ஸ்

ஒன்று சேர்த்து, பீச்சாங்குழலால் கருப்பையிலடித்துச் சுத்திசெய்து வரலாம்.

(6) பிளம்பி அஸிடஸ் (Plumbi Acetas) 30 கிரைன்ஸ்
தண்ணீர் 40 அவுன்ஸ்

ஒன்றுசேர்த்துக் கலக்கி பீச்சாங்குழலால் கருப்பையைச் சுத்திச்செய்து வரலாம்.

(7) கிளிசிரைன் (Glycerine) 1 அவுன்ஸ்
கார்பாலிக் ஆசிட் (Acid Carbolic) 1 டிராம்
சுடுதண்ணீர் 40 அவுன்ஸ்

ஒன்றுசேர்த்துக் கலக்கி, பீச்சாங்குழலால் கருப்பைக்குள் அடித்துச் சுத்தி செய்து வரலாம்.

(8) கிளிசிரைன் (Glycerine) 1 அவுன்ஸ்
டானிக் ஆசிட் (Tannic Acid) 3 டிராம்
சுடுதண்ணீர் 40 அவுன்ஸ்

ஒன்றுசேர்த்துக் கலக்கி பீச்சாங்குழலால் கருப்பைக்குள் அடித்துச் சுத்தி செய்யலாம்.

(9) குளோரல் ஐட்ரஸ் (Chloral Hydras) 40 கிரைன்ஸ்
சுடுதண்ணீர் 40 ,,

ஒன்றுசேர்த்துக் கரைத்து பீச்சங்குழலால் கருப்பைக்குள் அடித்துச் சுத்தி செய்யலாம்.

பின்னர் ஆளிவிரைமாவைக் களிக்கிண்டி ஒரு துணியில் தடவி, சுடசுட அடிவயிற்றில் கொஞ்சநேரம் போட்டு வைக்கலாம்.

## அழுக்கு

## LOCHIA

பிரசவித்ததிலிருந்து ஒரு வாரம்வரையில், கருப்பையிலுள்ள இரத்தமானது யோனியின் வழியாகக் கசிந்துகொண்டிருப்பதற்கு "அழுக்கு" என்று சொல்லப்படும். சிலருக்கு இரண்டு வாரம் வரையிலும், மற்றும் சிலருக்கு மூன்று வாரம் வரையிலும் திரேக பிரக்கிருதிக்குத் தக்கவாறு கசிந்துகொண்டிருப்பதுவுமுண்டு.

பிரசவப் பெரும்பாடு கண்டவர்களுக்கு அழுக்குக் கொஞ்சமாகவே வெளிப்படும். சிலருக்குச் சிகிச்சை செய்யும்படியாக அதிகரித்துக்கொண்டேயிருக்கும். முதலில் சிகப்பாக வடிந்துக்கொண்டிருக்கும். அழுக்கானது நாட்சென்ற பிறகு பச்சையாகவேனும், மஞ்சளாகவேனும் மாறி, கடைசியில் தண்ணீர்போல் வடிந்து நின்றுவிடும்.

கருப்பைக்குள் ஏதேனும் இரத்தம் தங்கி கெட்டிருந்தால், வடியும் அழுக்கும் துர்நாற்றமுள்ளதாக விருக்கும். அப்படி அழுக்குத் துர்நாற்றத்துடனிருந்தால், காண்டிவ்ஷ் லோஷனை (Condys Lotion) பீச்சங்குழலைக் கொண்டு கருப்பையில் அடித்துச் சுத்திச் செய்யவேண்டும்.

அழுக்கு வடிவது பிரசவித்த ஸ்திரிக்கு ஆரோக்கியத்திற்கும், கருப்பை வலுவு உண்டாவதற்கு மென்றாலும், அதே அழுக்கு அதிக அளவில் வெளிப்படுமானல், திரேகம் க்ஷீணித்துப் போவதும் தவிர, சிலருக்கு பெரும்பாடும் கண்டுவிடும். ஆதலால், அழுக்கு அதிக அளவில் படுவதை சமப்படுத்தக்கூடிய அவுஷத சிகிச்சை செய்யவேண்டும். அதுபோலவே அழுக்கு சரிவரபடவில்லையானாலும், தகுந்த சிகிச்சை செய்யப்படாவிட்டால் கெடுதலே சம்பவிக்கும்.

அழுக்கு அதிக அளவில் பட்டுக்கொண்டிருக்கும்போது ஏற்படும் களைப்பை மாற்ற கொஞ்சம் பிராந்தி (Brandy) கொடுக்கலாம்.

அழுக்கு அதிகமான அளவில் வடிகிறதைச் சமனப்படுத்த கீழ்கண்ட சிகிச்சை முறைகளைக் கையாடலாம்.

4

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) ஆவாரம்வேர் | ரூபாயிடை | 1½ | ஆவாரம்பட்டை | ரூபாயிடை | 1½ |
| ஆவாரம்பூ | ,, | 1½ | ஆலம்வேர் | ,, | 1½ |
| ஆலம்விழுது | ,, | 1½ | ஆலங்கொழுந்து | ,, | 1½ |

ஒன்றுசேர்த்துப் பசும்பாலால் மைபோல் அரைத்துக் காலையில் மட்டும் கொடுத்து வரலாம்.

(2) கருவேலம்பட்டை கஷாயத்தை பீச்சங்குழலால் யோனிக்குள் அடித்து வரலாம்.

(3) கடுக்காய் கஷாயத்தை யோனிக்குள் அடித்து வரலாம்.

(4) படிகாரத்தைக் குளிர்ந்த தண்ணீரில் கரைத்து யோனிக்குள் அடித்து வரலாம்.

| | |
|---|---|
| (5) ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | 30 துளி |
| டிஞ்சர்ஜென்ஷன் கோ (Tincture Gentian Co) | 1½ டிராம் |
| தண்ணீர் | 3 அவுன்ஸ் |

ஒன்றுசேர்த்துத் தடவை ஒன்றுக்கு ஒரு அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு 3-தடவை கொடுத்து வரலாம்.

அழுக்குச் சரியான அளவில் படவில்லையானால் கீழ்கண்ட மருந்தைக் கொடுக்கலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெருங்காயம் | ரூபாயிடை | ¼ | கருஞ்சீரகம் | ரூபாயிடை | ¼ |
| கோரைக்கிழங்கு | ,, | ¼ | சடாமாஞ்சில் | ,, | ¼ |
| ஓமம் | ,, | ¼ | சுக்கு | ,, | ¼ |
| மிளகு | ,, | ¼ | வாலேந்திரபோளம் | ,, | ¼ |

பொடித்து 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாக சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் அரைக்கால் ரூபாயிடை குங்குமப்பூவை அரைத்துக் கலக்கி காலை மாலை கொடுத்து வரலாம்.

## கருப்பை அகப்புறமாறுதல்

## IMVERSION OF THE UTERUS

கருப்பை தானாகச் சுருங்கி நஞ்சிக்கொடியை வெளி தள்ளுவதற்குமுன், கையினால் பலவந்தமாய் நஞ்சுக்கொடியை இழுப்பது முதலிய கெடுதல்களினால் கருப்பையின் உட்புறமானது வெளிபக்கமாக திரும்பிவிடுகிறது. இதற்கு வைத்திய முறையில் சிகிச்சை ஒன்றுமில்லை. கையைக்கொண்டு முன்னிருந்தது போலவே திரும்பச் செய்யவேண்டும். கருப்பையை தள்ளிவிட்ட க்ஷணமே, கையை குளிர்ந்த தண்ணீரில் நனைத்துக்கொண்டு, மறுபடியும் கருப்பைக்குள் கையை செலுத்தி கொஞ்சநேரம் வைத்திருக்கவேண்டும். கருப்பை சுருங்குவதற்குமுன் கையை எடுத்துவிட்டால் மறுபடியும் திரும்பிக்கொள்ளலாம்.

## விடபக் கிழிவு

## LACERATION OF THE PERINEUM

தலை பிரசவமானால் பிரசவித்த ஸ்திரீகளுக்கு 2-ம் பக்கத்தில் சொல்லியிருப்பதுபோல் யோனித்துவாரத்து பிளவின் அடிபாகம் சற்று கிழியத்தான் செய்யும். சிலருக்கு விடபம் (perineum) பூராவும் கிழிவுபட்டு ஆசனவாய் வரையில் திறந்து போவதுமுண்டு. சிசுவின் தலை பெருத்திருப்பதினாலும், கஷ்டப்பிரசவங்களில் அஜாக்ரதையாக குறடுகளை (Forceps) போட்டு சிசுவை வெளிப்படுத்துவதினாலும் விடபக் கிழிவு உண்டாகின்றது.

சாதாரணமாக அரை அங்குலம் கால் அங்குலம் கிழிவுபட்டிருந்தால், பிரசவித்த ஸ்திரீயின் முழங்கால் இரண்டையும் ஒன்று சேர்த்துக்கொண்டிருந்தாலே தானாக இரத்த ஓட்டம் உண்டாகி ஒட்டிக்கொள்ளும். அப்படி ஒட்டிக்கொண்டும் சிறு புண் இருந்தால் வேப்பெண்ணையைத் தொட்டுத் தடவுவதினால் நன்மையுண்டு.

விடபமானது அதிகமாகக் கிழிவுபட்டுப்போனால் கண்டிப்பாகத் தையல் (Stritching) போடவேண்டியது.

## பால் சுரக்கச் செய்தல்

## LACTESCENT

சில பிரசவித்த ஸ்திரீகளுக்குக் குழந்தைக்குப் போதிய பாலில்லாமலிருக்கலாம். பால் சுரப்பதற்காகத் தயிர், மோர், பால் அதிகப்பட்ட கஞ்சி வகைகள், கோகோ, பால், முட்டை முதலிய ஆகாரங்களைக் கொடுக்கலாம்.

(1) வெள்ளாட்டின் எலும்புகளை காயவைத்துக் குழம்பாகவேனும், மாமிசரசமாக (Soup) வேனும் செய்துகொடுக்கலாம்.

(2) ஆமணக்கிலையை வதக்கி மூலையின்பேரில் வைத்துக் கட்டலாம்.

(3) பூநாகத்தை (நாக்குப்பூச்சியை)க் கொஞ்சநேரம் பாலில் போட்டிருந்தால் மண்ணைக் கக்கிவிடும். பிறகு அதை பாலில் அறைத்து எலுமிச்சங்காய்ப் பிரமாணம் மூன்றுநாள் பாலில் கலக்கிக் கொடுக்கலாம்.

(4) நற்றுளி யிலையை யிளஞ்சூடான தண்ணீரில் போட்டு பிசைந்து சக்கையை வடிகட்டிவிட்டு தண்ணீரை மூன்றுநாளைக்குக் கொடுக்கலாம்.

(5) பாதிரிவேரை பசும்பாலில் அரைத்துக் கொடுக்கலாம்.

(6) கீழ்க்காய் நெல்லிவேரை பசும்பாலில் அரைத்துக் கொடுக்கலாம்.

(7) ஓரிலைத் தாமரையை எலுமிச்சம்பழம் பருமனில் அரைத்துப் பசுமோரில் கலக்கி ஒருவாரம் கொடுக்கலாம்.

(8) தண்ணீர்விட்டான் கிழங்கை சூரணித்து வேண்டிய அளவு சர்க்கரை சேர்த்துக் கொடுக்கலாம்.

(9) பார்லி (Barley) அரிசிக்கஞ்சியை அதிக அளவில் கொடுத்துவரலாம்.

(10) 1½-தோலா தோல் நீக்கிய வெள்ளைப்பூண்டை 40-அவுன்ஸ் பசும் பாலில் நன்றாக வேகவைத்துக் கடைந்து, கால் தோலா ஏலரிசித்தூளும், 1½-தோலா மாவு சீனியும் சேர்த்து நன்றாகக் கடைந்து, காலையில் தூங்கி விழித்தவுடன் கொடுத்து, 9, 10-மணிக்குமேல் ஆகாரம் கொடுக்கலாம்.

(11) கெப்ளர்ஸ் மால்ட் எக்ஸ்டிராக்ட் (Kepler's Malt Extract) என்ற மருந்தைக் கொடுக்கலாம்.

## பால் வற்றச் செய்தல்

## LACTIFUGA

குழந்தைகளுக்குப் பால் நிறுத்தியபின் சில ஸ்திரீகளுக்குப் பால் அதிகமாகச் சுரந்து கட்டிக்கொண்டு வேதனை செய்வதுண்டு. அச் சமயங்களில் பாலை வற்றச்செய்யும்படியான சிகிச்சை செய்யாவிடில், பால் கட்டி ஸ்தனம் வீங்கி காம்புகள் வெடித்துப் புண்ணாகும்; பால் காய்ச்சல் காணும்; இச் சமயங்களில் வேறு குழந்தைகளை முலையுண்ணும்படியாவது, பாலை வெளிப்படும்படி பீச்சவாவது கூடாது. அப்படிச் செய்தால், பால் சுரப்பு அதிகப்பட்டு, பின்னும் உபத்திரவம் அதிகமாகும். பால் சுரக்காமலிருக்கச் செய்வதே சிறந்த முறையாகும்.

(1) மல்லிகைப்பூவை வதக்கி வைத்துக் கட்டலாம்.

(2) முட்டைகோஸ் கீரையை வதக்கிவைத்துக் கட்டலாம்.

(3) வெற்றிலையை வதக்கிவைத்துக் கட்டலாம்.

(4) ஐஸ் ஒத்திடம் கொடுக்கலாம்.

(5) கர்ப்பூர எண்ணெயை (Oleuim Camphor) ஒரு துணியில் தடவி ஸ்தனத்தின்பேரில் போட்டு வைக்கலாம்.

(6) கரியபோளத்தை அரைத்துப் பூசலாம்.

(7) பெலடோனா பிளாஸ்திரியை (Emplastrum Belladonae) ஒரு துணியில் ஸ்தனக்காம்பு வெளியில் வரும்படியாகத் துளைசெய்து அதில் தடவி ஸ்தனத்தின்பேரில் ஒட்டி வைக்கலாம்.

(8) செம்மரத்தைத் தண்ணீர்விட்டு உரைத்துப் பூசலாம்.

(9) துவரம்பருப்பை உரைத்துப் பூசலாம்.

(10) பெலடோனுசத்தும் (Extract Belladonae) கிளிசரினு (Glycerine)ம் சமனுகக் கலந்து துணியில் தடவி, ஸ்தனக்காம்புக்குத் துவாரமிட்டு ஸ்தனத்தின்பேரில் போடலாம்.

## சிசு சம்ரக்ஷணை முறைகள்

## GENERAL HINTS ON MANAGEMENT OF NEWLY BORN INFANTS

சிசுக்களின் சாதாரண வியாதிகளைப்பற்றி கூறுமுன் சிசு சம்ரக்ஷணையைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறுவது மிகவும் அவசியம் என்று கருதியே அதனையும் சிறிது விளக்க விரும்புகிறேம்.

## பிறந்த குழந்தை

## NEWLY BORN CHILD

பிரசவத்தைப்பற்றி நாம் முன்னமேகூறி வந்திருக்கிறோம். சுகபிரசவமாகக் குழந்தை பிறந்தவுடன் அதனை கவனிக்கவேண்டியது. எவ்விதமென்றுல், சிசு ஜெனித்தவுடன் உக்ரமாகக் கத்துகிறதா என்பதே. சுக சரீரத்துடனும், வலிமையான தேக அமைப்புடனும் பிறந்த குழந்தையானது பிறந்தவுடன் வீரிட்டழும். 98-டிகிரி உஷ்ணத்திலும், தாயின் கர்ப்பப்பையிலும் அடைப்பட்டுக் கிடந்து, வெளிச்சத்தில் வெளிப்பட்டவுடன் குளிர்ச்சியாலும், பிரகாசத்தினுலுமே குழந்தை அழும்படியா யிருக்கிறது.

சிசு பிறந்தவுடன் அழுவதினுல் நுரையீரல் இயற்கையாக நிறைய வேண்டிய காற்று நிறைந்து, சுவாசம் விடவும் இரத்தாசயம் விரிந்துகொடுத்து இருதய நடையை ஒழுங்குபண்ணவும் செய்கிறது. இருதயநடை ஒழுங்காக நடக்க வாரம்பித்ததும், தாய் வயிறுனின்றும் வேறுபட்டதற்கு அடையாளமாக நாபிக்கொடி (தொப்புள்கொடியின்) நடையானது நின்றுவிடும் அந்தச் சமயம் பார்த்து, தொப்புளிலிருந்து இரண்டங்குலம்விட்டு தொப்புள்கொடியில் ஒரு துணி நாடாவைக் கட்டவேண்டும். அந்த நாடா கட்டிலிருந்து மூன்றங்குல தூரத்திற்கப்பால் மற்றொரு கட்டு (முடிச்சு) போட்டு இரண்டு கட்டுக்கிடையில் கூரிய கத்தியினுலாவது, கத்திரிக்கோலினுலாவது தாயையும், சேயையும், வேறுபடுத்தவேண்டும்.

இதில் முக்கியமான விஷயம் நாபிக்கொடியைக் கட்டும் நாடாவும், கத்தியும் முன்னதாகவே கொதிக்கிற தண்ணீரில் போட்டெடுத்து வெகு சுத்தம் செய்து வைத்திருக்க வேண்டும். ஏனென்றுல் தொத்துவியாதி கிருமிகளும், ரணத்தை உண்டுபண்ணும். கிருமிகளும் அவைகளில் தொத்தியிருக்குமானுல் பிராணுபத்தான வியாதிகளை உண்டுபண்ணலாம்.

இவ்விதமாக நாபிக்கொடியைக் கட்டித் துண்டுபடுத்தப்படாவிட்டால், ஒரு சமயம் இரத்தம் பெருகி குழந்தை இறந்துபோகலாம். குழந்தை பிறந்த 20-நிமிஷத்தில் தொப்புள்கொடியில் நாடி ஓட்டம் தானாகவே நின்றுவிடும். அதன்பிறகும் துண்டித்துவிடலாம். எக்காரணத்தை முன்னிட்டும், அவசரப்பட்டுக் குழந்தை பிறந்தவுடன் நாபிக்கொடியைத் துண்டித்துவிட்டால் சிலசமயம் சிசு மரிக்கலாம். இதை மருத்துவத் தொழில்செய்வோர் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது. துண்டிக்கப்பட்ட தொப்புள் கொடியின் நுனியை ஈரமில்லாத வெள்ளைத்துணியினுல் அழுந்தாமல் சுத்திக் கட்டித் தொங்கவிடவேண்டும். இப்படிக்கட்டியிருக்கும் நாபிக்கொடியானது ஒருவாரத்துக்குள் தானுகவே விழுந்துவிடும். அப்படி விழுந்தாலும் தொப்புளில் சிலசமயம் புண் இருக்கலாம். இதை சாதாரண மெழுகு களிம்பைக் (Simple Ointment) கொண்டு ஆற்றவேண்டும். இந்தப் புண் இருக்கும்வரை குழந்தைகளைக் குளிப்பாட்டும்போதெல்லாம் இப்படிக் களிம்பைத் தடவிவரவேண்டும்.

சிசு பிறந்தவுடன் அதன் திரேகமெல்லாம் வழுவழுப்பான ஒரு பசையினுல் பூசப்பட்டிருக்கும். ஆதலால், நாபிக்கொடியைத் துண்டித்தவுடன் குழந்தையைச் சுத்தஞ்செய்யும்பொருட்டாகக் கழுவியெடுத்துக் கம்பளித்துணிகளால் மூடிவைக்கவேண்டும். குளிப்பாட்டுவதென்று குழந்தையை நெடுநேரம் தண்ணீர் படும்படியாக வைத்திருக்கக்கூடாது. இந்த வேலையை எவ்வளவு சுறுசுறுப்பாகச் செய்யமுடியுமோ, அவ்வளவு விரைவில் செய்துமுடிக்கவேண்டும். குழந்தையைச் சுத்தமாகக் கழுவாததினுலும், துரிதமாகவும், சாமர்த்தியமாகவும் குளிப்பாட்டும் தொழிலைச் செய்யாததினுலும், தாயின் பக்கத்தில் கிடத்திய குழந்தையின் நிறம் நீலமாக மாறிவிடும்படிச் செய்கிறது.

சிசு பிறந்தவுடன் வாயில் விரலைவிட்டுக் கோழையை எடுத்துவிட்டு, சுவாசிக்கச் சுலபமாயிருக்கும்படி மல்லாத்திப் படுக்கவைக்கவேண்டியது. குழந்தையைக்குளிப்பாட்டுவதற்கு முன்னதாக, வெந்நீரில்நனைத்துப் பிழிந்த வெள்ளைத் துணியினுல் கண் இரப்பைகளைக் கவனத்துடன் துடைத்துச் சுத்திச்செய்ய வேண்டும். வெதவெதப்பான தண்ணீரில் நனைத்துப் பிழிந்த கடல் பஞ்சியினுலாவது, சுத்தமான துணியினுலாவது துடைத்தாலும் போதுமானதாகும். அப்படித் துடைத்தவுடனே ஈரமில்லாத சுத்தமான துணியினுல் துடைத்துவிட வேண்டும். சில குழந்தைகள் கர்ப்பத்தில் இருக்கும்போது தாயானவள், மண், சாம்பல் முதலிய மாவு பதார்த்தங்களை உண்பதினுல் சிசுவின்பேரில் அடையாக அழுக்குப்படிந்திருக்கும். அப்படியானுல் கையில் கொஞ்சம் நெய்யோ, அல்லது பன்றிக் கொழுப்போ (Lard) தடவிக்கொண்டு குழந்தை உடம்பில் தேய்த்துப் பின்னர் சோப்பினுல் அலம்பி துடைத்துவிடவேண்டும். இவ்விதமாகவெல்லாம், சிசுவை சுத்திசெய்த பின்னர், புட்டாமாவை (Toilet Powder) மூட்டுகளிலும், மூட்டு உள்புறம் குவிந்த பாகங்களிலும் பஞ்சியினுல் தொட்டு

பூசவேண்டும். பிறகு குழந்தையை மிருதுவான மெத்தையில் படுக்கவைக்க வேண்டியது. பின்னும்குழந்தை வெதுவெதுப்பாக விருக்கும்படி கம்பளி யினால் போர்த்துவைக்கவேண்டும்.

## சுவாச மடங்கிபிறக்கும் குழந்தைகள்

## STILL BORN INFANTS

சில சிசு பிறந்தவுடன் சுவாசமின்றி யிருப்பதுண்டு. இப்படி உள்ள நில மையிலிருந்து விரைவில் சுவாசம் வரும்படியான உதவிகள் செய்யாவிட்டால் மரணமே சம்பவிக்கலாம்; ஆனால், இருதயம் மட்டும் துடித்துக்கொண் டிருக்கிற வரையில் உயிர்ப்பிக்க முடியுமென்று நம்பவிடமுண்டு. சிசு சுவாசபந்தன முடன் பிறப்பதற்கு முக்கியகாரண மென்னவென்றால் கஷ்டப் பிரசவமென் கிலும், சிரசு உதயமாகி நெடுநேரம் குழந்தை பிரசவியாததினாலென்கிலும், நஞ்சு சீக்கிரத்தில் பிரிந்துபோவதினாலென்கிலும், உதிரப்பெருக்கினாலென் கிலும், கர்ப்பத்திலுள்ள காலத்தில் தாய் சரியானவிதமாக போஷிக்கப்படாத தினாலென்கிலும், கபாலம் நாபிக்கொடியை அழுத்திக்கொண்டு வெளிப்பட் டதினாலென்கிலும், சுவாசக் கருவிகளுக்குக் காற்று நுழையும் மார்க்கங்களாகிய வாய், தொண்டை, மூக்கு முதலிய துவாரங்களில் அதிகரித்த கோழைகள் அடைத்துக்கொண் டிருப்பதினாலென்கிலுமென்றே சொல்லலாம்.

இப்பேர்ப்பட்ட சமயங்களில் தொப்புள் கொடியை முன்சொன்னவிதமாக இருகட்டுகள் போட்டு தாமதமின்றி துண்டித்துவிடவும். சுவாசத் தடையாகநிற் கும் கோழைகளை நீக்கும்பொருட்டு கோழி இறகைக்கொண்டு மூக்கு, தொண்டை முதலியவைகளில் குடைந்து எடுத்து கூச்சம் உண்டுபண்ண வேண்டியது. சிசுவை நல்ல காற்று வீசும்படியான இடத்தில் வைத்து, சுவாசிக் கும்படியாக குளிர்ந்த தண்ணீரைக்கொண்டு மெதுவாக முகத்திலும், மார் பிலும் அடிக்கவேண்டியது. அல்லது வெந்நீரினாலும், குளிர்ந்த நீரினாலும் மாற்றிமாற்றி அடித்துச் சுவாசம் உண்டுபண்ண பிரயத்தினப்படவேண்டும். அல்லது, ஓர் துவாலையின் நுனியில் குளிர்ந்த தண்ணீரைவிட்டு அதைக் கொண்டு, பிட்டத்திலும், நெஞ்சிலும், முதுகிலும் மாறிமாறி அடிக்க குண முண்டாகும். முகத்தில் காற்று நன்றாக வீசும்படியாகச் செய்து, கம்பளியைக் கொண்டு திரேகாதியந்தமும் சூடு உண்டுபண்ணக்கூடியவிதமாய் தேய்க்க வேண்டியது. பின்னும் குழந்தையின் உள்ளங்கால்களிலும், பிட்டத்திலும், விரல்களால் சுரண்டி நோயுண்டாக்கி அழும்படி செய்யவேண்டும்.

சுவாசமடங்கி பிறக்கும் குழந்தைகளுக்குக் கீழ்கண்ட உபசரணை முறை நன்மை பயக்குமென்று டாக்டர் ஹாரீஸ் ரூடாக் (Dr. H. Ruddock) கூறுகி றார். சிசுவின் மூக்குத்துளைகளை கைவிரலால் சிறிது அழுத்திப் பிடித்து சுவாச குழலை மேல்நோக்கி அமுக்கிவிட்டு, நுரையீரலுக்கு காற்று செல்லும்படியாக

கையை பொத்தி அடிக்கவேண்டும். பின்னர் இடையை (இடுப்பு-Ribs) மேல் நோக்கி அழுத்தி நுரையீரல் காற்றை அபகரிக்கும்படியாகச் செய்யவேண்டியது. இப்படி இந்த முறையை நிமிஷத்துக்கு 15-முறை வேகமாக செய்ய வேண்டும். இதனுல் வெகு சீக்கிரத்தில் நன்மையுண்டாகலாம். அல்லது, சிசுவை மட்டமாக படுக்கவைத்து கம்பளியால் உஷ்ணமாகும்படி தேய்க்கவும். இப்படிச்செய்யும்போது சிரசு நெஞ்சில்சாய்ந்து சுவாசம்விட தடங்கலாகாதபடி நெஞ்சு சற்று உயரமாக வைத்துக்கொள்ள வேண்டியது. இதிலும் பயனில்லையானுல் 98-டிகிரி உஷ்ணமுள்ள தண்ணீரை ஒரு தொட்டியில்விட்டு குழந்தையை திடீரென்று அமுக்கி எடுக்கவும். இந்த முறையிலும் சுவாசம் வெளிவரவில்லையானுல், இரண்டு நிமிஷத்துக் கதிகமாக இந்த உஷ்ணஜல சிகிச்சையால் பயன் ஏற்படாது.

டாக்டர் மார்ஷல் ஹால்ஸ் (Dr. Marshall Halls) கீழ்கண்ட முறை மிகுந்த நன்மை அளிப்பதாக கூறியிருக்கிறுர். சிசுவை குப்புற படுக்கவைத்து ஏக காலத்தில் சரீரம் முழுவதுமே விலாபக்கம் ஒருபுறம் சாய்ந்தமாதிரி திருப்பியும், மறுபடியும் குப்புற திருப்பியும், இந்த விதமாக நிமிஷத்திற்கு 15-முறை நிதானமாகவும், திறமையாகவும் செய்யவேண்டும் என்கிறுர்.

எவ்வாருக இருப்பினும், சுவாசமடங்கி பிறக்கும் சிசுவை; வெளியானவுடன் வழக்கம்போல் விரலைவிட்டு கோழையை வழித்துவிட்டு, கோழி இறகால் நாசித் துவாரங்களையும் தொண்டையையும் குடைந்து கோழையை சுத்திசெய்து சுடுதண்ணீரையும், குளிர்ந்த தண்ணீரையும் மாறிமாறி முகத்திலும் நெஞ்சிலும் அடிப்பதினுல் நன்மை உண்டு என்பதே நாம் அறிந்ததாகும்.

சிறிதுநேரம் உயிர்பிக்கும் முயற்சிகளை செய்தும் சுவாசம் வெளிப்பட்டு குழந்தை அழவில்லையானுல் அசாத்தியமென்றே தீர்மானிக்கலாம் குழந்தை பிறந்து இரண்டுமணி நேரத்திற்குப் பிறகும், பல சிகிச்சைகளினுல் பயன் உண்டாயிருப்பதற்கு தக்க ஆதாரங்கள் உண்டு. என்றுலும் சலிப்பில்லாமல் குறைந்தது அரைமணி நேரமாகிலும் சுவாசிக்கச் செய்யும், சிகிச்சைகளை விடாது செய்து பார்க்கவேண்டியது முக்கிய கடமையாகும்.

புனுகையும், கோரோசனையையும் சமமாக மத்தித்து நாக்கில் தடவலாம். இந்த முறை சற்றே குணமான அறிகுறிகள் இருக்கும் சமயத்தில் செய்யப்படுமானுல் நன்மையை உண்டு பண்ணும்.

## முதல்நாள் முலையில் பால்

## MILK IH THE BREASTS THE FIRST DAY

பிரசவித்த முதல்நாள் தாய்மார்களுக்குப் பால் உண்டாவதில்லை என்றும், மூன்றுநாளைக்குப் பிறகே பால் ஊறுவதாகவும் நம் நாட்டுப் பாமரமக்கள் கூறு

கிறார்கள். அதனால் சிசுவின் ஆகாரமாகப் பிரதி பால்களை ஊட்டவும் செய்கிறார்கள். இது நம்புவதற்கிடமாகவில்லை. அநேக பிரசவித்த ஸ்திரீகளுக்கு முதல் நாளிலேயே குழந்தைக்குப் போதுமான பால் இருக்கிறதென்பதை அநேகர் ஏற்றுக்கொள்ளுகின்றனர். சிசு பிறந்தவுடன் முலைக்காம்புகளிலுள்ள அழுக்குகளைச் சுத்தம் செய்துவிட்டு, ஸ்தனத்தைக் கசக்கிப் பீச்சினால் சீழ் போன்ற பதார்த்தம் வெளிவரும். உடனே முலைக்காம்புகளைச் சிசுவின் வாயில் வைத்து, மெதுவாக பீச்சுவிட குழந்தைக் குடித்துப் பசியாற்றிக்கொள்ளமுடியும். முதலில் முலையைப் பீச்சாமல் பால் கொடுத்தால் முலைக்காம்பு கண்களில் அடைபட்டிருக்கும் அழுக்கு, குழந்தைக்கு வியாதியை உண்டாக்கும்.

முதல் நாளில் பிரசவித்த ஸ்திரீகளுக்குப் பால் இல்லை என்று வேறு பால்களைக் கொடுப்பது மிகவும் தவறுதலானதாகும். பிரசவித்தவுடன் சிசுவுக்குக் கொடுக்கும் முலைப்பாலில் அதிகமான கிணசத்து இருப்பதினால், சிசுவின் மலக்குடலிலிருக்கும் காட்டு மலமானது சல்லிசாக வெளிப்பட்டு விடுகிறது. இந்த முறையை மருத்துவத் தொழில்செய்வோர் கையாளாமல் குழந்தையின் காட்டு மலம் வெளிப்பட, சர்க்கரை, செங்கற்பொடி, வெண்ணை, வெற்றிலைச்சாறு, கள்ளிச்சாறு முதலியவற்றை ஈவிரக்கமின்றி கொடுக்கின்றனர். இயற்கையாக உள்ள முலைப்பாலைவிட வேறு நன்மையானது இல்லை என்பதைக் கண்டிப்பாக அறியவேண்டும். முக்கியமாய் தேவையானால்மட்டும் அவித்து ஊற்றிய விளக்கெண்ணெய் (Castor Oil) அரைத்தேக்கரண்டி கொடுக்கலாம். முதலில் பால் இல்லையானாலும், குழந்தையை உருஞ்சும்படிச் செய்வதினால் இயற்கையாகவே முலையில் பால் சுரந்துவிடுகிறது. அப்படிக் குழந்தையைப் பால் குடிக்கச் செய்யாததினாலேயே பால் கட்டிப்போய், பால் காச்சல் (Milk Fever) ஏற்பட்டுவிடுகிறது.

குழந்தைக்குப் பால் கொடுக்கும்போது, ஸ்திரீகள் சுலபத்தில் ஜீரணமாகும் படியான மெல்லிய சாதாரண உணவையே உட்கொள்ள வேண்டும். மனோவேதனையினாலும், பால் சுரப்புக் குறைந்துபோவதோடு பாலும் கேடுறயேதுவாகும். இவ்விதம் கேடுற்ற பாலினால் குழந்தைகளுக்கு அஜீரணம், மாந்தம், பேதி, சுரம், வலிப்புகள் முதலிய வியாதிகள் உண்டாகி விபத்துண்டாக்கலாம். ஆதலால் குழந்தைக்குப் பால் கொடுக்கும் சமயம் தாயானவள், சஞ்சலமின்றியும், மனோவேதனையின்றியும், இருத்தல் மிகவும் அவசியமாகும். குழந்தைக்குப் புகட்டப்படும், வேறெந்த ஆகாரமும் எவ்வளவு உயர்வாயிருப்பினும் தாய்ப் பாலுக்குச் சமமாகாதென்பது அநுபவத்தில் கண்டதாகும்.

பெற்ற குழந்தைக்குப் பால் கொடுப்பதினாலேயே, தாய்மார்கள் மற்றெந்த வியாதிகளி லிருந்தும் தப்பித்துக்கொள்ள முடியும். நோஞ்சலாகவும், க்ஷீண ஸ்திதியிலுமுள்ள ஸ்திரீகளும், குழந்தைகளுக்குப் பால் கொடுப்பதினாலேயே

திரேகம் பலப்பட்டு, மற்ற நோய்கள் அணுகாமல் தப்பித்துக்கொள்ள முடியும். அதிபலயீன ஸ்திரீகளும், மெல்லிய சரீரிகளான ஸ்திரீகளும், குழந்தைகளுக்குப் பால் கொடுத்தால், மிகுதியும் பலயீனமடைவார்கள் என்று சொல்லுவது பொருத்தமான விஷயமல்ல.

பெற்ற குழந்தைக்குப் பால் கொடுக்காமலிருக்கும் ஸ்திரீகள், விரைவில் கர்ப்பமுண்டாகி, அடிக்கடி குழந்தைகள் பெற்று சரீரக்ஷீண மடைவார்கள். இதனால் சரீரம் தளர்ந்து, இளம்பிராயத்திலேயே கிழப்பருவம் பெற்று விடுவதோடுங் கூட, உலகத்தையே வெறுக்கும்படியான பிணியும், அவர்களைத் தொடர்ந்துகொண்டே யிருக்கும். குழந்தைகளுக்குப் பால் கொடுத்துக்கொண்டு வரும் ஸ்திரீகள், பிரசவித்த 20-மாதங்களுக்கு முன் கர்ப்பம் அடைவதில்லை.

குழந்தைகளுக்குப் பால்கொடுக்கும் ஸ்திரீகளுக்குப் பால் காம்பு வெடிப்போ, பால் சுரமோ, முலைச்சிலந்தியோ உண்டாவதில்லை. பால் கொடுக்க முற்றிலும் அசக்த்தர்களாக விருந்தாலும், நெடுநாள் குழந்தைக்குப் பால் கொடுக்க சாத்தியப்படாவிட்டாலும், குறைந்தது ஒரு மாதமாவது குழந்தைக்குப் பால் கொடுத்தே தீரவேண்டும். பாலானது ஸ்தனத்தில் 12-மணி நேரத்திற் கதிகமாய்த் தங்கியிருந்தால், பால் கெட்டு நஞ்சாக மாறிவிடும். அந்தப் பாலை சிசுக்களுக்குக் கொடுத்தால், வாந்தியையோ, பேதியையோ உண்டுபண்ணும். நெடுநேரம் பால் கொடுக்காமலிருந்து குழந்தைக்குப் பால் கொடுக்கவேண்டி வந்தால் முதலில் அந்தப் பாலை பீச்சுவிட்டுத்தான் கொடுக்கவேண்டும். சாதாரணமாக குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும்போதெல்லாம், முலையைக் கழுவி சுத்தி செய்துவிட்டு, கொஞ்சம் பாலைப் பீசியபின்னரே குழந்தைகளுக்குப் பால் கொடுப்பதே சிறந்த முறையாகும்.

முதல் நாளில் நாலுமணி நேரத்திற் கொருதரம் குழந்தை முலையுண்ணும்படி செய்யவேண்டும். அடுத்த நாள் பால் அதிகமாக ஊறுமானால் குழந்தைக்கு அடிக்கடி முலைக்கொடுக்கலாம்; ஆனால், சிசுவுக்கு போதுமான பாலில்லை என்று தெரிந்தால்மட்டும் கொதி தண்ணீரில் கொஞ்சம் இனிப்பு சேர்த்துப் புகட்டலாம் தாய்ப்பால் இல்லை என்று தீர்மானித்த பிறகேதான் இவ்விதம் செய்யலாம். முலையில் பால் சுரப்பு அதிகமாயிருந்தால் மூன்றுமணி நேரத்திற் கோர்முறை பால் உண்ணும்படி செய்யலாம். முதல் இரண்டுமூன்று நாட்களில் குழந்தைக்கு 101-டிகிரி உஷ்ணமும், திரேக அசௌக்கியமும் தோன்றுமானால், "முதல் ஆறுமாத ஆகாரவிதி" என்ற தலைப்பின்கீழ் கவனித்து ஆகாரம் கொடுக்கவேண்டியது.

சில குழந்தைகள் பிறக்கும்போதே மார்பு மச்சம் (முலைக்குறி) பெருத்திருப்பதுண்டு. இதனைச் சிலர் கசக்கி நீரை எடுத்துவிடுவதுண்டு. இதைவிட

கெட்ட செய்கை வேறொன்றில்லை. நூற்றில் ஒரு குழந்தைக்குக்கூட இவ் விதம் பெருத்திருப்பதில்லை. ஆனால் மருத்துவச்சிகள் எல்லாக் குழந்தைகளுக் கும் இப்படிச் செய்துவிடுகிறார்கள். மார் சிறிது பெருத்திருக்குமேயானல், மாவு கிண்டிவைத்து (Poultice) கட்டுவதே யேற்ற சிகிச்சையாகும்.

## சிசுவைப்பற்றி சில குறிப்புகள்

## FEW POINTS ON NEWLY BORN CHILD

சமசுகதேக குழந்தைகளின் தேகரீதியை கீழ்கண்டவிதமாக அநுபவத்தி லறிந்திருக்கிறது. குழந்தையின் உச்சிக்குழி (Anterior Fontanelle) ஒன் றரை ஆண்டுக்குமேல் இரண்டாண்டாக்குள் மறைபட்டுவிடும். அதற்குப் பின் னும், உச்சுக்குழி காணப்படுமானல், ரோகதேகியான குழந்தை என்றும், வியாதிகள் சதா பற்றத்தகுந்த தேகி என்றும் தீர்மானிக்கலாம். குழந்தை களுக்கு மூன்று நான்கு மாதத்திற்குள் கழுத்து நின்றுவிடும். குழந்தைகள் ஒரு வருஷத்திலிருந்து இரண்டு வருஷத்துக்குள் நடக்க ஆரம்பித்துவிடும். பால் பல்கள் (Milk Teeth) ஆறுமாதத்திலாரம்பித்து மூன்று வருடத்துக்குள் பூர்த்தியாக முளைத்துவிடும். ஆறுவயதில் பல் விழுந்து முளைக்க ஆரம்பிக்கும். சமதேக குழந்தைகள், பிறந்த சமயம் 7-ராத்தலும், நாலுமாதத்தில் 14-ராத்த லும், பனிரெண்டு மாதத்தில் 21-ராத்தலும், ஆறுவயதில் 42-ராத்தலும், பன்னி ரெண்டு வயதில் 84-ராத்தலும் இருக்கலாமென்று டாக்டர் ஹூச்சின்ஸன் (Dr. Hutchinson) குறிப்பிடுகிறார்.

## கழுவுதலும், குளிப்பாட்டலும்

## WASHING AND BATHING

சுசீகரமாய் வைத்துக்கொள்வது, குழந்தைகளுடைய சுகத்திற்கும், வளர்ச் சிக்கும் மிக இன்றியமையாததாகும். சுகத்துடனிருக்கும் ஒரு குழந்தையை 24-மணிநேரத்திற்கு இரண்டுதரம்; அதாவது, காலையும், மாலையும் இளவெந்நீரி னல் குளிப்பாட்டவேண்டும். ஒரு தொட்டியில் சம உஷ்ண தண்ணீர்விட்டு, சிசுவின் தலையை கையால் அணைத்துக்கொண்டு, கழுத்து வரையில் நனைத்து எடுத்து, கிளிசரின் சத்து அதிகமாயுள்ள உயர்ந்த சோப்புகளினலாவது, வெள்ளைத் துணியினலாவது தேய்த்து, மறுபடியும் தண்ணீரில் நனைத்து உடனே காய்ந்த துவாலையினல் ஈரமில்லாது துடைத்துவிடவேண்டும். இப் படி குளிக்கச்செய்யும் முறையை கைக்கொள்ளுபவர்கள், வெகு சுறுசுறுப்பாகச் செய்துமுடிக்கக் கூடியவர்களாக இருக்கவேண்டும். உஷ்ண காலங்களில், பிறந்து ஒன்றல்லது இரண்டுமாதமான பிறகு சுடுதண்ணீர் ஸ்நானம் தேவை யில்லை. படிப்படியாகக்குளிர்ந்த தண்ணீர் ஸ்நானமே ஆரோக்கியமுடையதாக

விருக்கும். பலயீனமான குழந்தைகளுக்குச் சுடுதண்ணீர் ஸ்நானம் நெடுநாள் வரையில் நன்மையைத் தரும். குளிர்காலத்தில் பிறந்த குழந்தைகளுக்கு அடுத்த வேனிற்காலம் வரை உஷ்ண ஸ்நானமே முக்கியமாக வேண்டப்படும். பின்னர் குளிர் ஸ்நானம் செய்விக்கலாம். குளிர் ஸ்நானமே பெரும்பாலும் குழந்தைகளுக்கு நன்மைபயப்பதாக விருப்பினும், ஒரு நாளையில் அதாவது 24-மணி நேரத்தில் ஒருதரமே குளிர் ஸ்நானம் செய்விக்கவேண்டும். உஷ்ண ஸ்நானத்தைப்போன்று இரண்டுதரம் குளிர் ஸ்நானம் செய்தல் கூடாது.

பிறந்த குழந்தைகளின் கண்களைப்பற்றிய விஷயமானது, மிக முக்கியமும் பிரதானமுமானதனுல் ஒவ்வொருவரும் அதில் மிக ஜாக்ரதையாக விருக்க வேண்டும். டாக்டர் ஜான் எச். கிளார்கி (Dr. John H. Clarke) சொல்லுமாப்போலே, குழந்தை பிறந்தவுடன் மருத்துவச்சி, குழந்தையின் கண்களை எவ்வளவு ஜாக்ரதையுடன் சுத்திசெய்யமுடியுமோ, அவ்வளவு ஜாக்ரதையுடன் கண்ணில் படிந்திருக்கும் கோழைகளை நீக்க, சுத்தமான வெள்ளைத் துணியின் நுனியை தண்ணீரில் நனைத்துப் பிழிந்து கண் உள் இமையிலும் கடைக் கண்ணிலும் இருக்கும் கோழைகளை ஜாக்ரதையாகச் சுத்திசெய்யவேண்டியது. இதனுல் கண்ணிமைகள் கோழையின்றி சுத்தம் செய்யப்பட்டு, கண்மணிகளுக்குக் கோளாறு வராமல் காப்பாற்றப்படுகிறது. கண்ணைச் சுத்தம் செய்யும் பொருட்டு ஒருபோதும் கடற்பஞ்சுகளை உபயோகிக்கக்கூடாது.

குழந்தையின் கண்களைச் சுத்தம்செய்து, வெள்ளிய சுத்தமான துணியினுல் காயச்செய்த பின், மருத்துவச்சி தன் கைகளை கார்பாலிக் (Carbolic Lotion) கழுவுநீர் முதலிய சுத்தித் தண்ணீரினுல் கையை நன்ருக அலம்பிவிடவேண்டும்.

குழந்தை பிறந்தமுதல் இரண்டுநாட்களில், கண் சிவந்தும், வீங்கியும் இமைகள் ஒன்ருேடொன்று ஒட்டியும் கொள்ளுமானுல், அதிக ஜாக்ரதையாக பக்குவம் செய்யவேண்டும். வெகு சுத்தமான வெள்ளை மிருதுவான துணியை வெந்நீரில் நனைத்துப் பிழிந்து, மெதுவாக அந்த அழுக்கு அதாவது பூழையைச் சுத்தம் செய்யவும். சுத்தம் செய்யும்பொருட்டுத் துணியை அழுத்தித் தேய்த்தலும், நகத்தால் சுரண்டுவதும் தீமையாகும். இதில் கண் குழிகளில் முக்கிய கவனம் செலுத்தவேண்டும். ஏனென்ருல் கண்குழியில்தான் பூழை அதிகமாக இருந்து உலர்ந்துபோயிருக்கலாம். அடிக்கடி துணியைச் சுடுதண்ணீரில் நனைத்துப் பிழிந்துகொள்ளவேண்டும். பின்னர் சுடுதண்ணீரில் நனைத்துப் பிழிந்த துணியினுல் கண் விழியையும் சுத்தம் செய்யவேண்டும். இதற்கு இடதுகை விரல்களினுல் இரப்பைகளை நீக்கிப் பிடிப்பதென்று பல்லைக்கடித்துக்கொண்டு சிசுவுக்கு இம்சை ஏற்படும்படியாக அழுத்திப்பிடிக்கக்கூடாது. கண் இமைகள் ஒன்ருேடொன்று ஒட்டிக்கொண்டிருக்குமாகில், கையினுல் அதை வலுவந்தமாகப் பிரித்துவிடாமல், சுத்தமான துணியைச் சுடுதண்ணியில் நனைத்து இரண்

டொரு துளி தண்ணீரை கண்ணில் பிழிந்து, சற்றுநேரம் பொறுத்து நீக்கினல் தானகவே நீங்கிவிடும். பின்னர் சுத்தம் செய்யலாம். சுத்தஞ்செய்யும்பொருட்டாக ஒருபோதும், சோப்பாவது (Soap) மற்ற எதையாவது கலந்த தண்ணீரினுல் கண்களைக் கழுவக்கூடாது. கண்ணிமைகள் தினம் ஒட்டிக்கொண்டு பூழையும் அதிகமாகப் படிந்திருந்தால் மேற்சொல்லியபடி தினம் இரண்டுவேளை சுத்தஞ்செய்து பின்னர் இரண்டொரு துளி, சுத்தமான பன்னீர் விடுவதினுல் நன்மையுண்டாகும்.

## வஸ்திரம் போர்த்துதல்.

## CLOTHING

தேச சீதோஷ்ண நிலைமைக்குத் தக்கபடியும், காலத்திற்குத் தக்கபடியும் துணி போர்த்தல் வேண்டும். நம் நாடு எப்போதும் உஷ்ணமுள்ளதாகவே யிருப்பதால், சிசுக்களுக்குப் போர்வையாக கனத்த துணியோ, கம்பளியோ தேவையில்லை மெல்லிய வெள்ளைத் துணியே போதுமானதாகும். முகத்தை மூடி விடாமலும், பல துணிகளைப் பொதிந்து, குழந்தையைக் கஷ்டப்படுத்தப்படாமலு மிருக்கக்கூடிய விதமாகவே போர்த்தல் வேண்டும். அதிகமான பழந்துணிகளைப் போர்த்துவதினுல், குழந்தைகள் கைகால்களை உதறிக்கொள்வதிலிருந்து அவைகள் கட்டுப்படுத்தி இம்சைசெய்யும். சிசுவின்பேரில் துணி போர்த்தாமலிருந்தால் தொப்புளில் இருக்கும் புண்ணின்மேல் ஈக்கள் உட்கார்ந்து ரணம் உண்டாகச்செய்துவிடும். ஆதலால், மெல்லியதாகவும், வெள்ளையாகவும், சுத்தமாகவுமுள்ள ஒரு துணியைக் கழுத்திலிருந்து கால்கள்வரை மூடும்படியாகப் போர்த்த வேண்டியது.

குழந்தைகளுக்கு வயிற்றுவயியும், வயிற்ரோட்டமும் ஏற்பட்டிருக்கும் சமயம் அடிவயிறு, துடையின்பேரிலும் ஈரமில்லாத சுத்தமான துணியைப்போர்த்தி வைக்கவேண்டும். குழந்தைகள் சம உஷ்ணத்தோ டிருக்கவேண்டியது மிகவும் முக்கியமானதாகும். அதிலும் பிறந்த குழந்தைகள் விஷயத்தில் இது அதி முக்கியமானதாகும். சிசுக்களுக்கு வரும் வாதரோகத்தில் அதி குளிர்ச்சி தாக்காமல் கம்பிளியைக்கொண்டு போர்த்துவது நலம். போர்த்தும் துணிகள் எப்போதும் ஈரமில்லாமலே யிருக்கவேண்டியது பிரதானமானதாகும். சிசு சிறுநீர் விட்டு துணியை நனைத்துவிட்டால் சோம்பலில்லாமல் வேறு துணி மாற்றிவிட வேண்டும். தலையில் உச்சுக்குழியை மூடும்படியாக ஒரு குல்லாய் உபயோகிப்பது நல்லது. பகலில் குழந்தைகளுக்குப் போட்டிருக்கும் துணிகளைவிட இரவில் குறைச்சலாகவே யிருக்கவேண்டும். முக்கியமாகக் குழந்தைகளுக்குப் போர்த்தும் துணியினுல், பூட்டுகளின் அசைவிற்கு தடங்கலில்லாமலும், ஜீரண கருவிகள் அடங்கியிருக்கும் வயிறு நசுங்காமலும், சுவாச உருப்புகள் தங்கள் தொழிலை செய்யத் தடங்கலில்லாமலு மிருக்கவேண்டியது.

## தூக்கம்

## SLEEPING

சிசுவின் நித்திரைக்கு யாதொரு பங்கமும் நேராதபடி காற்றோட்டமுள்ள இடத்தில் மிருதுவான படுக்கையின்மேல் படுக்கவைக்கவேண்டும். குளிர்காற்று வீசும் இடங்களில் குழந்தையைப் படுக்கவைக்கக் கூடாது. அதிகமான துணிகளைப் போர்த்துவதினாலும், சிசுவிற்கு நித்திரைபங்கமேற்படலாம். குழந்தைகளுக்கு ஆகாரம் எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியமானதாகும் நித்திரையும். ஒரே அறையில் பல குழந்தைகள் தூங்குப்படி செய்வது திரேக ஆரோக்கியத்திற்கு ஏற்றதல்ல. சிறு குழந்தையாயினும், பெரிய குழந்தைகளாயினும் தனித்துத் தூங்கும் முறையே சிறந்ததாகும். பிறந்து ஒரு மாதவயது வரையில் சுகதேக குழந்தைகள் ஒருநாளின் முக்கியமான பாகங்களை நித்திரையில் கழிக்கவேண்டும். பிறந்து ஓராண்டுவரை குழந்தைகள் பாதிநாளை நித்திரையில் செலவிடுதல் உத்தமமாகும். மூன்று வயதுவரையில் குழந்தைகள் மதியத்தில் நித்திரை கொள்வது நன்மைபயக்கக் கூடியதாகும்.

குழந்தை நித்திரை செய்யவேண்டியநேரம் வந்ததும் தாமதமின்றி குழந்தை விழித்திருக்கும்போதே படுக்கையில் போடவேண்டியது. குழந்தை தூங்கும் பொருட்டாக, மடியில் கிடத்தி ஆட்டுவதோ, மேலே தட்டிக்கொடுப்பதோ, தாலாட்டுதலோ முதலிய பழக்கங்கள் ஒன்றுமில்லாமலே அந்தந்த நேரங்களில் குழந்தை தூங்கும்படியாக பழக்கத்தில் கொண்டுவரவேண்டியது. தாலாட்டுதல், தட்டிக்கொடுத்தல், ஆட்டுதல் முதலியவைகள் அவ்வளவு நல்ல முறைகள் அல்லவென்று டாக்டர் ரூடாக் (Dr. Ruddock) என்பவர் கூறுகிறார். குழந்தைகள் தூங்கவேண்டியநேரம் தப்பாது படுக்கையில் போடுவதினால் வழக்கமாய் குழந்தை நித்திரைசெய்ய பழகிவிடுகிறதென்பதே அவர் கூறுவதற்கு ஆதாரமுளதாகும்.

தூங்கும்பொருட்டாக குழந்தைகளுக்குத் தூக்கமருந்துகளைக் கொடுப்பது எப்போதும் தவிர்க்கவேண்டியதொன்று. தூக்க மருந்துகளில் போதைக்குரிய அபின்சத்துக்கள் சேர்ந்திருப்பதினால், சிசுக்களின் மூளையையும், நரம்புகளையும் பழுதுபட செய்துவிடுகிறது. ஒருமுறை தூக்க மருந்துகளினால் தூங்கும்படி செய்தால், பின் என்றுமே அம்மருந்து பிரயோகத்தினால் மட்டும்தான் குழந்தை நித்திரைசெய்யும். இது எப்போதும் கெடுதலான பழக்கத்தை உண்டுபண்ணி, மூளை பலயீனத்தையடைய செய்கிறது. நித்ராகாரிகளான பானங்கள்; (Soothing syrups) மதுவர்க்கங்கள் (Cordials) சாராயங்கள் (Spirits) இவைகளைக் குழந்தைகளுக்குப் பருகக்கொடுத்து நித்திரையை வரு

விப்பதினால், பரிதாபமான சிசு ஹத்திகள் நேர்ந்துவிடக்கூடும். எந்தக் காரணத்தை முன்னிட்டும் குழந்தைகளுக்கு நித்ராகாரிகளை கொடுப்பது கெடுதல் என்று தெரிந்துகொள்ளவேண்டும். தவிர்க்கமுடியாத அவசியம் ஏற்பட்டால் "தூக்கமின்மை" என்ற தலைப்பின்கீழுள்ள மருந்துகளை மட்டும் உபயோகிக்கலாம். குழந்தைகள் அழாமலிருக்கும்பொருட்டு ரப்பர் முலைக்காம்புகளை (Dummy Tests and rubber Nipples) வாயில் வைப்பது சுகாதார குறைவானதுந் தவிர, தாடைகளை முன்னுக்கிழித்து முகத்தை விகாரப்படுத்திவிடும். சில குழந்தைகளுக்கு விரல் சப்பக் கற்றுக்கொடுப்பதும் உண்டு. இது மிகவும் கெடுதலான பழக்கமும் தவிர முளைக்கும் பல்லானது முன்னுக்கு இழுக்கப்பட்டு அவலக்ஷணமாக்கிவிடும்.

குழந்தைகள் நித்திரை செய்யும்போது சுத்தமான காற்று ஏதேஷ்டமாக இருக்கவேண்டும். படுக்கை யறைகளின் கதவுகளையும், ஜன்னல்களையும் சாற்றுவிடுவதினால் காற்று பிரவேசியாமல் மிகவும் தீங்கை விளைவிக்கும்.

## திறந்தவெளி வியாயமம்

## OPEN AIR EXERCISES

தாவர வர்க்கங்களுக்கு எவ்விதமாக சூரிய வெளிச்சமும் காற்றும் வேண்டப் படுகின்றனவோ, அவ்விதமாகவே மனிதரும் சுக தேகத்துடனிருக்க சூரிய வெளிச்சமும், நல்ல காற்றும் இன்றியமையாதனவாக இருக்கின்றன. அதிலும் குழந்தைகளுக்கு திறந்தவெளி வெளிச்சமும், காற்றும் மிக முக்கியமானதாகும். சூரிய பிரகாசத்தினின்றும் தடுக்கப்பட்டு கூரைகளுக்கடியில் வளர்க்கப்படும் பூஞ்செடிகளானது இயற்கையாக சூரியபிரகாசத்திலிருக்கும் பூஞ்செடிகளினின்று எப்படி வெளுத்துப் போகின்றனவோ, அதேப்போல் சூரிய வெளிச்சங்களில் உலாத்திக்கொண்டு வராத குழந்தைகளும் இரத்தம் குறைந்து வெளுரின தேகிகளாகவே யிருக்கும்.

சுகமாகக் காற்றுவீசும் சமயங்களில் ஒரு மாதத்திற்கு மேற்பட்ட குழந்தைகளை ஒருநாளைக் கிரண்டுதரமாவது சூரியவெளிச்சத்தில் நல்ல காற்று சுவாசிக்கும்படியாக வெளியே கொண்டுபோக வேண்டியது. அப்படிக் கொண்டுபோகும் சமயங்களில் முக்கியமாக கவனிக்கவேண்டிய தொன்றுண்டு. அதாவது சரியானவிதமாக துணியினால் போர்த்தப்பட் டிருக்கிறதா வென்பதே. கோடைகாலங்களில் குழந்தைகளை வெளிச்சத்தில் வைத்திருப்பது நல்லதாகும். ஆனால், சூரியனுடைய கிரகணங்கள் சிரசில் படாதவிதமாக, குல்லாயினாலாவது, வேறு எதனாலாவது மறைக்கப்பட் டிருக்கவேண்டும். பொதுவாக வெளிக்காற்றில் உலாவி வருவதினால் திரேகாரோக்கியம் அடைவதுமல்லாமல்,

பூட்டுகளுக்கும் நல்ல பலம் யேற்படுகிறது. குழந்தைகள் நடக்கும் காலங்களில் திறந்த வெளியில் தேகாப்பியாசங்கள் செய்யும்படியான முதல் பாடத்தை தாதிகளால் போதிக்கும்படி செய்யவேண்டியது.

## வேறுபட்ட வயதிற்குத் தகுந்த ஆகார முறைகள்

## DIETARY FOR HEALTHY INFANTS AT DIFFERENT AGES

குழந்தையின் வளர்த்திக்கும், ஆரோக்கியத்திற்கும் ஜீவசத்துவாகிய ஆகாரம் மிகவும் முக்கியமானதல்லவா? இதன்கீழ் சுகதேக குழந்தைகளுக்கு மாத்திரம்தான் ஆகாரவிதிகளைச் சொல்லப்படுகிறது. ரோகநிலையுள்ள குழந்தைகளுக்குக் கொடுக்கவேண்டிய ஆகாரவிதிகளை ரோகத்தின்கீழ் குறித்திருக்கிறோம்.

குழந்தை நாளொருமேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருவதற்கு தாய்ப்பாலே மிக சிறந்ததாகும். தாய்ப்பால் குடிப்பதினால் குழந்தை ஆரோக்கியமாயும், ஆநந்தமாயும், திடகாத்திரத்துடனும் இருந்துவரும். குழந்தைக்குப் போதுமானபடியாகத் தாயினுடைய பால்சுரந்துகொண்டு இருக்குமானால் வேறு வகையான பால் குழந்தைக்குத் தேவைப்படாது. குழந்தை பிறந்தது முதல் ஆறு வாரங்களில் இரண்டரைமணிநேரத்திற் கொருதரம் குழந்தையை முலையுண்ணும்படிச் செய்யவேண்டும். அதன்பிறகு மூன்று மணிநேரத்திற் கொருதரமோ, நான்குமணிநேரத்திற் கொருதரமோ பால் கொடுக்கவேண்டும்; ஆனால், இரவில் குழந்தைகள் நித்திரையைவிட்டு பாலுக்காக எழுந்திருக்காதபடி, குழந்தைகள் நித்திரைசெய்யும் முன்பு பால் கொடுத்துவிடவேண்டும். ஒரு மாதத்திற்குப் பிறகு குழந்தை அழும்போதெல்லாம் பால் கொடுக்கவேண்டுமென்பது அவ்வளவு உசிதமானதாகாது. ஒரு மாதத்திற்குப் பின் குழந்தைகளுக்கு ஒரு நாளில் மூன்று முறையே பால் உண்ணக்கொடுப்பது முறையாகும். அதாவது காலையில் ஆறுமணிக்குப் பால் உண்ணச் செய்தால் பின் பதினொருமணிக்குத்தான் பால் கொடுக்கவேண்டும். ஆரம்பத்திலேயே சிசுக்களுக்கு இவ்வித ஒழுங்குக் கிரமங்களை நாம் படிப்படியாக செய்துகொண்டு வந்துவிட்டால், ஆகார முறையில் ஒழுங்கும், குழந்தைகளின் நித்திரையிலோ, ஆநந்தமான விளையாட்டிலோ பங்கம் வராமலும், தாய்க்கும் சேய்க்கும் உடல் நலன் கெடுறாமலுமிருக்கும். குழந்தையானது, இரண்டு மாரிலும் மாற்றி மாற்றி உண்ணவேண்டுமென்பது பிரதானமானதாகும். மேற்கூறிய ஆகார வழியிலிருந்து சிசுக்கள் கிரம ஆகாரமுறையைக் கைக்கொள்ளுகின்றன. அதனால் எப்போதும் கிரமமான ஆகாரம் உட்கொள்ளும் முறையே அநுபவத்தில் வந்துவிடும். குழந்தைகள், குளிர், வலி, தூக்கம், கனவு இவைகளினால் அடிக்

கடி அழும். குழந்தை அழும் நேரங்களிலெல்லாம் ஸ்தனத்தில் வாயை வைத்துக்கொள்ளும்படிச் செய்வதானது கெடுதியை விளைவிப்பதோடு, வயிற்றுவலியும், வயிற்றோட்டத்தையும் உண்டுபண்ணலாம். குழந்தைகள் வயிறு நிறையப் பால் அருந்தி, அயர்ந்து நித்திரைசெய்யும்படியாகச் செய்யவேண்டும். அப்படி நித்திரை செய்யும்படிச் செய்யாவிடில் வயிற்றில் வாயு அதிகரித்து, வயிற்றுப் பிசம், வயிற்றுவலி இவைகளை உண்டாக்கும்.

குழந்தைக்குப் போதுமான பால் தாயினிடம் இல்லை என்பதைச் சடுதியில் தீர்மானித்துவிடலாகாது. தாயானவள் பால் சுரக்கும்படியான விதமாகப் போஷிக்கப்பட்டால் பால் சாதாரணமாகச் சுரக்கும். சில ஸ்திரீகளுக்குக் குழந்தைக்குத் தேவையானதைவிட அதிகமான பால் சுரப்பு இருக்கும். அதிகமான பால் அருந்துவதனுல் குழந்தை அஜீரணத்தையடையும். அவ்விதமான ஸ்திரீகளின் ஆகாரத்தை நிர்ணயம் செய்வதோடும், தகுந்த தேகாப்பியாசம் எடுத்துக்கொள்ளவும் வேண்டும். இதிலும் பால் அதிகமாகச் சுரப்பதாயிருந்தால். எண்ணெய் அல்லது உப்பு விரேசனகாரிகளைக் கொடுத்து வருவதினுல் குழந்தைக்குப் போதுமான பால்மட்டும் சுரக்கும்படியாகச் செய்துவிடும். இதற்குப் பின்னும் பால் அதிகமாகச் சுரப்பதாயிருந்தால், பாலில்லாத குழந்தைகளுக்குப் பால் கொடுத்தல்வேண்டும். குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் தாய்மார்கள் ஆகாரவிஷயத்தில் கவனம் செலுத்தவேண்டும். குழந்தைக்குப் பால் கொடுக்குந் தனையும், தாய்மார்கள், சீக்கிரம் ஜீரணிக்காத வஸ்துக்களையும், உயர்ந்த ஆகாரவகைகளையும் தவிர்க்கவேண்டியது. கிரமமான நேரங்களில் ஆகாரம் உட்கொள்ளவேண்டியது. பசியெடுத்த நேரங்களில் எல்லாம் சாப்பிடுவதோ அல்லது நெடுநேரம் பசியாயிருப்பதோ கெடுதலை உண்டாக்கும். பால் கொடுக்கும் ஸ்திரீகள் தாகத்துக்கு, உத்வேதகாரிகளான; (Stimulants) நரம்பு படபடப்பைப் கொடுக்கும்படியான; காப்பி, தேயிலை இவைகளின் பாணங்களை அறவே ஒழிக்கவேண்டும். தாகத்திற்குப் பாற்கலந்த நீரும். பார்லி தண்ணீர் முதலியவைகளும் தகுதியானதாகும்.

## பால்காரிகளைப்பற்றி சில வார்த்தை

## FEW WORDS ON WETNURSES

பிரசவித்த ஸ்திரீக்குப் போதுமான அளவாக பாலிருக்குமானுல், குழந்தைக்குப் பல் முளைக்குந்தனையும் பால் புகட்டவேண்டியது கிரமமாகும். தாய்க்குப் பால் குறைவாயிருந்தால், பால் கொடுக்கும்படியாக தாதிகளை நியமிக்க வேண்டும். அப்படி நியமிக்கும் தாதியானவள்; குழந்தையை பெற்றவளுடைய சரீர பிரக்கிருதியிலும், வயதிலும் ஒத்தவளாகவும்; அப்போதுதானே பிள்ளை பெற்றவளாயும் இருக்கவேண்டியது தவிர்க்கக்கூடாத விஷயமாகும்.

முதிர்ந்த வயதுடையவர்கள் பாலால் குழந்தைக்குப் பல பிணிகள் சம்பவிக்கலாம். குழந்தைக்குப் பால் கொடுக்கும்படியாக நேமித்திருக்கும் தாதியானவள், அப்பிள்ளையையும் தன் பிள்ளையைப்போல் பாவித்து, ஆகாரமுறையிலும் சரீரத்தை பேணுவதிலும் தாய்க்குச் சமமானவளாக இருக்கவேண்டும். சூல்கொண்டிருப்பவள் பாலும், ரோகமுள்ள ஸ்திரீயின் பாலும் குழந்தைகளுக்குப் பிணியை உண்டுபண்ணும்.

## தாய்ப்பாலற்ற குழந்தைகள்

## INFANTS HAVING NO MOTHER'S MILK

குழந்தையைப் பெற்ற ஸ்திரீக்குப் பால்லில்லையானாலும், பால் கொடுக்கும் தாதிகள் கிடைக்காவிட்டாலும், குழந்தைக்குப் பசும்பாலையே ஆகாரமாகக் கொடுத்துவரலாம். பசும்பாலானால் இளங்கன்றுடையதும், நோய்களொன்றுமில்லாததும், சாந்தகுணமுடையதும், நாலு வருஷத்திற்கு குறையாததும், பத்து வருஷத்திற்குமேல் படாததுமான பாசுவாகவிருக்கவேண்டும். பசுவின் பால் இல்லையானாலும், வெள்ளாட்டின் பாலையும் கீழ்கண்ட முறைப்படி காய்ச்சிக் கொடுக்கலாம். குழந்தைக்குக் கொடுக்கும் பசும்பாலானது ஒரே மாட்டினுடையதாக இருக்கவேண்டும். பாலில் அதிசீக்கிரமாக கிருமிகள் சேர்ந்து விஷமாக்கிவிடுமாதலால், வெகு ஜாக்ரதையாகப் பாலை மூடிவைக்கவேண்டும். பால்கரக்கும் இடமும் அசூசியாயில்லாமல் சுகாதாரமுறைக்கு ஒத்ததாக இருக்க வேண்டும். களிம்பு ஊறும்படியான பாத்திரங்களில் எப்போதும் பாலை வைத்திருத்தல் கூடாது. பால் வாங்கி வைத்திருக்கும் பாத்திரங்கள் இரண்டாக வைத்துக்கொண்டு மாற்றி மாற்றிக் கழுவி சூரிய வெளிச்சத்தில் காயவைக்க வேண்டும்.

குழந்தைகளுக்குப் புகட்டும் பால் காயவைத்ததாகவே யிருக்கவேண்டும். ஒரு பெரிய பாத்திரத்தில் தண்ணீர்விட்டு, பாலை ஒரு சிறு பாத்திரத்தில் ஊற்றி, பெரிய பாத்திரத்தின் மத்தியில்வைத்து தீ எரிக்க, பெரிய பாத்திரத்திலுள்ள தண்ணீர் கொதித்துப் பாலும் சூடேறும். முதல் கொதி வந்தவுடன் பாலை இறக்கிவிட வேண்டும். இதுவே பால் காய்ச்சும் தகுதிவாய்ந்த முறையாகும்.

16-அவுன்ஸ் சுடுதண்ணீரில் ஒன்றரை மேஜைக் கரண்டி (Table Spoon) மாவுசர்க்கரை கரைத்து, எட்டு அவுன்ஸ் காய்ச்சின பால் சேர்த்து நன்றாக மிஸ்ரமித்துப் புகட்டுச் சீசாக்களின்மூலம் குழந்தைகளுக்குப் புகட்டவேண்டும். புகட்டுச் சீசாக்களை (Feeding Bottles) அப்போதைக்கப்போது கொதிக்கிற சுடுதண்ணீர்விட்டு சுத்தமாக அலம்பிவிடவேண்டும். அப்படி யில்லையானால், புகட்டுச்சீசாக்களின்மீது வடிந்திருக்கும் பாலில் ஈ, எறும்புகள், மொய்த்து விஷ

கிருமிகளைப் பரப்பிவிடும். புகட்டுச் சீசாக்களுக்குப் போட்டிருக்கும் ரப்பர்முலைக் காம்பு, (Rubber nipple) பால் அதிகமாகவேனும், அதிகக் குறைவாக வேனும் வராமல் துளைகள் சரியாக விருக்கின்றனவா என்பதையும் கவனிக்க வேண்டும். ஒவ்வொரு முறையும் பால் புகட்டு முன், புகட்டுச் சீசாவையும், ரப்பர் முலைக்காம்பையும் சுடுதண்ணீரால் கழுவவேண்டும். பின்னர் குளிர்ந்த ஜலமுள்ள ஒரு பேஸினில் (Basin) போட்டு வைப்பது நலம். குழந்தைகளுக்குப் பால் புகட்டியவுடன் சுத்தமான தண்ணீரால் வாயை கழுவ வேண்டும்.

மூன்றுமாதத்திற் குட்பட்ட குழந்தைகள் இரண்டரைமணி நேரத்திற்கொருதரம் $2\frac{1}{2}$-அவுன்ஸ் தண்ணீரும் சீனியும் கலந்த பாலால் புகட்டப்பட வேண்டும். பிறகு மூன்று மாதத்தில்மூன்றுமணி நேரத்திற்கொருதடவை மூன்றவுன்ஸ் கலவைப் பாலால் புகட்டப்படவேண்டும்; ஆனால், ஒவ்வொரு மாதமும் கலவைப் பாலின் அளவைமட்டும் மாதம் ஒன்றுக்கு அவுன்ஸ் ஒன்று வீதம் அதிகப்படுத்திக்கொள்ள வேண்டும். ஆறுமாதத்திற்குப் பிறகு முன் கூறிய விதமாகக் காய்ச்சிய பாலும் சுடுதண்ணீரும் சமனாகக்கூட்டி புகட்ட வேண்டும். குழந்தைகளுக்கு முலைப்பாலூட்டுவதைப் பார்க்கிலும், சீசாவில் புகட்டுவது மிகவும் கஷ்டப்படும்.

ஆறுமாதத்திற்கு பின் பாலும் தண்ணீரும் சமபங்காக கொடுப்பது குழந்தைக்கு யேற்றுக்கொள்ளாமல் அஜீரணப்பட்டால், ஒரு அவுன்ஸ் பாலில் ஒரு கிரைன்ஸ் சோடியம் ஸிட்ரேட் (Soduim Citrate) கலந்து பின்னர், முன்போல் சுடுதண்ணீர் சேர்த்துக் கலந்துகொடுக்கவும். பின்னரும் குழந்தைக்கு அஜீரணம் யேற்பட்டால், மூன்று மேஜைக்கரண்டி (Table Spoon) சுடுதண்ணீரில் ஒரு மேஜைக்கரண்டி நெஸில்ஸ் கட்டிப்பாலை (Nestles condensed milk) கரைத்துக் கொடுத்துப்பார்க்கவும். அப்படியும் யேற்றுக்கொள்ளாமல் அஜீரணமேற்படுமானால், சுண்ணம்பு தெளுவுநீர் பாதியும் காய்ச்சியபாய் பாதியுமாக சேர்த்துப் புகட்டவும். பசுவின் பாலும் நல்லதாகக் கிடைக்காவிட்டால், அரிசிக் கஞ்சி, பார்லி கஞ்சி, சவ்வருசிக் கஞ்சி முதலிய கஞ்சிகளில் எதையாவதொன்றின் தெளிவு நீரை கொடுத்துவரலாம்.

முலைப்பால் குடித்தாலும் சரி, பால் புகட்டப்பட்டாலும் சரி; குழந்தைகளுக்குப் பழச்சாறுகள் (Fruit Juice) கொடுப்பது மிகவும் சிரேஷ்டமாகும். ஆரஞ்சுப் பழச்சாறு, (Juice of Oranges) திராக்ஷப் பழச்சாறு, (Juice of Grapes) இதுகளைப்போன்ற பழச்சாறுகளில் தண்ணீரும் சிறு இனிப்பும் கலந்து ஒருநாளில் இரண்டு மூன்று ஆவர்த்திக் கொடுப்பதினால் நன்மையுண்டாகும். இப் பழச்சாறுகள், ஜீரண உருப்பிற் சென்று, ஜீரணிக்கும்படியாக குடல்களுக்கு நல்ல உதவியை செய்வதற்கு, விட்டமின் (Vitamins) என்ற ஜீவதாது பொருளாக மாறிவிடுகின்றது.

## பால் மறக்கச் செய்தல்

## WEANING OF BREAST

பால் மறக்கடிப்பது என்பதானது தாயின் பால் குடிப்பதிலிருந்து தடுக்கப்படுவது என்று பொருள்படும்.

சாதாரணமாக குழந்தைகளுக்கு ஒன்பதாமாத கடைசியில் பாலை நிறுத்தி விடுவது உசிதமாகும். தாயினுடைய தேகக்கூறு சரியாயில்லாதுபோனாலும், குழந்தைக்கு வேண்டிய பால் தாயினிடம் இல்லாமல்போனாலும், சற்று முன்னதாகப் பால் மறக்கச்செய்யலாம்; ஆனால், எந்தக் காரணத்தை முன்னிட்டும் ஏழு மாதத்திற்குமுன் பால் நிறுத்துவதும்; பத்துமாதத்திற்கு அதிகமாகக் குழந்தைகளுக்குப் பால் கொடுத்துக்கொண்டிருப்பதும் தகுதியானதாகாது. குழந்தைகளுக்குச் சிலர் மூன்றாண்டுவரை பால் கொடுக்கவேண்டுமென்று கூறுவது சரியல்ல. அதிகநாள் குழந்தைக்கும் பால் கொடுப்பதினால், முதலில், தாய்க்குப் பலவித நோய்கள் சம்பவிக்கின்றன. குழந்தையும் அதிகநாள் பால் அருந்திவந்தால், மூளையின் சக்தி குறைந்து, புத்தி தீக்ஷண்யம் அற்று, சில சமயங்களில் புத்தி பேதமை அடைவதோடுங்கூட சரீரமும் க்ஷீணமடைந்துவிடுகிறது. இதுபோலவே, ஏழு மாதத்திற்குமுன், பால் மறக்கடித்தாலும், தேகதிடகாத்திரமும், போதுமான பலமுமில்லாது போய்விடும். பொதுவாக, தாயின் சரீர பிரகிருதிக்கும் சிசுவின் தேகசக்திக்கும் தக்கபடி சில மாதங்கள் முன்னாகவேனும், பின்னாகவேனும் பால் மறக்கடிப்பதால் யாதொரு கெடுதியும் நேர்ந்துவிடாது. கோடை காலங்களில் பால் மறக்கச்செய்து மாவு சம்பந்தமான ஆகாரங்களை கொடுப்பதால் வயிற்றோட்டம் உண்டாகலாமென்றும், அதனால் ஒன்றிரண்டு மாதங்கள் முந்தியோ பிந்தியோ காலத்தை அனுசரித்துப் பால் நிறுத்தவேண்டுமென்றும், டாக்டர் ஹட்சின்ஸன் (Dr. Hutchinson) கூறுகிறார். குழந்தைகளுக்குப் பால்பல் முளைக்கும்போதுதான் மாவும் ஜீரணமாகும். குழந்தைக்கு இரண்டு மூன்று பால்பற்கள் முளைத்தவுடன் அதன் பற்கள் கடினதசையை அடைய,கடினமான ரொட்டித்துண்டையாவது, முழு ஆப்பில் பழத்தையாவது கடிக்கும்படியாகக் கொடுக்கவேண்டும். இதனால் தாடை சரியான நிலைமையில் உறுதி அடையும்.

தாய்ப்பாலில் மதுரமான ருசி இருப்பதினாலும், தாய் அன்பாகவே குழந்தைக்குப் பால்கொடுத்து வருவதினாலும், குழந்தைகளுக்குப் பால் மறக்கடிப்பது சாமான்யமான காரியமாக இருக்கமுடியாது. குழந்தைகளுக்குப் பால் மறக்கடிக்கப்போகும் காலங்களுக்கு முன்னதாகவே, குழந்தைகளைப் பராக்குக் காட்டியும், பிறரிடம் சிநேகம் செய்யும்படியாகவும் பழக்கி வரல்வேண்டும். தாய்ப்பாலின் ஞாபகத்தினால் குழந்தை தொந்திரவு செய்யுமானால், அந்த நேரத்தில் ஆகாரவிதியில் சொல்லிய பிரகாரம், கஞ்சி வகைகளையோ, தண்ணீர் கலந்த

பாலையோ, ரப்பர் காம்புள்ள (Rubber Nipples) புகட்டு சீசாக்களில் (Feeding Bottles) விட்டு பால் புகட்டி வரவேண்டும். குழந்தைகள் பாலுக்காக அழும் நேரத்திற்கு முன்னதாகவே, அவைகளுக்கு புகட்டு சீசாவின் மூலம் பாலையோ கஞ்சியையோ புகட்டிவிட்டால், முலையுண்ணுவதில் நிர்ப்பந்தம் செய்யாது.

ஒவ்வொரு குழந்தைகள் எவ்வித ஆகாரங்களைப் புகட்டினலும், முலையுண்ணும் பிரீதியினல் தொந்திரவு செய்யலாம். அவ்விதமான குழந்தைகளுக்குப் பால் நிறுத்துவது கடினமென்றறிந்தால், முலைக்காம்புகளில் விஷமில்லாத கசப்பான வஸ்துக்களைத் தடவி,இரகசியமாக இரண்டொருமுறை முலைக்கொடுத்தால், பாலே கசப்பதாகக் கருதி, குழந்தைகள் தாய்ப்பால் குடிப்பதை விட்டுவிடும். இதற்கு முலைக்காம்புகளில் வேப்பிலையை அரைத்துத் தடவலாம்; வேப்பெண்ணையைத் தடவலாம்; அல்லது கரிய போளத்தை அரைத்துத் தடவலாம்.

இவைகளினல் குழந்தைகளுக்குப் பால் நிறுத்தியதன்பின், பால் அதிகம் சுரந்தால், பால் வற்றுவதற்குள்ள சிகிச்சைகளைச் செய்து பால் சுரக்காமல் செய்துகொள்ளவேண்டும். இல்லையானல், பால் கட்டி சுரம் முதலிய உபத்திரவங்களேற்படும்.

## பால் மறக்கச்செய்ததற்குப் பின் குழந்தைகளின் ஆகாரம்

## DIET OF CHILDREN AFTER WEANING

பால் நிறுத்தப்பட்டக் குழந்தைகள் ஆகாரவிஷயத்தில் மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டும். பால் நிறுத்தியபின் குழந்தைகளுக்கு இரண்டாண்டு வரையில் கஞ்சி ஆகாரங்களே சிரேஷ்டமானதாகும். ஒரு வயது வரை குழந்தைகளுக்கு ஒருநாளில் ஐந்துமுறை கஞ்சி கொடுக்கவேண்டும். பின் இரண்டாண்டு வரையில் ஒரு நாளையில் நான்குமுறை கஞ்சியாகாரம் கொடுத்தல் வேண்டும்.

குழந்தைகளின் திரேகஸ்திதிக்குத் தகுந்தாப்போலும், பல் முளைத்திருப்பதற்குத் தக்கவாறும் குழந்தைகளுக்கு, அரிசிக்கஞ்சி, அரோரூட் கஞ்சி, (Arrow root) காரன் புளோர் கஞ்சி, (Corn Flour) ரவைக்கஞ்சி, ஜவ்வரிசிக்கஞ்சி, பார்லி கஞ்சி (Barley) முதலிய கஞ்சிகளைக் கொடுக்கலாம்.

(1) அரோரூட் கஞ்சி (Arrow root Flour):—அரோரூட்மாவை வேண்டிய அளவு குளிர்ந்த தண்ணீரில் கரைத்துப் பிறகு போதுமான தண்ணீர் சேர்த்துக் கட்டி படாமல் கிண்டி கஞ்சி பதத்தில் இறக்கி, சீனிபோட்டுக் கொள்ளவும். இந்தக் கஞ்சி கெட்டியாகவில்லாமல் நீர் பாகமாகவே இருக்க வேண்டும்.

(2) காரன் புளோர் கஞ்சி (Corn Flour):—ஆரோரூட் கஞ்சிபோல் செய்துகொள்ளவும்.

(3) அரிசிக்கஞ்சி (Rice):—அதிகமான புழுங்கல் அரிசியைத் தண்ணீரில் ஊறவைத்து, பின்னர் வெயிலில் உலர்த்தி, இரண்டொன்றாக உடைத்துத் தண்ணீர்விட்டரைத்த ஓமத்தில் போட்டுப் பிசரிக் காயவைத்துச் சட்டியில் கொட்டிப் பொன்னிறமாக வறுத்து, நன்றாகத் தேய்த்து ஊதி, ஓமத்தைப் போக்கிவிட்டு, மாவாகத் திரித்துவைத்துக் கொள்ளவும். வேண்டும்போது கொஞ்சம் மாவுபோட்டுக் கஞ்சி பதமாகக் காய்ச்சி, பாலும் சீனியும் அல்லது வெறும் சீனியாகிலும் சேர்த்துக் கொடுக்கலாம்.

(4) பார்லிக்கஞ்சி (Barley):—பார்லி அரிசியை இளவறுப்பாக வறுத்து ஒன்றிரண்டாய் உடைத்ததில் இரண்டு தேக்கரண்டி 20-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 15-அவுன்ஸாக சுண்டக்காய்ச்சி, தண்ணீரைமட்டும் சீனி பால் சேர்த்தும் அல்லது சீனிமட்டும் சேர்த்தும் கொடுக்கலாம்.

(5) ரவைக்கஞ்சி (Wheat Semi Flour):—இதை கோதுமை நொய் என்றும் சொல்லுவர். புழுநீக்கிச் சுத்தம்செய்த ரவையை தண்ணீரில் கஞ்சி பதமாகக்காய்ச்சி, வடிகட்டி தெளிவுநீரைமட்டும் சீனி, பால்சேர்த்துக்கொடுக்கலாம்.

(6) ஜவ்வரிசிக்கஞ்சி (Sago):—இரண்டு கரண்டி ஜவ்வரிசியை 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு நன்றாக வேகவைத்து வடிகட்டிய தண்ணீருடன் பால், சீனி சேர்த்துக் கொடுக்கலாம்.

இவ்விதமான கஞ்சி ஆகாரங்களினால் ஜீரணசக்தி படிப்படியாக யேற்படும். இரண்டாண்டுகளுக் குட்பட்ட குழந்தைகளுக்கு முழு அரிசி சாதத்தைப்போன்ற ஆகாரங்கள் பலவந்தமாகக் கொடுக்கக்கூடாது. இலகுவில் ஜீரணிக்காத தேங்காய், கறிகாய்கள், மாமிசம், கிழங்கு, பயறுவகைள் கொடுப்பதால் குழந்தைகளுக்குக் கெடுதல் ஏற்படலாம். அதிக காரமான போஜன பதார்த்தங்களையும், அதி இனிப்பான தின்பண்டங்களையும் கொடுக்கவே கூடாது.

இரண்டுவயதிற்குமேல் குழந்தைகளுக்கென்றே சாதத்தைக் குழைய வடித்து பருப்புரசம், மிளகுரசம் சேர்த்து நன்றாக பிசைந்த அன்னங்களை பத்து மணிக்கும், மாலை 6-மணிக்கும் கொடுத்துவரலாம். இடைவேளைகளில் ஜீரணிக்கும் ரொட்டி வகைகளை தின்னக்கொடுக்கலாம். விடியற்கால நேரங்களில் குழந்தைகள் பசியினால் விழித்து அழுகுமானால் அந்த சமயம் கஞ்சிவகைகளில் எதையாவது கொடுக்கவேண்டும். மூன்றாண்டு கழியும்வரையில் குழந்தைகளுக்கு பெரியோர் உட்கொள்ளத்தகுந்த ஆகாரங்களைக் கொடுக்கவே கூடாது.

---

# ஸ்திரீ பால சிகிச்சை

## இரண்டாம் பாகம்

---

## பாலர் ரோகங்களும், பரிகாரங்களும்

## DISEASES OF INFANTS AND CHILDREN AND TREATMENTS

பெரியவர்களுக்கு அடிக்கடி வியாதிகள் வருவதுபோலவே பாலர்களுக்கும் வியாதிகள் வருகின்றன. ஆனால் பாலர்களுக்கேற்படும் ரோகங்கள் பெரியவர்களுக்குண்டாவதில்லை. பாலர்களுக்கு அங்க அவையவங்கள் சரிவர பலனூறு திருப்பதியினாலேயே, அவர்கள் வியாதிகளும் தனிப்பட்டதாகவே யிருக்கின்றன. பாலர் ரோகங்கள், 12-வயது வரையில்தான் தனிப்பட்டதாகவிருக்கும். அதன்பின், அவையவங்களின் வலு சற்று அதிகரித்துப்போவதால் பெரியவர்கள் வியாதிகளே தாக்கக்கூடியதாக விருக்கிறது.

கிரந்தி, மாந்தம், தோஷம், கணை, வலிப்புகள், கரப்பான்வியாதி முதலியவைகளும், பல் முளைக்கும்போ தேற்படும் காச்சல், கழிச்சல், வலிப்பு முதலியவைகளும், கழிச்சலிலும் காச்சலிலும் சன்னி முதலியவைகளில் சிலதும் குழந்தைகளுக்குத் தனிப்பட்ட வியாதிகளாகவே இருக்கின்றன.

குழந்தைகளின் அழுகைக் குறிகளிலிருந்து, அவர்களின் வியாதிகளைச் சற்று நிதானிக்க முடிந்ததாயுமிருக்கும். குழந்தைக்கு வயிற்றுவலியுண்டாயிருந்தால், நீண்ட உரத்த சப்தமிட்டு அழுதுக் கண்ணீரைப் பெருக்கும். கொஞ்சம் விட்டு மறுபடியும் அழும். கால்களை மடக்கி வயிற்றுடனணைத்துக் கொள்ளும். நெஞ்சில் வலியாகிலும், வேறு கோளாறுகளாகிலுமிருந்தால், உரக்க அழாது; கண்ணீரும் வடியாது; இடையிடையே பெருமூச்சுவிடும்; இலேசாக இருமும். தலையில் வலியாவது வியாதியாவது உண்டானல், கீச்சிட்டழும்; மெதுவாய் சிணுங்கும். சில சமயங்களில் மௌனமாயிருக்கும். பிள்ளைகளுக்குப் பல் முளைப்பதாலேற்படும் கோளாறுகளில், முகக் கடுகடுப்பையும், தலையிலும் திரேகத்திலுமுள்ள சூட்டின் மிகுதியையும், வாயிலிருந்து எச்சல் வடிவதையும், கைவிரல்களை யாவது இதரப்பொருள்களை யாவது வாயில் வைத்துக் கடிப்பதையும் கண்டு தெரிந்துகொள்ளலாம்.

சில தாய்மார்கள் குழந்தைகளை எப்போதும், மருந்தினாலேயே போஷித்து வருகிறார்கள். அவ்வித குழந்தைகள் எப்பொழுதும் நோயாளியாகவே யிருந்து வருகின்றன, காரணம்; சதா மருந்துகளைத் தின்றுத்தின்று, ஜீரண உருப்பு

கள் சக்தியற்றதாய் போவதேயாகும். ஆதலால், குழந்தைகளுக்கு முக்கியமாய் தவிர்க்கக்கூடாத சந்தர்ப்பங்களில், சாதுரியமாய் மருந்து பிரயோகம் செய்ய வேண்டுமே தவிர, அடிக்கடி மருத்துவரிடம் காண்பிப்பதும், மருந்துகளைக் கொடுப்பதுவும் தவறுதலே யாகும். இது குழந்தையின் வளர்ச்சியை தடை செய்துவிடுமென்பதில் சந்தேகமில்லை.

குழந்தைகளை சாமர்த்தியமாய் கவனிப்பதிலிருந்து, அநேக வியாதிகள் வாராமல் தடுக்கமுடியும். வந்தபின் சிகிச்சை செய்வதைவிட வியாதி வாராமல் குழந்தைகளைக் காப்பாற்றும் உன்னதமுறைகளை தாய்மார்கள் நன்கறிந்திருக்க வேண்டும். குழந்தைகளை சுசீகரமாக வைத்துக்கொள்ளவேண்டும். தினம் இரண்டுமுறை அல்லது ஒருமுறையாவது வெந்நீரில் குளிப்பாட்டி, வாசனை மாவு (Toilet Powder) பூசவேண்டும். குறித்த நேரங்களில் ஆகாரம் கொடுக்க வேண்டும். குழந்தைகளுக்கு ஆகாரம் எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியமானது நித்திரையும், ஓய்வும் என்பதை மறந்துபோகக்கூடாது.

குழந்தைகளை, சூரியப்பிரகாசமும் நல்ல காற்றும் வீசக்கூடிய விடங்களில் வைத்திருக்கவேண்டும்; அல்லது விளையாட விடவேண்டும். அசுசியானதும் துர்நாற்றமுமடிக்கும் இடங்களிலும், மண் புரண்ட இடங்களிலும் குழந்தைகளை விளையாட விடக்கூடாது. ஈரமான விடங்களிலும், இருட்டிலும் குழந்தைகளை விடக்கூடாது. குழந்தைகள் நித்திரை செய்யும்போதும், தனிமையாயிருக்கும் போதும் பயப்படும்படி சப்தமிடக்கூடாது. இவ்விதமான இன்னும் மற்ற முறைகளை கையாடுவதும் தவிர, குழந்தைகளுக்கு மாத மொருமுறையாகிலும் விரேசன மருந்துகள் கொடுத்து, வயிற்றைச் சுத்திசெய்துகொண்டிருக்கவேண்டும். அதன்பின்னும், திரேக பிரகிருதியின் பயனாய் நோய் ஏற்படுமானால் தாமதமின்றி சிகிச்சை செய்யவேண்டும்.

இதன்கீழ் குழந்தைகளுக்கான தனிபட்ட வியாதிகளுக்கு சிகிச்சைகள் கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொருவரும், பிறர் சகாயமின்றி தாங்களாகவே வைத்திய சிகிச்சை செய்துக்கொள்ளும், சுலபமான முறைகளே இதில் கூறப்பட்டுள்ளது.

குழந்தைகளுக்கு எப்போதும் அபின் கலவை மருந்துகளை கொடுப்பதில் மிகவும் ஜாக்ரதையாக இருக்கவேண்டுவதும் தவிர, அவ்வித மருந்துகளை தவிர்ப்பதே நலமாகும்.

இந்நூலில் ஒரு வியாதிக்குப் பல சிகிச்சை முறைகள் கூறியிருப்பதால், ஒரு மருந்து கிடைக்காவிட்டாலும், மற்றொரு முறையை செய்துக்கொள்ளலாம்.

குறிப்பு:—பத்தியம் என்று குறித்திருக்கும் மருந்துகளுக்கு, பால் குடிக்கும் குழந்தைகளுக்கானால், தாய் பத்தியமிருக்க வேண்டும். பால் குடியாத குழந்தைகளானால், குழந்தைகளே பத்தியமிருக்கவேண்டுமென்பதை யறியவும்.

## கிரந்தி

## SYPHILLIS

குழந்தைகள் பிறக்கும்போதே வியாதியுடன் பிறப்பதுண்டு. அவ்வித வியாதியில் கிரந்தி இனம் ஒன்று. கிரந்திரோகம், செங்கிரந்தி, கருங்கிரந்தி யென இருவகைப்படும். கிரந்திரோகமானது தாய் தந்தையரின் காரணமாகவே கருவில் ஊறி வளர்வதாகும். தாய் தந்தையரிடமாக உள்ள மேக ரோகத்தினால் இது சம்பவிப்பதா யிருப்பதால், கருவுற்றிருக்கும்போதே தாய் தக்கவிதமாய் நடந்துக்கொள்ள வேண்டும். பிரமேக ரோகமுள்ள தாய் தந்தையர்களுக்குக் கருபற்றினால் மூன்றுமாதத்திலேயே தக்க அவுஷதம் உட்கொண்டு கருப்பையிலிருக்கும் சிசுவுக்கு ரோகம் தாக்காதவாறு கவனித்துக் கொள்ள வேண்டும். இது சர்மரோக இனத்தில் சேர்ந்ததென்றாலும், இதனால் விபத்தேற்படுவதுண்டு.

**கருங்கிரந்தி—Black Syphillis**

சிசுவுக்குக் கருங்கிரந்தி ரோகம் சார்ந்திருந்தால், குழந்தை பிறந்தவுடன் சீறி அலறி அழும்; திரேகம் உஷ்ணமாக விருக்கும்; கண்ணைத்திறவாது மயக்கம்கண்டு சுவர்ணையற்றிருக்கும்; உடலை முறுக்கி முறுக்கிஅழும்; நாவரட்சிகண்டு குரல் நெரிந்து கத்தும்; முகம் சோர்வுறும்; பால் குடியாது; வயிறு ஊதியிருக்கும்; உள்ளங்கால், உள்ளங்கை இவற்றில் கருநிறம் ஏறும்.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் | 12 | கழுதைலத்திச்சாறு | அவுன்ஸ் | 12 |
| | அவுரிஇலைச்சாறு ,, | 12 | | | |
| இதில், | வசம்பு ரூபாயெடை | $\frac{3}{4}$ | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | $\frac{3}{4}$ |

தூள் செய்துபோட்டு எரித்து வடித்து ஒரு தேக்கரண்டி யளவாகக் காலையில் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் | 12 | நல்லெண்ணெய் | அவுன்ஸ் | 12 |
| | பசுவின்நெய் ,, | 12 | சங்கன்இலைச்சாறு | ,, | 12 |
| | சுக்கு ரூபாயெடை | $\frac{3}{4}$ | மிளகு | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| | திப்பிலி ,, | $\frac{3}{4}$ | | | |

சுக்கு மிளகு திப்பிலியைப் பொடித்து, எண்ணெய், சாறு இவற்றுடன் கலந்து கடுமையான வெயிலில் 4-மணிநேரம் வைத்திருந்து, காலை மாலை 5, 6 துளி வீதம் உள்ளுக்குக் கொடுத்தும், உடம்பு ஆதியந்தமும் பூசியிருந்தும் சாயந்திர நேரத்தில்:—

செம்முள்ளி, கிரந்திநாயகம் இரண்டையும் சமமாகப்போட்டுக் காய்ச்சிய இளஞ்சூடான கஷாயத்தால் குளிப்பாட்ட வேண்டும். (பத்தியம்.)

(3) கழுதைப்பால் அவுன்ஸ் 2 ஒணுன் இரத்தம் துளி-2, 3

ஒன்று சேர்த்துக் காலை மாலை கொடுக்கலாம். (கடும் பத்தியம்.)

## செங்கிரந்தி—Red Syphillis

இது கருங்கிரந்தியிலிருந்து அதிக வித்தியாசமில்லாதிருக்கும். குழந்தை பிறந்தவுடன் தொண்டைக் கம்மி, பூனையைப்போல் அழும். வயிற்றுப் பொருமலும், மல சல சிக்கலும் உண்டாகும். குழந்தை நீட்டி விமிர்ந்து பிணம்போல் அசைவற்றுக்கிடக்கும். நெற்றியும், நெஞ்சும் உயர்ந்து இருக்கும். உள்ளங்கை உள்ளங்கால் உதடு இவைகளில் தடித்த சிவந்த புள்ளிகள் தோன்றும்.

### சிகிச்சை

(1) கோரோசனை குன்றிமணி யெடை 4

இதை மூலைப்பாலில் கரைத்துக் காலை மாலை கொடுத்து வரலாம்.

(2) கற்பூரவள்ளி இலைச்சாறு தேக்கரண்டி 1
குன்றிமணி இலைச்சாறு ,, ½
வெங்காயச்சாறு ,, 1

ஒன்று சேர்த்துக் காலை மாலை கொடுத்து வரலாம். (பத்தியம்.)

(3) முருங்கை இலைச்சாறு அவுன்ஸ் 1½

இதில், ஒரு இரும்புத்துண்டைக் காய்ச்சித் தோய்த்து வடிகட்டிக் கொடுக்கலாம்.

(4) செம்முள்ளி இலையைப்போட்டுக் காய்ச்சிய கஷாயத்தால் குளிப்பாட்டலாம்.

(5) புரசின் இலையை விரித்து அதன் மேல் துணியைப்போட்டுக் குழந்தையை அதன்மேல் கிடத்தியிருக்கச் செய்யலாம்.

### ஆங்கில சிகிச்சை (கிரந்தி போதுவுக்கு)

(3) ஐட்ரார்ஜரி கம் கிரீட்டா (Hydrargeri cum Creata) கிரைன்ஸ்-½
சோடியம் பைகார் போனேட் (Sodium Bicarbonate) கிரைன்ஸ்-4

ஒன்று சேர்த்து மூன்றாகப் பிரித்து, நாள் ஒன்றுக்கு மூன்று தடவை, தடவை ஒன்றுக்கு ஒரு பாகத்தை மூலைப்பாலில் கலந்து கொடுக்கலாம்.

(2) ஐட்ரார்ஜரி கம் கிரீட்டா (Hydrargeri cum Creata) கிரைன்ஸ்-½
பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக் (Pulvis Creata Aromatic கிரைன்ஸ்-4

ஒன்று சேர்த்து மூன்றாகப் பிரித்து, நாள் ஒன்றுக்கு மூன்று தடவை, தடவை ஒன்றுக்கு ஒருபாகம், மூளைப்பாலில் கலந்து கொடுக்கலாம்.

மேற்சொல்லிய மருந்துகளை உள்ளுக்குக் கொடுத்து அத்துடன் அங்கு வண்டம் ஐட்ரார்ஜரி (Unguentum Hydrargeri) அல்லது புளு ஆய்ண்ட்மெண்ட் (Blue Ointment) இதில் சுண்டக்காயளவு எடுத்துப் போதிய வாசலீனுடு சேர்த்து அடிவயிற்றில் வெளிபிரயோகமாகத் தடவி துணியால் சுற்றி வைக்கலாம்.

## சன்னிகள்

## COLLAPSE - INFANTILE DELIRIUM

சன்னி காச்சல் ரோக்கத்துடன் சேர்ந்த ஒரு வியாதி. காச்சல் கடுமையாக அதாவது 105-106-டிகிரி இருக்கும்போது சன்னி ஆரம்பமாகி பின் திரேகத்தைக் குளிரச்செய்து மரணத்தை வருவிக்கும். சன்னி ஆரம்பத்திலேயே சன்னியாக வராதாகையால் காச்சல் குணங்கள் தோன்றும்போதே தக்க சிகிச்சை செய்தால்தான் சன்னி வராமலிருக்கும். சன்னி கண்டவுடன் சிகிச்சை செய்யக்கூடியவிதத்தினுல் மட்டும் சுகம் யேற்படும். சன்னியின் நிலைமை விருத்தி யடைந்துவிட்டால் பின்னர் சிகிச்சைக்கு வசப்படாது. சன்னியில் பலவகை உண்டு. அவைகளுக்குத் தமிழ் சிகிச்சை முறைகள் வேறுபட்டே யிருக்கின்றன.

### ஆம சன்னி:—

திரேகோஷ்ணம் மிகுதியாகவே யிருக்கும். கண்ணெரிச்சல் அதிகமா யிருப்பதால் கண்ணைத் திறக்கமுடியாமல், குழந்தைகள் அழுதுக்கொண்டே யிருக்கும். பால் குடிக்காது; குரல் கம்மல் உண்டாகும்; மலச்சிக்கல் யேற்படும்; நெற்றியைச் சுழித்துக்கொண்டே யிருக்கும்.

#### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) கடுக்காய் | ரூபாயெடை | ½ | கடுகுரோகணி | ரூபாயெடை | ½ |
| சிவதைவேர் | ,, | ½ | சுக்கு | ,, | ½ |
| மிளகு | ,, | ½ | திப்பிலி | ,, | ½ |

இவற்றைப் பொடித்து 12-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 4-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) சாரணைவேர் | ரூபாயெடை | ½ | மூக்குரட்டைவேர் | ரூபாயெடை | ½ |
| பொடுதலை | ,, | ½ | நாய்துளசி | ,, | ½ |
| சுக்கு | ,, | ½ | மிளகு | ,, | ½ |
| திப்பிலி | ,, | ½ | சீரகம் | ,, | ½ |

இவற்றைப் பொடித்து 16-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 4-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு அவுன்ஸ்வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 6 |
| | இலுப்பெண்ணெய் | ,, | 6 |
| | வேப்பெண்ணெய் | ,, | 6 |
| | நல்லெண்ணெய் | ,, | 6 |
| | வெள்ளைப்பூண்டுச்சாறு | ,, | 6 |
| | கொடிவேலிவேர்பட்டை | ரூபாயெடை | 1 |
| | சங்கன்வேன்பட்டை | ,, | 1 |
| | எருக்கன்வேர்பட்டை | ,, | 1 |
| | முடக்கொத்தான்வேர் | ,, | 1 |
| | * முட்டைத்தைலம் | அவுன்ஸ் | 2 |

வேரையும், வேர்பட்டையையும் தூள்செய்து எண்ணெயுடன் கலந்து கொஞ்சநேரம் வெயிலில் வைத்திருந்து திரேகாதியந்தமும் சூடுபறக்கத் தேய்க்கலாம்.

சன்னிப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

### கோரமாந்தச் சன்னி:—

கோராமச் சன்னி யென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

### கோராமச் சன்னி:—

இதைக் கோரமாந்தச் சன்னி யென்றும் சொல்லப்படும். திரேகோஷ்ணம் மிகுதியா யிருக்கும். அவையவங்களின் சதைகள் துடிதுடிக்கும். கை கால்களைப் பதைத்து இழுக்கும். வாயை கோணல் கோணலாக இழுக்கும் உடம்பு வீங்கியதைப்போல் ஊதும்.

#### சிகிச்சை

| | | |
|---|---|---|
| கும்மட்டிக்காய்ச்சாறு | அவுன்ஸ் | 48 |
| முற்றினவேப்பம்பட்டை கஷாயம் | ,, | 48 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 48 |
| வெந்தோன்றிக்கிழங்கு | ரூபாயெடை | 6 |
| நீர்முள்ளிவேர் | ,, | 6 |
| சிவனார்வேம்பு வேர் | ,, | 6 |
| முள்ளுமுருங்கைவேர் | ,, | 6 |
| வெள்ளைச்சாரணைவேர் | ,, | 6 |
| முடக்கொத்தான் வேர் | ,, | 6 |
| ஏலரிசி | ,, | 6 |
| சீரகம் | ,, | 6 |

* செய்முறை ஆறும்பாகம் காண்க.

| | | |
|---|---|---|
| கருஞ்சீரகம் | ,, | 6 |
| கடுகுரோகிணி | ,, | 6 |
| பெருங்காயம் | ,, | 6 |
| முசுறுமுட்டை | ,, | 3 |
| கோழிமுட்டை மஞ்சள் கரு | ,, | 3 |

தூள் செய்யவேண்டியதைத் தூள்செய்து, யாவற்றையும் ஒன்றாய்க் கலந்து மெழுகுபதமாய்க் காய்ச்சி வடித்து, $\frac{1}{2}$, 1-தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம். (மருந்து நிறுத்தியபின் மூன்றுநாள் கடும்பத்திய மிருக்கவேண்டும்.)

சன்னிப்பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

### தாந்திரீக சன்னி:—

திரேகோஷ்ணம் அதிகமாயிருக்கும்; திரேகாதியந்தமும் துடிதுடிக்கும்; இடுப்புக்குக் கீழ்பாகங்கள் குளிர்ந்து சில்லிட்டிருக்கும்; அடிக்கடி மயக்கம் உண்டாகும்; பால் குடியாது.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தைவேளைவேர் | ரூபாயெடை | $\frac{1}{2}$ | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| ஊமத்தைவேர் | ,, | $\frac{1}{2}$ | வசம்பு | ,, | $\frac{1}{2}$ |
| முருங்கைவேர் | ,, | $\frac{1}{2}$ | மயிலிறகு | ,, | $\frac{1}{2}$ |
| சீந்தில்வேர் | ,, | $\frac{1}{2}$ | | | |

அரைகுறையாய்ப் பொடித்துக் கலந்து, ஒரு கம்பளியில் வைத்துத் திரிபோல் சுருட்டி, வேப்பெண்ணெயில் நனைத்துக் கொளுத்தி, அந்தப் புகையைச் சுவாசிக்கும்படிச்செய்தும், அந்தப் புகையால் உடலாதியந்தத்திற்கும் தூபம் காண்பிக்கவும் செய்யலாம்.

சன்னி பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

### மாந்தசன்னி—Collapse Diphtheria.

சுரம் கடுமையாயிருக்கும்; குழந்தை ஒரு கண்ணை மூடிக்கொண்டு, ஒரு கண்ணைச் சிமிட்டாமல் உருட்டி உருட்டி விழிக்கும்; கைகால் கோணலாக வலிக்கும்; மூத்திரம் சிவந்திறங்கும்; பெருமூச்சு உண்டாகும்; தூக்கம் வராது; உடல் மஞ்சளாகவிருக்கும்; பால் குடியாது.

சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | கஞ்சாவேர் | ரூபாயெடை | 1 | அராவேர் | ரூபாயெடை | 1 |
| | ஊமத்தை வேர் | ,, | 1 | கோரைக்கிழங்கு | ,, | 1 |

தூள் செய்து வேப்பெண்ணெய் விட்டு வறுத்து அந்தத்தூளை நெருப்பில் தூவி குழந்தையின்பேரில் புகை படும்படி செய்யலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | குட்டிவிளாயிலை | ரூபாயெடை ½ | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை ½ |
| | வசம்பு | ,, ½ | ஓமம் | ,, ½ |

ஒன்று யிடித்துச் சாறு பிழிந்து ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை 3-நாள் கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (3) | கஸ்தூரி | ரூபாயெடை ¼ | குங்குமப்பூ | ரூபாயெடை ½ |
| | கோரோசனை | ,, 1 | | |

மூலைப்பால்விட்டரைத்து மிளகவ்வளவு பெரிய மாத்திரைகளாக்கி தினம் மூன்றுவேளை மூலைப்பாலில் கொடுக்கலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (4) | நல்லெண்ணை | அவுன்ஸ் 24 | முருங்கப்பட்டைச்சாறு | அவுன்ஸ் 48 |
| | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை 3 | வசம்புக்கரி | ரூபாயெடை 1 |

இடித்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்து ஒரு தேக்கரண்டிவீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (5) | கோரோசனை | ரூபாயெடை 1 | கோஷ்டம் | ரூபாயெடை 1 |
| | திப்பிலி | ,, 1 | மாசக்காய் | ,, 1 |
| | அக்ரகாரம் | ,, 1 | கருஞ்சீரகம் | ,, 1 |

மூலைப்பால்விட்டரைத்து மிளகவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து தினம் 3-வேளை ஒரு மாத்திரை வீதம் மூலைப்பாலில் கொடுத்துவரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (6) | மஞ்சள் | ரூபாயெடை ½ | சாதிக்காய் | ரூபாயெடை ½ |
| | சுக்கு | ,, ½ | திப்பிலி | ,, ½ |
| | மிளகு | ,, ½ | கிராம்பு | ,, ½ |
| | கடுகுரோகணி | ,, ½ | ஏலம் | ,, ½ |
| | நாபிக்கிழங்கு | ,, ½ | | |

ஒன்று சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றால் 12-மணி நேரம் மைபோல் இரைத்து உளுந்தவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து, காலை யாலை ஒரு மாத்திரைவீதம் ஒரு அவுன்ஸ் மாசிபத்திரி கஷாயத்தில் கொடுத்துவரலாம்.

### சன்னிக்குப் போது மருந்துகள்:—

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | அதிமதூரம் | ரூபாயெடை ¼ | தாளி சபத்திரி | ரூபாயெடை ¼ |
| | இலுப்பைப் பூ | ,, ¼ | திப்பிலி | ,, ¼ |
| | ஏலரிசி | ,, ¼ | திராக்ஷைப்பழம் | ,, ¼ |
| | கடுகுரோகிணி | ,, ¼ | தேவதாரு | ,, ¼ |
| | கோரோசனை | ,, ¼ | நன்னாரிவேர் | ,, ¼ |
| | சடாமாஞ்சில் | ,, ¼ | நிலைப்பனைக்கிழங்கு | ,, ¼ |
| | சந்தனம் | ,, ¼ | பேரீச்சம்பழம் | ,, ¼ |
| | சுக்கு | ,, ¼ | விலாமிச்சைவேர் | ,, ¼ |
| | வெட்டிவேர் | ,, ¼ | | |

இவற்றை தண்ணீர் விட்டு மைபோலரைத்து, மிளகவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து, முதியார் கூந்தல் கஷாயத்தில் கொடுத்துவரலாம்.

இதே மாத்திரையை முலைப்பாலில் கொடுத்தால் சகல கணைநோய்களும் தீரும்.

(2) குட்டிவிளா வேர் ரூபாயெடை $\frac{3}{4}$ தூதுவேளை வேர் ரூபாயெடை $\frac{3}{4}$
நாய்வேளை வேர் ,, $\frac{3}{4}$ சீரகம் ,, $\frac{3}{4}$
கஸ்தூரி மஞ்சள் ,, $\frac{3}{4}$ வெங்காரம் ,, $\frac{3}{4}$
சிற்றத்தை ,, $\frac{3}{4}$ மர மஞ்சள் ,, $\frac{3}{4}$
வேப்பெண்ணெய் அவுன்ஸ் 24

எல்லாவற்றையும் ஒன்றாகப் பொடித்து வேப்பெண்ணெயில் போட்டு, பதமாய்க் காய்ச்சிவடித்து $\frac{1}{2}$-1-தேக்கரண்டி வீதம் கொடுத்துவரலாம்.

(3) பாலசுரஹர மாத்திரை; கஸ்தூரி மாத்திரை; சுவர்ணகோரோசனை மாத்திரை; அப்பிரகக்கோரோசனை மாத்திரை; இப்புத்தகத்தின் ஆறும் பாகத்தில் பார்த்துச் செய்து கொடுத்துவரலாம்.

(4) இயூகலிப்ட்ஸ் எண்ணெய் (Oil Eucalyputus) யை உள்ளங்கால் உள்ளங்கையில் சூடுபறக்கத் தேய்க்கலாம்.

(5) காம்பர் ஆயில் (Oil Camphor) உள்ளங்கால், உள்ளங்கையில் சூடு பறக்கத் தேய்க்கலாம்.

(6) ஈதரிஸ் (Aetheris) டிராம் 2
டிஞ்சர் வெலிரியன் (Tincture Valerian) டிராம் 2

ஒன்று சேர்த்துக் குலுக்கிக்கொண்டு, ஒரு வயது குழந்தையானல் ஒரு அவுன்ஸ் தண்ணீரில் 5-துளி வீதம் சேர்த்துக்; கொஞ்சம் சர்க்கரையும் கூட்டி, தடவை ஒன்றுக்கு இந்த விதமாக அரைமணிநேரத்திற் கொரு முறை கொடுத்து வரலாம்.

(7) பல்விஸ் காம்பர் (Pulvis Camphor) கிரைன்ஸ் 48
ஆயில் ஒலிவா ரெஸின்டிஸ் (Oil Olivae Recentis) அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்து, 5, 10-மினியம் ஊசிமூலம் இஞ்செக்ட் செய்யலாம்.

## மாந்தம்

## DIPHTHERIA

இது அற்பக் காய்ச்சலுடன் குழந்தைகளுக்குவரும் ஒரு பயங்கர வியாதி. இது தொத்துவிஷக் கிருமிகளால் ஏற்படுவதென்று மேலைநாட்டு வைத்திய சித்தாந்தம் கூறுகிறது; ஆனல், இது அஜீரணத்தா லாவதென்று, தமிழ் முறை நூற்கள் கூறுகின்றன. குழந்தை பிறந்ததுமுதல் மூன்றாண்டுமட்டும்

8

தான் இவ்வியாதி ஏற்படும். ஐந்தாண்டுக்குமேல் இவ்வியாதி ஏற்படுவதே யில்லை. முதலில் காய்ச்சல் 101, 102-டிகிரி யிருக்கும்.

தொண்டை புண்பட்ட மாதிரியாக சிவந்து வீங்கியிருக்கும்; வாயின் உட்பாகங்களில் வெளிறின பச்சைநிறமானத் தடிப்புகள் உண்டாகும். தொண்டை, வாய், உள்நாக்கு இவைகள் புண்பட்டு வீங்கிவிடுவதினால், குழந்தை பால் குடிக்க முடியாதபடி உபத்திரவப் படும்.

சுரத்துடன் வியர்வை காணும்; வாந்தி வயிற்றோட்டம் ஏற்படும். சில சமயம் மலத்துடன் சீதம் கலந்தும், சில சமயம் மலம் தண்ணீராயும், பால் போலும், நுரையாயுமிருக்கும்; நாவு வறண்டும், தொண்டைக்கட்டியு மிருக்கும்; குழந்தை பால் குடிக்காது; கண் குழிவிழும்; கை கால் குளிரும்; வாய் நாற்றமடிக்கும்; விழி சுற்றிக்கொண்டே யிருக்கும், கால் சோர்ந்துபோகும்.

மாந்தம் எட்டுவகையென்று சொல்லப்படு மென்றாலும், ஒவ்வொருத் தனிப்பட்ட குணங்குறிகளைக் கொண்டு பலப்பெயரால் குறிக்கப்படுகிறது அவையாவன:—

| | | |
|---|---|---|
| அடைமாந்தம் | சிலேத்மமாந்தம் | பித்தமாந்தம் |
| அட்சரமாந்தம் | சுழிமாந்தம் | பேதியக்கரமாந்தம் |
| அள்ளுமாந்தம் | செரியாமாந்தம் | பேய்மாந்தம் |
| உளைமாந்தம் | சொருகுமாந்தம் | போர்மாந்தம் |
| ஊதுமாந்தம் | தலைமாந்தம் | மலடிகள்மாந்தம் |
| கணைமாந்தம் | துலைமாந்தம் | முக்குமாந்தம் |
| கட்டுமாந்தம் | நீர்மாந்தம் | வாதமாந்தம் |
| கழிமாந்தம் | பால்மாந்தம் | வாள்மாந்தம் |
| சலமாந்தம் | புளிமாந்தம் | விஷமாந்தம் |
| | | வீக்கமாந்தம் |

இவைகளைத் தவிர:—சத்திமாந்தம்; சன்னிபாதமாந்தம்; இழுப்புமாந்தம்; தோஷமாந்தம் எனவும் பல மாந்தங்களைக் கூறுவர்.

**அடைமாந்தம்:—**

குழந்தை வயிறு பொருமியிருக்கும்; சில சமயம் நுரையாகவும், சில சமயம் பலவிதமாகவும் கழியும்; மலம் புளிப்புவாடை அடிக்கும்; கை கால்களை முடக்கி வைத்துக்கொள்ளும்.

**சிகிச்சை:**—மாந்தப் பொது மருந்துகளைக் கொடுத்துவரலாம்.

**அட்சரமாந்தம்:—**

எலும்புகளெல்லாம் அதி உஷ்ணம் கண்டிருக்கும்; சுரத்துடன் குளிர் இருக்கும்; வயிற்றோட்ட முண்டாகும்; குழந்தை உடல் மெலிந்துவிடும்; வாயும் உதடும் வெளுத்திருக்கும். ஒரு சமயம் வாயும், உதடும் புண்பட்டிருக்கும்,

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | அத்தியிலை | ரூபாயெடை | 2 |
| | ஆடாதோடை யீர்க்கு | ,, | 2 |
| | நுணாரர்க்கு (மஞ்சணெத்தி) | ,, | 2 |
| | வெந்தயம் | ,, | 2 |

இவற்றை 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 12-அவுன்ஸாகச் சுண்டக் காச்சிய கஷாயத்தில்,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பேய்க்கும்மட்டி இலைச்சாறு | அவுன்ஸ் | 6 | வெங்காயச்சாறு | அவுன்ஸ் | 48 |
| நுணா யிலைச்சாறு | ,, | 48 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 48 |
| வில்வ யிலைச்சாறு | ,, | 48 | சிற்றரத்தை | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| தைவேளைச் * சமூலச்சாறு | ,, | 48 | கடுகுரோகிணி | ,, | $\frac{1}{4}$ |
| பொடுதலைச்சாறு | ,, | 48 | கடுக்காய் | ,, | 2 |
| செம்முள்ளிச்சாறு | ,, | 48 | அக்ரகாரம் | ,, | $\frac{3}{4}$ |
| ஆடாதோடை யிலைச்சாறு | ,, | 48 | வெளுச்சிப்பிசின் | ,, | $\frac{3}{4}$ |
| அவுரியிலைச்சாறு | ,, | 6 | கருஞ்சீரகம் | ,, | $\frac{3}{4}$ |
| | | | கஸ்தூரி மஞ்சள் | ,, | $\frac{3}{4}$ |

தூள் செய்யவேண்டியதை தூள் செய்து ஒன்றாய் கலக்கி மெழுகுபதமாய்க் காய்ச்சி வடித்து, ஒரு தேக்கரண்டி வீதம் 3-நாளைக்குக் கொடுத்துவரலாம். (உப்பு, புளிதள்ளி கடும் பத்தியம்.)

| | | | |
|---|---|---|---|
| (2) | மணித்தக்காளி இலைச்சாறு | அவுன்ஸ் | 48 |
| | அகத்தி யிலைச்சாறு | ,, | 48 |
| | சோற்றுக்கற்றாழைச்சாறு | ,, | 48 |
| | வெங்காயச்சாறு | ,, | 48 |
| | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 48 |
| | மதுக்காரைவேர் | ரூபாயெடை | 3 |
| | வரட்பூலாவேர் | ,, | 3 |
| | அத்திவேர் | ,, | 3 |
| | இளவறுப்பாய் வறுத்த வெந்தயம் | ,, | 3 |

தூள் செய்யவேண்டியதைத் தூள்செய்து கலந்து, காய்ச்சி வடித்து, $\frac{1}{2}$-தேக்கரண்டியளவாக உள்ளுக்கும் கொடுத்து, உதட்டிலும் பூசலாம். (பத்தியம்)

மாந்தப் பொதுமருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## அள்ளுமாந்தம்—Pleurisy Fever

அள்ளுமாந்தமென்பது சகல குணங் குறிகளிலும், பால்மாந்தத்தை ஒத்ததாகவே யிருக்கும்; ஆனால், குழந்தை சுவாசிக்கும்போது நெஞ்சு உயர்ந்

* சமூலம்=வேர், இலை, பூ, காய்.

தும், நெஞ்சுக்குழி பள்ளமாயும், பக்கவிலாக்களில் பள்ளமாயு மிருக்கும். இதை சிலர் நாய்க்கணை என்றும் சொல்லுவர்.

**சிகிச்சை:**—பால்மாந்தத்திற் குண்டான சிகிச்சைகளையும், மாந்தப் பொதுவிற்கான சிகிச்சைகளையும் அபினியாசசன்னிசுரத்திற் குண்டான சிகிச்சைகளையும் செய்துவரலாம்.

**உளைமாந்தம்:**—

கிரேகோஷ்ணம் ஏறக்குறைய அதிகமாகவே யிருக்கும்; மலசலம் இறங்காது; குழந்தை ஏங்கி யேங்கியும், திடீரென்று பயந்தும் அழும்; கண் விழிகளை சுழற்றி வெரிப்புடன் பார்க்கும்; பால் குடியாது.

**சிகிச்சை**

(1) புல்லுருவி ரூபாயெடை $\frac{1}{2}$ பனைவெல்லம் ரூபாயெடை $\frac{1}{2}$

ஒன்று சேர்த்துக்கொண்டு அதில் அரைக்கால் ரூபாயெடையளவு எடுத்துக் கொஞ்சம் நல்லெண்ணெய்விட்டுக் குழப்பிக் கொடுக்கலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | சங்கன்வேர் ரூபாயெடை | 1 | கொடிவேலிவேர் ரூபாயெடை | | 1 |
| | ஆடாதோடைவேர் | ,, 1 | கொன்றைவேர் | ,, | 1 |
| | புங்கமரத்துப்பட்டை | ,, 1 | இந்துப்பு | | 1 |

இவற்றை 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாக வற்றக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) | * நாக்கப்பூச்சி ரூபாயெடை | $\frac{1}{2}$ | வேப்பம்வேர் ரூபாயெடை | | $\frac{1}{2}$ |
| | வசம்பு | ,, $\frac{1}{2}$ | வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{1}{2}$ |
| | பெருங்காயம் | ,, $\frac{1}{2}$ | † நேர்வாளம் | ,, | $\frac{1}{2}$ |

பொடித்து 48-அவுன்ஸ் சிற்றுமணக்கெண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து 10-20-துளிவீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (4) | ‡ நாக்கப்பூச்சி ரூபாயெடை | $\frac{3}{4}$ | நாரத்தைவேர் ரூபாயெடை | | $\frac{3}{4}$ |
| | ஈசுரமூலி | ,, $\frac{3}{4}$ | வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{3}{4}$ |
| | வசம்பு | ,, $\frac{3}{4}$ | பெருங்காயம் | ,, | $\frac{3}{4}$ |
| | கருஞ்சீரகம் | ,, $\frac{3}{4}$ | | | |

---

* நாக்கப்பூச்சியைச் சற்றுநேரம் பாலில்போட்டிருந்து மண்ணைக் கக்கிய பின் தண்ணீரில் கழுவி எடுத்துக்கொள்ளவும்.

† நேர்வாளமுத்து ஒவ்வொன்றையும் தனித்தனியே எருமைச்சாணியில் புதைத்து ஈரத்துடன் நெருப்பிலிட்டு வெந்தபின் எடுத்து, கொட்டையை உடைத்து பருப்பு மத்தியிலிருக்கும் குருத்தை எடுத்துவிட்டு மறுபடி பாலில் வேகவைத்து உபயோகிக்கவும்.

‡ 60-ம் பக்கம் பார்க்க.

இவற்றை மணத்தக்காளிச்சாறு விட்டரைத்து, 48-அவுன்ஸ் சிற்றாமணக் கெண்ணெயில் கலக்கிக் காய்ச்சிவடித்து, $\frac{1}{2}$, 1-தேக்கரண்டியளவாக மூன்றுநாள் கொடுத்து வரலாம். (உப்பு, புளி, தள்ளி கடும் பத்தியம்.)

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

**ஊதுமாந்தம்:—**

திரேகோஷ்ணம் அதிகமாகவேயிருக்கும்; திரேகம் வீக்கம் கண்டிருக்கும்; வயிற்றோட்டம், வயிற்றிரைச்சல், வாந்தி முதலியவைகளிருக்கும். கழியும் மலமானது, வெள்ளையாகவும், நுரையாகவுமிருக்கும்; தொண்டை சிவந்து வீங்கியிருக்கும்; தொண்டையில் கைபட்டால் வலி தாளாமல் குழந்தை கம்மிய குரலாயழும்; பால் குடியாது.

**சிகிச்சை**

(1) சீரகம் ரூபாயெடை $\frac{1}{4}$ கடுகுரோகணி ரூபாயெடை $\frac{1}{4}$

இதை வதக்கிப் பிழிந்த வேலிப்பருத்தி இலைச்சாறு வேண்டியவரை விட்டுக்குழம்பாக அரைத்து வடிகட்டிய சாற்றில் $\frac{1}{2}$, 1-தேக்கரண்டியும், முலைப் பால் 2-தேக்கரண்டியும் சேர்த்துக் கொடுத்துவரலாம்.

(2) கோரோசனை ரூபாயெடை $\frac{1}{2}$ திப்பிலி ரூபாயெடை $\frac{1}{2}$
வெள்ளைப்பூண்டு ,, $\frac{1}{2}$ அதிமதுரம் ,, $\frac{1}{2}$

இவற்றைக் கோழிமுட்டை வெள்ளைக்கருவை விட்டு மைபோலரைத்து, கால் ரூபா எடை அளவாக இரண்டவுன்ஸ் முலைப்பாலில் கலக்கி மூன்றுதினம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(3) வெங்காரம் ரூபாயெடை $\frac{1}{8}$ கருஞ்சீரகம் ரூபாயெடை $\frac{3}{4}$
கடுகுரோகிணி ,, $\frac{3}{4}$

இவற்றை முலைப்பால் விட்டரைத்து, மிளகவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து, ஒரு மாத்திரைவீதம் சுடுதண்ணீரில் கரைத்துக் கொடுத்து வரலாம்.

(4) பொடுதலை ரூபாயெடை 1 புளியிலை ஈர்க்கு ரூபாயெடை 1
வேப்பம் ஈர்க்கு ,, 1 நுணா ஈர்க்கு ,, 1
மாயிலை ஈர்க்கு ,, 1 நொச்சி ஈர்க்கு ,, 1

நசுக்கி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாக சுண்டக்காய்ச்சி ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம். (பத்தியம்.)

(5) ரசமாத்திரை கொடுக்கலாம். செய்முறை கடைசிபாகம் காண்க.

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

**கணை மாந்தம்:—**

திரேகோஷ்ணம் அதிகமாயிருந்தாலும், உள்ளங்கால்கள் மட்டும் குளிர்ந்திருக்கும்; உடல் மெலிவுறும்; வயிறு இரைந்து பாசிபோல் கழியும்; நாவரண்

டிருக்கும்; கண்ணில் நீர்வடியும்; நெஞ்சு உயர்ந்து உயர்ந்து அமுங்கும்; வாந்தியாகும்; அடிக்கடி மயக்கம் உண்டாகும்; கண்விழி வட்டமாய் சுற்றும்.

### சிகிச்சை

(1)

| | | | | |
|---|---|---|---|---|
| புள்ளடிசாறு | அவுன்ஸ் 12 | பழம்பாசிச்சாறு | அவுன்ஸ் | 12 |
| பொடுதலைசாறு | ,, 12 | வெங்காயச்சாறு | ,, | 12 |
| தகரையிலைச்சாறு | ,, 12 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 24 |
| மணிதக்காளியிலைச்சாறு | ,, 12 | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | 3 |
| கருநொச்சியிலைச்சாறு | ,, 12 | வசம்பு | ,, | 3 |

ஒன்றாக சேர்த்துக் காய்ச்சி வடித்து, காலையில் ஒரு தேக்கரண்டியளவு கொடுத்து மாலையில்:—

| | | | | |
|---|---|---|---|---|
| சுக்கு | ரூபாயெடை $\frac{1}{4}$ | ஏலரிசி | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| திப்பிலி | ,, $\frac{1}{4}$ | பொன்முசுட்டை இலை | ,, | $\frac{1}{4}$ |
| திப்பிலிமூலம் | ,, $\frac{1}{4}$ | தூதுவேளையிலை | ,, | $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, $\frac{1}{4}$ | | | |

ஒன்றாகத் தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்துவரவும்.

(2)

| | | | |
|---|---|---|---|
| நொச்சியிலை | ஒருபிடி | முசுமுசுக்கையிலை | ஒருபிடி |
| துளசியிலை | ,, | | |

பிட்டவிப்பதைப்போல் இலையெல்லாம் ஒன்று சேர்த்து, அவித்து சாறெடுத்துக் கொடுத்துவரலாம்.

(3)

| | | | |
|---|---|---|---|
| புங்கியிலையீர்க்கு | ஒருபிடி | நாரத்தையிலையீர்க்கு | ஒருபிடி |
| புளியிலையீர்க்கு | ,, | சங்கியிலையீர்க்கு | ,, |
| நொச்சியிலையீர்க்கு | ,, | அவுரியிலையீர்க்கு | ,, |
| மாயிலையீர்க்கு | ,, | பொன்னாவரையிலையீர்க்கு | ,, |
| வேப்பிலையீர்க்கு | ,, | வேலிப்பருத்தியிலை | ,, |
| கறிவேப்பிலையீர்க்கு | ,, | பொடுதலை | ,, |

இவற்றை எல்லாம் நசுக்கி 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு அதில்:—

| | | | | |
|---|---|---|---|---|
| ஓமம் | ரூபாயெடை $\frac{1}{2}$ | இந்துப்பு | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| கடுகுரோகிணி | ,, $\frac{1}{2}$ | | | |

இவற்றைத் தனிமையாக ஒரு வெள்ளைத்துணியில் முடிந்துபோட்டு 12-அவுன்ஸாகும்வரை சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் மறுபடியும் துணியில் முடிந்திருந்த சரக்கையும் மைபோ லரைத்துக் கலக்கி அதில் இரண்டு தேக்கரண்டி யளவாக காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (4) வால்மிளகு | ரூபாயெடை | 2 | வசம்பு | ரூபாயெடை | 2 |
| வெள்ளைப்பூண்டு | ,, | 2 | கிராம்பு | ,, | 2 |
| ஓமம் | ,, | 2 | செண்பகப்பூ | ,, | 2 |

இவற்றைப் பொடுதலைச்சாறுவிட்டு 12-மணி நேரம் அரைத்துச் சுண்டக் காயவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து காலை மாலை ஒரு மாத்திரை வீதம் பொடுதலைச்சாற்றில் மூன்றுநாளைக்குக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (5) வேலிப்பருத்தியிலை | ரூபாயெடை | ½ | தைவேளைவேர் | ரூபாயெடை | ½ |
| வெள்ளைச்சாரணையிலை | ,, | ½ | வசம்பு | ,, | ½ |
| குட்டிவிளாயிலை | ,, | ½ | வெள்ளைப்பூண்டு | ,, | ½ |

நன்றாகக் கசக்கி 5-ரூபாயெடை எருமைவெண்ணெய்யில் போட்டுக் காய்ச்சி நெய்யை வடித்து ஒரு அவுன்ஸ் முலைப்பாலில் ஒரு தேக்கரண்டி நெய் சேர்த்து மத்தித்து காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (6) நுணாயிலைச்சாறு (மஞ்சநெத்தி) | அவுன்ஸ் | 24 |
| வெங்காயச்சாறு | ,, | 24 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 24 |
| வில்வக்கொழுந்து | | ஒருபிடி |
| பொரித்தவெங்காரம் | ரூபாயெடை | ¼ |
| கடுக்காய்த்தூள் | ,, | ¾ |
| சீரகம் | ,, | ¼ |

தூள் செய்யவேண்டியவற்றைத் தூள்செய்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து, 15, 20-துளி வரை கொடுத்து வரலாம். (கடும் பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (7) திருகுக்கள்ளிப்பால் | அவுன்ஸ் | 3 | சீரகம் | ரூபாயெடை | ⅛ |
| வெள்ளாட்டுப்பால் | ,, | 96 | கருஞ்சீரகம் | ,, | ,, |
| பச்சை இண்டுக் கொழுந்துச் சாறு | ,, | 24 | வசம்பு | ,, | ,, |
| | | | விலாமிச்சுவேர் | ,, | ,, |
| சிற்றாமணக்கெண்ணை | ,, | 48 | வெட்டிவேர் | ,, | ,, |
| செண்பகப்பூ | ரூபாயெடை | ⅛ | நன்னாரிவேர் | ,, | ,, |
| அதிமதுரம் | ,, | ,, | சிறுநாகப்பூ | ,, | ,, |
| சாதிக்காய் | ,, | ,, | பூலாக்கிழங்கு | ,, | ,, |
| சாதிப்பத்திரி | ,, | ,, | கடுக்காய் | ,, | ,, |
| ஏலம் | ,, | ,, | கடுகுரோகிணி | ,, | ,, |
| கிராம்பு | ,, | ,, | கோரோசனை | ,, | ,, |
| வெங்காயம் | ,, | ,, | கோஷ்டம் | ,, | ,, |
| வெள்ளைப்பூண்டு | ,, | ,, | நாகேசுரம் | ,, | ,, |

இதில் பொடி செய்யவேண்டியவற்றைப் பொடிசெய்து, எல்லாவற்றையும் ஒன்ருக எண்ணெயில் சேர்த்துக் கலக்கிக் காய்ச்சி வடித்து, ஒரு அவுன்ஸ் முலைப்பாலில் ஒரு தேக்கரண்டி எண்ணெய் விட்டுக் கலக்கி, காலையில் மட்டும் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

**கட்டு மாந்தம்:—**

திரேகோஷ்ணம் அதிகமாயிருக்கும்; இருமல், தலைவலி, வயிற்றுவலி இருக்கும்; மலம் கட்டிக் கட்டியாகக் கழியும்; மலசலம் கட்டுப்படும்; அடிக்கடி கொட்டாவி உண்டாகும்; வியர்வை காணும்; உதடு வறண்டிருக்கும், தூங்கி விழுவதைப்போல் சோர்ந்து சோர்ந்து விழச் செய்யும். சில சமயங்களில் இரைப்பு உண்டாகும்.

## சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | வெள்ளாட்டுப்பால் | அவுன்ஸ் 24 | கடுக்காய் | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| | சதுரக்கள்ளிப்பால் | ,, 24 | தான்றிக்காய் | ,, | $\frac{3}{4}$ |
| | சிற்றுமணக்கெண்ணெய் | ,, 48 | நெல்லிவற்றல் | ,, | $\frac{3}{4}$ |
| | | | வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{3}{4}$ |

பொடிக்கவேண்டியதைப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, 15-20-துளி யளவாகக் கொடுத்துவரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | சிந்தகத்தியிலைச்சாறு | அவுன்ஸ் 2 | கடுகுரோகிணி | ரூபாயெடை | 1 |
| | தாளியிலைச்சாறு | ,, 2 | கடுக்காய் | ,, | 1 |
| | தகரவிலைச்சாறு | ,, 2 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| | கழற்சியிலைச்சாறு | ,, 2 | வெங்காயம் | ,, | 1 |
| | நொச்சியிலைச்சாறு | ,, 2 | வெள்ளைப்பூண்டு | , | 1 |
| | செம்முள்ளியிலைச்சாறு | ,, 2 | வசம்பு | ,, | 1 |
| | மிளகுத்தக்காளியிலைச்சாறு | ,, 2 | பூதகரப்பன் பட்டை | ,, | 1 |
| | சதுரக்கள்ளிப்பால் | ,, $\frac{1}{2}$ | தைவேளை வேர் | ,, | 1 |
| | சிற்றுமணக்கெண்ணெய் | ,, 12 | | | |

பொடிக்கவேண்டியவற்றைப் பொடித்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்து, காலையில் 15, 20-துளி கொடுத்து சாயந்திரம்:—

மிளகு சாம்பல் ரூபாயெடை $\frac{1}{2}$ சுக்கு ரூபாயெடை $\frac{1}{2}$

ஒன்ருகக் கஷாயமிட்டு 2-அவுன்ஸ் கஷாயம் மட்டும் கொடுத்துவரலாம். (பத்தியம்.)

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீந்தில் தண்டு | ரூபாயெடை | $\frac{1}{2}$ | கடுக்காய் | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| களிப்பாக்கு | ,, | $\frac{1}{2}$ | கடுகுரோகிணி | ,, | $\frac{1}{2}$ |
| சிவதைவேர் | ,, | $\frac{1}{2}$ | | | |

16-அவுன்ஸ் தண்ணீரில் போட்டுக் கஷாயமிட்டு 2-அவுன்ஸ் கஷாயம் வீதம் காலை மாலை மூன்றுநாள் கொடுத்துவரலாம். (பத்தியம்.)

மாந்தப் பொதுமருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

### கழி மாந்தம்:—

மாந்தக்கழிச்சல் என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

### சல மாந்தம்:—

நீர்மாந்தமென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

### சிலேத்ம மாந்தம்:—

காச்சலுடன் குளிர்நடுக்க மிருக்கும்; உடம்பு சிலிர்க்கும்; நெஞ்சில் கபம் கட்டி திட்டுமுட்டடிக்கும்; நாவில் மாவு படர்ந்திருக்கும்; வயிறு பொருமி மலம் தண்ணீராய் கழியும்; சோர்வு உண்டாகும்.

#### சிகிச்சை

(1)

| | | | |
|---|---|---|---|
| நொச்சியீர்க்கு | ஒருபிடி | வேலிப்பருத்தியிலை | ஒருபிடி |
| நுணா (மஞ்சநெத்தி) யீர்க்கு | ,, | தைவேளைவேர் | ,, |
| முருங்கையீர்க்கு | ,, | பொடுதலை | ,, |

ஒரு மண்சட்டியில் போட்டு வதக்கி 24-அவுன்ஸ் தண்ணீர்விட்டு அத்துடன்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓமம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ | மிளகு | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| சுக்கு | ,, | $\frac{1}{4}$ | வசம்பு | ,, | $\frac{1}{4}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{4}$ | | | |

இவற்றை இளவறுப்பாய் வறுத்து ஒரு வெள்ளைத் துணியில் முடித்துப் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தை வடித்து, அத்துடன் துணியில் முடிந்துப்போட்டவைகளை மைபோ லரைத்து $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆமையோடு | ரூபாயெடை | $\frac{1}{4}$ | குரோசானியோமம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ | சீரகம் | ,, | $\frac{1}{4}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{4}$ | கருஞ்சீரகம் | ,, | $\frac{1}{4}$ |
| சுக்கு | ,, | $\frac{1}{4}$ | கொத்தமல்லி | ,, | $\frac{1}{4}$ |

இவற்றைத் தண்ணீர்விட்டு மைபோ லரைத்து மிளகவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து காலை மாலை ஒரு மாத்திரை வீதம் சுடுதண்ணீரில் கரைத்துக்கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) ஆமையோடு | ரூபாயெடை | 1 | வாய்விளங்கம் | ரூபாயெடை | 1 |
| மிளகு | ,, | 1 | கழற்சிப்பருப்பு | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | பொடுதலைக்காய் | ,, | 1 |
| வசம்பு | ,, | 1 | | | |

இவற்றைப் பொடுதலைச் சாற்றால் மைபோலரைத்துப் பட்டாணிக்கடலை பிரமாணம் மாத்திரைகள் செய்து காயவைத்து காலை மாலை ஒரு மாத்திரை வீதம் பொடுதலைக் கஷாயத்தில் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) நொச்சியிலை | ஒருபிடி | நுணாயிலை (மஞ்சநெத்தியிலை) | ஒருபிடி |
| பொடுதலை | ,, | வேலிப்பருத்தியிலை | ,, |

ஒரு சட்டியில் போட்டு வதக்கி சாறெடுத்துக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (5) பொடுதலை | ரூபாயெடை | 2 | கறியுப்பு | ரூபாயெடை | 2 |

கசக்கிப்பிழிந்த சாறு 1, 1½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (6) வெற்றிலைக்காம்பு | ரூபாயெடை | ¼ | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | ¼ |
| வசம்பு | ,, | ¼ | திப்பிலி | ,, | ¼ |

இளவறுப்பாய் வறுத்து சுடுதண்ணீர் விட்டு அரைத்துக் கலக்கி வடிகட்டிய சாறு 1, ½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (7) வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | ¼ | ஓமம் | ரூபாயெடை | ¼ |
| மிளகு | ,, | ¼ | | | |

ஒரு வெள்ளைத்துணியில் முடிந்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் அந்த முடிச்சியிலுள்ள மருந்தை அரைத்துக் கலக்கி 1, 1½-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (8) ஆமையோடு | ரூபாயெடை | 1 | வட்டத்திருப்பி | ரூபாயெடை | 1 |
| வசம்பு | ,, | 1 | | | |

இவற்றை இலேசாய் வெதுப்பி, குட்டிவிளா இலையை வதக்கிப் பிழிந்த சாற்றை விட்டரைத்துச் சுடுதண்ணீரில் கலக்கி வடிகட்டி, 1, 1½ அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (9) வேலிப்பருத்தியிலை | ஒருபிடி | பொடுதலை | ஒருபிடி |
| குப்பைமேனியிலை | ,, | அகத்தியிலை | ,, |
| இண்டு | ,, | | |

இவற்றை வதக்கிப் பிழிந்த சாற்றில்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆமையோடு | ரூபாயெடை | ¼ | ஓமம் | ரூபாயெடை | ¼ |
| வசம்பு | ,, | ¼ | | | |

இளவறுப்பாய் வறுத்து அரைத்துக் கலக்கி வடிகட்டிய சாற்றில், 1, 1½-அவுன்ஸ் உள்ளுக்கும் கொடுத்து, உடலாதியந்தமும் தடவலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (10) தைவேளைவேர் | ரூபாயெடை | 1 | வெந்தயம் | ரூபாயெடை | 1 |
| ஓமம் | ,, | 1 | வசம்பு | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | வெள்ளைப்பூண்டு | ,, | 1 |

இளவறுப்பாய் வறுத்துப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாக சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் 1,1½-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்துவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (11) நுணுபிலை (மஞ்சணெத்திபிலை) | ஒருபிடி | நொச்சியிலை | ஒருபிடி |
| கழற்சியிலை | ,, | | |

இவற்றை வதக்கி அத்துடன்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓமம் | ரூபாயெடை | ¼ | மிளகு | ரூபாயெடை | ¼ |
| வசம்பு | ,, | ¼ | திப்பிலி | ,, | ¼ |
| சுக்கு | ,, | ¼ | பொடுதலைக்காய் | ,, | ¼ |

இவற்றை நல்லெண்ணெயில் சிவக்க வறுத்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் பொடித்துப்போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சி, 1, 1½-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

**சுர மாந்தம்:—**

திரேகோஷ்ணம் அகோரமாயிருக்கும்; உடம்பில் வீக்கம் காணும்; இருமல், வீக்கல், ஏப்பம் ஏற்படும்; பெருமூச்சு வாங்கும்; சுவாசிக்கும்போது இருவிலாவும் குழி விழும்; தூக்கம் வராது; குழந்தை பால் குடியாது.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) கரிசலாங்காணிசாறு | அவுன்ஸ் | 1 | மூக்கிரசாரணைச்சாறு | அவுன்ஸ் | 1 |
| துளசியிலைச்சாறு | ,, | 1 | முதியார்கூந்தல்சாறு | ,, | 1 |
| ஆடாதோடையிலைச்சாறு | ,, | 1 | சோற்றுக்கற்றாழைச்சாறு | ,, | 1 |
| சங்கனிலைச்சாறு | ,, | 1 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 8 |
| நாரத்தையிலைச்சாறு | ,, | 1 | | | |

இவைகளை ஒன்று சேர்த்து, அதில்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சாதிக்காய் | ரூபாயெடை | ½ | திப்பிலி | ரூபாயெடை | ½ |
| பெருங்காயம் | ,, | ½ | கடுகுரோகணி | ,, | ½ |
| கோரோசனை | ,, | ½ | | | |

இளவறுப்பாய் வறுத்துப் பொடித்துச் சேர்த்து காய்ச்சி வடித்து, ½, 1-தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) குட்டிவிளாயிலை | ரூபாயெடை | ½ | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | ½ |
| அவுரியிலை | ,, | ½ | | | |

மண்சட்டியில் போட்டு வதக்கி 24-அவுன்ஸ் தண்ணீர்விட்டு 3-அவுன் ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் $\frac{1}{2}$, 1-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(3) பாலசஞ்சீவி மாத்திரை; கோரோசனை மாத்திரை; பாலவிநோத சஞ்சீவி மாத்திரை; கஸ்தூரி மாத்திரை; மகாரச பஸ்பம்; சுவர்ண வெள்ளி பஸ்பம்; வீரசூத சிந்தாமணி இவற்றிலொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகங் காண்க.

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

**சுழிமாந்தம்:—**

திரேகோஷ்ணம் மிதமாகவே இருக்கும்; முழங்காலுக்குங் கீழ் குளிர்ந்திருக்கும்; குமட்டல் உண்டாகும்; உடல் வீக்கங்கண் டிருக்கும்; பெருமூச்சோடு இரைப்புங் காணும்; மூச்சுவிடும்போது விலாவின் இருபுறமும், சுழித்துப் பள்ளமாகும்; தூக்கம் பிடிக்காது; குழந்தை பால் குடியாது.

**கிசிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) மாசிப்பத்திரி | ரூபாயெடை | 1 | முக்காவேளை | ரூபாயெடை | 1 |
| பற்பாடகம் | ,, | 1 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| நாயுருவி | ,, | 1 | கோழியெச்சம் (மலம்) | ,, | 1 |

இவற்றை ஒரு மண்சட்டியில் போட்டு வறுத்து அத்துடன்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெட்டிவேர் | ரூபாயெடை | $\frac{1}{2}$ | கடுக்காய் | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| கோரைக்கிழங்கு | ,, | $\frac{1}{2}$ | மாசிக்காய் | ,, | $\frac{1}{2}$ |
| பறங்கிப்பட்டை | ,, | $\frac{1}{2}$ | தான்றிக்காய் | ,, | $\frac{1}{2}$ |
| ஏலரிசி | ,, | $\frac{1}{2}$ | வசம்பு | ,, | $\frac{1}{2}$ |
| கடுகுரோகிணி | ,, | $\frac{1}{2}$ | சங்கன்வேர் | ,, | $\frac{1}{2}$ |

பொடித்துப்போட்டு 96-அவுன்ஸ் தண்ணீர்விட்டு 12-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, 1$\frac{1}{2}$-அவுன்ஸ்வீதம் காலை மாலை கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) வெங்காயச்சாறு | அவுன்ஸ் | 2 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 2 |
| இண்டுச்சாறு | ,, | 2 | | | |

ஒன்றுசேர்த்துக் காய்ச்சி வடித்து ஒரு தேக்கரண்டி யளவாக காலை மாலை கொடுத்துவரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) துளசிச்சாறு | அவுன்ஸ் | 12 | நறுந்தாளிலைச்சாறு | அவுன்ஸ் | 12 |
| கோடகசாலைச்சாறு | ,, | 12 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 12 |
| ஆடாதோடையிலைச் சாறு | ,, | 12 | சாதிக்காய் | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| | | | திப்பிலி | ,, | $\frac{1}{2}$ |

| | | | | |
|---|---|---|---|---|
| தும்பைச்சாறு | ,, 12 | பெருங்காயம் | ,, | ½ |
| முதியார்க்கூந்தல்சாறு | ,, 12 | கடுகுரோகிணி | ,, | ½ |
| சங்கனிலைச்சாறு | ,, 12 | கோரோசனை | ,, | ½ |
| சீந்திலிலைச்சாறு | ,, 12 | வெள்ளைப்பூண்டு | ,, | ½ |
| சிற்றிலைச்சாறு | ,, 12 | | | |

தூள் செய்ய வேண்டியவற்றைத் தூள் செய்து ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்துவரலாம். (பத்தியம்.)

| | | | | |
|---|---|---|---|---|
| (4) சுக்கு | ரூபாயெடை ½ | ஒத்தைவெள்ளைபூண்டு | ரூபாயெடை | ½ |
| சழற்சிப்பருப்பு | ,, ½ | பெருங்காயம் | ,, | ½ |
| மஞ்சள் | ,, ½ | வேப்பெண்ணெய் | அவுன்ஸ் | 16 |

தூள் செய்ய வேண்டியவற்றை தூள் செய்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து ½, 1-தேக்கரண்டி யளவாக 2-அவுன்ஸ் முலைப்பாலுடன் சேர்த்துக் கொடுத்துவரலாம். (பத்தியம்)

### சேரியாமாந்தம்:—

திரேகோஷ்ணம் சற்றேறக்குறைய அதிகமாகவே யிருக்கும்; தலைவலி ஏற்படும்; வயிறு பொருமி மாவைக் கரைத்ததைப்போல் வெண்ணிறமாய் மலம் கழியும்; அடிக்கடி குழந்தை சீறியழும்; களைப்பினால் குழந்தை சோர்ந்து விழும்.

#### சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) வசம்பு | ரூபாயெடை ¼ | மிளகு | ரூபாயெடை | ¼ |
| சடாமாஞ்சில் | ,, ¼ | திப்பிலி | ,, | ¼ |
| வெள்ளைப்பூண்டு | ,, ¼ | கருஞ்சீரகம் | ,, | ¼ |
| ஓமம் | ,, ¼ | ஆமையோடு | ,, | ¼ |
| சுக்கு | ,, ¼ | | | |

இவற்றை இளவறுப்பாய் வறுத்துப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டிய கஷாயத்தில் 1, 1½-அவுன்ஸளவாகக் காலை மாலைகளில் கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (2) மிளகு | ரூபாயெடை ¼ | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | ¼ |
| வசம்பு | ,, ¼ | | | |

இவற்றை வேலிப்பருத்தியிலையை வதக்கிப் பிழிந்த சாறுவிட்டு மைபோலரைத்துக் குழம்பாகக் கரைத்து, ஒரு தேக்கரண்டியளவெடுத்து, அதில் பசு நெய் 3-துளிவிட்டுக் குழப்பிக் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) இஞ்சி | ரூபாயெடை 1½ | பெருந்தும்பையிலை | ஒருபிடி |

இலேசாகத் தட்டி, 3-அவுன்ஸ் எருமை வெண்ணெயில் போட்டு, சட்டியி லிட்டு வேகவைத்துப் பிழிந்த நெய்யில் ஒரு தேக்கரண்டியளவாகக் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (4) | ஓமம் | ரூபாயெடை $\frac{1}{4}$ | வசம்பு | ரூபாயெடை $\frac{1}{4}$ |
| | கோஷ்டம் | ,, $\frac{1}{4}$ | | |

இவற்றை 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், காலை மாலை 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

**சொருகு மாந்தம்:—**

இதில் மாந்தத்தின் குணங்குறிகளோடும், கண் விழிகளை மேல்நோக்கிச் சொருகி, பார்ப்பதற்குப் பயங்கரத்தை உண்டுபண்ணும்.

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

**தலை மாந்தம்:—**

திரேகோஷ்ணம் மிகுதியாயும், குளிர் நடுக்கம் அதிகமாயுமிருக்கும்; குளிரினல் நடுக்கமுண்டாகி, குழந்தை துள்ளித்துள்ளி விழும்; முகத்தில் மாத்திரம் வியர்வையுண்டாகும்; மூக்கில் நீர் வடியும்; உடல் வீக்கம் காணும்; வயிறு பொருமியிருக்கும்; ஏப்பம், கொட்டாவி முதலியவை உண்டாகும்; காலும் கையும் குளிர்ந்திருக்கும்; தலை கனதியாக விருப்பதினலும், வலி எடுப்பதினலும் குழந்தை தலையைப் பின்புறம் தொங்கப்போட்டுக் கொண்டிருக்கும்.

**சிகிச்சை**

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | வெள்ளறுகுச்சாறு அவுன்ஸ் 1 | வெதுப்படக்கிச்சாறு அவுன்ஸ் 1 |
| | வேலிப்பருத்திச்சாறு ,, 1 | பெருந்தும்பைச்சாறு ,, 1 |

எல்லாம் ஒன்று சேர்த்துக்கொண்டு:—

| | | | |
|---|---|---|---|
| திப்பிலி | ரூபாயெடை $\frac{1}{2}$ | சதைக்குப்பை | ரூபாயெடை $\frac{1}{2}$ |
| வசம்பு | ,, $\frac{1}{2}$ | தேசாவரம் | ,, $\frac{1}{2}$ |
| வெள்ளைப்பூண்டு | ,, $\frac{1}{2}$ | | |

இவற்றை மேற்படி சாறுகளால் மைபோலரைத்துக் கலக்கி, 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் காலை மாலை உள்ளுக்கும் கொடுத்து, உடலாதியந்தமும் பூசியும் வரலாம்.

மாந்தப் பொதுமருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

**துலை மாந்தம்:—**

காச்சலிருக்கும்; காச்சல் அதிகரித்தவுடன் வியர்த்து உடல் குளிரும்; முகம் கடுகடுப்பாயிருக்கும்; உடலை முறுக்கிக்கொண்டு கொட்டாவி உண்டாகும்; வாந்தி ஏற்படும்; கைகால்களில் வலிப்பு உண்டாகும்; சிலசமயம் விறைத்த படியே கொஞ்சநேரமிருக்கும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) தைவேளைவேர் | ரூபாயெடை | ½ | மிளகு | ரூபாயெடை | ½ |
| முடக்கொத்தான்வேர் | ,, | ½ | கடுக்காய் | ,, | ½ |
| அழிஞ்சில்வேர் | ,, | ½ | தான்றிக்காய் | ,, | ½ |
| வசம்பு | ,, | ½ | நெல்லிவற்றல் | ,, | ½ |
| சுக்கு | ,, | ½ | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 10 |
| திப்பிலி | ,, | ½ | | | |

தூள் செய்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடிகட்டி, ஒரு தேக்கரண்டி வீதம் உள்ளுக்கும் கொடுத்து மேலுக்கும் தடவி வரலாம்.

மாந்தப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

**நீர்க்கணை மாந்தம்:—**

நீர்மாந்தமென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**நீர் மாந்தம்:—**

திரேகோஷ்ணம் அதிகமாயும், முகம் பளபளப்பாகவுமிருக்கும்; உடல் மெலிந்து கைகால்கள் மட்டும் வீங்கி நமைச்சல் உண்டாகும்; எச்சல் தடித்திருக்கும்; வயிறு பொருமி மலம் கொஞ்சம் கொஞ்சமாகக் கழியும்; நீர் கடுப்புடனும் மஞ்சளாகவு மிறங்கும். நீரிறங்கும்போது எரிச்சல் தாங்காமல் குழந்தை கதறி அழும்; உடம்பு சிலிர்த்திருக்கும்; குழந்தை தூங்குவதைப்போலிருந்து சிரிக்கும்; பால் குடியாது.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) மூக்கிரட்டைச்சாறு | அவுன்ஸ் | 6 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 6 |
| வெங்காயச்சாறு | ,, | 6 | | | |

ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து, ஒரு தேக்கரண்டி பளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) நொச்சியிலை | ஒருபிடி | தூதுவேளையிலை | ஒருபிடி |
| துளசியிலை | ,, | வெதுப்படக்கியிலை | ,, |
| செம்முள்ளியிலை | ,, | திருநீற்றுப்பச்சையிலை | ,, |

இவற்றை ஒன்றுசேர்த்துப் பிட்டவித்துப் பிழிந்த சாற்றில்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீரகம் | ரூபாயெடை | ¼ | மிளகு | ரூபாயெடை | ¼ |
| சுக்கு | ,, | ¼ | பொரித்தவெங்காரம் | ,, | ⅛ |
| திப்பிலி | ,, | ¼ | | | |

வெங்காரம் நீங்கலாக 4 சரக்கையும், இளவறுப்பாக வறுத்துப் பொடித்தப் பொடியையும், வெங்காரத்தையும் சாற்றுடன் கலந்து, ஒரு இரும்புத்

துண்டைப் பழுக்கக் காயவைத்து அதில் துவைத்து முறித்து 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) வெதுப்படக்கிச்சாறு | அவுன்ஸ் | 12 | நுணு (மஞ்சநெத்தி) | அவுன்ஸ் | |
| அம்மாம்பச்சரிசிச்சாறு | ,, | 12 | யிலைச்சாறு | ,, | 12 |
| சங்கனிலைச்சாறு | ,, | 12 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 12 |

ஒன்றுசேர்த்து அவற்றுடன்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வசம்பு | ரூபாயெடை | $\frac{1}{4}$ | மஞ்சள் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{1}{4}$ | | | |

பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து, ஒரு தேக்கரண்டி யளவாக 3-நாட்களுக்குக் கொடுத்துவரலாம். (பத்தியம்)

| | | |
|---|---|---|
| (4) † சுத்திசெய்த ரசகர்ப்பூரம் | ரூபாயெடை | காலரைக்கால் |
| * சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு | ,, | $\frac{3}{4}$ |
| மிளகு | ,, | $\frac{3}{4}$ |
| கிராம்பு | ,, | $\frac{3}{4}$ |

இவைகளை மைபோ லரைத்து, 12-அவுன்ஸ் சிற்றாமணக்கெண்ணெயில் கலக்கிக் காய்ச்சி, 10-துளி வீதம் கொடுத்துவரலாம். (பொரித்த அரிசிக்கஞ்சி, புனர்ப்பாகம்தான் சேர்த்துக் கொள்ளலாம். கடும்பத்தியம்.)

மாந்தப் பொதுமருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

பால்மாந்தம்:—

காச்சலுடன் மயிர்க்கூச்சமுண்டாகும்; வயிறு பொருமி பால் கட்டிக் கட்டியாகக் கழியும்; வயிறு பொருமியதால் குழந்தை ஓயாமல் அழும்; மலம் புளிப்புநாற்ற மடிக்கும்; கண் குழிவிழும், தொண்டையில் கோழைக்கட்டி திட்டுமுட்டடிக்கும்; வாந்தி உண்டாகும்; குழந்தை பரதவிக்கத்தக்க விதமாய் துடிக்கும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | $\frac{1}{2}$ | பொடுதலைக்காய் | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| மிளகு | ,, | $\frac{1}{2}$ | இந்துப்பு | ,, | $\frac{1}{2}$ |
| வசம்பு | ,, | $\frac{1}{2}$ | | | |

24-அவுன்ஸ் தண்ணீரில் தட்டிப்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்துவரலாம்.

மாந்தப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

† சுத்திமுறை 6-ம் பாகம் காண்க.

* 60-ம் பக்கம் காண்க.

**பித்தமாந்தம்:—**

சுரங் காயும்; ஒரு சமயம் வியர்க்கும்; குரல் கம்மி யழுகும்; வயிற்றோட்டமும், மயக்கமுங் காணும்.

சிகிச்சை

மாந்தப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

**புளிமாந்தம்:—**

குடல் புண்பட்டு வயிறு பொருமும்; வயிற்றிரைச்சலும், மலச்சிக்கலும், இதர மாந்தக்குறிகளும் தோன்றும்.

சிகிச்சை

மாந்தப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

**பேதியக்கரமாந்தம்:—**

அஸ்தியில் சூடு அதிகம் கண்டு கதகதப்பாயிருக்கும்; சுவாசம் அனல்வீசும்; உதடு, வாயின் உள்பாகம், தொண்டை முதலியவைகள் வெந்து புண்ணாகவிருக்கும்; குழந்தை வாயைத் திறக்கமுடியாமல் மூடிக்கொண்டேயிருக்கும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மணத்தக்காளியிலைச்சாறு | அவுன்ஸ் | 6 | மருக்காரைவேர் | ரூபாயெடை | 3 |
| சோற்றுக்கற்றாழைச்சாறு | ,, | 6 | நிலப்பூலாவேர் | ,, | 3 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 6 | துத்திவேர் | ,, | 3 |
| வெங்காயச்சாறு | ,, | 6 | வெந்தயம் | ,, | 3 |

வேர் மூன்றையும் வெந்தயத்தையும் இளவறுப்பாய் வறுத்துப் பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து, அரை தேக்கரண்டி யளவாகக் கொடுத்தும், உதடு வாய் இவைகளிலும் தடவிவரலாம்.

மாந்தப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

**பேய் மாந்தம்:—**

விட்டு விட்டு சுரம் காயும்; கைகால் குளிர்ந்திருக்கும்; குழந்தை பயந்ததைப் போல் மிரண்டு விழிக்கும்; குழந்தை வீறிட்டழும்; மயங்கிவிழும்.

சிகிச்சை

மாந்தப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

**போர் மாந்தம்:—**

சுரம் இலேசாகவிருக்கும்; வயிறு பொருமிப் பொருமிக் கழியும்; மலம் புளிப்புநாற்றமடிக்கும்; அரையின் கீழ்பாகங்கள் குளிர்ந்திருக்கும்; நா

வரட்சியும், வாந்தியும், இருமலும் உண்டாகும். தலை சுழன்றுச்சுழன்று விழும்; நெஞ்சுப் படபடப்பாயிருக்கும்; நெற்றியில் நடு நரம்பு வீங்கித் தெரியும்; கண் குழி விழுந்திருக்கும்; வாய் உலர்ந்திருக்கும்; மூச்சுத்திணறல் ஏற்படும்; கைகால் சோர்ந்து விழும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) ஆமையோடு | ரூபாயெடை | $\frac{1}{4}$ | நுணா (மஞ்சநெத்தி) யீர்க்கு | | ஒருபிடி |
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ | வேலிப்பருத்திக்காம்பு | | ,, |
| வசம்பு | ,, | $\frac{1}{4}$ | முதியார்கூந்தல் | | ,, |
| வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{1}{4}$ | | | |

பொடிக்கவேண்டியவற்றைப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) ஓமம் ரூபாயெடை $\frac{1}{4}$

இதை இளவறுப்பாய் வறுத்து உமிநீக்கி முலைப்பால்விட்டு மைபோலரைத்துக் கலக்கிக் கொடுத்துவரலாம்.

(3) வேலிப்பருத்தியிலை ஒருபிடி தும்பையிலை ஒருபிடி
வெற்றிலை பொடியாய் வெட்டியது ,,

இதை உப்பை வெடிக்க வறுத்துக் கொட்டிய சூடுள்ள வெறும் சட்டியில் போட்டு வதக்கிச் சாறுபிழிந்து அந்தச் சாற்றில்:—

வசம்புக்கரி ரூபாயெடை $\frac{1}{8}$ ஆமையோடு ரூபாயெடை $\frac{1}{8}$

உத்தேசமாய் இழைத்து ஒரு அவுன்ஸ் சாறுவீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(4) கோழிக்கல்லீரலிலிருக்கும்கல் ரூபாயெடை $\frac{1}{4}$
சீரகம் ரூபாயெடை $\frac{1}{4}$ கிராம்பு ,, $\frac{1}{4}$

முலைப்பால்விட்டு மைபோலரைத்து இரண்டு சுண்டக்காயளவு இரண்டவுன்ஸ் முலைப்பாலில் கரைத்துக் காலை மாலை கொடுத்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (5) ஆமையோடு | ரூபாயெடை | $\frac{1}{2}$ | சத்திச்சாரணைவேர் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{1}{2}$ | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 6 |
| வசம்பு | ,, | $\frac{1}{2}$ | | | |

பொடித்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (6) வெற்றிலைக்காம்பு | ரூபாயெடை | 1 | ஆமையோடு | ரூபாயெடை | 1 |
| நுணாயீர்க்கு (மஞ்ச நெத்தி) | ,, | 1 | வசம்பு | ,, | 1 |
| | | | வெள்ளைப்பூண்டு | ,, | 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| வேலிப்பருத்திக்காம்பு | ,, 1 | கிராம்பு | ,, | 1 |
| பொடுதலை | ,, 1 | | | |

இவற்றை இளவறுப்பாக வறுத்து நசுக்கி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, 1½-அவுன்ஸ் வீதம் கொடுத்துவரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (7) வசம்பு | ரூபாயெடை ⅛ | சீரகம் | ரூபாயெடை | ⅛ |
| மயிலிறகுசுட்டசாம்பல் | ,, ,, | வேப்பம்பருப்பு | ,, | ,, |
| கிராம்பு | ,, ,, | பேய்பீர்க்குவேர் | ,, | ,, |

இவற்றை முலைப்பால் விட்டு மைபோலரைத்து, இரண்டு கழற்சிக்காயள வாக எடுத்து 2-அவுன்ஸ் முலைப்பாலில் கரைத்து வடிகட்டி காலை மாலை கொடுத்து வரலாம்.

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

## மலடிகள் மாந்தம்:—

சுரம் காயும்; மாந்தரோகப் பொதுக்குறிகளிருக்கும்: கைகளும் கால்களுமட்டும் மிகுதியும் உஷ்ணமாயிருக்கும்; திரேகம் வெளுத்துப்போகும்; வயிற் றோட்டமும் திகைப்புமுண்டாகும்; குழந்தை பால் குடிக்கும் எண்ணத் துடன் முலையில் வாயை வைக்கும்; ஆனல், பால் குடியாமல் வாயை எடுத்துவிடும்; துங்குவதைப்போலிருந்து திடுக்கிட்டு விழித்து அழும்.

### சிகிச்சை

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

## முக்கு மாந்தம்:—

இதர மாந்தக் குறிகளுடன் குழந்தை முக்கி முணவியழும்; நாவு வரண்டிருக் கும்; மலமும் சீதமுமாகக் கழியும்; புறங்கால் வீங்கியிருக்கும்.

### சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| ஓமம் | ரூபாயெடை ¼ | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | ¼ |
| மிளகு | ,, ¼ | ஆமையோடு | ,, | ¼ |
| திப்பிலி | ,, ¼ | | | |

இவைகளை இளவறுப்பாக வறுத்து, ஒரு வெள்ளைத்துணியில் முடிந்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சி, அந்தக் கஷாயத்திலேயே முடிந்துபோட்டிருக்கும் மருந்துகளையும் மைபோலரைத்துக் கலக்கி வடிகட்டி, 1, 1½-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம். (பத்தியம்.)

**வாத மாந்தம்:—**

காச்சலிருக்கும்; கைகால் குளிர்ந்திருக்கும்; முகத்தில் மட்டும் வியர்க்கும்; வயிற்றுப் பொருமலும் ஏப்பமும் உண்டாகும்; நாசித்துவாரங்கள் புண்பட்டிருக்கும்; ஓயாமல் நாசியிலிருந்து நீர் வடியும்; உடம்பு பலவிதமாய் வலி எடுக்கும்.

சிகிச்சை

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

**வாள் மாந்தம்:—**

மாந்தரோகக் குறிகளுடனும் உடல் வெளுத்து மெலிந்திருக்கும்; உடலில் வாயு வோடி இரையும்; உடலில் குத்துவலிக் கண்டு வலிப்புக் காணும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆடுதீண்டாப்பாலையிலைச்சாறு | அவுன்ஸ் | 6 | அவுரியிலைச்சாறு | அவுன்ஸ் | 6 |
| தைவேளையிலைச்சாறு | ,, | 6 | பசுநெய் | ,, | 12 |
| மணத்தக்காளியிலைச்சாறு | ,, | 6 | கருஞ்சீரகம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| கழற்சியிலைச்சாறு | ,, | 6 | கடுகுரோகணி | ,, | $\frac{1}{4}$ |
| கரிசலாங்கண்ணிச்சாறு | ,, | 6 | கஸ்தூரிமஞ்சள் | ,, | $\frac{1}{4}$ |
| துளசிச்சாறு | ,, | 6 | கோஷ்டம் | ,, | $\frac{1}{4}$ |

இதில், பொடிக்கவேண்டியவற்றைப் பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து, ஒரு தேக்காண்டி வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

**விஷ மாந்தம்:—**

காச்சல் நின்று நின்று வரும்; அரைக்குக்கீழ் குளிர்ந்திருக்கும்; தலைவலி, வயிற்றுப்பொருமல், வாந்தி, நாவரட்சி உண்டாகும்; தலை நேரே நிற்காமல் சாய்ந்துச் சாய்ந்து விழும்; நாசி வழியாக நீர் வடிந்துகொண்டேயிருக்கும்; உடல் சோர்ந்துப்போகும்; ஒவ்வொரு சமயம் வயிறு சப்தத்துடன் இரைந்து மலம் கழியும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | ஓமம் | ரூபாயெடை $\frac{1}{2}$ | வெற்றிலை (அரிந்தது) | ஒருபிடி |
| | வசம்பு | ,, $\frac{1}{4}$ | நுணா (மஞ்சநெத்தி)யிலை | ,, |
| | வெள்ளைப்பூண்டு | ,, $\frac{1}{4}$ | நொச்சியிலை | ,, |
| | தைவேளைவேர் | ,, 1 | | |

நசுக்கி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) நுணாவேர் | ரூபாயெடை | ½ | பொடுதலை | ரூபாயெடை | ½ |
| நொச்சிவேர் | ,, | ½ | வசம்பு | ,, | ½ |
| தைவேளைவேர் | ,, | ½ | வெள்ளைப்பூண்டு | ,, | ½ |
| ஓமம் | ,, | ½ | | | |

இவைகளைப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் 1, 1½-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

மாந்தப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

**வீக்க மாந்தம்:—**

இதர மாந்தக் குறிகளுடன் கண்ணும் காதும் வீங்கி வற்றும்; உதடு நாவு வாய் இவைகள் புண்பட்டிருக்கும், கைகாலயர்ந்துவிடும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பூவரசம்பழுப்பு | ரூபாயெடை | ½ | தூதுவேளையிலை | ரூபாயெடை | ½ |
| சங்கன்வேர்பட்டை | ,, | ½ | சிறுகுறிஞ்சாக்கொழுந்து | ,, | ½ |
| சீந்தில்தண்டு | ,, | ½ | சததிச்சாரணைவேர் | ,, | ½ |
| துளசி | ,, | ½ | சுக்கு | ,, | ½ |
| முள்ளிவேர் | ,, | ½ | ஓமம் | ,, | ½ |
| முருங்கையீர்க்கு | ,, | ½ | சதகுப்பை | ,, | ½ |
| நீர்முள்ளிவேர் | ,, | ½ | சீரகம் | ,, | ½ |
| தைவேளைவேர் | ,, | ½ | | | |

பொடித்து 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, 1½-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம். (பத்தியம்.)

மாந்தப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

**மாந்தத்தில் மலம் கட்டியிருந்தால்:—**

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| முடக்கொத்தான்யிலை | ஒருபிடி | மூக்கிரசாரணைவேர் | (வேர்) 5, 6 |
| மூக்கிரசாரணையிலை | ,, | குப்பைமேனியிலை | ஒருபிடி |

நசுக்கி 8-அவுன்ஸ் சிற்றாமணக்கெண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

**மாந்தப் பொது மருந்துகள்:—**

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) கோரோசனை | ரூபாயெடை | ½ | சுக்கு | ரூபாயெடை | ½ |
| கோஷ்டம் | ,, | ½ | மாசிக்காய் | ,, | ½ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | ,, | $\frac{1}{2}$ | வெந்தயம் | ,, | $\frac{1}{2}$ |
| சீரகம் | ,, | $\frac{1}{2}$ | வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{1}{2}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{2}$ | கஸ்தூரிமஞ்சள் | ,, | $\frac{1}{2}$ |
| தேவதாரு | ,, | $\frac{1}{2}$ | வசம்பு | ,, | $\frac{1}{2}$ |
| சந்தனம் | ,, | $\frac{1}{2}$ | கடுகுரோகிணி | ,, | $\frac{1}{2}$ |
| ஏலம் | ,, | $\frac{1}{2}$ | பச்சைமூங்கில்மேல்பட்டை | ,, | $\frac{1}{2}$ |

இவற்றை வறுத்துத் தூள்செய்து சங்கனிலைச்சாற்றால் அரைத்து, 48-அவுன்ஸ் சிற்றாமணக்கெண்ணெயில் கலக்கிக் காய்ச்சி வடிக்கட்டி $\frac{1}{2}$, 1-தேக்கரண்டியளவாகக் கொடுத்துவரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) மணித்தக்காளியிலைச்சாறு | அவுன்ஸ் | 24 | நெல்லிவற்றல் | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| துளசிச்சாறு | ,, | 24 | சுக்கு | ,, | $\frac{3}{4}$ |
| பிரமதண்டுச்சாறு | ,, | 24 | திப்பிலி | ,, | $\frac{3}{4}$ |
| வில்வயிலைச்சாறு | ,, | 24 | மிளகு | ,, | $\frac{3}{4}$ |
| வல்லாரைச்சாறு | ,, | 24 | ஆமையோடு | ,, | $\frac{3}{4}$ |
| கையாந்தகரைச்சாறு | ,, | 24 | சிற்றாத்தை | ,, | $\frac{3}{4}$ |
| பொடுதலைச்சாறு | ,, | 24 | ஓமம் | ,, | $\frac{3}{4}$ |
| நுணாயிலைசாறு (மஞ்சநெத்தி) | ,, | 24 | வசம்பு | ,, | $\frac{3}{4}$ |
| புங்கனிலைச்சாறு | ,, | 24 | கஸ்தூரிமஞ்சள் | ,, | $\frac{3}{4}$ |
| சங்கனிலைச்சாறு | ,, | 24 | தான்றிக்காய் | ,, | $\frac{3}{4}$ |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 24 | சாதிக்காய் | ,, | $\frac{1}{8}$ |
| கடுக்காய் | ரூபாயெடை | $\frac{3}{4}$ | | | |

பொடிக்கவேண்டியவற்றைப் பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாய்க் கொடுத்துவரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) முருங்கப்பட்டைச்சாறு | அவுன்ஸ் | 96 | வசம்புச்சுட்டசாம்பல் | ரூபாயெடை | 2 |
| | | | வெள்ளைப்பூண்டு | ,, | 1 |
| நல்லெண்ணெய் | ,, | 48 | | | |

வசம்புச்சாம்பிலையும், வெள்ளைப்பூண்டையும் பசும்பால்விட்டு மைபோலரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (4) வல்லாரை | ரூபாயெடை | 1 | குட்டிவிளாயிலை | ரூபாயெடை | 1 |
| சீந்தில்தண்டு | ,, | 1 | வசம்பு | ,, | 1 |
| கஞ்சாங்கோரை | ,, | 1 | வெள்ளைப்பூண்டு | ,, | 1 |
| துளசி | ,, | 1 | கடுகுரோகிணி | ,, | 1 |
| பிரமதண்டு | ,, | 1 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 32 |
| பழம்பாசி | ,, | 1 | | | |

இவற்றைப் பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

(5) பாலசஞ்சீவி மாத்திரை; கோரோசனை மாத்திரை; கஸ்தூரிமாத்திரை: பாலவிநோத சஞ்சீவி மாத்திரை; மகாரச பஸ்பம்; சுவர்ண வெள்ளி பஸ்பம்; வீரசூதசிந்தாமணி; மாந்த மாத்திரை; தக்காளிக் கோரோசனை மாத்திரை இவற்றைக் கொடுத்துவரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (6) | சோடா டார்டரேட்டா (Soda Tartarata) | கிரைன்ஸ் | 10 |
| | டிஞ்சர் ரீயை கோ (Tincture Rhei Co) | துளி | 15 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்று தடவை; தடவை ஒன்றுக்கு ஒரு தேக்கரண்டிவீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (7) | பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக் (Pulvis Creata Aromatic) | கிரைன்ஸ் | 18 |
| | சோடியம் கார்போனஸ் (Sodium Carbonas) | ,, | 6 |
| | அக்கேஷியா கம்மி (Gummi Acacia) | ,, | 12 |

ஒன்றுசேர்த்துக் கலந்து, 6-பாகமாகப் பிரித்து மடித்துவைத்துக்கொண்டு, 3-மணிநேரத்திற்கொரு தடவை, ஒரு பாகம் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (8) | டிஞ்சர் ஜிஞ்ஜிபரிஸ் (Tincture Zingiberis) | துளி | 30 |
| | டிஞ்சர் அஸபோட்டிடா (Tincture Asafoetidae) | ,, | 20 |
| | ஸ்பிரிட் அமோனியா அரோமாட்டிக் (Spirit Ammonia Aromatic) | ,, | 20 |
| | ஸ்பிரிட் குளோரோபாரம் (Spirit Chloroform) | ,, | 10 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கலந்துகொண்டு, 3-மணிநேரத்திற்கொரு தடவை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (9) | பல்விஸ் ரீயைக் கோ (Pulvis Rhei Co) | கிரைன்ஸ் | 9 |
| | பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக் கோ (Pulvis Creata Aromatic Co) | ,, | 9 |

ஒன்று சேர்த்துக் கலந்து 3-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, நாள் ஒன்றுக்கு மூன்று தடவை, தடவை ஒன்றுக்கு ஒரு பாகம் வீதம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (10) | ஸ்பிரிட் வைனி காலிஸி (Spirit Vini Gallici) | துளி | 10 |
| | தண்ணீர் | டிராம் | 1 |

ஒன்றுசேர்த்துக் கலந்துகொண்டு, இந்த விதமாக இரண்டுமணிநேரத்திற் கொருதடவை கலந்துக் கொடுத்து வரலாம்.

மாந்தத்தில் வாய்ப்புண்ணுண்டாயிருந்தால்:—

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | கிளிசிரைன் (Glycerine) | அவுன்ஸ் | 1 |
| | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | கிரைன்ஸ் | 6 |

ஒன்றுசேர்த்தரைத்து, வெளிப்பிரயோகமாக வாய் புண்ணில் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | மோஸ்சஸ் (Moschus) | கிரைன்ஸ் | $\frac{1}{2}$ |
| | அக்கேஷியா கம்மி (Acacia Gummi) | ,, | 2 |
| | சிரப் ரோஸி காலிக் (Syrup Rosae Gallic) | துளி | 8 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்றுசேர்த்துக் கலக்கி 2-மணி நேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்துவரலாம்.

## இழுப்பு

## CONVULSIONS

இழுப்பு என்பதை சிலர், ஈர்ப்பு, இசிவு, வலி, வலிப்பு என்றும் சொல்லுவர். இழுப்பு கை கால்களைக் கோணி இழுத்தும்; கண்விழிகளை மேலாகச் சொருகச்செய்தும், பற்களைக் கடிக்கச்செய்தும், தலையைக் கோணலாக இழுத்தும், உபத்திரவப்படுத்தும் ஒரு பயங்கர செய்கையோடு கூடிய வியாதியாகும். இழுப்பினில் ஆபத்திற் கிடமில்லையென்றாலும், சிலசமயம் இழுப்பு நீடித்திருக்குமானால், அபாயகரத்தை யுண்டுபண்ணுமோ வென்றஞ்ச வேண்டியதாகிவிடும். இழுப்பானது இருபது நிமிஷங்களுக் கதிகமாகவிருந்து தொந்திரவு செய்வதில்லை.

இழுப்பு சுகதேகியான குழந்தைகளுக்கு உண்டாவதில்லை. மூளை சரியானபடி, வலு வடையாதிருப்பதினாலும், பிரதான இரத்தநாளங்களின் சக்திக் குறைந்திருப்பதினாலும், குழந்தைப் பருவத்தில் இழுப்பு ரோகங்கள் அதிகம் சம்பவிக்க ஹேதுவாயிருக்கின்றன.

இழுப்பு உண்டாவதற்குப் பல காரணங்கள் இருக்கவேண்டும். இழுப்பு ஒரு தனிப்பட்ட வியாதியல்ல. சில குழந்தைகளுக்கு முதற் பல் முளைக்கும் போது இழுப்புக் காணும். பல்லீரு உறுதியாக இருப்பதினால், பல் வெளிப்படும் பொருட்டு மேல் நோக்கி, அந்த ஈரை தூக்குவதினால், வலிப் பொறுக்க முடியாமல் இந்த இழுப்பு உண்டாகிறது.

சில குழந்தைகளுக்கு ஆகாரத்தின் காரணமாக உண்டாகலாம். இது அடிக்கடி சாதாரணமாக உண்டாகக்கூடியது. ஆகாரத்தை அளவுக்கதிகமாகக் கொடுத்துவிடுவதும், குழந்தை ஜீரணக் கருவிகளுக்குத் தக்க மெல்லிய ஆகாரம் கொடுக்கப்படாததினாலும், ஜீரணக் குடலில் ஆகாரம் தங்கி புளிப்பேறி இந்த இழுப்பை உண்டுபண்ணிவிடுகிறது.

மேலும், இழுப்புண்டாவதற்கு, வயிற்றுக் கிருமிகளின் காரணமாகவும், பயத்தின் காரணமாகவும் கீழேவிழுவது, எதிர்பாராமல் அடிப்படுவதின் காரணமாகவும், மூளை பலயீனம், அம்மைக்காச்சல், இருதய பலயீனம், மாந்த வியாதி, கணைவியாதி, அஸ்தி நயணரோகம் முதலிய யேதாவதொன்றின் காரணமாகவுமிருக்கலாம். குழந்தைகளுக்கு கக்குவான் (கக்கிருமல்) வியாதியிருந்தாலும், அந்தச் சமயம் இழுப்பு யேற்படும்.

இழுப்புக்குச் சிகிச்சை செய்யுமுன் அதன் காரணத்தைச் சம்பூரணமாயறிந்திருக்கவேண்டும்.

## அடிபட்டதினால் இசிவு—Convulsions caused by Blow or Fall

குழந்தைகள் விளையாட்டு சமயங்களில் கால் வழுக்கி விழுவதினாலாவது, எதிர்பாராத சமயம் அடிகள் விழுவதினாலாவது, இசிவு யேற்படலாம். இது ஆபத்தானதல்லவென்றாலும், பயங்கரமாகவே யிருக்கும். கைகள் அதிகமாய் இழுக்கும்; கண் சொருகும்.

### உபசிகிச்சை

உடைகளைத் தளர்த்தி முகத்தில் குளிர்ந்த தண்ணீரால் தெளிக்கவும்; காற்றோட்டமான இடத்தில் படுக்க வைக்கவேண்டும்; 90-டிகிரிக்குமேல் தாங்கக்கூடிய உஷ்ண தண்ணீரில் கழுத்துவரையில் நனைத்தெடுக்கவும். இப்படி 10-நிமிஷம் உஷ்ணஜலத்தில் நிறுத்திவைக்கலாம் உடனே நன்றாக துடைத்து கம்பளியால் போர்த்திவிடவும். உஷ்ணகாரிகளான தேயிலை, காப்பிப்பானங்கள் சிறு அளவாகச் சுடச்சுட கொடுக்கலாம். மலச்சிக்கல் இருந்தால் உடனே ஆசனவழியாய் நீரேற்றம் செய்து (Enema) மலத்தை வெளியாக்கவும்.

## அம்மைக்காச்சலில்வரும் இசிவு—Convulsions in Eruptive Fevers

அதிகமான காச்சலில் கை கால் இசிவு கண்டால், அம்மை வருவதற்குமுன் வரும் காச்சல் என்று சந்தேகிக்கலாம். அவ்விதமான சந்தர்ப்பங்களில், பொட்டாஷியம் புரோமைட் (Pot. Bromide) கொடுப்பதினால் வலிப்பு தடைபடலாமென்றாலும், அம்மைக் கொப்புளங்களை அதிகமாகப்போடச் செய்யும். ஆதலால், இவ்விதமான சந்தேகமான இடங்களில் வெந்நீரால் முகத்தைக் கழுவி, தலையில் வெந்நீரை ரப்பர்பையில் (Hot-Water Bottle) அடைத்து திரேகத்தில் ஒற்றிடம் கொடுக்கலாம். இலகு விரே

சன காரிகள் கொடுக்கலாம். ஆசனவழியாக எனிமா (Enema) கொடுத்து மலத்தை வெளியாக்கலாம்.

## அஜீரணத்தால் உண்டாகும் இசிவு—Convulsions in Indigestion

கடுமையான ஆகாரங்களைப் புசித்ததினால் ஆகாரம் ஜீரணிக்காமல் புளிப்பேறி னாலும், இழுப்பு உண்டாகலாம். இதில் உடல் சற்றே சூடாயிருக்கும்; ஆனால், காச்சலாகத் தோன்றாது. இதற்கு இலகு விரேசனகாரிகளைக் கொடுக்கலாம். எனிமாவினால் (Enema) ஆசனத்து வழியே நீரேற்றம் செய்து மலத்தை வெளியாக்கலாம்.

### சிகிச்சை

(1) ஓமம் ரூபாயெடை ½ வசம்பு ரூபாயெடை ½

இவற்றை இளம் வறுப்பாய் வறுத்துப் பொடித்து, வேலிப்பருத்திச் சாறு விட்டு மைபோலரைத்துக் கலக்கி ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

கோரோசனை மாத்திரைக் கொடுக்கலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (2) காலோமல் (Calomel) | கிரைன்ஸ் | 1½ |
| சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 3 |

ஒன்று சேர்த்துக் கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரேதாமாகத் தேனில் குழைத்துக் கொடுக்கலாம்.

| | | |
|---|---|---|
| (3) பல்விஸ் ரீயைக்கோ (Pulvis Rhei Co) | கிரைன்ஸ் | 5 |
| சுடுதண்ணீர் | அவுன்ஸ் | ½ |

ஒன்று சேர்த்துக் கலந்து 1-முதல் 3-வயது குழந்தைகளுக்குக் கொடுக்கலாம்.

குறிப்பு:—இந்த மருந்தைக் கொடுத்த 4-மணிநேரத்திற்குள் மலம் வெளியாகி இழுப்பும் நிற்கவில்லையானால் மறுபடியும் இதே அளவில் கொடுக்கலாம்.

| | | |
|---|---|---|
| (4) டிஞ்சர் ஜிஞ்ஜிபரிஸ் (Tincture Zingiberis) | துளி | 30 |
| டிஞ்சர் அஸபோட்டிடா (Tincture Asafoetidae) | ,, | 20 |
| ஸ்பிரிட் அமோனியா அரோமாட்டிக் (Spirit Ammonia Aromatic) | ,, | 20 |
| ஸ்பிரிட் குளோரோபாரம் (Spirit Chloroform) | ,, | 10 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கலக்கி, 3-மணிநேரத்திற் கொருதரம் 1-முதல் 3-வயது குழந்தைகளுக்கு இரண்டு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

## அஸ்தி நயனரோகத்தால் வரும் இசிவு—Convulsions in Rickets

குழந்தைகள் நடக்க ஆரம்பிக்கும் காலங்களில் உண்டாகும். சுரம் காயும்; கைகால்கள் வலித்திழுக்கும். இந்த ரோகத்தின் பூர்வத்தை அஸ்தி நயனரோகம் என்ற தலைப்பின்கீழ் தெரிந்துகொள்ளலாம். அதற்கான சிகிச்சையும் விவரமாக எழுதப்பட்டிருக்கிறது. ஆசனவழியாய் (Enema) எனிமா கொடுத்து மலத்தை வெளியாக்கவேண்டும்.

## இருதய பலயீனத்தால் உண்டாகும் இசிவு—Convulsions Caused by Heart Weakness

இது சற்று பெரிய குழந்தைகளுக்கே சம்பவிக்கும். சரீர புஷ்டியில்லாமல் இருக்கும் குழந்தைகள் இதில் சற்றே வாதனைபடலாம் இரத்த ஓட்டம் அதிகமாக ஓட ஆரம்பிக்கும்பொழுதும், இரத்த ஓட்டம் தடைப்படுத்தப் பட்டபோதும் இவ்வலிப்பு யேற்படலாம்; ஆதலால், இன்னகாரணம் என்பதை நன்ருய் தெரிந்துகொள்ளவேண்டும். சப்தவேணுவை வைத்து (Stethoscope) தெரிந்துகொள்ளலாம். இருதய பலயீனத்தால் ஏற் பட்ட வலிப்பாயிருந்தால், குழந்தைத் தாங்கும்படியான வெந்நீரில் அதன் முழங்கால்வரை நனையும்படியாக அதில் 10-நிமிஷம் நிற்கவைத்து, முகத்தை குளிர்ந்த நீரால் கழுவவும். பின்னர் தண்ணீரை நன்ருய் துவட்டிவிட்டு கம்பளியால் போர்த்திக் காற்றுள்ளவிடத்தில் படுக்கச் செய்யவும். மயக்கம் யேற்பட்டிருந்தாலும், வாய்வழியாக ஆகாரம் உட் கொள்ள முடியாவிட்டாலும், தண்ணீர்விட்டுக் காய்ச்சியபாலுடன் கால் பங்கு ஆரஞ்சிப்பழ ரசம் சேர்த்து ஆசனத்தின் வழியாக உட்செலுத்த வேண்டும். இருதய பலந்தரும் மருந்துகள் கொடுக்கவேண்டும்.

### சிகிச்சை

| | | |
|---|---|---|
| ஸ்பிரிட் அமோனியா அரோமாட்டிக் (Spirit Ammonia Aromatic) | துளி | 10 |
| ஸ்பிரிட் ஈதர் (Spirit Aether) | ,, | 8 |
| ஸ்பிரிட் குளோரோபாரம் (Spirit Chloroform) | ,, | 8 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துக் கலந்துகொண்டு 3-முதல் 10-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற் கொருதரம் 2-தேக்கரண்டியளவு வீதம் கொடுத்துவரலாம்.

## கணைரோகத்தில் உண்டாகும் வலிப்பு—Convulsions in Croup

கணைரோகத்தினல் குழந்தைகளுக்கு வலிப்பு காணுவதுண்டு. அதனை விவர மாகக் கணைரோகத் தலைப்பின்கீழ் சொல்லப்பட்டிருக்கிறது.

## காக்கை வலிப்பு---Epilepsy

காக்கை வலி இளமையிலேயே ஆரம்பித்து, வயோதிகம்வரை நீடிக்கக்கூடியது. நோயாளியை அடிபட்டதைப்போன்று கீழே தள்ளிவிடும். இவ்வலி சில நிமிஷநேரம்தான் இருக்கும் சிலருக்கு வலிவந்த இரண்டொரு தினத்திலும், சிலருக்கு ஒருவாரத்திற்கு பின்னும், சிலருக்கு ஒருமாதத்திற்கு பின்னும் வருவதுண்டு. நோயாளி சுய அறிவின்றி கீழே கிடப்பான். சற்றுச் சென்று கோணல் கோணலாக இழுக்கும்; கழுத்தை சாய்த்து இழுக்கும்; நெடுமூச்சிகள் வரும்; வாயினின்றும் மூக்கினின்றும் வெள்ளை நுரை வரும்; பல்கடி அதிகமாயிருக்கும். சில சமயங்களில் அழுகை உண்டாகும்; ஒரு பக்கத்தைவிட மறுபக்கம் வலிப்புகள் அதிகமாயிருக்கும். கண் நிலை குத்திக்கொண்டிருக்கும்; அல்லது சுற்றி விழிக்கும். சிலசமயம் மலசலம் தன்னை யறியாமலே வெளிப்பட்டுவிடும்; சுவாசம் திணறும்; முகம் வெளுறுகத் தோன்றும்; நெற்றி நடுநரம்புப் புடைத்துத் தெரியும்; இருதய நடையானது ஒழுங்கீனமாகவும், அதி துல்லியமாகத் தெரியாமலுமிருக்கும். மூன்று நிமிஷங்களுக்கு அதிகப்படியாக இந்த வலிப்பு இருப்பதில்லை. வலிப்பு விட்டவுடன் தூக்கத்திலிருந்தெழுந்ததைப்போன்றிருக்கும்.

காக்கைவலி திடீரென்று வந்துவிடும். வலி வருமென்று ஒரு அறிகுறியும் கண்டுகொள்ள முடியாது; ஆனாலும், அதிகமாய்க் கவனித்தவர்களுக்கு வலிப்பு வரும் அறிகுறி தெரியாமல் போகாது. வலிப்பு வரும் முன் சிலருக்குத் தலைவலி இருக்கலாம்; பார்வை மங்கி தெரியலாம்; தும்மல் வரலாம்; வாய் வழவழப்பாகத் தெரியலாம்; காதில் ஓர் இரைச்சல் கேட்கப்படலாம்.

மண்டை ஓட்டில் உண்டான காயங்களினாலாவது, மூளையில் நீர் சேர்ந்து விடுவதினாலாவது, மூளை வீக்கம் காணுவதினாலாவது காக்கைவலி ஏற்படலாம். முக்கியமாய் மூளை பலவீனத்தாலும், நரம்பு வலுவின்மையாலுமே இந்த வலிப்பு ஏற்படும்.

வலி வந்திருக்கும் சமயம் நாக்கைக் கடித்துத் துண்டித்து விடாதபடி பற்களுக்கிடையில் கனத்த அட்டைத்துண்டுகளையாவது, கார்க்கையாவது வைத்துக்கொண்டிருக்கவேண்டும். வலிப்பிருக்கும் சமயம் கைகால்களை உதராமல் இருக்கும்படியாக பிடிக்கவே கூடாது. நோயாளியை கம்பளியில் படுக்கவைக்கவேண்டும். காற்று நன்றாக வீசும்படியாக கவனித்துக் கொள்ளவேண்டும். படுக்கையில் தலை சற்று உயர்ந்திருக்கவேண்டும். ஆடைகளைக் களைந்துவிடவேண்டும். வலிப்பு இருக்கும் சமயம் முகத்தில் தண்ணீர் அடிப்பதினால் பூரண நன்மை கிடைப்பதில்லை என்றாலும் மூர்ச்சை தெளிய வழி உண்டாகலாம்.

வலிப்பு வரும் காலங்களை இரண்டொரு முறையால் நிதானித்துக்கொண்டு வலிப்பு வரும் சில தினங்களுக்கு முன்னிருந்தே மருந்துகள் கொடுத்து வந்தால் வலி வந்தாலும் வலுசெய்யாது. காக்கைவலிக்கு மருந்து நீடித்து சாப்பிடவேண்டும்.

### வலிப்பு வந்திருக்கும் சமயத்தில் சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செம்மறியாட்டுக்கொம்பு | | | வசம்பு | ரூபாயெடை | ¼ |
| | ரூபாயெடை | ¼ | சுக்கு | ,, | ¼ |
| குதிரைக்குளம்பு | ,, | ¼ | கடுகு | ,, | ¼ |
| மயிலிறகு | ,, | ¼ | பேயத்திவேர் | ,, | ¼ |
| மிளகு | ,, | ¼ | அழிஞ்சில்வேர் | ,, | ¼ |

ஒன்றுசேர்த்துத் தூள்செய்து, கம்பளியில் சுற்றி திரிபோலாக்கி, வேப்பெண்ணெயில் நனைத்துக் கொளுத்தி புகையைச் சுவாசிக்கச் செய்யலாம்.

### காக்கை வலிப்புக்குச் சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | கொடிவேலிவேர் மேல்பட்டை | ரூபாயெடை | ¼ |
| | சங்கன்வேர் மேல்பட்டை | ,, | ¼ |
| | எருக்கன்வேர் மேல்பட்டை | ,, | ¼ |
| | குங்குமப்பூ | ,, | ¼ |

இவற்றை மைபோ லரைத்து, சுடுதண்ணீரில் கலக்கி கொடுத்துவரலாம்.

புங்காங்கொட்டை எண்ணெய்க் கொடுக்கலாம். செய்முறை 6-ம் பாகம் காண்க.

| | | | |
|---|---|---|---|
| (2) | பொட்டாஷியம் புரோமைட் (Pot. Bromide) | கிரைன்ஸ் | 15 |
| | பொட்டாஷியம் ஐயோடைட் (Pot. Iodide) | ,, | 10 |
| | அமோனியம் புரோமைட் (Ammoniam Bromide) | ,, | 10 |
| | பொட்டாஷியம் கார்போனேட் (Pot. Carbonate) | ,, | 5 |
| | டிஞ்சர் கலம்பா (Tincture Calumbae) | அவுன்ஸ் | ½ |
| | தண்ணீர் | ,, | 6 |

ஒன்றுசேர்த்து நாள் ஒன்றுக்கு 3-தடவை, தடவை ஒன்றுக்கு ஒரு தேக்கரண்டிவீதம் ஆகாரத்திற்கு முன்னும்; படுக்கைக்குப் போகுமுன் 3-தேக்கரண்டி வீதமும் ஒன்று முதல் 3-வயதுக் குழந்தைக்குக் கொடுத்து வரலாம். வயது வந்த குழந்தைகளுக்கானல் தேக்கரண்டியின் அளவை யதிகப்படுத்திக் கொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | பொட்டாஷியம் புரோமைட் (Pot. Bromide) | கிரைன்ஸ் | 5 |
| | சோடியம் புரோமைட் (Soduim Bromide) | ,, | 5 |
| | லிக்கர் ஆர்சனிக்காலிஸ் (Liquor Arsenicalis) | துளி | 2 |

| | | |
|---|---|---|
| சிரப் ஆரண்டி (Syrup Aurantii) | ,, | 20 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்துக் கலந்துக்கொண்டு 5-முதல் 12-வயது குழந்தைகளுக்கு, நாள்ஒன்றுக்கு 3-தடவை, தடவை ஒன்றுக்கு ஒரு அவுன்ஸ் வீதம் நீடித்துக் கொடுத்துவரலாம்.

## கிருமிகளால் ஏற்படும் வலிப்புகள்—Convulsions caused by Worms

மனிதர் குடல்களில் அநேக விஷக்கிருமிகள் சஞ்சாரம் செய்கின்றன. அதிலும் சிறுவர்களிடத்திலேயே அதிகம் வாசஞ்செய்யும். அவைகளில் முக்கியமானவை, கீரைப்பூச்சி, நாக்குப்பூச்சியாகும். இவை தவிர அநேகம் பூச்சிகளும் உண்டு. இவைகளின் அதிகரிப்பினாலும், இவைகள் விஷத்தைக் குடலில் கழிப்பதினாலும் வலிப்புகள் ஏற்படும். அவைகளுக்குத் தக்க ஔஷதம், கிருமிகள் என்ற தலைப்பின்கீழ் சொல்லப்பட்டிருக்கிறது.

## குதிரை வலிப்பு—Falling Sickness

இது காக்கை வலிப்பைப்போன்றதே; ஆனால், அதிகமான வித்தியாசம் கண்டுகொள்வது கடினம். கால் கை இழுப்பெல்லாம் காக்கை வலியை ஒத்தே இருக்குமென்றாலும், காலை வெட்டி வெட்டி உதைக்கும். குதிரையைப்போல் வலிப்பதினால்தான் "குதிரைவலி" எனப்பட்டது. இதற்கும் காக்கைவலியின் சிகிச்சைகள்தான் செய்யவேண்டும்.

## குமரகண்டன் வலிப்பு—Chorea-St., Guy's Dance

இது சிறு பிள்ளைகளுக்குமட்டும்தான் வரும். எல்லாவிதத்திலும் காக்கை வலிப்பை ஒத்திருந்தாலும் வாயில் நுரை தள்ளாது. கை இழுக்க ஆரம்பித்து, படிப்படியாகத் தோளையும், தலையையும் கோணி வலிக்க ஆரம்பிக்கும்; கழுத்தை முறுக்கி முறுக்கி வலிப்பெடுக்கும்; சிலசமயம் படுக்கையிலும் படுக்க முடியாதபடி படபடப்பாக வலித்து, படுக்கையிலிருந்து தள்ளிவிடும்; உடலின் ஒருபாகத்தையாவது இருபாகங்களையாவது தாக்கலாம். சிலசமயம் இந்த வலிப்பு தூக்கத்திலேயே ஆரம்பித்துவிடும்.

இது குழந்தைகளுக்கேற்படும் ஓர்வித வாதமாகும். மூளையின் பிரதான நரம்பைப் பற்றிவரும் வியாதி. மூளைக்கு விகல்பம் ஏற்பட்டால்தான் இது வருகிறது.

இவ்வலி கண்டால் காற்றோட்டமுள்ள விடத்தில் குழந்தையைக் கிடத்த வேண்டும். நீடித்த நாளாகப் படுக்கையிலேயே கிடத்தவேண்டும். ஆகாரம் கிரமமாகவும் இலகுவில் ஜீரணிக்கக்கூடியதாகக் கொடுக்கவேண்டும்.

**சிகிச்சை**

(1) தும்பையிலை ஒருபிடி இஞ்சியிலை (அல்லது இஞ்சி) ஒருபிடி
துளசி ,,

இவற்றை அரைத்து ஒரு கொட்டைப்பாக்களவு எடுத்து, சிற்றாமணக்கிலையில் வைத்துச் சுருட்டி, இளவெதுப்பாக அனலில் வாட்டி, பிழிந்த சாற்றில் நாள் ஒன்றுக்கு ½, 1-தேக்கரண்டிவீதம் கொடுத்துவரலாம்.

(2) புங்காங்கொட்டை எண்ணெய்க் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் காண்க.

(3)

| | | |
|---|---|---|
| பெர்ரி எற் அமோனியம் சிட்ரஸ் (Ferri et Ammoniam Citras) | கிரைன்ஸ் | 6 |
| பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | ,, | 15 |
| சிரப் டோலு (Syrup Tolu) | துளி | 15 |
| தண்ணீர் | டிராம் | 6 |

ஒன்று சேர்த்துக் கலந்து 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு 3-தடவை, தடவை ஒன்றுக்கு இரண்டுத் தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

(4)

| | | |
|---|---|---|
| அண்டிமோனி டார்டரேட் (Antimony Tartarate) | கிரைன்ஸ் | 1 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 5 |

ஒன்றுசேர்த்துக் கலந்து 3-முதல், 6-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

(5)

| | | |
|---|---|---|
| லைக்கர் ஆர்ஸனிக்காலிஸ் (Liquor Arsenicalis) | துளி | 3 |
| பொட்டாஷியம் பைகார்போனேட் (Potassium Bicarbonate) | கிரைன்ஸ் | 3 |
| பொட்டாஷியம் ஐயோடைட் (Potassium Iodide) | ,, | 3 |
| ஆக்குவா காம்பர் (Aqua Camphore) | டிராம் | 4½ |

ஒன்றுசேர்த்துக் கலக்கிக்கொண்டு, 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை, தடவை 1-க்கு ஒன்றரைத் தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

(6)

| | | |
|---|---|---|
| அஸபோட்டிடா (Asafoetidae) | கிரைன்ஸ் | 20 |
| எக்ஸ்ட்ராக்ட் வெலிரியன் (ExtractValerian) | ,, | 20 |
| ஸிங் ஆக்சைட் (Zinc Oxide) | ,, | 10 |
| எக்ஸ்ட்ராக்ட் பெல்லடோனு (Extract Belladonnae) | ,, | 2 |

ஒன்று சேர்த்து, மிஸ்ரமித்து, 20-மாத்திரைகளாகப் பிரித்து உருட்டி, 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்குக் காலை மாலை ஒருமாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

**தோஷத்தினுல் உண்டாகும் வலிப்பு:—**

அஸ்தி நயனரோகத்தில் உண்டாகும் இழுப்பைப் பார்க்கவும்.

**பயத்தினுல் உண்டாகும் வலிப்பு—Convulsions caused by Fears**

சில குழந்தைகள் திடீரென்று பயந்துவிடுவதினுல் இழுப்பு ஏற்பட்டுவிடுகிறது. அதினுலேயே குழந்தைகளுக்கு பயம் (பூச்சாண்டி) காட்டக் கூடாதென்று சொல்லப்படுகிறது. குழந்தைகள் பயந்துவிட்டால் உடனே கீழேவிழுந்து, கைக்கால்களை வலித்திழுத்து, கண்விழிகளை மேலேசொருகும். பயத்தினுல் குழந்தைகளுக்கு சுரம் யேற்படுவதுண்டு.

**சிகிச்சை**

அடிப்பட்டதில் உண்டாகும் வலிப்புக்குள்ள சிகிச்சைகளைச் செய்யவும்.

**பல் முளைக்கும்போதுண்டாகும் இழுப்பு—Convulsions caused by Dentition**

குழந்தைகளுக்குப் பல்முளைப்பது இயற்கை யமைப்பினுலாயினும், பல் முளைக்கும் விகல்பத்தினுல் சிசு மரணமும் சம்பவித்துவிடுகின்றன. ஈருகளின் நரம்பிலிருந்து, பல் வெளிக் கிளம்பவேண்டியிருப்பதால், அக் காலங்களில் அதிகமாக ஏற்படும் வலியினுல் குழந்தைகளுக்கு வலிப்பு ஏற்படுகிறது.

பல் முளைப்பதால் ஏற்படும் வலிப்பில், குழந்தை வாயைத் திறந்து கொண்டும், கண்களை விழித்துக்கொண்டு மிருக்கும். கைகால்கள் மட்டும் கோணலாகவிழுக்கும்; காச்சல் உண்டாயிருக்கும்; இழுப்பிலும் குழந்தை அழுதுகொண்டிருக்கும்.

**சிகிச்சை**

பல் முளைக்கும்போதுண்டாகும் கோளாறுகள் என்ற தலைப்பின்கீழ்க் காண்க.

**உபசிகிச்சை**

குழந்தைக்குப் பல் முளைக்கும்போது இழுப்பு வருவதா யிருந்தால், ஆகாரவிஷயத்தை சீர்திருத்தம் செய்யவேண்டும்; காலா காலங்களில் ஆகாரம் கொடுத்து வழக்கப்படியே நித்திரை முதலியவைகள் செய்துவைக்க வேண்டும்; குழந்தை எப்போதும் காற்றேட்டமானவிடத்தி லிருக்கவேண்டும்; கால்களை சம்பளியினுல் பொதிந்து வைக்கவேண்டும். இழுப்பு வந்தவுடன், உள்ளங்கால், உள்ளங்கை, இவைகளில் சூட்டை உண்டுபண்ணும் குணமுள்ள இயூகலிப்புடஸ் ஆயில் (Oil Eucalyptus), டர்பன்டைன் (Turpentine), காம்பர் ஆயில் (Oil Camphor) முதலியவைகளில் ஒன்றுல் சூடு பறக்கத் தேய்க்கலாம்.

மாந்தவலிப்பு—Diphtheritic Convulsions

மாந்தவியாதியில் குழந்தைகளுக்குக் கை கால் இழுப்பு உண்டாவதுண்டு. இது மாந்தத்தில் மலச்சிக்கல் யேற்பட்டால் உண்டாகும். இழுப்பு வருமுன் குழந்தை பதரி அழும்; உடனே இழுப்பு ஏற்படும்; மறுபடியும் இழுப்புவிட்டதும் கை கால்களை கோணல் கோணலாக விழுக்கும்; கழுத்தையும் கோணியிழுக்கும்; கண் விழிகள் மேல்நோக்கிச் சொருகும்;

கை கால் குளிரும்; மாந்த இழுப்பு ஆரம்பித்தால் அரைமணி நேரத்திற் கொருதரமும், சில சமயங்களில் அதற்குக் குறைந்தும் இழுப்பு வருவதுண்டு. இழுப்பு வந்தால் 3, 4-நிமிஷங்கள்வரைத்தான் நீடிக்கும்; மாந்த இழுப்பு குழந்தைகளுக்கு 6-வயதுவரை வந்து இம்சிப்பதுண்டு.

இழுப்பு வந்திருக்கும் சமயம் குழந்தையைத் தூக்கி வைத்திருக்கக் கூடாது. இழுப்பிலிருந்து விடுவிக்கும் பொருட்டாய், கை கால்களைக் கட்டுப்படுத்தக் கூடாது. அப்படிக் கட்டுப்படுத்தினுல் இழுப்புவிட்டவுடன் கைக் கால்கள் கோணலாகவே நின்றுவிடும்.

உபசிகிச்சை

மாந்த இழுப்பு அதிக குளிர்ச்சி யேற்பட்டு விடுவதினுல் ஏற்படுவதாயிருப்பதால் குளிர்ந்தத் தண்ணீரைத் தெளிக்கக்கூடாது.

முதலில் மலத்தை வெளிப்படுத்தும் மார்க்கத்தைத் தேடவேண்டும். எனிமா (Enema) கொடுத்து மலத்தை வெளிப்படுத்தலாம். அல்லது சோப்பை (Soap) பெனிசல் மாதிரியாக நீளமாய் சீவி ஆசனத்தில் சொருகி வைத்திருந்தால் கொஞ்சநேரத்தில் மலம் கழியும்.

உஷ்ணத்தைப் பிறக்கும்படியாக இயூகலிபுடஸ் எண்ணெய் (Oil Eucaly Ptus) அல்லது கர்ப்பூரத் தைலம் (Oil Camphor) முதலியவற்றி லொன்றுல் உள்ளங்கால், உள்ளங்கை முதலியவைகளிலும் தேவையானுல் கை கால்களிலும் சூடுபறக்கத் தேய்க்கலாம்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) குதிரைவாலிச்சமூலம் | ரூபாயெடை | 6 | விடுதாரி (விடத்தலா)ப் பட்டை | ரூபாயெடை | 6 |
| சிறுபுள்ளடிச்சமூலம் | ,, | 6 | வெள்ளைப்பூண்டு | ,, | 3 |
| தைவேளைச்சமூலம் | ,, | 6 | வெள்ளைப்பூண்டு | ,, | 3 |
| வெள்வேலம்பட்டை | ,, | 6 | வசம்பு | ,, | 3 |
| முருங்கப்பட்டை | ,, | 6 | சிற்றுமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 48 |
| ஆமையோடு | ,, | 3 | | | |

தட்டிப்போட்டுக் காய்ச்சி வடித்து, ஒரு தேக்கரண்டியளவாக உள்ளுக்கும் கொடுத்தும் மேலுக்கும் தடவி வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | கொடிவேலிவேர் | ரூபாயெடை ½ | எருக்கன்வேர் | ரூபாயெடை | ½ |
| | சங்கன்வேர் | ,, ½ | குங்குமப்பூ | ,, | ½ |

ஒன்று சேர்த்துத் தண்ணீர்விட்டரைத்து வடிகட்டி, ஒரு அவுன்ஸளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) | குப்பைமேனிச்சாறு | அவுன்ஸ் 1 | மூக்கரச்சாரணைச்சாறு | அவுன்ஸ் | 1 |
| | முடக்கொத்தான்சாறு | ,, 1 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 1 |

ஒன்றாய்க் கலந்து காய்ச்சி வடித்து, ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

பாலசுர ஹர மாத்திரை; கஸ்தூரி மாத்திரை; சுவர்ணகோரோசனை மாத்திரை; அப்ரகக் கோரோசனை மாத்திரை; மகாரஸப்பஸ்பம் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் காண்க.

| | | | |
|---|---|---|---|
| (4) | அமோனியம் புரோமைட் (Ammouiam Bromide) | கிரைன்ஸ் | 30 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | துளி | 45 |
| | குளோரல் ஐட்ராஸ் (Chloral Hydras) | கிரைன்ஸ் | 24 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 2 |
| | ஆக்குவா குளோரபாம் (Aqua Chloroform) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துக் கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒருமணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்துவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (5) | லிக்கர் அட்ரோபி சல்பஸ் (Liquor Atropi Sulphus) | துளி | 1 |
| | லிக்கர் ஸ்டிரிக்னைன் (Liquor Strychnine) | ,, | 1 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | ,, | 20 |
| | தண்ணீர் | டிராம் | 2 |

ஒன்று சேர்த்துக் கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குக் காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

### முயல் வலிப்பு:—

முயல் வலிப்பும் காக்கை வலிப்பில் சேர்ந்த வியாதித்தான்; ஆனால், காக்கை வலிப்பைப்போல் முயல் வலிப்புவியாதியில் வாயிலிருந்து வெண்ணுரைத் தள்ளுவதில்லை. மூக்கிலிருந்து மட்டும் நீர் வடிந்துக்கொண்டேயிருக்கும். மூச்சு நீளமாக இழுத்துவிடப்படும். அப்போது, கைகால் தலை எல்லாம் முயலைப்போல் உதரும்.

சிகிச்சை

காக்கை வலிப்புக்குச் சொல்லியதைச் செய்யலாம்.

**விச்சுழி வலிப்பு:—**

இது குமாரகண்டன் வலிப்பு இனத்தில் சேர்ந்தது; ஆனுல், இந்த வியாதியில், வலிப்பு வரும் சமயத்திலும், வந்திருக்கும் சமயத்திலும், நெஞ்சுக்குழி பள்ளமாக அமுங்கி அமுங்கி எழும்பும்; விக்கல் உண்டாகும்.

**சிகிச்சை**

குமாரகண்டன் வலிப்புக்குண்டான சிகிச்சையைச் செய்யலாம்.

**விழுவதிஞல் உண்டாகும் வலிப்பு**—Convulsioncaused by Falling

அடிப்பட்டதிஞல் உண்டாகும் வலிப்பு என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## தோஷம்—சீர்த்தட்டு

## RICKETS—RACHITIS

தோஷவியாதியை நம் நாட்டில் வியாதியாகக் கருதப்படாமல், திருஷ்டியினல் உண்டாவதென்கின்றனர். ஆனல், தோஷவியாதி எலும்பைப் பற்றி வருவது; எலும்பின் நடுவிலுள்ள மச்சை என்று சொல்லப்படும் கருப்புப் பசைப்போன்ற சத்துக் குறைந்துபோவதினலேயே ஏற்படுகிறது. இந்த வியாதி மூன்று வயதிற்குட்பட்ட குழந்தைகளைத்தான் அதிகம் ஹிம்சிக்கின்றது.

ஆனல், பன்னிரண்டு வயதுக்குமேல் இவ்வியாதி வருவதில்லை. சுகாதாரக்குறைவான வீடுகளில் வசிப்பதினலும், போதிய சூரிய ஒளியில் குழந்தைகள் கொண்டுவரப்படாததினலும், கஷ்டப்பிரசவத்தினலும் எலும்புகளின் வளர்ச்சிக்குத் தடைப்பட்டு இந்த வியாதி உண்டாகலாம். அதிநாற்றமான இடத்திலுள்ள குழந்தைகளுக்கு அடிக்கடி இவ்வியாதி உண்டாகலாம்.

பத்து மாதத்திற்கு மேலும் பல் முளைக்கும் அறிகுறிகள் காணப்படவில்லையாலுைம், இரண்டு வயதுக்குமேல் குழந்தை நடக்கச் சக்தியற்றிருந்தாலும், தோஷ வியாதியென்றே தீர்மானிக்கலாம். கழுத்திலும் தலையிலும் வியர்வை உண்டாகி, படுத்திருக்கும் தலையணைகளை நனைத்துவிடும்; குழந்தையின் உச்சுக்குழி (Fontanellae) மூடப்படாமலிருக்கும்; அஜீரணம் மிகுந்து அருந்திய ஆகாரம் அப்படியே கழியும். சிலசமயம் மலம் மாவைக் கரைத்ததைப்போலும் அல்லது பச்சிலையைக் கசக்கிய சாறுபோலும் கழியும்; வயிறுதள்ளும்; உடல் வெளுக்கும்; பகலெல்லாம் குழந்தை நிம்மதியாயிருந்தாலும், இரவில் நித்திரையின்றிச் சஞ்சலமுண்டாக்கும்; காச்சல் உக்ரமாகவிருக்கும். இவ்வித வியாதிக்குச் சுத்தமான காற்று மிக முக்கியமானதாகும். சூரிய ஒளி அதிக நன்மையைத் தரும். ஜீரணக்கருவிகளுக்கும், நாம்புகளுக்கும் பலம் தரும் மருந்துகளையும் கொடுக்கவேண்டும். காலையில் வெந்நீர் அல்லது குளிர்ந்த தண்ணீர்,

முக்கியமாய் உப்பு (Bath Salt) கலந்த தண்ணீரில் 10-நிமிஷம் ஸ்நானம் செய்துவைப்பது நல்லது. தோஷவகை ஒன்பதுதான்; ஆனால், பல வகுப்பாகக் கூறப்படுவதால், அவைகளையும் கீழே குறிப்பிடுகிறோம்:—

| | | |
|---|---|---|
| அந்திபக்ஷிதோஷம் | செங்கண்பக்ஷிதோஷம் | புருஷதோஷம் |
| அழிகர்ப்பதோஷம் | தூங்குபக்ஷிதோஷம் | முட்டுதோஷம் |
| எச்சிதோஷம் | தேரைதோஷம் | விளக்கொளிகண்பக்ஷி [தோஷம் |
| கருடக்கண்பக்ஷிதோஷம் | நாய்முள்தோஷம் | |
| காணுபக்ஷிதோஷம் | நீர்ப்பக்ஷிதோஷம் | வீங்குபக்ஷிதோஷம் |
| குளிர்தோஷம் | பறவைதோஷம் | வெங்கண்பக்ஷிதோஷம் |
| கெந்தாளிதோஷம் | பக்ஷிதோஷம் | ஸ்திரீதோஷம் |

அந்திபக்ஷி தோஷம்:—

சுரம் கடோமாயிருக்கும்; திரேகம் வெளுத்திருக்கும்; நரம்புகள் புடைத்துத் தோன்றும்; தலைநடுக்கம் உண்டாகும்; கைகால் ஜில்லிட்டிருக்கும்; பால் குடியாது.

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| குட்டிவிளாயிலை | ஒருபிடி | சீந்தில்தண்டு | ரூபாயெடை 1 |
| நொச்சியிலை | ,, | வசம்பு | ,, 1 |
| சின்னியிலை | ,, | வெள்ளைப்பூண்டு | ,, 1 |
| வேப்பங்கொழுந்து | ,, | | |

ஒன்றுசேர்த்தரைத்து உடலெல்லாம் பூசியிருக்கலாம்.

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

அழிகர்ப்ப தோஷம்:—

திரேகம் சிவந்து காணும்; உடம்பெல்லாம் சிறுவலியாகவிருக்கும்; சுரம் காயும்; வாந்தி உண்டாகும்; நெஞ்சு வற்றும்; கைகாலிழுக்கும்; ஓயாது கழியும்; மயக்கம் வரும்; விழி மேல்நோக்கிச் சொருகும்; திரேகம் ஒருவிதமாய் நாறும்; பால் குடியாது.

சிகிச்சை

(1) சமுதைலத்திச்சாறு அவுன்ஸ் 1 பருத்திவேர் ரூபாயெடை 1

ஒன்றாய் அரைத்துக் கரைத்து வடிக்கட்டி ஒரு அவுன்ஸ்வீதம் 3-நாள் காலையில் மட்டும் கொடுத்துவரலாம். (கடும் பத்தியம்.)

| | | | |
|---|---|---|---|
| (2) இந்துப்பு | ரூபாயெடை $\frac{1}{4}$ | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை 1 |
| பொடுதலைக்காய் | ,, 1 | மிளகு | ,, 1 |

ஒன்றுசேர்த்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3 அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்துவரலாம்.

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## எச்சித்தோஷம்:—

சுரம் காயும்; திரேகம் மெலிந்திருக்கும்; வயிற்றோட்ட மிருக்கும்; திரேகம் ஒரு நாற்றமடிக்கும்; கண்களில் பூழை சேரும்; குழந்தைப் பால் குடிக்காமல் ஆயாசப்பட்டு படுக்கையில் புரண்டுகொண்டே யிருக்கும்.

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) சீரகம் | ரூபாயெடை 1 | வில்வயிலை | ஒருபிடி |

நசுக்கி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சி காலை மாலை ஒரு அவுன்ஸ்வீதம் கொடுத்துவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) குள்விளாயிலை | ஒருபிடி | மஞ்சள் | ரூபாயெடை 1 |
| | | ஓமம் | ,, 1 |

ஒன்றுசேர்த்து மைபோ லரைத்து, உடம்பெல்லாம் பூசி வைத்திருந்து சாயந்திரத்தில் சுடுதண்ணீரால் குளிப்பாட்டி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) வில்வயிலை | ஒருபிடி | மஞ்சள் | ரூபாயெடை 1 |

ஒன்றுசேர்த்து அரைத்து உடம்பெல்லாம் பூசி யிருந்து சாயந்திரம் சுடுசுடுதண்ணீரால் குளிப்பாட்டிவரலாம்.

மாந்தப் பொதுமருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## கருடக்கண்பக்ஷி தோஷம்:—

சுரமதிகமா யிருக்கும்; வாந்தி உண்டாகும்; கடைவாயில் எச்சில் ஒழுகிக் கொண்டே இருக்கும்; கண் குழி விழுந்து கண்ணில் பூழை சேர்ந்திருக்கும்.

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| கோரோசனை | ரூபாயெடை $\frac{1}{8}$ | திப்பிலி | ரூபாயெடை $\frac{1}{8}$ |
| அதிமதுரம் | ,, ,, | | |

மைபோலரைத்து முலைப்பாலில் கலக்கி வடிகட்டி ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்துவரலாம்.

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## காணப்பக்ஷி தோஷம்:—

சுரம் காயும்; உச்சியும் கண்ணும் குழிவிழும்; குழந்தை பால் குடியாது; குடித்தாலும் அப்படியே வாந்தியாகிவிடும்; பச்சிலைச்சாறுபோல் கழியும்; தொண்டைக்கம்மி அழுகையானது வக்கா பக்ஷி கத்துகிறதைப்போலிருக்கும்.

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| சிறுபுள்ளடிவேர் | ஒருபிடி | வெந்தயம் | ரூபாயெடை ½ |
| ஓரிலைத்தாமரை | ,, | மிளகு சாம்பல் | ,, ½ |
| விடத்தலாயிலை | ,, | | |

ஒன்று சேர்த்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்துவரலாம்.

தோஷப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

## குளிர் தோஷம்:—

சுரம் அதிகமாயிருக்கும்; உச்சியும், கண்ணும், குழி விழுந்திருக்கும்; கைக் கால் குளிர்ந்திருக்கும்; தலையில் மட்டும் வியர்வை காணும்; அரையில் வியர் கூருபோன்ற நமச்சல்கள் தோன்றும்; அதைச் சொறிந்தால் புண்பட்டுவிடும்; தண்ணீர் தண்ணீராய் வாந்தியாகும்; வேளைக் கொரு விதமாக மலம் கழியும்; நெஞ்சு குழி விழுந்துவிடும்; கால்கள் வீங்கும். கண்ணில் நீர் வடிந்துகொண்டேயிருக்கும்; உடல் மிகவும் மெலிந்து போகும். குடித்தபால் அப்படியே கழியும்; வாய் கருப்பாகவும், வரண்டு மிருக்கும்.

### சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | சுக்கு | ரூபாயெடை ½ | மலைத்தாங்கிவேர் | ரூபாயெடை ¾ |
| | மிளகு | ,, ½ | வேப்பங்கொழுந்து | ஒருபிடி |
| | வசம்பு | ,, ½ | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் 12 |

பொடித்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து, ஒரு தேக்கரண்டி வீதம் காலை மாலை கொடுத்துவரலாம். (பத்தியம்)

| | | | | |
|---|---|---|---|---|
| (2) | கீழ்க்காய்நெல்லி | ஒருபிடி | சாரணை | ஒருபிடி |
| | அம்மாம்பச்சரிசி | ,, | வெங்காயம் | ரூபாயெடை 1 |
| | புளியங்கொழுந்து | ,, | வசம்பு | ,, 1 |

இவற்றை ஒன்றாக மைபோலரைத்து உடலெல்லாம் பூசியிருந்து சாயந்திரம் சுடுதண்ணீரால் குளிப்பாட்டிவரலாம்.

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## கேந்தாளித் தோஷம்:—

காச்சல் இலேசாகவிருக்கும்; வாயும் தொண்டையும் வெந்து புண்ணாயிருக்கும்; வாய் அழலை நாற்றமடிக்கும்; மூத்திரம் சுடுதண்ணீரைப்போல் சூட்டுடன் இறங்கும்; மலச்சிக்கல் உண்டாகும்.

சிகிச்சை

(1) பழம்பாசிச்சாறு அவுன்ஸ் 3 வெங்காயச்சாறு அவுன்ஸ் 3
வல்லாரைச்சாறு ,, 3

இதைக் கலந்து மண்சட்டியைக் காயவைத்து அதில் இந்தசாற்றை ஊற்றி முறியவைத்து அத்துடன்:—

வெள்ளாட்டுப்பால் அவுன்ஸ் 9
சேர்த்து, அதில்:—
சீரகம் ரூபாயெடை $\frac{1}{8}$

வறுத்துத் தூள்செய்துக் கலந்து 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## செங்கண்பக்ஷி தோஷம்:—

சுரம் காயும்; கண் இரத்தம்போல் சிவந்திருக்கும்; கண்ணிலிருந்து நீர் வடியும்; தலையில்மட்டும் வியர்வை உண்டாகிக் குளிர்ந்திருக்கும்; குழந்தை இருந்திருந்து புரண்டு புரண்டு அழும்; முகத்தைக் கையால் துடைக்கும்; தண்ணீர்த் தண்ணீராய்க் கழியும்; கழிந்த மலம் சுடுதண்ணீர்ப் போல் வெது வெதுப்பா யிருக்கும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முசுமுசுக்கையிலை | ரூபாயெடை | 3 | ஏலரிசி | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| பொன்னாங்காணி | ,, | 3 | சாதிக்காய் | ,, | $\frac{1}{2}$ |
| சிறுகீரை | ,, | 3 | சாதிப்பத்திரி | ,, | $\frac{1}{2}$ |
| சீந்தில்வேர் | ,, | 3 | கிராம்பு | ,, | $\frac{1}{2}$ |
| ஆவரைவேர் | ,, | 3 | இலவங்கப்பட்டை | ,, | $\frac{1}{2}$ |
| அதிமதுரம் | ,, | $\frac{1}{2}$ | செண்பகப்பூ | ,, | $\frac{1}{2}$ |
| சீரகம் | ,, | $\frac{1}{2}$ | வெங்காயச்சாறு | அவுன்ஸ் | 12 |
| கோரைக்கிழங்கு | ,, | $\frac{1}{2}$ | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 48 |

தட்டித் தூள்செய்து அரைத்து எண்ணெயில் போட்டுக் கலந்துக் காய்ச்சி வடித்து ஒரு தேக்கரண்டி யளவாகக் காலை மாலை கொடுத்துவரலாம்.

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## தூங்குபக்ஷி தோஷம்:—

சுரத்துடன் வயிற்றோட்டமும் வாந்தியுமிருக்கும்; குழந்தை தூங்குவதைப் போல் மயங்கிப் படுத்திருந்து திடீரென அலறி எழுந்திருக்கும்; நாவரட்சி யுண்டாகும்; குழந்தைத் தண்ணீருக்காக அங்கலாய்க்கும்; முகம் மாறுபா

டடைந்து, கண் விழிகள் மேல்நோக்கிச் சொருகி பற்கடிப்பு உண்டாகும்; உச்சிக்குழி பள்ளம் விழுந்திருக்கும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) குட்டிவிளாயிலை | ரூபாயெடை | 1 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| பேய்ப்பீர்க்கம் வேர் | ,, | 1 | ஏலம் | ,, | 1 |
| மஞ்சள் | ,, | 1 | ஓமம் | ,, | 1 |

தட்டி 12 அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 4-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயம் 1, 1½-அவுன்ஸில் ஒரு குன்றிமணியளவு கோரோசனையைக் கரைத்து உள்ளுக்குக் கொடுத்து:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குட்டிவிளாயிலை | ரூபாயெடை | 1 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| பேய்ப்பீர்க்கம்வேர் | ,, | 1 | ஏலம் | ,, | 1 |
| மஞ்சள் | ,, | 1 | ஓமம் | ,, | 1 |

தண்ணீர் விட்டு மைபோலரைத்து, உடம்பில் பூசியிருந்து சாயந்திரத்தில் சுடுதண்ணீரால் குளிப்பாட்டி வரலாம்.

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

## தேரை தோஷம்:—

உடம்பில் சதைவற்றி எலும்பும் தோலுமாகவிருக்கும்; விசேஷமாய் கையும், காலும் சிறுத்து மெலிந்துவிடும்; உடல் வெளுத்துப்போம்; வயிறுமட்டும் பெரிதாகிவிடும்; கண் சிறுத்துப்போம்; வாய் உலர்ந்திருக்கும்; முகம் சோர்ந்து காதுகள் மடங்கியிருக்கும்; பால் குடியாது; மலச்சிக்கல் உண்டாகும்; முக்கல் முணவல் ஏற்படும்; பெருமூச்சு உண்டாகும்; நெஞ்சு வற்றிக் குரல் கம்மும்; இந்த வியாதிக்கு ஆரம்பத்தில் சிகிச்சை செய்யப் படாவிட்டால் பிள்ளை பிழைப்பது கஷ்டம்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) சிறுபுள்ளடிசமூலம் | ரூபாயெடை | 5 | நீர்முள்ளிச்சமூலம் | ரூபாயெடை | 5 |
| | | | காட்டுமல்லிகைவேர் | ,, | 5 |
| சிறுகீரைச்சமூலம் | ,, | 5 | அவுரிவேர் | ,, | 5 |
| நீராரைச்சமூலம் | ,, | 5 | கரிசலாங்காணிவேர் | ,, | 5 |
| பொன்னுங்காணிச் சமூலம் | ,, | 5 | நிலக்குமிழம்வேர் | ,, | 5 |
| | | | முடக்கொத்தான்வேர் | ,, | 5 |

இவற்றை இடித்து, 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | ரூபாயெடை | ¾ | மிளகு | ரூபாயெடை | ¾ |
| திப்பிலி | ,, | ¾ | ஏலம் | ,, | ¾ |

இது நான்கையும் பசும்பால்விட்டு மைபோலரைத்து மேற்படி கஷாயத்துடன் கலக்கி, அதில்:—

| | | |
|---|---|---|
| பசு நெய் | அவுன்ஸ் | 48 |

சேர்த்துக் காய்ச்சி வடித்து, 1, 2-தேக்கரண்டி வீதம் கொடுத்துவரலாம். (பத்தியம்)

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## நாய்முள் தோஷம்:—

சுரம் அதிகமாயிருக்கும்; குழந்தை பால்குடியாது; கொமட்டல் சப்தத்துடன் வாந்தி உண்டாகும்; இருமல் ஏற்படும்; தலை நடுக்கமுண்டாகும்; வாயில் நாய்முள் போன்ற சிறு நமச்சல்கள் உண்டாயிருக்கும்; இருமும்போது இருவிலாவும் தூக்கும்; பயத்துடன் பார்ப்பதைப்போல் மிரண்டு விழிக்கும்; கண்ணீர் வடியும். வெளிரின மஞ்சள் நிறமாகக் கழியும்.

### சிகிச்சை

(1) முற்றிய கடுக்காய் ரூபாயெடை 1 சீரகம் ரூபாயெடை 1

இதை நன்ருகச் சூரணித்து, சோற்றுக்கற்ருழைச்சாறு ஒரு அவுன்ஸில் 1-ரூபாயெடை சூரணத்தைக் கலந்து, மூன்றுநாள் கொடுத்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) நெறிஞ்சில்காய் | ரூபாயெடை | 1 | மிளகு | ரூபாயெடை | 1 |
| மணித்தக்காளியிலை | ,, | 1 | மஞ்சள் | ,, | 1 |
| சங்கன் கொழுந்து | ,, | 1 | வெங்காயம் | ,, | 1 |

யாவற்றையும் ஒன்ருகத் தட்டிப் பிழிந்தச்சாற்றில் ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) மணித்தக்காளியிலைச்சாறு | | அத்திப்பால் | தேக்கரண்டி ½ |
| | தேக்கரண்டி ½ | ஆலம்பால் | ,, ½ |

ஒன்று சேர்த்துத் தடவை ஒன்றுக்கு இதேயளவாக, காலை மாலை கொடுத்துவரலாம்.

## நீர்ப்பக்ஷி தோஷம்:—

சுரம் விடாமல் காயும்; குழந்தை ஓயாது அழுதுகொண்டேயிருக்கும்; நெஞ்சு வரண்டிருக்கும்; பெருமூச்சு வாங்கும்; சரீரகம் வெளுத்திருக்கும்; தலையில் வியர்வைக் காணும்.

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| விஷ்ணுகிராந்தி | ஒருபிடி | சீரகம் | ரூபாயெடை 1 |

24-அவுன்ஸ் தண்ணீரில் பொடித்து போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ஒரு அவுன்ஸ்வீதம் கொடுத்துவரலாம்.

தோஷப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

பறவைத் தோஷம்:—

இதுவே பக்ஷிதோஷம்: சுரம் அதிகமாயிருக்கும்; அடிக்கடி மலம் தண்ணீர் போல் கழியும்; சிலசமயம் மாவுபோலும், பச்சையாயும் கழியும்; வாந்தி உண்டாகும்; கண் குழிவிழுந்து, கண்ணில் பூழைசேரும்; முகம் வாடும்; கழுத்து மெலியும்; குழந்தை அலறியழும்; நாவரண்டிருக்கும்; சுவாசமிடும் போது நெஞ்சுகுழி விழும்; இசிவு உண்டாகும்; உச்சிக்குழி பள்ளமாயிருக்கும்; முகம் மஞ்சளாகத் தோன்றும்; பிள்ளையின் உடல் பச்சிலைநாற்றமடிக்கும்; இந்த வியாதி குழந்தை நடக்க வாரம்பிக்கும் போதுத்தான் ஏற்படுகிறது.

சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | ஓரிலைத்தாமரை ரூபாயெடை 1 | வெந்தயம் | ரூபாயெடை | 1 |
| | | சுக்கு | ,, | 1 |
| | விடத்தலாவேர் ,, 1 | வால்மிளகு | ,, | 1 |

ஒன்று சேர்த்துத் தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ்வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (2) | வெங்காயம் ரூபாயெடை 1 | வரட்பூலாவேர் | ரூபாயெடை | 1 |
| | சீரகம் ,, 1 | | | |

ஒன்று சேர்த்துத் தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை 1. $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (3) | மணித்தக்காளிவேர் ரூபாயெடை 1 | வெங்காயம் | ரூபாயெடை | 1 |
| | | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |
| | பிச்சிவேர் ,, 1 | | | |

பொடித்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து, ஒரு தேக்கரண்டியளவாக உள்ளுக்கும் கொடுத்தும், தலை உச்சியிலும் தடவி வரலாம்.

தோஷப் பொதுமருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

பக்ஷி தோஷம்:—

பறவைதோஷ மென்றதின் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

புருஷ தோஷம்:—

சுரம் காயும்; உச்சிக் குழிவிழும்; கண் பள்ளமாயிருக்கும்; திரேகம் மெலியும்; பச்சை நிறமாகவும், தண்ணீராகவும், மலம் கழியும்; வாந்தியும்

நாவரட்சியும் உண்டாகும்; குழந்தை சதா அலறியலறி அழுது கொண்டேயிருக்கும்.

**சிகிச்சை**

தோஷப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்துவரலாம்.

### முட்டுத் தோஷம்:—

இதையும் குளிர்தோஷத்திற் கொப்பாகவே சொல்லலாம். சுரம் காயும், திரேகம் மெலியும்; குடித்த பாலை அப்படி வாந்திசெய்யும்; சில சமயம் வெறும் தண்ணீர்போலும் வாந்தியாகும்; கால்மட்டும் குளிர்ந்திருக்கும். கண் குழிவிழும்; வாயின் உட்புறம், நாவு, உதடு, முதலியவைகள் கருத்திருக்கும் நாவரட்சிக் காணும்.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | ரூபாயெடை | $\frac{1}{4}$ | மிளகு | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{4}$ | சீரகம் | ,, | $\frac{1}{4}$ |

இவற்றைச் சுடுதண்ணீர் விட்டு மைபோலரைத்து, இரண்டு கழற்சிக்காயளவு 2-அவுன்ஸ் முலைப்பாலில் கரைத்துக் காலை மாலை கொடுத்துவரலாம்.

குளிர் தோஷத்துக்குண்டான சிகிச்சையையும், தோஷப் பொது சிகிச்சைகளையும் செய்துகொண்டுவரலாம்.

### விளக்கொளிக்கண் பக்ஷி தோஷம்:—

சுரம் காயும்; வாந்தி பண்ணும்; பால் குடியாது. உச்சி குழிவிழும்; பச்சிலைச்சாறுபோலும், பால்போலும் வயிற்றால் போகும்; நாவு உலர்ந்திருக்கும். புறங்கையால் முகத்தைத் தேய்க்கும்.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | ரூபாயெடை | 1 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| அதிவிடயம் | ,, | 1 | தேவதாரு | ,, | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 1 | மஞ்சள் | ,, | 1 |
| கடுக்காய் | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்துப் பொடுதலைச்சாறு விட்டு மைபோலரைத்துக் குன்றிமணியவ்வளவு பெரிய மாத்திரைகளாக உருட்டிக் காயவைத்து, காலை மாலை ஒரு அவுன்ஸ் முலைப்பாலில் ஒரு மாத்திரைவீதம் கொடுத்துவரலாம். (பத்தியம்)

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

### வெங்கண்பக்ஷி தோஷம்:—

சுரம் காயும்; உடல் வெளுத்து மெலியும்; வயிறிரைந்து வெண்மையாகக் கழியும்; வயிற்றில் வலியுண்டாகி குழந்தை துடிதுடித்து அழும்.

சிகிச்சை

மேல்தோல் நீக்கிய சோற்றுக்கற்றாழைச் சதையில் ரூபாயெடை 5, எடுத்து இரண்டு மூன்று தரம் தண்ணீர்விட்டுக் கழுவி, ஒரு பீங்கான் பாத்திரத்தில் போட்டு, அதில் மூத்தியக்கடுக்காய் ஒன்றை நன்றாகத் தூள்செய்து போட்டுக் கிளரி வைத்திருந்தால், தண்ணீர் கசிந்திருக்கும்; அந்தத் தண்ணீர் அவுன்ஸ் ஒன்றில், வறுத்துத் தூள்செய்த திப்பிலித்தூள் ரூபாயெடை $\frac{1}{8}$-சேர்த்துக் காலை மாலை கொடுத்துவரலாம்.

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## ஸ்திரீ தோஷம்:—

சுரம் காயும்; நெஞ்சு வற்றும்; பெருமூச்சுண்டாகும்; குழந்தை பால் குடியாது. இரவும் பகலும் புரண்டுப் புரண்டு அழும்; தலையில் வியர்வை யதிகரிக்கும்; கண்வெளுத்துப் பஞ்சடையும்; மயக்கமுண்டாகும்.

சிகிச்சை

(1) கஞ்சாங்கோரை ஒரு பிடியை 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டிய கஷாயத்தில் ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்துவரலாம்.

(2)

| | | | | |
|---|---|---|---|---|
| வசம்பு | ரூபாயெடை | $\frac{1}{2}$ | சின்னியிலை | ஒருபிடி |
| வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{1}{2}$ | குட்டிவிளாயிலை | ,, |
| மஞ்சள் | ,, | $\frac{1}{2}$ | | |

தண்ணீர் விட்டு மைபோலரைத்து உடம்பில் பூசியிருந்து சாயந்திரம் வெந்நீரால் குளிப்பாட்டிவரலாம்.

வெங்கணபக்ஷி தோஷத்திற்குச் சொல்லிய சோற்றுக்கற்றாழை நீர்க் கொடுத்துவரலாம்.

தோஷப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

## தோஷப் போது மருந்துகள்:—

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மஞ்சள் | ரூபாயெடை | 3 | கோரைக்கிழங்கு | ரூபாயெடை | 3 |
| வசம்பு | ,, | 3 | தேவதாரு | ,, | 3 |
| அதிமதுரம் | ,, | 3 | கடுக்காய் | ,, | 3 |
| அதிவிடயம் | ,, | 3 | | | |

ஒன்று சேர்த்துப் பொடுதலைச்சாற்றால் மைபோலரைத்துக் குன்றிமணி பெரிய மாத்திரைகள் செய்து, காயவைத்து காலை மாலை தேனிலாவது அல்லது ஒரு அவுன்ஸ் முலைப்பாலிலாவது, ஒரு மாத்திரைவீதம் கொடுத்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) சீரகம் | ரூபாயெடை | ½ | முசுமொசுக்கையிலை | ரூபாயெடை | 3 |
| கோரைக்கிழங்கு | ,, | ½ | பொன்னுங்காணி | ,, | 3 |
| அதிமதுரம் | ,, | ½ | சிறுகீரை | ,, | 3 |
| ஏலம் | ,, | ½ | சீந்தில்வேர் | ,, | 3 |
| சாதிக்காய் | ,, | ½ | ஆவாரைவேர் | ,, | 3 |
| சாதிப்பத்திரி | ,, | ½ | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 28 |
| செண்பகப்பூ | ,, | ½ | வெங்காயச்சாறு | ,, | 12 |
| இலவங்கப்பட்டை | ,, | ½ | | | |

பொடிக்கவேண்டியவற்றைப் பொடித்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்து 1, 1½-தேக்கரண்டி வீதம் காலை மாலை கொடுத்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) குட்டிவிளாயிலை | | ஒருபிடி | சோம்பு | ரூபாயெடை | 1 |
| வேப்பங்கொழுந்து | | ,, | வசம்பு | ,, | 1 |
| மஞ்சள் | ரூபாயெடை | 1 | சுக்கு | ,, | 1 |

தண்ணீர்விட்டு மைபோலரைத்துக் கலக்கி உடம்பெல்லாம் பூசியிருந்து சுடுதண்ணீரில் தேய்த்துக் குளிப்பாட்டிய உடன்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நன்னாரிவேர் | ரூபாயெடை | 3 | பொன்னுங்காணி | ரூபாயெடை | 3 |
| தண்ணீர்விட்டான் கிழங்கு | ,, | 3 | ஏலம் | ,, | ½ |
| கொட்டைக்கரந்தை | ,, | 3 | சீரகம் | ,, | ½ |

இவற்றைப் பசும்பால் விட்டரைத்து:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பசுநெய் | அவுன்ஸ் | 24 | நல்லெண்ணெய் | அவுன்ஸ் | 12 |

ஒன்று சேர்த்து அரைத்தவைகளைக் கலக்கிக் காய்ச்சி வடித்து 1, 1½-தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம். (பத்தியம்.)

(4) மேற்றோல் நீக்கிய சோற்றுக்கற்றாழைச் சோறு ரூபாயெடை 5 எடுத்து, இரண்டு மூன்றுதாம் நல்லத்தண்ணீர் விட்டுக் கழுவி, அதை ஒரு பீங்கான் பாத்திரத்தில் போட்டு, அதன்மேல் நன்றாகப் பொடிசெய்த ஒரு முற்றிய கடுக்காயின் தூளைப்போட்டுப் பிசரிவைக்க, கொஞ்சநேரத்தில் தண்ணீர்க் கசிந்திருக்கும். அந்தத் தண்ணீர் அவுன்ஸ் ஒன்றில், வறுத்துத் தூள் செய்த திப்பிலித்தூள் ரூபாயெடை அரைக்கால் சேர்த்துக் கலந்து காலை மாலைகளில் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (5) கோரோசனை | ரூபாயெடை | ⅛ | திப்பிலி | ரூபாயெடை | ⅛ |
| அதிமதுரம் | ,, | ,, | | | |

1½-அவுன்ஸ் மூலைப்பாலில் அரைத்துக் கரைத்து வடிக்கட்டி காலை மாலை கொடுத்து வரலாம்.

(6) கால்ஸிஸி லாக்டோ பாஸ்பேட் (Calcii Lacto phosphate) கிரைன்ஸ் 2

| | | |
|---|---|---|
| ஓலியம் மொரே (Oleum Morrhue) | துளி | 45 |
| லைக்கர் கால்ஸிஸ் (Liquor Calcis) | ,, | 45 |
| டிஞ்சர் கலம்பா (Tincture Calumbae) | ,, | 9 |
| தண்ணீர் | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து 1 முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப் பின் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

(7) ஓலியம் மொரே (Oleum Morrhue) துளி 45

ஓலியம் காஸியா (Oleum Cassiae) ,, 12

கம் அக்கேஷியா (Gum Acacia) போதுமான அளவு (அதாவது எண்ணெய் கலந்து தூளாகும் வரை)

ஒன்று சேர்த்துக் கலக்கிக்கொண்டு:—

| | | |
|---|---|---|
| சிரப் கால்ஸிஸ் லாக்டோ பாஸ்பேட் (Syrup Calcis Lacto Phosphate) | துளி | 25 |
| லைக்கர் கால்ஸிஸ் (Liquor Calcis) | ,, | 25 |
| சோடியம் ஐப்போ பாஸ்பேடிஸ் (Sodium Hypo phosphatis) | கிரைன் | 1 |
| தண்ணீர் | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஆகாரத்திற்குப்பின் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

### தோஷத்தில் நாவரட்சியாயிருந்தால்:—

#### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோஷ்டம் | ரூபாயெடை | ½ | ஆமையோடு | ரூபாயெடை | ½ |
| சீரகம் | ,, | ½ | சந்தனம் | ,, | ½ |
| ஏலம் | ,, | ½ | மான்கொம்பு | ,, | ½ |
| சுக்கு | ,, | ½ | சுக்குநாறிப்புல் | ,, | |
| அதிமதூரம் | ,, | ½ | நெற்பொரி | ,, | ½ |
| கூவிளம்வேர் | ,, | ½ | | | |

ஒன்று சேர்த்துப் போதுமான தண்ணீரில் விட்டு நாலொன்றாய்ச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1-1½-அவுன்ஸ் கொடுக்கலாம்.

**தோஷத்தில் வயிற்றோட்டத்தை நிறுத்த:—**

சிகிச்சை

| | | |
|---|---|---|
| ஒலியம் ரெசினி (Oleum Ricini) | துளி | 21 |
| லிக்கர் பிஸ்மத் (Liquor Bismuth) | ,, | 21 |
| கம் அக்கேஷியா (Gum Acacia) | டிராம் | 1 |
| சர்க்கரை | ,, | ½ |
| ஆக்குவா சின்னமோனி (Aqua Cinnamone) | ,, | 3 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு 3-வேளை அரை அவுன்ஸ் தண்ணீரில் ஒரு தேக்கரண்டி மருந்து கலந்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு கொடுத்து வரலாம்.

காச்சல்—சுரம்

## FEVERS—FEBRICULAS

காச்சல் தனிப்பட்ட ஓர் வியாதியல்ல. சரீர இரத்த நாளங்களில் அழற்சிக் கண்டு, இரத்தம் விஷமித்து, திரேகத்தையும் சருமத்தையும் உஷ்ணிக்கச் செய்கிறது.

குழந்தைகளுக்கேற்படும் காச்சல் விசேஷமாக தடுமன் பிடித்துக்கொள்ளுவதினாலேயே உண்டாகலாம். ஆனல், குழந்தைகளுக்கு இன்புளுவென்ஸா சுரம் அதிகமாய் வருவதில்லை.

சாதாரணமாகத் திரேகத்தின் உஷ்ண அளவு, 98.4-டிகிரியாக இருக்க வேண்டியது, சுரத்தில் 100-முதல் 106-டிகிரிவரை யிருக்கும். 106-டிகிரியே மிகக் கொடுமையானதாக விருக்கும். அதற்குமேல் திரேகம் உஷ்ணமடையாமல் இரத்த ஓட்டத்தைத் தடைச்செய்து, சர்மத்தைக் குளிரச்செய்து, சன்னி யேற்படச் செய்துவிடும்.

காச்சல்மட்டும் பெரியவர்களுக்கும், சிறியவர்களும் ஒன்றுகவே யிருக்கும்; ஆனுலும், குழந்தைகளுக் கணையினுலும், மாந்தத்தினுலும், தோஷத்தினுலும், பல் முளைப்பதினுலும் ஏற்படும் சுரம்மட்டும் தனிமையாகவே யிருக்கும். பெரியவர்களுக் கேற்படும் சுரம் 64 என்று தமிழ்வைத்ய நூற்கள் கூறுகின்றன. சிறுவர்களுக்குண்டாகும் சுரவகுப்புகளைக் கீழே குறித்திருக்கிறோம். ஒவ்வொரு சுரத் தலைப்பின்கீழும், ரோகநிதானத்தைக் கூறி விளக்கப்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| அசதிசுரம் | அற்பசுரம் |
| அட்ச்சராமாந்தசுரம் | அன்பனுதிசுரம் |
| அபிநியாசசன்னிசுரம் | அஜீரணசுரம் |
| அர்த்தராத்திரிசுரம் | அஸ்திசுரம் |

| | |
|---|---|
| ஆமசுரம் | நிமோனியாசுரம் |
| ஆமாதிசாரசுரம் | பல்முளைக்கும்போதுண்டாகும்சுரம் |
| இரத்தசுரம் | பழஞ்சுரம் |
| இராசுரம் | பித்தசுரம் |
| இன்புளுவென்ஸாசுரம் | பித்தசிலேத்மசுரம் |
| உட்சுரம் | பிரஞ்சோநிமோனியாசுரம் |
| கடுமையான சளிசுரம் | மாங்கிஷசுரம் |
| கணைசுரம் | மாந்தக்கணைசுரம் |
| கபசுரம் | மாந்தசுரம் |
| குளிர்சுரம் | முறைசுரம் |
| சந்நிபாதசுரம் | வாதசுரம் |
| சள்ளைக்கடுப்புச்சுரம் | வாதசிலேத்பனசுரம் |
| சாமசுரம் | வாதபித்தசுரம் |
| சித்தவிப்ரமசன்னிபாதசுரம் | விடாசுரம் |
| சிலேத்பனசுரம் | விஷசளிசுரம் |
| தருணசுரம் | விஷசன்னிசுரம் |
| தனிச்சுரம் | |

### அசதி சுரம்:—

சள்ளைக்கடுப்புச்சுரம் என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

### அச்சர மாந்தசுரம்:—

அச்சரமாந்த ரோகத்திற்குண்டான எல்லா குறிகளுமிருந்து, அத்துடன் சுரம்மட்டும் கடுமையாயிருக்கும்; குளிர் நடுக்கம் ஏற்படும்; உதடுகள் வெடிப்புக் காணும்; வாயிலும், நாவிலும் வெண்ணிறமாக மாவுபடிந்திருக்கும்; வாய் ஒரு அழுகைநாற்ற மடிக்கும்; குழந்தைப் பால் குடியாது; கண் திறவாமல் அழுதுகொண்டேயிருக்கும்; இத்துடன் வயிற்றோட்டமும் காணும்.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பூவரசன்யிலை | ரூபாயெடை | 3 | பூவரசம்பூ | ரூபாயெடை | 3 |
| பூவரசன்காய் | ,, | 3 | | | |

ஒன்றாச் சேர்த்து மைப்போலரைத்து, பில்லையாகத் தட்டி, சிற்றாமணக் கெண்ணெய் அவுன்ஸ் 24-ல் போட்டு, பில்லைகள் பொன்னிறமாக வரும்வரை காய்ச்சி, பில்லைகளை எடுத்துவிட்டு அந்த எண்ணெயில்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சாதிக்காய் | ரூபாயெடை | $\frac{3}{4}$ | ஏலம் | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| சாதிப்பத்திரி | ,, | $\frac{3}{4}$ | | | |

தூள் செய்துபோட்டு $\frac{1}{2}$, 1-தேக்கரண்டி வீதம் கொடுத்துவரலாம்.

சுரப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்துவரலாம்.

அபிநியாச சந்நிசுரம்—Pneumonia

இதையே கபசுரம், விஷசன்னிச்சுரம் என்று சொல்லப்படும். இந்தச்சுரம் சாதாரணமாக ஒன்றிரண்டு வயதுக் குழந்தைகளுக்கு வருவதுண்டு. சுர ரோகத்தில் இது கொடியதன்மையுடையது. கபசுரம் உண்டானால் சற்று எச்சரிக்கையாகவே சிகிச்சைகளும் செய்யவேண்டும். அப்படி இல்லாத பக்ஷத்தில் விபத்து உண்டாகிவிடும். நுரையீரலில் சிறு கொப்புளங்கள் உண்டாவதினாலேயேதான் கபசுரம் ஏற்படுகிறது.

கபசுரத்தில் திரேகோஷ்ணம் மிகுதிப்பட்டிருக்கும்; கஷ்டமான இருமலுடன் சில சமயம் வாந்தியுண்டாகும்; இருமும் சமயம் இழுப்புக்கண்டு விடுவதுமுண்டு. சுவாசம் தீவிரமாகவும் நாடி நடையானது படபடத்துமிருக்கும். அடிக்கடி வரட்சியான இருமலும், அதிகக் கஷ்டத்தின் பேரில் அழுக்கு நிறமான கோழையும் வெளிப்படும்.

இருமும்போது நெஞ்சும் தொண்டைக்குழியும் புண்பட்டதேபோல் வலிக்கும்; உதட்டின்பேரில் வெயர்க்கூருபோன்ற சிறு நமைச்சல்கள் உண்டாயிருக்கும். பெரியவர்களுக்குண்டாகும் கபசுரத்திற்கும் சிறியவர்களுக்குண்டாகும் கபசுரத்திற்கும் பெரும் வித்தியாசமுண்டு. இதையே அள்ளுமாந்த சுரமென்றும் கூறுவர்.

## சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | கரிசலாங்காணி | ரூபாயெடை | $\frac{3}{4}$ | கண்டுபாரங்கி | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| | சிறுவழுதலை | ,, | $\frac{3}{4}$ | சுக்கு | ,, | $\frac{3}{4}$ |
| | பெருவழுதலை | ,, | $\frac{3}{4}$ | திப்பிலி | ,, | $\frac{3}{4}$ |
| | கருநொச்சி | ,, | $\frac{3}{4}$ | மிளகு | ,, | $\frac{3}{4}$ |
| | நிலவேம்பு | ,, | $\frac{3}{4}$ | கொடிவேலி | ,, | $\frac{3}{4}$ |
| | பொன்முசுட்டை | ,, | $\frac{3}{4}$ | கோஷ்டம் | ,, | $\frac{3}{4}$ |
| | வெட்பாலைப்பட்டை | ,, | $\frac{3}{4}$ | சிற்றரத்தை | ,, | $\frac{3}{4}$ |
| | மதுக்காரை | ,, | $\frac{3}{4}$ | கடுக்காய்த்தோல் | ,, | $\frac{3}{4}$ |
| | திப்பிலிக்கட்டை | ,, | $\frac{3}{4}$ | ஓமம் | ,, | $\frac{3}{4}$ |
| | தேவதாரு | ,, | $\frac{3}{4}$ | வசம்பு | ,, | $\frac{3}{4}$ |
| | வாய்விளங்கம் | ,, | $\frac{3}{4}$ | செவ்வியம் | ,, | $\frac{3}{4}$ |
| | பால்சாம்பிராணி | ,, | $\frac{3}{4}$ | | | |

இவற்றையெல்லாம் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை, 1, 1½-அவுன்ஸ் வீதம் கொடுத்துவரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | நிலவேம்பு | ரூபாயெடை | 1 | சிற்றரத்தை | ரூபாயெடை | 1 |
| | சீந்தில்தண்டு | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுண்டங்கத்திரிவேர் | ,, | 1 | கோஷ்டம் | ,, | 1 |
| பூனைக்காஞ்சொறி | ,, | 1 | தேவதாரு | ,, | 1 |
| கடுகுரோகிணி | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| பர்ப்பாடகம் | ,, | 1 | கடுக்காய் | ,, | 1 |
| கிச்கிலிக்கிழங்கு | ,, | 1 | கண்டுபாரங்கி | ,, | 1 |
| | | | தூராயிலை | ,, | 1 |

இவற்றையெல்லாம் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன் ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை, வேளை ஒன்றுக்கு ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்துவரலாம்.

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முருங்கப்பட்டை | ரூபாயெடை | 1 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| எருக்கம்வேர்ப்பட்டை | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| நொச்சியிலை | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| கரிசலாங்காணி | ,, | 1 | திப்பிலிக்கட்டை | ,, | 1 |
| நிலவேம்பு | ,, | 1 | கொடிவேலி | ,, | 1 |
| தேவதாரு | ,, | 1 | செவ்வியம் | ,, | 1 |
| சிற்றரத்தை | ,, | 1 | அதிவிடையம் | ,, | 1 |
| வெள்ளைப்பூண்டு | ,, | 1 | | | |

இவற்றை எல்லாம் ஒன்று சேர்த்துப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டிக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை, வேளை ஒன்றுக்கு 1, 1½, அவுன்ஸ் வீதம் கொடுத்துவரலாம்.

(4) கோரோசனை மாத்திரை; சுரபூபதி மாத்திரை; தக்காளிக் கோரோசனை மாத்திரை; பாலசுரஹர மாத்திரை; பாலவிநோத சஞ்சீவி மாத்திரை; பாலசஞ்சீவி மாத்திரை; பாலசுரகுடோரி மாத்திரை; பாலசுரவிஷஹர மாத்திரை இவைகளிலொன்றைக் கொடுத்துவரலாம். செய்முறை 6-ம் பாகம் காண்க.

(5)

| | | |
|---|---|---|
| டிஞ்சர் அக்கோனிட் (Tincture Aconite) | துளி | 1 |
| லைக்கர் அமோனியம் அஸிட்டேட் (Liquor Ammonium Acetate) | ,, | 10 |
| லைக்கர் லாயூரோ சிரோஸி (Liquor Lauro Cerasi) | ,, | 8 |
| சிரப் சிம்பிள் (Syrup Simple) | ,, | 15 |
| தண்ணீர் | டிராம் | 2 |

ஒன்று சேர்த்துக் கலக்கிக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை, வேளை ஒன்றுக்கு ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்,

| | | | |
|---|---|---|---|
| (6) | லிக்கர் அமோனியம் அஸிட்டேட் (Liquor Ammonium Acetate) | டிராம் | 3 |
| | பொட்டாஷியம் சிட்ரஸ் (Potassium Citras) | ,, | 1 |
| | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecace) | ,, | 1 |
| | சிரப் அரோமாட்டிக்ஸ் (Syrup Aromatics) | ,, | 1 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துக் கபசுரத்தில் அதிகமான சளியிருக்கும் சமயம், 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாலுமணி நேரத்திற் கொருதடவை, ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (7) | ஸ்பிரிட் அமோனியாம் அரோமாட்டிக் (Spirit Ammonium Aromatic) | துளி | 16 |
| | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecace) | ,, | 8 |
| | டிஞ்சர் டிஜிடாலிஸ் (Tincture Digitalis) | ,, | 2 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | டிராம் | 1 |
| | தண்ணீர் | ,, | 4 |

ஒன்று சேர்த்துக் கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்துவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (8) | சோடியம் நைட்ரேட் (Sodium Nitrate) | கிரைன் | 1 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | துளி | 25 |
| | இன்பியூஷன் டிஜிடாலிஸ் (Infusion Digitalis) | டிராம் | 2 |

ஒன்று சேர்த்துக் கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (9) | கிரியோசோட் (Creasote) | துளி | 10 |
| | பொட்டாஷியம் ஐயோடைட் (Potassium Iodide) | கிரைன்ஸ் | 2 |
| | ஸ்பிரிட் வைனம் ரெக்டிபைட் (Spirit Vinum Rectified) | துளி | 10 |
| | எக்ஸ்டிராக்ட் கிளிசரிசா லிக்குட் (Extract Glycerrhiza Liquid) | டிராம் | 2 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துக் கலந்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

கபசுரத்தில் நெஞ்சில் அதிகமான சளிக்கட்டி திட்டுமுட்டடித்தால் சளியை இளகும்படியாக மேல் பிரயோகமாக:—

(10) அன்டிபிளாஜெஸ்டைன் (Antiphlogistine) என்னும் மருந்தை சற்றுநேரம் சுடுதண்ணீர் வைத்துச் சூடுண்டாக்கி, அதை ஒரு மெல்லிய

துணியில் தடவி நெஞ்சுக்குழியில் போட்டு வைக்கலாம் அல்லது ஆளி விரையைக் களிக்கிண்டிச் சுடச்சுட ஒரு துணியில் தடவி நெஞ்சுக்குழியில் போட்டு வைக்கலாம்.

சுரப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

**அம்மைச்சுரம்:—**

அம்மை என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**அர்த்தராத்திரிச்சுரம்:—**

சாமசுரம் என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**அற்ப சுரம்—Simple Fever.**

இதைத் தனிச்சுரம், தருணச்சுரம் என்றும் சொல்லப்படும். தேகோஷ்ணம் 98-டிகிரிக்குக் கொஞ்சம் அதிகப்பட்டாலும், சுரம் என்றுதான் சொல்லவேண்டும். அற்பசுரம் 101, 102-டிகிரிக்குமேல் உஷ்ணமிருக்காது.

ஜீரணிக்காத ஆகாரங்களைப் புசிப்பதினாலும், ஈரத்தில் நடமாடல், குளிரிலிருத்தல் முதலிய இயற்கைப்பேதத்தாலும், பல் முளைக்கையிலும் பெரும்பாலும் அற்பசுரம் ஏற்படுகிறது.

சாதாரணமாக உடம்பு அசதி, களைப்பு, பசிமந்தம், தாகம், நாவரட்சி, தலை நெற்றி முதலிய விடங்களில் வலி முதலியவைகளும், மூத்திரம் பெய்யும் போது எரிச்சலும் உண்டாகும். மூத்திரம் மஞ்சள் நிறமாக விறங்கும்; சர்மம் வரண்டிருக்கும்; நாவில் மாவுப்படிந்திருக்கும்; தொண்டைப் புகைச்சல், இருமல் இவைகளேற்படும்; நாடி தீவிரமாகவிருக்கும்; காலை நேரத்தில் சுரம் சற்றுத் தணிந்து, சாயந்திரங்களில் சற்று அதிகப்பட்டிருக்கும்; நித்திரையில் வாய்ப்பிதற்றும்.

**சிகிச்சை**

தலை அதிக சூடாயிருந்தால்:—

(1) காடி அவுன்ஸ் $\frac{1}{2}$ தண்ணீர் அவுன்ஸ் $\frac{1}{2}$

ஒன்று சேர்த்துத் தலையில் தடவலாம்.

(2)

| | | | |
|---|---|---|---|
| தூதுவேளையிலை | ஒருபிடி | கோஷ்டம் | ரூபாயெடை 1 |
| கண்டங்கத்திரிவேர் | | சிற்றரத்தை | ,, 1 |
| | ரூபாயெடை 1 | சுக்கு | ,, 1 |
| முசுமுசுக்கையிலை | ,, 1 | திப்பிலி | ,, 1 |
| கொடிவேலி | ,, 1 | மிளகு | ,, 1 |

ஒன்று சேர்த்துப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, 1½-அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | காய்ந்த ஆடுதின்னாப்பாலை வேர் மேல்பட்டை | ரூபாயெடை | 3 |
| | கருவாப்பட்டை | ,, | 3 |

ஒன்று சேர்த்து, எலுமிச்சம் பழச் சாற்றால் மைபோலரைத்துக் குன்றிமணியவ்வளவு பெரிய அளவாக மாத்திரைகள் செய்து காயவைத்து:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விஷ்ணுகிரந்தி | ரூபாயெடை | ½ | சுக்கு | ரூபாயெடை | ½ |
| இண்டு | ,, | ½ | கடுக்காய் | ,, | ½ |
| வாலுழுவை | ,, | ½ | | | |

ஒன்று சேர்த்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயம் அவுன்ஸ் ஒன்றில், காலை மாலை ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (4) | வெட்டிவேர் | ரூபாயெடை | 1 | தோல் நீக்கிய சுக்கு | ரூபாயெடை | 1 |
| | விலாமிச்சம்வேர் | ,, | 1 | செஞ்சந்தனம் | ,, | 1 |
| | கோரைக்கிழங்கு | ,, | 1 | பற்பாடகம் | ,, | 1 |

ஒன்று சேர்த்துத் தட்டி, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை 1, 1½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (5) | தேவதாரு | ரூபாயெடை | 1 | சிறுவழுதலை | ரூபாயெடை | 1 |
| | கொத்தமல்லி | ,, | 1 | பெருவழுதலை | ,, | 1 |
| | சுக்கு | ,, | 1 | | | |

இவற்றை 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, 1½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வாலாம்.

(6) கோரோசனை மாத்திரை; கஸ்தூரி மாத்திரை; பால சுரஹர மாத்திரை; சுரபூபதி மாத்திரை; பாலசுர குடோரி மாத்திரை; பாலசுர விஷஹர மாத்திரை இவைகளைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (7) | காலோமல் (Calomel) | கிரைன் | 1 |
| | சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 1 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரே தடவையாக வாயில் கொட்டி விழுங்கச் செய்தால் மலம் இரண்டொருமுறை வெளியாகி சுரமும் தணியும். இதை இரவில் படுக்கைக்குப் போகுமுன் கொடுத்தல் நல்லது.

| | | | |
|---|---|---|---|
| (8) | கொய்னேன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 12 |
| | ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil.) | துளி | 24 |
| | சர்க்கரை | டிராம் | 2 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

முதலில் கொய்னேன் சல்பஸை, ஆஸிட் சல்பியூரிக்டில் விட்டுக் கரைத்துக் கொண்டு, பின் ஒன்று சேர்த்துக் காச்சல் கொஞ்சம் மட்டாயிருக்கும் சமயம் நாள் ஒன்றுக்கு 3-வேளை 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி வீதமும், 3—10-வயதுக் குழந்தைகளுக்கு இரண்டு தேக்கரண்டி வீதமும் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (9) | எப்ஸம் ஸால்ட் (Epsom Salt) | கிரைன்ஸ் | 8 |
| | டிஞ்சர் சென்னு கோ (Tincture Sennae Co) | துளி | 6 |
| | டிஞ்சர் ஜிஞ்ஜிபெரிஸ் (Tincture Zingiberis) | ,, | 5 |
| | தண்ணீர் | டிராம் | 1 |

ஒன்று சேர்த்து, ஒரே தடவையாக 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குக் கொடுக்க, 4, 5-முறை மலம் வெளியாகி சூடு தணியும். பின்னும் காச்சலிருந்தால் 109-வது பக்கம் 8-வது இலக்கமுள்ள கொய்னேன் மிஸ்ச்சர் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (10) | லிக்கர் அமோனியா அஸிட்டேட் (Liquor Ammonia Acetate) | டிராம் | 1 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | துளி | 10 |
| | பொட்டாஷியம் ஸிட்ரஸ் (Potassium Citras) | கிரைன்ஸ் | 15 |
| | ஆக்குவா காம்பர் (Aqua Camphor) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருமுறை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

சுரப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

## அன்பஞுதி சுரம்:—

காச்சல் கொடூரமாயிருக்கும்; கண் சிவந்திருக்கும்: நாவரட்சியதிகமாயிருக்கும்; குழந்தை அலறியலறி அழும்; மலச்சிக்கல் ஏற்படும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | கோரோசனை | ரூபாயெடை ½ | கோஷ்டம் | ரூபாயெடை | ½ |
| | அதிமதுரம் | ,, ½ | சண்பகப்பூ | ,, | ½ |
| | விலாமிச்சம்வேர் | ரூபாயெடை ½ | மாசிப்பத்திரி | ,, | ½ |
| | வெட்டிவேர் | ,, ½ | சாஸ்திரப்பேதி | ,, | ½ |
| | | | ஏலம் | ,, | ½ |

இவைகளை ஒன்று சேர்த்துப் பச்சைவெட்டி வேர் தண்டின் சாற்றிலாவது முலைப்பாலிலாவது மைபோலரைத்துக் குன்றிமணியவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து காயவைத்து, 1-அவுன்ஸ் முலைப்பாலில் ஒரு மாத்திரை வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

முதலில் மலச்சிக்கலைப் போக்க:—

| | | | |
|---|---|---|---|
| (2) | காலோமல் (Calomel) | கிரைன் | 1 |
| | சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 1 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரே தடவையாக வாயில் கொட்டி விழுங்கச் செய்யலாம் 2, 3-தரம் மலம் கழிந்து சூடு தணியும்.

மலம் வெளியாகி சூடு தணிந்தவுடன்:—

| | | | |
|---|---|---|---|
| (3) | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 12 |
| | ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | துளி | 24 |
| | சர்க்கரை | டிராம் | 2 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

முதலில் கொய்னைன் சல்பஸை ஆஸிட் சல்பியூரிக் டில் விட்டுக் கரைத்துக் கொண்டு, பின் ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு 3-தடவை 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டியளவாகவும், 3-முதல் 10-வயதுக் குழந்தைகளுக்கு இரண்டு தேக்கரண்டியளவாகவும் கொடுத்து வரலாம்.

சுரப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

அஜீரணச் சுரம்:—

அதிகமான ஆகாரம் உட்கொள்ளுவதினாலும், சீக்கிரம் ஜீரணிக்கக்கூடாத பதார்த்தங்களைப் புசிப்பதினாலேயும், அவைகள் சரியானவிதமாய் ஜீரணியாமல் குறித்தகாலத்திற் கதிகமாய் வயிற்றில் தங்கி புளிப்பையுண்டாக்கி, அதனால் காச்சல் ஏற்படுகிறது. அஜீரணச்சுரத்தில் பசிமந்தம், விக்கல், கொட்டாவி, புளித்தேப்பம் முதலிய குறிகள் ஏற்படும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | சுக்கு | ரூபாயெடை | $\frac{3}{4}$ | நுணாயிலை (மஞ்சணெத்தி) | ஒருபிடி |
| | மிளகு | ,, | $\frac{3}{4}$ | வேப்பங்கொழுந்து | ,, |
| | ஓமம் | ,, | $\frac{3}{4}$ | | |

முதலில் நுணாயிலையும், வேப்பங்கொழுந்தையும் ஒரு சட்டியில் போட்டு வறுத்து, சிவந்து வரும் சமயம் மற்றவைகளையும் தூள் செய்து போட்டு, 24-அவுன்ஸ் தண்ணீர் விட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சி வடித்து, ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) காட்டாத்திப்பூ | ரூபாயெடை | 1 | வெட்டிவேர் | ரூபாயெடை | 1 |
| வில்வப்பழம் | ,, | 1 | குருவிவேர் | ,, | 1 |
| யானைத்திப்பிலி | ,, | 1 | | | |

எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, 1½-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 | பெருமாத்துப்பட்டை | ரூபாயெடை | 1 |
| சிற்றுமுட்டி | ,, | 1 | குருவிவேர் | ,, | 1 |
| பூனைக்காஞ்சொறி | ,, | 1 | அதிவிடயம் | ,, | 1 |
| பற்பாடகம் | ,, | 1 | கோரைக்கிழங்கு | ,, | 1 |
| வெட்டிவேர் | ,, | 1 | கொத்தமல்லி | ,, | 1 |

ஒன்றாகச் சேர்த்துப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு நன்றாகப் பிசைந்து 6-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் 1, 1½-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

சுரப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (4) எப்சம் சால்ட் (Epsom Salt) | கிரைன்ஸ் | 40 |
| மெக்னிஷியா கார்போனஸ் (Magnesia Carbonus) | ,, | 5 |
| ஆக்குவா அனிசி (Aqua Anisi) | அவுன்ஸ் | ½ |

ஒன்று சேர்த்துக் கலந்து, ஒரே தடவையாகக் கொடுக்கலாம். 4-மணி நேரத்தில் மலம் வெளியாகிக் காச்சலும் தணியாவிட்டால் பின்னும் ஒருமுறை மட்டும் கொடுக்கலாம்.

(5) கோரோசனை மாத்திரை; பாலசஞ்சீவி மாத்திரை கொடுக்கலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

**அஸ்தி சுரம்:—**

எலும்புகளில் அனல் ஏற்படுவதினால் இந்த சுரம் உண்டாகிறது. சுரம் அதிகமாயிருக்கும்; திரேகம் மெலிந்து வற்றும்: அடிக்கடி வெண்மையான வாந்தியுண்டாகும்; உடல் முழுவதும் நச்சு வலியாகவிருக்கும்; இரவில் சுரம் அதிகமாயிருக்கும்; இருமலேற்படும்; நாட் செல்லச்செல்ல உடல் வெளுத்து வீங்கிக் காணும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) சாஸ்திரபேதி | ரூபாயெடை | ¾ | நெல்லிவற்றல் | ரூபாயெடை | ¾ |
| அதிமதுரம் | ,, | ¾ | சண்பகப்பூ | ,, | ¾ |
| கோஷ்டம் | ,, | ¾ | கொத்தமல்லி | ,, | ¾ |
| சந்தனம் | ,, | ¾ | விலாமிச்சம்வேர் | ,, | ¾ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஏலம் | ,, | $\frac{3}{4}$ | பருத்திக்காய்ச்சாறு | அவுன்ஸ் | 1 |
| சீரகம் | ,, | $\frac{3}{4}$ | பொன்னுங்காணிச்சாறு | ,, | 12 |
| கொன்றைப்பிசின் | ,, | $\frac{3}{4}$ | பசுநெய் | ,, | 24 |
| உருத்திராக்ஷம் | ,, | $\frac{3}{4}$ | | | |

பொடிக்கவேண்டியவற்றைப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, 3-ரூபாயெடை சீனிசேர்த்துக் கலக்கி வைத்துக்கொண்டு, காலை மாலை $1\frac{1}{2}$, 2- தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

வீரசூதசிந்தாமணி . கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

சுரப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

**ஆம சுரம்:—**

பகலில் சுரம் அதிகமாயிருக்கும்; நடுக்கல் காணும்; திரேகம் மெலியும்; தலை வலியிருக்கும்; கைகால் குளிர்ந்திருக்கும்; குழந்தை சீறியழும்.

சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | சங்கம்வேர் | ரூபாயெடை 3 | | ஓமம் | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| | தூதுவேளைவேர் | ,, | 3 | மிளகு | ,, | $\frac{1}{2}$ |
| | வேலிப்பருத்திவேர் | ,, | 3 | வசம்பு | ,, | $\frac{1}{2}$ |
| | பொன்னுங்காணிவேர் | ,, | 3 | திப்பிலி | ,, | $\frac{1}{2}$ |
| | பொடுதலை | ,, | $\frac{1}{2}$ | வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{1}{2}$ |
| | | | | ஆமையோடு | ,, | $\frac{1}{2}$ |

வேர்களையும் பொடுதலையும் தட்டி, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, அதில் ஓமம் முதல் ஆமையோடு 6-சரக்கையும் ஒரு வெள்ளைத்துணியில் முடிந்துபோட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டும்வரைக் காய்ச்சி கஷாயத்தை வடித்து, அதில் துணியில் முடிந்திருப்பவைகளை மைபோலரைத்துக் கலக்கி, 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம். (பத்தியம்)

| | | | | |
|---|---|---|---|---|
| (2) | வேலிப்பருத்திக்காம்பு | ஒருபிடி | நுணாயிலை (மஞ்சநெத்தி) | |
| | பாவட்டையிலை ஈர்க்கு | ,, | யீர்க்கு | ஒருபிடி |
| | முருங்கையீர்க்கு | ,, | பொடுதலை | ,, |

நசுக்கி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, அதில்:—

| | | | | |
|---|---|---|---|---|
| ஓமம் | ரூபாயெடை | $\frac{1}{2}$ | வசம்பு | ரூபாயெடை $\frac{1}{2}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{2}$ | ஆமையோடு | ,, $\frac{1}{2}$ |

இவற்றைஒரு வெள்ளைத் துணியில் முடிந்துபோட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிக் கஷாயத்தை வடித்து, அதில் துணியில் முடிந்திருப்பவைகளை

மைபோலரைத்துக் கலக்கி, 1, 1½-அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு மூன்று வேளை கொடுத்து வரலாம்.

சுரப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

ஆமாதிசாரச் சுரம்—Dysentric Fever.

அதிகமான உஷ்ணத்தினால், ஜீரணக்கருவிகள் அழலைக்கண்டு சுரம் ஏற்படுகிறது. மலத்துவாரம் கடுப்பாயிருக்கும்; மலத்துடன் சீதமும், இரத்தமும் விழும்; திரேகம் வெளுக்கும்; கைகால் சோரும்; இருமல் உண்டாகும் மொத்தத்தில் சொல்லவேண்டுமானால், சீதபேதியுடன் கடுஞ்சுரமுமிருக்கும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | சுக்கு | ரூபாயெடை 1 | ஓமம் | ரூபாயெடை | 1 |
| | திப்பிலி | ,, 1 | கடுக்காய்ப்பூ | ,, | 1 |
| | மிளகு | ,, 1 | சிறுதேக்கு | ,, | 1 |
| | சாதிக்காய் | ,, 1 | இலவம்பிசின் | ,, | 1 |
| | கிராம்பு | ,, 1 | விளாம்பிசின் | ,, | 1 |
| | சீமையதிவிடயம் | ,, 1 | வில்வப்பிசின் | ,, | 1 |
| | கழற்சிப்பருப்பு | ,, 1 | மாதுளம்பிஞ்சு | ,, | 1 |
| | சீரகம் | ,, 1 | வில்வப்பழச்சதை | ,, | 1 |

இவற்றையெல்லாம் ஒன்றாக ஒரு மண்சட்டியில் போட்டு, கொஞ்சம் நல்லெண்ணெய் விட்டு வாசனை வரும் வரை வறுத்து, வடிகட்டிய தயிர்த் தண்ணீர் விட்டு மைபோலரைத்து, 1, 2-கழற்சிக்காயளவாக ஒரு அவுன்ஸ் தயிர்த்தண்ணீரில் கலக்கிக் கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (2) | சாதிக்காய் | ரூபாயெடை 1 | புளியங்கொட்டை மேற்றோல் | |
| | புளியம்பருப்பு | ,, 1 | | ரூபாயெடை 1 |

நன்றாகத் தூள்செய்து வைத்துக்கொண்டு, வில்வப்பழச் சதையுடன் சேர்த்துப் பிசைந்து ஒரு சுண்டக்காய்ப் பிரமாணமாய்க் கொடுத்து வரலாம்.

(3) மகாரசப்பஸ்பம்; சுவர்ணவெள்ளிப்பஸ்பம் இவைகளைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (4) | பல்விஸ் இப்பிகாக் (Pulvis Ipecace) | கிரைன்ஸ் | 1 |
| | பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக் (Pulvis Creta Aromatic) | ,, | 5 |

ஒன்று சேர்த்து மூன்று பொட்டலமாகப் பிரித்து, நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு பொட்டலம் வீதம் 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குத் தேனில் குழைத்தாகிலும் வெறும் வாயில் கொட்டிச் சப்பி விழுங்கும்படியாகிலும் கொடுத்து வரலாம்.

## இரத்த சுரம்:—

சுரம் கடுமையாயிருந்து பிறகு இலேசாய் விடும்; சற்று விட்டு மறுபடியும் கடுமையாய்க் காயும்; வயிற்றோட்டமும், மயக்கமும் காணும்; நாவரட்சி ஏற்படும். கைகால் சோர்ந்து குளிர்ந்திருக்கும்.

சிகிச்சை

(1) நாவிக்கிழங்கு ரூபாயெடை 1 வெங்காரம் ரூபாயெடை 1
திப்பிலி ,, 1 * சுத்திசெய்தசாதிலிங்கம் ,, ½

வேப்பம்பழச்சாற்றால் 6 மணி நேரம் மைப்போலரைத்து, மிளகவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து காயவைத்து:—

சீரகம் ரூபாயெடை ½ கிராம்பு ரூபாயெடை ½

ஒன்றாய் 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 2-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயம் ஒரு அவுன்ஸில் ஒரு மாத்திரை வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(2) மகாரசப்பஸ்பம்; சுவர்ண வெள்ளிப் பஸ்பம் கொடுத்துவரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

## இராச்சுரம்:—

சாமச்சுரம் என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## இன்புளுவென்ஸா—Influenza

இன்புளுவென்ஸாவென்பது ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குத் தொத்தும் தன்மையுள்ள விஷக்கிருமிகளால் உண்டாகக்கூடிய விஷத்தன்மையுள்ள கடுமையான சளிசுரமாகும். இது மிகவும் அபாயகரமான வியாதி.

இன்புளுவென்ஸாச்சுரம், குழந்தைகளுக்கு வருவதில்லையென்று சொல்லப்படுகிறதாயினும், சில சமயங்களில் தாய்க்கும், குழந்தையிடம் நெருங்கிப் புழங்குவோருக்கும் ஏற்படுவதால், அதன் காரணமாய்க் குழந்தைகளுக்கும் இந்நோய் சம்பவிக்கிறது.

ஆரம்பத்தில் சாதாரணமாகச் சளிப்பிடித்திருப்பதைவிட சற்று அதிகமாயிருக்கும். உட்புறம் மிகுதியாக விஷத்தன்மைக் கொண்டிருந்தாலும், வெளித்தோற்றத்திற்கு தோன்றாமலேயிருக்கும். இன்புளுவென்ஸாசுரத்தில் திரேகோஷ்ணம் 102-டிகிரிக்கு மேலாகவேதானிருக்கும். முதுகில் ஒரு உணர்ச்சியுடன் ஒருவித நோயுமிருக்கும். தலைவலி ஏற்படும். கை கால்களில் அசதியான வலியுண்டாகும். சில சமயங்களில் தொண்டைப் புகைச்சலும், வயிற்றோட்டமுமிருக்கும்.

---

* சுத்திமுறை 6-ம் பாகம் பார்க்கவும்.

**சிகிச்சை**

(1) ஆடாதோடையிலை ஒருபிடி கோரைக்கிழங்கு ரூபாயெடை 1
சிறுகாஞ்சொறி ,, சுக்கு ,, 1
வேப்பிலையீர்க்கு ,,

தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு 3-வேளைக் கொடுத்து வரலாம்.

(2) கடுக்காய்ப்பூ ரூபாயெடை 1 மதுக்காரை ரூபாயெடை 1
திப்பிலி ,, 1 கோஷ்டம் ,, 1

ஒன்று சேர்த்துச் சூரணித்து, வஸ்திரகாயஞ்செய்து, அரைக்கால் ரூபாயெடைச் சூரணம் வீதம் நாள் ஒன்றுக்கு 3-வேளை தேனில் குழப்பிக்கொடுத்து வரலாம்.

(3) கோரோசனை மாத்திரை; சுரபூபதி மாத்திரை; பாலசஞ்சீவி மாத்திரை கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(4) பினசோனி (Phenazoni) கிரைன்ஸ் 3
ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) துளி 3
சிரப் சிம்பிள் (Syrup Simple) ,, 10
தண்ணீர் டிராம் 4

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 6-மணிநேரத்திற்கொருமுறை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

(5) பைனசெட்டின் (Phenacetin) கிரைன்ஸ் 2
காபின் சிட்ரஸ் (Coffein Citras) ,, 1

ஒன்றாய்க் கலந்து, காச்சலில் அதிக உஷ்ணத்தைத் தணிக்க 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம். (இது உஷ்ணத்தையும், வலியையும் தணிக்குமேயல்லாது, காச்சலை சொஸ்தம் செய்யாது.)

குறிப்பு:—இதை மறுபடி கொடுக்க நேர்ந்தால் 8-மணி நேரத்திற்குப் பின் தான் கொடுக்கலாம்.

(6) பல்விஸ் இப்பிகாக் கோ (Pulvis Ipecace Co) கிரைன் $\frac{1}{2}$

இதை வயிற்றோட்ட மதிகமிருந்தால், நாள் ஒன்றுக்கு 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு மூன்றுவேளை இந்த அளவில் கொடுத்து வரலாம்.

(7) சோடா ஸாலிசிலஸ் (Soda Salicylas) கிரைன்ஸ் 5
பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) ,, 5
ஆக்குவா சின்னமோனி (Aqua Cinnamoni) டிராம் 2

| | | |
|---|---|---|
| டிஞ்சர் கார்டம் கோ (Tincture Cardamom Co) | துளி | 15 |
| ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | அவுன்ஸ் | 1 |

உப்புகள் நன்ருய்க் கரையும்படி செய்து எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துக்கொண்டு 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (8) | சோடா சாலிசிலஸ் (Soda Salicylas) | கிரைன்ஸ் | 5 |
| | அமோனியம் கார்போனஸ் (Ammonium Carbonas) | ,, | 5 |
| | டிஞ்சர் ஆரண்டி (Tincture Auranti) | துளி | 10 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4 மணி நேரத்திற் கொருமுறை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## உட் சுரம்—Internal Fever

காச்சலின் உக்கிரகம் வெளிக்குத் தோன்ருமல், உள்ளுக்குள்ளேயே சுரம் மிகுதியாக விருப்பதற்கு உட்சுரமென்று சொல்லப்படும்.

உடம்பு உட்காங்கையாக விருக்கும்; உதடு வரண்டு நாவரட்சி யேற்படும்; கண்ணெரிச்சல் அதிகமாயிருக்கும்; ஆயாசமும் மயக்கமுண்டாகும்; மலச் சிக்கல் யேற்படும்; மூத்திரம் பெய்யும்போது நீர்த்தாரை எரிந்து; மூத்திரம் சூடாக விறங்கும்; தொண்டைப் புகைச்சலு மிருமலுமிருக்கும்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | சிறுவழுதலே | ரூபாயெடை | 1 | சுக்கு | ரூபாயெடை | 1 |
| | பெருவழுதலே | ,, | 1 | கொத்தமல்லி | ,, | 1 |
| | தேவதாரு | ,, | 1 | | | |

ஒன்ருகத் தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண் டக்காய்ச்சிய கஷாயத்தில் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதமாக நாள் ஒன்றுக்கு 3-வேளைக் கொடுத்து வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | சோற்றுக்கற்ருழைச்சாறு | அவுன்ஸ் | 24 | அதிமதுரம் | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| | இளநீர்த்தண்ணீர் | ,, | 24 | சீரகம் | ,, | $\frac{3}{4}$ |
| | பசும்பால் | ,, | 24 | சாதிக்காய் | ,, | $\frac{3}{4}$ |
| | சிற்ருமணக்கெண்ணே | ,, | 24 | சிறுநாகப்பூ | ,, | $\frac{3}{4}$ |
| | கணேப்பூண்டு | ரூபாயெடை | $1\frac{1}{2}$ | செண்பகப்பூ | ,, | $\frac{3}{4}$ |
| | சந்தனம் | ,, | $1\frac{1}{2}$ | கருஞ்சீரகம் | ,, | $\frac{3}{4}$ |
| | ஆமையோடு | ,, | $1\frac{1}{2}$ | சாதிப்பத்திரி | ,, | $\frac{1}{2}$ |
| | | | | கொத்தமல்லி | ,, | $1\frac{1}{2}$ |

இதில், கணேப்பூண்டு, சந்தனம், ஆமையோடு இவை மூன்றையும் இள நீர்த் தண்ணீர்விட்டு மைபோலரைத்தும், அதிமதுர முதல் கொத்தமல்லிவரை

யுள்ள சாக்குகளைப் பசும்பால் விட்டரைத்தும் ஒன்று சேர்த்துச் சிற்றாமணக் கெண்ணெயில் கலக்கிக் காய்ச்சி வடித்து, காலை மாலை ½, 1-தேக்கரண்டியள வாகக் கொடுத்து வரலாம்.

(3) கோரோசனை மாத்திரை; கஸ்தூரி மாத்திரைக் கொடுத்து வரலாம். செய் முறை 6-ம் பாகம் காண்க.

(4) ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) துளி 30
லைக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) டிராம் 1
சிரப் ஆரண்டி (Syrup Auranti) துளி 40
தண்ணீர் அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்து, 4-மணி நேரத்திற்கொருதரம் 1-முதல் 3-வயதுக் குழந்தை களுக்கு ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

(5) பல்விஸ் அன்டிமோனியாலிஸ் (Pulvis Antimonialis) கிரைன்ஸ் ½

ஒன்று முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குச் சீனியில் கலந்து 4-மணி நேரத்திற் கொருதரம் இந்த அளவாகக் கொடுத்து வரலாம்.

**கடுமையான சளிசுரம்:—**

இன்புளுவென்ஸா வென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**கணைச்சுரம்:—**

கணைரோகத்தினால் குழந்தைகளுக்கு திரேகோஷ்ணம், எக்காலமும் மிகுதிப் பட்டுக்கொண்டே யிருக்கும். இதைக் கணைச்சூடு என்று சொல்லுவர். இது 12-வயது வரை சிறுவர்களைத் தொடர்ந்துவரும்.

சதாகாலம் திரேகோஷ்ணம் 101, 102-டிகிரி உஷ்ணமாகவேயிருக்கும், நாவுலர்ந்து, நாவரட்சியாகவேயிருக்கும்; திரேகம் இளைத்துவிடும்; சுவாச மானது அனல்காற்று வீசும்; கணைச்சுரம் திரேகத்தில் ஊறி நின்றுவிட் டால், நெஞ்சுக்கூடு கட்டி அஸ்திகள் க்ஷீணமடைந்து, சதா ரோகத்திற் குள்ளாக்கிக்கொண்டே யிருக்கும்.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) அதிமதுரம் | ரூபாயெடை | 1 | கோஷ்டம் | ரூபாயெடை | 1 |
| ஏலம் | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| சண்பகப்பூ | ,, | 1 | கோரைக்கிழங்கு | ,, | 1 |

ஒன்று சேர்த்துச் சூரணித்து, துணியில் வடிகட்டி அரைக்கால் ரூபா யெடை சூரணத்துடன் சமன் சீனி சேர்த்து, காலை மாலை கொடுத்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) ஆவாரைவேர் | ரூபாயெடை | $1\frac{1}{2}$ | சிறு அம்மாம்பச்சரிசி | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| சரக்கொன்றைவேர் | ,, | $1\frac{1}{2}$ | ஏலம் | ,, | $1\frac{1}{2}$ |
| விஷ்ணுக்கிராந்திவேர் | ,, | $1\frac{1}{2}$ | சீரகம் | ,, | $1\frac{1}{2}$ |
| நிலக்குமிழம்வேர் | ,, | $1\frac{1}{2}$ | நெருஞ்சில் | ,, | $1\frac{1}{2}$ |
| சிற்றாமணக் கெண்ணெய் | | | | அவுன்ஸ் | 12 |

ஒன்று சேர்த்து, தட்டிப்போட்டுக் காய்ச்சி வடித்துக் காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(3) கணத்தெண்ணை கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (4) ஸ்பிரிட் ஈதர் நைட்ரோசி (Spirit Aether Nitrosi) | துளி | 30 |
| லிக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liqnor Ammonia Acetatis) | டிராம் | 1 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | துளி | 40 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுதரம் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

(5) பல்விஸ் அன்டிமோனியாலிஸ் (Pulvis Antimonialis) கிரைன்ஸ் $\frac{1}{2}$

ஒன்றுமுதல் மூன்று வயதுக் குழந்தைகளுக்கு சமன் சீனிசேர்த்து, 4-மணி நேரத்திற் கொருதரம் கொடுத்து வரலாம்.

**கபசுரம்:—**

அபினியாச சன்னிச்சுரம் என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**கபவாத சுரம்**—Broncho Pneumonia

இது அபினியாச சந்நிசுரத்தில் சேர்ந்ததென்றாலும், கொடுமையை விரைவில் விளைவிக்கும் தன்மை வாய்ந்தது. இரத்தப்பொடி நாளங்களிலெல்லாம் சளி பிடித்துக்கொண்டு தீமையை உண்டாக்கும். இதை டபிள் நிமோனியா (Double Pneumonia) என்றும் சொல்லுவர். இதற்கு அபினியாச சன்னியின் குணங்கள் மிகுதிப்பட்டிருக்கும்.

சிகிச்சை

அபினியாச சன்னிசுரத்தின் சிகிச்சைகளையே செய்து வரலாம்.

**குளிர்ச்சுரம்**—Aque

இதையே சீதச்சுரமென்றும் சொல்லுவர். காச்சல் 102-டிகிரிக்கு மேலாக வேயிருக்கும்; குளிர் தாங்க முடியாது; திரேகாதியந்தமும் நடுக்கம் உண்டாகும்; தாவரட்சியுண்டாகும்; பசிமந்தமுமேற்படும்.

### சிகிச்சை

(1) சுக்கு ரூபாயெடை 1 திப்பிலி ரூபாயெடை 1
மிளகு ,, 1

ஒன்றாகச் சூரணித்துத் துணியில் வஸ்திரகாயஞ்செய்து, அரைக்கால் ரூபாயெடையளவாக மோர்த்தண்ணீரிலாவது, புளித்தக் கள்ளிலாவது கொடுத்து வரலாம்.

(2) வெட்பாலைவிரை ரூபாயெடை 1 சீந்தில்தண்டு ரூபாயெடை 1
தகரைவிரை ,, 1 சிறுவழுதலை ,, 1
அதிவிடயம் ,, 1 நொச்சியிலை ,, 1
சுக்கு ,, 1 கரிசலாங்காணி ,, 1
குரோசாணி ஓமம் ,, 1

ஒன்று சேர்த்து நசுக்கி, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(3) சீந்தில்தண்டு ரூபாயெடை 1 கோரைக்கிழங்கு ரூபாயெடை 1
நிலவழுதலை ,, 1 நெல்லிவற்றல் ,, 1
சுக்கு ,, 1

ஒன்று சேர்த்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயம் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸில்:—

திப்பிலிச்சூரணம்ரூபாயெடை $\frac{1}{8}$ தேன் தேக்கரண்டி $\frac{1}{2}$

ஒன்று சேர்த்துக் கலக்கி காலை மாலை கொடுத்து வரலாம்.

(4) புரசனிலை ரூபாயெடை 1 சோற்றுக்கற்றாழைச்சோறு
புரசம்பட்டை ,, 1 ரூபாயெடை 1

ஒன்றாகச் சேர்த்துத் தட்டிப்பிழிந்தச் சாற்றில் $\frac{1}{2}$, 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(5) பச்சைக்கற்பூரம் ரூபாயெடை 1 சாதிக்காய் ரூபாயெடை 1
இலவங்கப்பட்டை ,, 1 † சுத்திசெய்த நேர்வாளம் ,, 1

இவற்றைச் சேர்த்துச் சோற்றுக்கற்றாழைச்சாற்றால் மைபோலரைத்து, உளுந்துப் பெரிய மாத்திரைகள் செய்துக் காயவைத்துக் காலையில்மட்டும் ஒரு மாத்திரையை கொஞ்சம் சீனியுடன் சேர்த்துக்கொடுத்து, கால்மணி நேரத்திற்குப்பின்:—

குப்பைமேனியிலை ரூபாயெடை $\frac{1}{2}$ கொடிவேலியிலை ரூபாயெடை $\frac{1}{2}$
சுக்கு ,, $\frac{1}{2}$

† 60-ம் பக்கம் பார்க்கவும்.

இவற்றை மைபோலரைத்துச் சுண்டக்காயளவாக கொடுத்துவரலாம்.

(6) மிளகு ரூபாயெடை $\frac{1}{8}$ கழற்சிப்பருப்பு ரூபாயெடை $\frac{1}{2}$
பெருங்காயம் ,, $\frac{1}{4}$

ஒன்று சேர்த்து தேன்விட்டு மைபோலரைத்து, 30-மாத்திரைகளாகப் பிரித்து உருட்டி, காலை மாலை ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

(7) பாலசுரஹர மாத்திரை; கொவ்வைக்காய் கோரோசனை மாத்திரைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (8) | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 3 |
| | ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | துளி | 4 |
| | சிம்பிள் சிரப் (Simple Syrup) | டிராம் | $\frac{1}{2}$ |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

முதலில் கொய்னைன் சல்பஸை ஆஸிட் சல்பியூரிக்டில் விட்டுக்கரைத்துக் கொண்டு ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை, தடவை ஒன்றுக்கு ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (9) | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 48 |
| | அண்டிபெப்ரின் (Antifebrine) | ,, | 72 |
| | கம் டிரககன் (Gum Tragacanth) | ,, | 80 |

இத்துடன் பசையாகும்படியாகக் கொஞ்சம் தண்ணீர்விட்டு நன்று யரைத்து, 48-மாத்திரைகளாகப் பிரித்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 6-மணிநேரத்திற் கொருதரம் ஒரு மாத்திரைவீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (10) | ஆஸிட் சிட்ரிக் (Acid Citric) | கிரைன்ஸ் | 10 |
| | அக்கேஷிபா கம்மி (Acasia Gummi) | ,, | 10 |
| | கொய்னெட்டம் (Quinetum) | ,, | 40 |

முதலில் ஆஸிட் சிட்ரிக்கையும், அக்கேஷிபா கம்மியையும் கொஞ்சம் தண்ணீர் விட்டு அரைத்துப் பசையாகச் செய்துகொண்டு, பின் கொய்னெட்டத்தைச் சேர்த்துப் 30-மாத்திரைகளாகப் பிரித்து, நாள் ஒன்றுக்கு 3-தடவை, தடவை ஒன்றுக்கு ஒரு மாத்திரை வீதம் 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஆகாரத்திற்குப் பின் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (11) | டிஞ்சர் ஒபியம் (Tincture Opium) | டிராம் | $\frac{1}{2}$ |
| | லினிமென்ட் சொபோனிஸ் (Liniment Soponis) | ,, | $\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்து, நடுமுதுகில் குளிர் வந்திருக்கும் சமயம் தேய்க்கக் குளிர் நிற்கும்.

## சந்நிபாத சுரம்—Thyphoid

இதை விஷ சன்னிச்சுரம் என்றும் சொல்வதுண்டு. இது தொத்து ரோகக் கிருமிகளால் உண்டாகும் அபாயகரமான வியாதி.

சுரம் ஆரம்பத்தில் 101, 102-டிகிரி இருக்கும். ஒவ்வொரு நாளும் காலையில் 2-டிகிரிக் குறைந்து, சாயந்திரமானவுடன் 2-டிகிரியதிகப்பட்டுப்போகும். காச்சல் ஆரம்பித்த இரண்டொரு நாட்களுக்குப் பின், நெற்றியில் வலியுண்டாகும். சிறுகுடலில் அழலைக்கண்டு வலியுண்டாகி, அதனால் வயிற்ரேட்டமும் ஏற்படும். வெளிப்படும் மலமானது அதிக துர்நாற்றமடிக்கும். மலம் சிலசமயம் குழம்பாகவும், சிலசமயம் நெகிழ்த்தியாகவுமிருக்கும்.

காச்சல் கண்ட 7-வது நாளிலிருந்து, 12-நாளைக்குள் செந்நிறமான சிறுத் தடிப்புகள், நெஞ்சு, வயிறு, முதுகு முதலியவிடங்களில் உண்டாகும்.

மேற்படி தடிப்புகளை விரலால் அழுத்தினுல் மறைந்துவிடும். இந்தச் செந்நிறத் தடிப்புகள் மூன்று வாரத்திற்குமேல் 30-நாட்கள் வரையிலுமிருக்கும். ஒன்று மறைந்தவுடன் ஒன்று தோன்றும். இரண்டாம் வாரக் கடைசியில் திரேகோஷ்ணம் 104-டிகிரியில் நின்றுவிடும்.

காச்சல் 104-டிகிரியில் நின்றிருக்கும் சமயம் ஆபத்தானதாக விருக்கும். சந்நிபாதசுரமானது 21-நாள்வரைக்கும் சில சமயங்களில் 4, 5-வாரம், அல்லது அதற்குமேலும் நீடித்திருப்பதுண்டு.

சந்நிபாதசுரத்தின் ஆரம்பத்தில், ஆஜீரணம், புளித்தேப்பம், பசிமந்தம், மலச்சிக்கல், தலைவலி முதலியவைகளிருக்கும் சிலருக்கு மூக்கிலிருந்து இரத்தம் வடிவதுமுண்டு. இரவில் தூக்கமின்மையும், சந்நியுமுண்டாகும். அதிகபலயீனமும், அசதியும், நாவரட்சியும் காணும். நாவுவெடித்தாவது, சிவந்தாவது, மாவு பூசியதைப்போலாவதிருக்கும்; ஆரம்பத்தில் நாடியின் நடை தீவிரமாகயில்லா விட்டாலும், நாளடைவில் மிகுதியும் தீவிரப்பட்டுவிடும்.

சர்மம் வரச்சியாகவும், கன்னங்கள் பச்சை மாமிசம் போலவும் காணப்படும்; அடிவயிறுப்பொருமி வயிற்ரேட்டம் ஆரம்பிக்கும்; தொப்புளின் கீழ் வலதுபக்க அடிவயிற்றில் திமிர்த்ததைப்போல் மறமறப்பாக விருக்கும். அங்கு விரலால் அழுத்தினுல் குருகுருவென்ற சப்தத்துடன் அழுந்துவதான உணர்ச்சித் தெரியும்.

இந்த வியாதியில் மண்ணீரல் வீக்கம் கண்டிருக்கும்; நாள்பட்ட பின் வயிற்ருல் கழிவது; சில சமயம் தண்ணீராகவும், மண்ணிறமாகவும், துவரையைக் கழுவியத் தண்ணீர்போலும், கடைசியாக மாமிசம் கழுவியத் தண்ணீரைப்போலும் இரத்தம் கலந்தும் வெளிப்படும்,

### சிகிச்சை

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திப்பிலிக்கட்டை | ரூபாயெடை | 1 | ஓமம் | ரூபாயெடை | 1 |
| வெட்பாலைப்பட்டை | ,, | 1 | வசம்பு | ,, | 1 |
| தேவதாரிச்சக்கை | ,, | 1 | செவ்வியம் | ,, | 1 |
| பால்சாம்பிராணி | ,, | 1 | கொடிவேலி | ,, | 1 |
| வாய்விளங்கம் | ,, | 1 | நிலவேம்பு | ,, | 1 |
| கண்டுபாரங்கி | ,, | 1 | கரிசலாங்காணி | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | மதுக்காரை | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | சிறுவழுதலை | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | பெருவழுதலை | ,, | 1 |
| கோஷ்டம் | ,, | 1 | கருநொச்சி | ,, | 1 |
| சிற்றரத்தை | ,, | 1 | பொன்முசுட்டை | ,, | 1 |
| கடுக்காய்த்தோல் | ,, | 1 | | | |

ஒன்றுசேர்த்துத் தட்டி, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதமாகக் கொடுத்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| எருக்கம்வேர்ப்பட்டை | ரூபாயெடை | $\frac{1}{2}$ | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| | | | வசம்பு | ,, | $\frac{1}{2}$ |
| நிலவேம்பு | ,, | $\frac{1}{2}$ | சுக்கு | ,, | $\frac{1}{2}$ |
| நொச்சி | ,, | $\frac{1}{2}$ | திப்பிலி | ,, | $\frac{1}{2}$ |
| முருங்கைப்பட்டை | ,, | $\frac{1}{2}$ | திப்பிலிமூலம் | ,, | $\frac{1}{2}$ |
| கரிசலாங்காணி | ,, | $\frac{1}{2}$ | கொடிவேலி | ,, | $\frac{1}{2}$ |
| சிற்றரத்தை | ,, | $\frac{1}{2}$ | செவ்வியம் | ,, | $\frac{1}{2}$ |
| தேவதாரு | ,, | $\frac{1}{2}$ | அதிவிடயம் | ,, | $\frac{1}{2}$ |

ஒன்றாகத் தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு மூன்று வேளை கொடுத்து வரலாம்.

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 | சுக்கு | ரூபாயெடை | 1 |
| செங்கழுநீர்க்கிழங்கு | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| பேய்ப்பீர்க்கம்வேர் | ,, | 1 | சிறுதேக்கு | ,, | 1 |
| சிறுகாஞ்சொறி | ,, | 1 | கோரைக்கிழங்கு | ,, | 1 |
| நிலவேம்பு | ,, | 1 | கோஷ்டம் | ,, | 1 |
| ஆடாதோடையிலை | ,, | 1 | | | |

இவற்றைத் தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு மூன்று வேளை கொடுத்து வரலாம்.

(4) பால சுரஹரமாத்திரை; சுவர்ண கோரோசனை மாத்திரை; அப்ரகக் கோரோசனை மாத்திரை; மகா ரசப்பஸ்பம்; சுவர்ண வெள்ளி பஸ்பம்; கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (5) | ஒலியம் டர்பென்டைன் (Oleum Turpentine) | டிராம் | 2 |
| | தேன் (Honey) | அவுன்ஸ் | 1½ |
| | காம்பவுண்ட் பவுடர் ஆப் டிரககந்த் (Pulvis Tragacanth Co) | ,, | 1 |
| | ஆக்குவா பெப்பர்மெண்ட் (Aqua Peppermint) | ,, | 6 |

ஒன்று சேர்த்துக் கலக்கிக்கொண்டு 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை, ஒருத் தேக்கரண்டி வீதம் கொடுத்துவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecace) | டிராம் | 2 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோசி (Spirit Aether Nitrosi) | ,, | 1 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | அவுன்ஸ் | 1 |
| | கிளிசரின் (Glycerine) | ,, | ½ |
| | தண்ணீர் | ,, | 3 |

ஒன்று சேர்த்துக் கலக்கி 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (7) | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 30 |
| | ஆஸிட் ஐட்ரோகுளோரிக் டில் (Acid Hydrochloric Dil) | டிராம் | 1 |
| | பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) | கிரைன்ஸ் | 30 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | அவுன்ஸ் | 1 |
| | தண்ணீர் | ,, | 10 |

முதலில் கொய்னைன் சல்பஸை, ஆஸிட் ஐட்ரோகுளோரிக் டில் விட்டுக் கரைத்துக்கொண்டு பின்னர் எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துக் கலக்கி, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (8) | ஒலியம் இயூகலிப்புடஸ் (Oleum Eucalyptus) | டிராம் | 1 |
| | அக்கேஷியா கம்மி (Acasia Gummi) | அவுன்ஸ் | 1 |
| | ஸ்பிரிட் அமோனியம் அரோமாட்டிக் (Spirit Ammonium Aromatic) | ,, | ½ |
| | கிளிசரின் (Glycerine) | டிராம் | 2 |
| | ஸ்பிரிட் குலோரோபாம் (Spirit Chloroform) | ,, | 2 |
| | ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | அவுன்ஸ் | 12 |

முதலில் ஒலியம் இயூகலிப்புடஸுடன் அக்கேஷியா கம்மியைச்சேர்த்து கலந்துகொண்டு பின் எல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து, 1-முதல் 3-வயதுக்

குழந்தைகளுக்கு 4-மணிநேரத்திற்கொருதடவை ஒரு தேக்காண்டி யளவுவாகக் கொடுத்துவரலாம்.

தாங்கமுடியாத வயிற்றோட்டமிருந்தால்மட்டும்:—

(9) பல்விஸ் இப்பிகாக் கோ (Pulvis Ipecace Co) கிரைன்ஸ் 3

1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு இந்த அளவாக 4-மணி நேரத்திற் கொருதரம் கொடுத்துவரலாம்.

**சள்ளைக்கடுப்புச் சுரம்:—**

இதை அசதிச்சுரமென்றும் சொல்லப்படும். இது அதிகமான அசதியினுலும், ஜலத்தோஷத்தினுலும் ஏற்படுகிறது. சுரம் 101, 102-டிகிரிவரையிருக்கும். குழந்தை முக்கி முணவியமும்; உதட்டைக்கடிக்கும்; அடிக்கடி உடம்பை முறுக்கும்; மூக்கில் சளி வடிந்துகொண்டேயிருக்கும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) சுக்கு | ரூபாயெடை | ½ | தேவதாரு | ரூபாயெடை | ½ |
| மிளகு | ,, | ½ | தாளிசப்பத்திரி | ,, | ½ |
| திப்பிலி | ,, | ½ | | | |

இவற்றைப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, 1½-அவுன்ஸ் அளவாக நாள் ஒன்றுக்கு 3-வேளைக் கொடுத்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) மதுக்காரை | ரூபாயெடை | ½ | வசம்பு | ரூபாயெடை | ½ |
| நிலப்பனைக் கிழங்கு | ,, | ½ | கண்டுபாரங்கி | ,, | ½ |
| கோரைக் கிழங்கு | ,, | ½ | பற்பாடகம் | ,, | ½ |
| கொத்தமல்லி | ,, | ½ | சுக்கு | ,, | ½ |
| கடுக்காய்ப்பூ | ,, | ½ | தேவதாரு | ,, | ½ |

இவற்றைத் தூள்செய்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன் ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில், ஒரு அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு 3-வேளை கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) சீந்தில்தண்டு | ரூபாயெடை | ½ | கிச்சிலிக்கிழங்கு | ரூபாயெடை | ½ |
| தூதுவளை | ,, | ½ | சிற்றரத்தை | ,, | ½ |
| கண்டங்கத்திரியிலை | ,, | ½ | சுக்கு | ,, | ½ |
| பூனைக்காஞ்சொறி | ,, | ½ | திப்பிலி | ,, | ½ |
| நிலவேம்பு | ,, | ½ | கோஷ்டம் | ,, | ½ |
| கடுகுரோகிணி | ,, | ½ | தேவதாரு | ,, | ½ |
| பற்பாடகம் | ,, | ½ | கடுக்காய்த்தோல் | ,, | ½ |

ஒன்று சேர்த்துத் தட்டி, 24 அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன் ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (4) வெட்டிவேர் | ரூபாயெடை | ½ | பெருவழுதலை | ரூபாயெடை | ½ |
| பேராமல்லி | ,, | ½ | சீந்தில்தண்டு | ,, | ½ |
| சிற்றாமல்லி | ,, | ½ | நெருஞ்சில்காய் | ,, | ½ |
| நிலவேம்பு | ,, | ½ | சுக்கு | ,, | ½ |
| சிறுவழுதலை | ,, | ½ | கோரைக்கிழங்கு | ,, | ½ |

ஒன்று சேர்த்துத் தட்டி, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன் ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், 1-அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு 3-வேளை கொடுத்து வரலாம்.

(5) பால சுரஹர மாத்திரை; கோரோசனை மாத்திரை; கஸ்தூரி மாத்திரை முதலியவைகளி லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(6) சளி அதிகம் வடிந்துகொண்டிருந்தால், செம்மரத்தை முலைப்பாலில் உரைத்துக் கொதிக்கவைத்து, நெற்றி, மூக்கு முதலியவைகளில் கனமாய்ப் பற்றுப் போடலாம்.

(7) நெஞ்சில் அதிகமான சளிக்கட்டி பிள்ளை திட்டிமுட்டடித்தால், வேப் பெண்ணெயை வெற்றிலையில் தடவி, அனலில் வாட்டி சுடச்சுட மார் பிலும், பின்புற முதுகிலும் ஒற்றிடம் கொடுக்கலாம்.

| | | |
|---|---|---|
| (8) பொட்டாஷியம் நைட்ரஸ் (Potassium Nitras) | கிரைன்ஸ் | 15 |
| லைக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) | டிராம் | 3 |
| டிஞ்சர் ஐயோஸியாமஸ் (Tincture Hyoscymus) | ,, | ½ |
| ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | ,, | 1 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து ஒன்றுமுதல் மூன்றுவயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற் கொருதடவை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (9) லைக்கர் ஆர்சனிக்காலிஸ் (Liquor Arsenicalis) | துளி | 5 |
| பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | கிரைன்ஸ் | 20 |
| டிஞ்சர் ஆரண்டி (Tincture Auranti) | துளி | 40 |
| ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) | ,, | 30 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3 வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருமுறை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

**சாமச் சுரம்—Night Fevers**

இது முறைக்காச்சல் இனத்தைச் சேர்ந்து பகலெல்லாம் சுரம் விட்டிருந்து, பொழுதுப்பட்டதும் சுரம் காயும், திரேகோஷ்ணம் 101, 103-டிகிரி வரை யிருக்கும்; குளிருமிருக்கும்.

**சிகிச்சை**

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சிறுவழுதலை | ரூபாயெடை | 1 | கொத்தமல்லி | ரூபாயெடை | 1 |
| பெருவழுதலை | ,, | 1 | தேவதாரு | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | | | |

இவற்றைப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 | பெருவழுதலை | ரூபாயெடை | 1 |
| கண்டுபாரங்கி | ,, | 1 | கோரைக்கிழங்கு | ,, | 1 |
| தேவதாரு | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | கோஷ்டம் | ,, | 1 |

ஒன்று சேர்த்துத் தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆடாதோடையிலை | ரூபாயெடை | 1 | பேய்ப்புடோல்வேர் | ரூபாயெடை | 1 |
| கொன்றைப்பட்டை | ,, | 1 | வேப்பம்பட்டை | ,, | 1 |
| கருப்புத் திராக்ஷப்பழம் | ,, | 1 | கடுக்காய்த்தோல் | ,, | 1 |
| தான்றிக்காய் | ,, | 1 | நெல்லிவற்றல் | ,, | 1 |

ஒன்று சேர்த்துத் தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(4) கோரோசனை மாத்திரை; கஸ்தூரி மாத்திரை; சுரபூபதி மாத்திரை; பாலசுரகுடோரி மாத்திரை இவற்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் காண்க.

(5)

| | | |
|---|---|---|
| ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | டிராம் | ½ |
| லிக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liguor Ammonia Acetatis) | ,, | 1 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | துளி | 40 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்துவரலாம்.

| | | |
|---|---|---|
| (6) பெர்ரை எற் கொய்னைன் ஸிட்ரஸ் (Ferri Er Quinine Citras) | கிரைன்ஸ் | 10 |
| * லிக்கர் ஸ்டிரிக்னைன் ஐட்ரோகுளோரைட் (Liquor Strychnine Hydrochloride) | துளி | 6 |
| டிஞ்சர் கலம்பா (Tincture Calumbae) | ,, | 40 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 1½ |
| தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப்பின் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

**சித்தவிப்பிரம சன்னிசுரம்:—**

சந்நிபாதச் சுரமென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**சீதச் சுரம்:—**

குளிர்ச்சுரமென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**தருணச் சுரம்:—**

அற்பச் சுரமென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**தனிச் சுரம்:—**

அற்பச்சுரமென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**நிமோனியாச் சுரம்:—**

அபிநியாசச் சன்னிசுரமென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**பல் முளைக்கும்போதுண்டாகும் சுரம்—Fever in Dentition.**

பல் குழந்தைகளுக்குச் சாதாரணமாய் ஆறும் மாதம் பாற்பற்கள் முளைக்கும். முளைப்பது இயற்கைப்பிரகிருதியாயினும், குழந்தைகளுக்குச் சோதனையானதாகவேயிருக்கும்; ஆனால் எல்லாக் குழந்தைகளுக்கும் பல் முளைக்கும்போது காச்சலேற்படுவதில்லை. தோஷவியாதியினால் மெலி உற்றிருக்கும் குழந்தைகளுக்கே பல் முளைக்கும்போது காச்சல் உண்டாகலாம்.

பல் முளைக்கும்போதுண்டாகும் காச்சலில், வாயிலிருந்து எச்சில் வழிந்து கொண்டேயிருக்கும்; மலச்சிக்கலேற்படும்; காச்சல் 101, 103-டிகிரிக்குக் குறையாமலும், கூடாமலுமிருக்கும். சில சமயம் காச்சலினால் இழுப்பும் யேற்படுவதுண்டு. இதனால் விபத்தேற்படுவதுமுண்டு.

---

* விஷதன்மையுள்ளது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

**சிகிச்சை**

(1) சிறுவழுதலை ரூபாயெடை 1 பெருவழுதலை ரூபாயெடை 1
சுக்கு ,, 1 தேவதாரு ,, 1
கொத்தமல்லி ,, 1

இவற்றைத் தண்ணீர்விட்டரைத்து 24-அவுன்ஸ் தண்ணீரில் கலக்கி 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தை வடிகட்டி அதில் நாள் ஒன்றுக்கு 3-வேளை 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) வெட்டிவேர் ரூபாயெடை 1 விலாமிச்சம்வேர் ரூபாயெடை 1
கோரைக்கிழங்கு ,, 1 செஞ்சந்தனம் ,, 1
பற்பாடகம் ,, 1 சுக்கு ,, 1

இவற்றை ஒன்ருகத்தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(3) நெற்றி, தாடை இவைகளில் சிற்ருமணக்கெண்ணெயைத் தடவிவந்தால் வலி மட்டுப்படும்.

(4) கோரோசனை மாத்திரை; கஸ்தூரிமாத்திரை; சுரப்பூபதிமாத்திரை; இவைகளி லொன்றைக் கொடுத்துவரலாம். செய்முறை 6-ம் பாகம் காண்க.

(5) சோடா சாலிஸிலஸ் (Soda Salicylas) கிரைன்ஸ் 60
எக்ஸ்டிராக்ட் கிளிசரிஸா லிக்குட் (Extract Glycyrrhza Liquid) டிராம் 4
லைக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) ,, 4
தண்ணீர் அவுன்ஸ் 2

ஒன்று சேர்த்து 3-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

(6) டிஞ்சர் காம்பர் கோ (Tincture Camphore Co) டிராம் 1
லைக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) ,, 3
பொட்டாஷியம் ஸிட்ரஸ் (Potassium Citras) ,, 1
சிரப் டோலு (Syrup Tolu) ,, 1
தண்ணீர் அவுன்ஸ் 3

ஒன்றுசேர்த்துக் கலந்து 3-மணிநேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

## பழஞ் சுரம்—Relapsing Fever.

இதை விடாச்சுரமென்றும் சொல்லுவர். மலச்சிக்கலினுலாவது குடலில் யேற்படும் அழலேயினுலாவது சுரம் கண்டு அப்படியே நீடித்திருக்கச் செய்து விடுகிறது. இது அதிக வெயிலினுலும், கொடியக் குளிரினுலுங் கூட ஏற்படுவதுண்டு.

இந்தக் காச்சல் 101, 102-டிகிரிக்குக் குறையாமலும், மேல்போகாமலும், காச்சல் விடாமலுமிருக்கும். காலே நேரங்களில் அசதியுடன் குளிர் நடுக்கம் உண்டாகி காச்சல் 100, 101-டிகிரி யிருக்கும். சாயந்திரம் 101, 102-டிகிரி யிருக்கும். இரவில் வியர்வைக் கண்டு காலேயில் சற்று காச்சல் தணிந்திருக்கும்.

இந்த வியாதியில் மலச்சிக்கலாவது, வயிற்ருேட்டமாவது இருப்பதுண்டு. வயிற்ருேட்டமிருந்தால் மலம் புளிப்பு நாற்றத்துடன் வெண்மையாகவும், கருப்பாகவும், பச்சையாகவும், கழியும். குடலில் அழலேங்கொண்டிருக்கு மாளுல், கழியும் மலத்துடன் இரத்தமும் சீதமும் கலந்திருப்பதுண்டு.

பழஞ் சுரத்தில், ஆகார வெறுப்பு, அசதி, இருமல், முதலியவைகளேற்படும். சர்மம் வரண்டு, திரேகம் இளேத்திருக்கும். மூத்திரம் மஞ்சளாகவும், எரிச்சலுடனு மிறங்கும்.

இதில் மயக்கம், கண் முகம், முதலியவைகளில் வலி, மூச்சுத்திணரல், தடைச்செய்யக்கூடாத வயிற்ருேட்டம், தலேயில் அதிகமான சூடு முதலிய குணங்கள் கண்டால், அசாத்தியத்தைக் குறிக்கும் குறிகளாக விருக்கும்.

திரேகம் குளிராயிருந்தால் பசும்பாலேச் சுடச்சுடக் கொடுக்கலாம். அதிக பலயீனமாயிருந்தால் காய்ச்சலில்லாத நேரங்களில் காரமில்லாத சூப்பு (Soup) கொடுக்கலாம். இலகுவில் ஜீரணிக்கும் ஆகாரங்களாகிய பால் சவ்வரிசிக்கஞ்சி, அரிசிக்கஞ்சி முதலியவைகளே மட்டும் கொடுக்கலாம். ஆகாரம் வாந்தியாகிக்கொண்டிருந்தால், இரண்டவுன்ஸ் பாலில் அரைக் காலவுன்ஸ் சுண்ணும்புத் தெளிவுத் தண்ணீரைக் கலந்து கொடுக்கலாம்; அல்லது பாலுடன் சோடாத் தண்ணீரைக் (Soda water) கலந்து கொடுக்கலாம்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) தாதுவேளே | ரூபாயெடை | 1 | சிற்ருமுட்டி | ரூபாயெடை | 1 |
| சிறுகாஞ்சொறிவேர் | ,, | 1 | பேராமுட்டி | ,, | 1 |
| சீந்தில்தண்டு | ,, | 1 | பற்பாடகம் | ,, | 1 |
| நொச்சியீர்க்கு | ,, | 1 | கடுக்காய் | ,, | 1 |

ஒன்றாய் இடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயம் அவுன்ஸ் ஒன்றில் வறுத்துச் சூரணித்த திப்பிலிச் சூரணம் $\frac{1}{8}$-ரூபாயெடைக் கலக்கி இந்த அளவாக நாள் ஒன்றுக்கு 3-வேளைக் கொடுத்து வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | ஏலம் | ரூபாயெடை | 1 | திராக்ஷப்பழம் | ரூபாயெடை | 1 |
| | கிராம்பு | ,, | 1 | கோரோசனை | ,, | 1 |
| | கோரைக்கிழங்கு | ,, | 1 | தாளிசப்பத்திரி | ,, | 1 |
| | அதிமதுரம் | ,, | 1 | சடாமாஞ்சில் | ,, | 1 |
| | வெட்டிவேர் | ,, | 1 | சந்தனம் | ,, | 1 |
| | விலாமிச்சம்வேர் | ,, | 1 | இலுப்பைப்பூ | ,, | 1 |
| | நன்னாரிவேர் | ,, | 1 | தேவதாரு | ,, | 1 |
| | நிலப்பனைக்கிழங்கு | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| | சுக்கு | ,, | 1 | கடுகுரோகிணி | ,, | 1 |

இவற்றை எல்லாம் ஒன்றுசேர்த்து, 6-மணிநேரம் முலைப்பால் விட்டரைத்து, மறுபடியும் 6-மணிநேரம் இளநீர் விட்டு அரைத்து, மிளகவ்வளவு பெரிய மாத்திரைகளாக்கி காயவைத்து, காலை மாலை ஒரு மாத்திரை வீதம் முலைப்பாலில் கொடுத்துவரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) | பேய்ப்புடோல்வேர் | | | பற்பாடகம் | ரூபாயெடை | 1 |
| | | ரூபாயெடை | 1 | சுக்கு | ;, | 1 |
| | பேராமுட்டி | ,, | 1 | மிளகு | ,, | 1 |
| | விஷ்ணுக்கிரந்தி | ,, | 1 | நாரத்தைப்பட்டை | ,, | 1 |

ஒன்று சேர்த்துத்தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சி காலை மாலை ஒரு அவுன்ஸ் கஷாயத்தில் $\frac{1}{4}$-அவுன்ஸ் தேன் சேர்த்துக் கொடுத்துவரலாம்.

(4) தக்காளிக் கோரோசனை மாத்திரை; கஸ்தூரிமாத்திரை; ராஜவில்வாதி லேகியம்; கோரோசனை மாத்திரை; வீரசூதசிந்தாமணி; பாலவிநோத சஞ்சீவிமாத்திரை; பாலசஞ்சீவிமாத்திரை; கணத்தெண்ணெய்; சுவர்ண கோரோசனைமாத்திரை; இவைகளைக் கொடுத்துவரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (5) | கலோமெல் (Calomel) | கிரைன்ஸ் | $\frac{1}{4}$ |
| | சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 1 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரே தடவையாக வாயில் கொட்டி விழுங்கச்செய்து இரண்டுமணி நேரத்திற்குப் பின்:—

| | | |
|---|---|---|
| பல்விஸ் ரீயைக்கோ (Pulvis Rhei Co) | கிரைன்ஸ் | 3 |
| தண்ணீர் | அவுன்ஸ் | $\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்துக் கொடுக்க மலம் வெளியாகி காச்சல் தணியும். காச்சல் தணிந்தவுடன் கீழ் குறிப்பிட்ட 7-கிம்பர் கொய்னைன் மிக்ஸ்சர் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) | கிரைன்ஸ் | 24 |
| | பொட்டாஷியம் பைகார்போனெட் (Potassium Bicarbonate) | ,, | 48 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்துக் கலந்துகொண்டு, நாள் ஒன்றுக்கு 3-வேளை 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(இந்த மருந்தைக் கொடுக்கப்போகும் சமயம் முப்பது துளி எலுமிச்சம் பழச்சாறும், கொஞ்சம் சர்க்கரையும் சேர்த்துக் கொடுக்கவும். இம் மருந்தினால் தாகமும் நாவரட்சியும் தணிந்து, திரேகோஷ்ணமும் மட்டுப்படும்.)

| | | | |
|---|---|---|---|
| (7) | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 40 |
| | ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | துளி | 60 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | டிராம் | 4 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | ,, | 1 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 4 |

முதலில் கொய்னைன் சல்பஸை ஆஸிட் சல்பியூரிக்டில் விட்டுக் கரைத்து பின்னர் மற்ற மருந்துகளைச் சேர்த்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## பித்தச் சுரம்—Remittent Fever

இது பித்த உபரியினால் உஷ்ணம் மிகுதிப்பட்டு ஏற்படக்கூடியது. சுரம் 100-க்கு மேல் 103, 104-டிகிரிவரை யிருக்கும். வயிற்றோட்டமும் வாந்தியும் உண்டாகும்; தலை கிறுகிறுத்து, மயக்கம்போல் வந்து, மஞ்சள் கரைத்தத் தண்ணீரைப்போல் வாந்தியாகும்; தூங்குவதைப்போல் குழந்தை அயர்ந்து படுத்திருக்கும்; தூக்கத்தில் புலம்பல் ஏற்படும்; மூத்திரம் சிவந்து தடித்திறங்கும்; நாவு வரண்டிருக்கும்; விக்கலுண்டாகும்; களைப்பேற்படும்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | நிலவேம்பு | ரூபாயெடை 1 | | சோரைக்கிழங்கு | ரூபாயெடை | 1 |
| | சிறுகாஞ்சொறி | ,, | 1 | பற்பாடகம் | ,, | 1 |
| | கடுகுரோகிணி | ,, | 1 | | | |

ஒன்றாகத் தட்டி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) பற்பாடகம் ரூபாயெடை 1 வெட்டிவேர் ரூபாயெடை 1
செஞ்சந்தனம் ,, 1 சுக்கு ,, 1

ஒன்று சேர்த்திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்துவரலாம்.

(3) திராக்ஷப்பழம் ரூபாயெடை 1 கோரைக்கிழங்கு ரூபாயெடை 1
பற்பாடகம் ,, 1 கடுக்காய்த்தோல் ,, 1
கடுகுரோகணி ,, 1 கொன்றைப்பட்டை ,, 1

ஒன்று சேர்த்திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ½-அவுன்ஸள வாகக் கொடுத்து வரலாம்.

(4) சிறுகாஞ்சொறிவேர் ரூபாயெடை 1 நிலவேம்பு ரூபாயெடை 1
அதிவிடயம் ,, 1
ஆடாதோடையிலை ,, 1 கடுகுரோகணி ,, 1
பற்படாகம் ,, 1

ஒன்று சேர்த்திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(5) சீந்தில்தண்டு ரூபாயெடை 1 கடுக்காய்த்தோல் ரூபாயெடை 1
பற்பாடகம் ,, 1

ஒன்று சேர்த்திடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(6) தக்காளிக் கோரோசனை மாத்திரை; பால சுரஹர மாத்திரை; கஸ்தூரி மாத்திரை; ராஜவில்வாதி லேகியம்; சுவர்ண கோரோசனை மாத்திரை; பால சஞ்சீவி மாத்திரை இவைகளி லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் காண்க.

(7) காலோமல் (Calomel) கிரைன்ஸ் 1½
பெனசெட்டின் (Phenacetin) ,, 3
காபீன் சிட்ராஸ் (Caffine Citras) ,, 1½
சோடா பைகார்ப் (Soda Bicarb) ,, 1½

ஒன்று சேர்த்து ஒரேதடவையாக 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு வாயில் கொட்டி எச்சல் சேர்த்து விழுங்கும்படிச் செய்தால், 2, 3-தரம் மலம் கழிந்து சுரம் தணியும். இதை அடிக்கடி கொடுக்கக்கூடாது.

| | | | |
|---|---|---|---|
| (8) | கொய்னேன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 15 |
| | ஆஸிட் ஐட்ரோகுளோரிக் டில் (Acid Hydrochloric Dil) | துளி | 25 |
| | பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) | கிரைன்ஸ் | 15 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 4 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 8 |

முதலில் கொய்னேன் சல்பஸை ஆஸிட் ஐட்ரோகுளோரிக் டில் விட்டுக் கரைத்துக்கொண்டு பின் மற்றவைகளைச் சேர்த்துக் கலந்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணிநேரத்திற் கொருமுறை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## பிராஞ்சோ நிமோனியா—Broncho Pneumonia.

கபவாத சன்னி சுரமென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## பூத சுரம்:—

சள்ளைக்கடுப்புச் சுரமென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## மாங்கிஷச் சுரம்:—

இந்தச் சுரத்தில் தசை நார்களில் வலி யிருக்கும்; காச்சல் 102, 104-டிகிரி யிருக்கும்; இருமலும், வியர்வையும் உண்டாகும்; உதடு உலர்ந்து நாவரட்சி யேற்படும்; ஆயாசமும், மயக்கமும் காணும்; திரேகம் வெளுத்து மயிர்கள் சிலிர்த்திருக்கும்; குழந்தை உடம்பில் கைபட்டால் கதரும்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | சிறுவழுதலை | ரூபாயெடை | 1 | பெருவழுதலை | ரூபாயெடை | 1 |
| | சுக்கு | ,, | 1 | கொத்தமல்லி | ,, | 1 |
| | தேவதாரு | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | வெட்டிவேர் | ரூபாயெடை | 1 | விலாமிச்சம்வேர் | ரூபாயெடை | 1 |
| | கோரைக்கிழங்கு | ,, | 1 | பற்பாடகம் | ,, | 1 |
| | சுக்கு | ,, | 1 | செஞ்சந்தனம் | ,, | 1 |

ஒன்று சேர்த்திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 | தேவதாரு | ரூபாயெடை | 1 |
| பெருவழுதலை | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| கண்டுபாரங்கி | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 1 | கோஷ்டம் | ,, | 1 |

ஒன்று சேர்த்திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(4) பாலவிநோதச் சஞ்சீவி மாத்திரை; பால சஞ்சீவி மாத்திரை; சுரபூபதி மாத்திரை; பால சுரகுடோரி மாத்திரை; இவைகளில் ஒன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (5) லைக்கர் அமோனிய அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) | அவுன்ஸ் | 1 |
| ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | டிராம் | 1 |
| பொட்டாஷ்யம் சிட்ரஸ் (Potassium Citras) | ,, | $2\frac{1}{2}$ |
| ஆக்குவா காம்பர் (Aqua Camphor) | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு இரண்டுமணி நேரத்திற்கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (6) கொய்னேன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 2 |
| ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | துளி | 6 |
| பெர்ரீ எற் அமோனியம் சிட்ரஸ் (Ferri et Ammonium Citras) | கிரைன்ஸ் | 4 |
| * லைக்கர் ஆர்ஸனிக்காலிஸ் (Liquor Arsenicalis) | துளி | 3 |
| தண்ணீர் | அவுன்ஸ் | $1\frac{1}{2}$ |

முதலில் கொய்னேன் சல்பஸை, ஆஸிட் சல்பியூரிக் டில் விட்டுக் கரைத்துக்கொண்டு, பின்னர் மற்றவைகளைச் சேர்த்துக் கலக்கி, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப்பின் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

**மாந்தக் கணைச்சுரம்:—**

இது மாந்த ரோகத்தினால் குழந்தைகளுக்கு வரும் சுரம். சுரம் கடுமையாக விருக்கும்; திரேகம் வற்றிவிடும்; உள்ளங்கால்மட்டும் குளிர்ந்திருக்கும்; சுவாசமிடும்போதெல்லாம் மார்பு உயர்ந்து அமுங்கும்; கண்ணில் நீர் வடிந்துகொண்டே யிருக்கும். வயிறிரைந்துப் பாசிப்போல் கழியும்; நாவரண்டுவிடும்; கண்விழி வட்டமாய்ச்சுற்றி மேற்சொருகும். இந்தச் சுரத்தில் சில சமயம் இழுப்பு காண்பதுண்டு.

---

* விஷத்தன்மை யுள்ளது ஜாக்ரதையாக உபயோகிக்க வேண்டும்.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) பழம்பாசி | ரூபாயெடை | ½ | பேய்மிரட்டியிலை | ரூபாயெடை | ½ |
| நாய்த்துளசி | ,, | ½ | வல்லாரையிலை | ,, | ½ |
| கணைப்பூண்டு | ,, | ½ | தகரையிலை | ,, | ½ |

ஒன்று சேர்த்திடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம், அந்த 1-அவுன்ஸ் கஷாயத்தில்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீரகத்தூள் | குன்றுமணியெடை | 8 | கோரோசனை | குன்றுமணியெடை | 8 |
| கருஞ்சீரகத்தூள் | ,, | 8 | | | |

கலந்து கலக்கி வடிகட்டிக் கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (2) புளியீர்க்கு | ஒருபிடி | கோழியவரையிலை | | ஒருபிடி |
| நுணா (மஞ்சணெத்தி) யிலையீர்க்கு | ,, | குட்டிவிளாயிலை | | ,, |
| | | பழம்பாசி | | ,, |
| நெல்லியீர்க்கு | ,, | விஷ்ணுகிரந்தி | | ,, |
| வேம்பீர்க்கு | ,, | செருப்படை | | ,, |
| தகரையிலையீர்க்கு | ,, | மணித்தக்காளியிலை | | ,, |
| ஒதியனிலையீர்க்கு | ,, | வல்லாரையிலை | | ,, |
| பொடுதலை | ,, | சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 |
| அம்மாம்பச்சரிசி | ,, | நன்னாரிவேர் | ,, | 1 |
| வில்வயிலை | ,, | பேய்ப்புடோல்வேர் | ,, | 1 |
| சிறுபுள்ளடி | ,, | வில்வப்பழத்தோடு | ,, | 1 |

ஒன்றாய்ச் சேர்த்திடித்து இளவறுப்பாய் வறுத்து, 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டவைத்த கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் அந்த ஒரு அவுன்ஸ் கஷாயத்தில்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இலவம்பிசின் | ரூபாயெடை | ½ | மாசிக்காய் | ரூபாயெடை | ½ |
| வில்வப்பிசின் | ,, | ½ | சாதிக்காய் | ,, | ½ |
| விளாம்பிசின் | ,, | ½ | வெந்தயம் | | |

ஒன்று சேர்த்து இளவறுப்பாக வறுத்துச் சூரணித்து சலித்துவைத்துக் கொண்டு, ஷெ கஷாயத்தில் அரைக்கால் ரூபாயெடைச் சூரணம் சேர்த்துக் கலக்கிக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) *இரசச்செந்தூரம் | ரூபாயெடை | ½ | கஸ்தூரிமஞ்சள் | ரூபாயெடை | ½ |
| குங்குமப்பூ | ,, | ½ | ஏலம் | ,, | ½ |
| கோரோசனை | ,, | ½ | கிராம்பு | ,, | ½ |

* செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கடுக்காய் | ,, | ½ | சுக்கு | ,, | ½ |
| தான்றிக்காய் | ,, | ½ | மிளகு | ,, | ½ |
| நெல்லிவற்றல் | ,, | ½ | திப்பிலி | ,, | ½ |

ஒன்று சேர்த்து, கருநொச்சிச் சாறுவிட்டு மைபோலரைத்து, உளுந்துப் பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக்கொண்டு, காலை மாலை ½-அவுன்ஸ் துளசிச்சாறும், ½-அவுன்ஸ் சுடுதண்ணீரும் கலந்து, அதில் ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

(4) பாலசஞ்சீவி மாத்திரை; கோரோசனை மாத்திரை; தக்காளிக்கோரோசனை மாத்திரை; பாலவிநோத சஞ்சீவி மாத்திரை; கஸ்தூரி மாத்திரை; மகா ரஸப் பஸ்பம்; சுவர்ண வெள்ளிபஸ்பம்; வீரசூதச்சிந்தாமணி; கணத்தெண்ணெய் இவைகளிலொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(5)

| | | |
|---|---|---|
| டிஞ்சர் பெரி பெர்க் குளோரைட் (Tincture Ferri Perchloride) | டிராம் | 4 |
| லைக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) | அவுன்ஸ் | 1½ |
| கிளிசரின் (Glycerine) | ,, | ½ |
| தண்ணீர் | ,, | 6 |

ஒன்று சேர்த்து, ஒன்று முதல் மூன்று வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(6)

| | | |
|---|---|---|
| டிஞ்சர் அஸபோட்டிடா (Tincture Asafoetidae) | துளி | 30 |
| டிஞ்சர் சிஞ்ஜிபரிஸ் (Tincture Zingiberis) | ,, | 15 |
| லைக்கர் ஆர்ஸனிக்காலிஸ் (Liquor Arsenicalis) | ,, | 5 |
| எக்ஸ்ட்ராக்ட் ரீயை (Extract Rhei) | கிரைன்ஸ் | 8 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | அவுன்ஸ் | ½ |
| தண்ணீர் | ,, | 5 |

ஒன்று சேர்த்துக் கலந்து, ஒன்று முதல் மூன்றுவயதுக் குழந்தைகளுக்கு 3-மணிநேரத்திற் கொருமுறை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

### மாந்தச் சுரம்—Diphtheritic Fever

இதைப்பற்றிச் சுரமாந்தமென்றத் தலைப்பின்கீழும் எழுதப்பட்டிருக்கிறது. ஆயினும் அதைப்பற்றி மறுமுறையும் எழுதவேண்டியது அவசியமாதலின் அதையும் கீழே விவரிக்கவேண்டியதா யிருக்கிறது.

மாந்தச் சுரத்தில் சுரம் கடினமாயிருக்கும்; குழந்தை பால் குடியாது; வாந்தியும் வயிற்றோட்டமும் உண்டாகும். சில சமயம், முறிந்தப் பால்போலும், சில சமயம் சீதம் கலந்தும் கழியும்; கைகால் குளிர்ந்திருக்கும்; நாவரட்சி

யேற்பட்டு குரல் கட்டிவிடும்; கண் சிவந்தும், முகமும் உடலும், மினு மினுப்பாகவுமிருக்கும்.

### சிகிச்சை

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 | சுக்கு | ரூபாயெடை | 1 |
| * சிவதைவேர் | ,, | 1 | கடுக்காய் | ,, | 1 |
| கஸிப்பாக்கு | ,, | 1 | கடுகுரோகிணி | ,, | 1 |

ஒன்று சேர்த்திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சிற்றாமுட்டி | ஒருபிடி | | புகையிலையீர்க்கு | ஒருபிடி | |
| பேராமுட்டி | ,, | | வேப்பங்கொழுந்து | ,, | |
| விஷ்ணுகிரந்தி | ,, | | ஓரிலைத்தாமரை | ,, | |
| சீரகம் | ரூபாயெடை | ½ | திப்பிலி | ரூபாயெடை | ½ |
| கிராம்பு | ,, | ½ | நெல்லிவற்றல் | ,, | ½ |

ஒன்று சேர்த்திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்துவரலாம்.

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| புளியிலையீர்க்கு | ஒருபிடி | | குட்டிவிளாயிலை | ஒருபிடி | |
| நுணாயிலையீர்க்கு | ,, | | பழம்பாசி | ,, | |
| நெல்லியீர்க்கு | ,, | | விஷ்ணுகிரந்தி | ,, | |
| வேம்புயீர்க்கு | ,, | | செருப்படை | ,, | |
| ஒதியன்யீர்க்கு | ,, | | வல்லாரையிலை | ,, | |
| தகரையிலையீர்க்கு | ,, | | நரிபயற்றந்தண்டு | ரூபாயெடை | 1 |
| பொடுதலைக்காம்பு | ,, | | நன்னாரிவேர் | ,, | 1 |
| அம்மாம்பச்சரிசிக்காம்பு | ,, | | மணித்தக்காளிவேர் | ,, | 1 |
| வில்வயிலை | ,, | | சீந்தில்தண்டு | ,, | 1 |
| சிறுபுள்ளடி | ,, | | பேய்ப்புடோல்வேர் | ,, | 1 |
| கோழியவரையிலை | ,, | | வில்வப்பழத்தோடு | ,, | 1 |

ஒன்று சேர்த்திடித்து ஒரு மண்சட்டியில் போட்டு இளவறுப்பாக வறுத்து 48-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம், அந்த ஒரு அவுன்ஸ் கஷாயத்தில்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இலவம்பிசின் | ரூபாயெடை | ½ | மாசிக்காய் | ரூபாயெடை | ½ |
| விளாம்பிசின் | ,, | ½ | சாதிக்காய் | ,, | ½ |

* இதைப் பசும்பாலில் போட்டு வேகவைத்து எடுத்துக்கொள்ளவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வில்வப்பிசின் | ,, | ½ | வெந்தயம் | ,, | ½ |
| கோஷ்டம் | ,, | ½ | | | |

ஒன்று சேர்த்து இளவறுப்பாய் வறுத்து, சூரணித்து ஷெ கஷாயத்தில் ½-ரூபாயெடை கலந்து கலக்கி வடிகட்டிக் கொடுத்து வரலாம்.

(4)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பச்சைகற்பூரம் | ரூபாயெடை | ½ | ஏலம் | ரூபாயெடை | ½ |
| கிராம்பு | ,, | ½ | சடாமாஞ்சில் | ,, | ½ |
| வால்மிளகு | ,, | ½ | சுக்கு | ,, | ½ |
| சிறுநாகப்பூ | ,, | ½ | சீரகம் | ,, | ½ |
| கடுகுரோகணி | ,, | ½ | † சுத்திச்செய்த நேர்வாளப் பருப்பு | ,, | ½ |

ஒன்று சேர்த்துப் பொடுதலைச்சாற்றால் 6 மணிநேரம் அரைத்து, மிளகு அவ்வளவு பெரிய மாத்திரைகளாக உருட்டிக் காயவைத்து, காலை மாலை ஒரு மாத்திரை வீதம் தேனிலாவது முலைப்பாலிலாவது கொடுத்து வரலாம்.

(5)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குட்டிவிளாயிலை | ரூபாயெடை | 1 | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | 1 |
| அவுரியிலை | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை ½-அவுன்ஸளவாகக் கொடுத்து வரலாம்.

(6) பாலசஞ்சீவி மாத்திரை; தக்காளிக் கோரோசனை மாத்திரை; கோரோசனை மாத்திரை; பாலவிநோத சஞ்சீவி மாத்திரை; கஸ்தூரி மாத்திரை; மகாரஸ பஸ்பம்; சுவர்ண வெள்ளிப்பஸ்பம்; வீரசூதச்சிந்தாமணி இவைகளில் ஒன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(7) மாந்தசுரத்திற்கான ஆங்கில மருந்து கலவைகளில் ஒன்றையும் கொடுத்து வரலாம்.

## முறைச் சுரம்—Intermittent Fever

இதில் சுரம் விட்டுவிட்டு குறித்த நேரத்தில் வரும். இதை ஆஹீகஜ்வரமென்று சொல்லப்படும். இது எட்டுவிதமான காலதாமதத்தில் வரக்கூடியது.

ஒன்றைவிட்டொருநாளைக்குவரும் முறைச்சுரத்திற்கு; முறைச்சுரம், ஏகாஹீகச் ஜ்வரமென்றும்; இரண்டுநாட்களுக்கொருமுறை வருவதை இரண்டாம் முறைச்சுரம், அது துவியாஹீகச் ஜ்வரமென்றும்; மூன்று நாட்களுக்கொருமுறை வருவதை மூன்று முறைச்சுரம், அது திரியாஹீகச் ஜ்வரமென்றும்; நாலுநாட்களுக்கொருமுறைவரும் சுரத்தை

† சுத்திமுறை 60-ம் பக்கம் பார்க்கவும்.

நான்காம்முறைச்சுரம், அது சதுர்த்திக ஜ்வரமென்றும்; ஐந்துநாட்களுக்கொருமுறை வருவதை ஐந்தாமுறைச்சுரம், அது பஞ்சாஹீக ஜ்வரமென்றும்; பதினைந்து நாட்களுக்கொருமுறை வருவதை பருவமுறைச்சுரம், அது பக்ஷாஹீக ஜ்வரமென்றும், மாதமொருமுறை வருவதை மாதாந்திரச்சுரம், அது மாஸிக ஜ்வரமென்றும்; இராத்திரிவேளைகளில் மட்டும் வருவதை சாமச்சுரம், அது அர்த்தராத்திரி ஜ்வரமென்றும் சொல்லப்படும்.

முறைச்சுரத்தில், குளிர்நடுக்கம், இருமல், கண்ணெரிச்சல், கண்வலி, தலைவலி, உடலாதியந்தமும் நச்சுவலி முதலிய குணங்களிருக்கும்; சிலருக்கு வயிற்றுவலியும், வயிற்றோட்டமுமிருக்கும்; வாய்குழவழப்பாகவும், அதிகமான தண்ணீர் தாகமுமிருக்கும்; ஆகார வெறுப்புண்டாகும். சுரமில்லாத நேரங்களில் தூக்கமுண்டாகும்; கால், அடிவயிறு, முகம் சற்று வீக்கமுடனிருக்கும்; நகக்கண்களும், கண்ணிரப்பைகளும், இரத்தமின்றி வெளுத்திருக்கும்; கண்விழி மஞ்சளாகத்தோன்றும்; உள்ளங்கால், உள்ளங்கை எரிச்சலுண்டாகும்; கடுமையான சுரமும், குளிர்நடுக்கமுங்கண்டுக் குறைந்தது 15-நிமிஷநேரம் உபத்திரவித்தவுடன், வியர்வைக்கண்டு சுரம் விடும்.

இந்தச் சுரத்திற்கு ஆரம்பத்திலேயே சரியான விதமாகச் சிகிச்சை செய்யப்படாவிட்டால், மண்ணீரல் வீக்கம் கண்டு அகாலமரணத்தை விளைவிக்கும். இந்த வியாதியில் மண்ணீரல் வீக்கம் கண்டுவிடுவதற்குத்தான், குலைக்கட்டி, காச்சல்கட்டி (Spleen Enlargement) என்று சொல்லப்படும்.

குளிர்நடுக்கம் உண்டாகும் சமயம், சூடானதேயிலை, காப்பி, பாணங்களையும், பால், கஞ்சி முதலியவைகளையும் கொடுக்கலாம். மலச்சிக்கலிருந்தால் மலத்தை வெளிப்படுத்தும்படியான மருந்துகளைக் கொடுக்கவேண்டும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) வெட்பாலைப்பட்டை | ரூபாயெடை | 1 | தேவதாரு | ரூபாயெடை | 1 |
| | | | பால் சாம்பிராணி | ,, | 1 |
| கரிசலாங்காணி | ,, | 1 | கண்டுப்பாரங்கி | ,, | 1 |
| மதுக்காரை | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| சிறுவழுதலை | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| பெருவழுதலை | ,, | 1 | மிளகு | ,, | 1 |
| கருநொச்சி | ,, | 1 | கொடிவேலி | ,, | 1 |
| பொன்முசுட்டை | ,, | 1 | ஓமம் | ,, | 1 |
| நிலவேம்பு | ,, | 1 | வசம்பு | ,, | 1 |
| திப்பிலிக்கட்டை | ,, | 1 | செவ்வியம் | ,, | 1 |

ஒன்றுசேர்த்துப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதமாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 | சிற்றரத்தை | ரூபாயெடை | 1 |
| தூராபிலை | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| கண்டங்கத்திரிவேர் | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| பூனைக்காஞ்சொறி | ,, | 1 | கோஷ்டம் | ,, | 1 |
| பற்பாடகம் | ,, | 1 | தேவதாரு | ,, | 1 |
| நிலவேம்பு | ,, | 1 | கடுக்காய்த்தோல் | ,, | 1 |
| கடுகுரோகிணி | ,, | 1 | கண்டுபாரங்கி | ,, | 1 |
| கிச்சிலிக்கிழங்கு | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(3) கொவ்வக்காய்க் கோரோசனை மாத்திரை; கோரோசனை மாத்திரை; சுர பூபதி மாத்திரை; பாலசுரஹர மாத்திரை பாலசுரவிஷஹர மாத்திரை; இவைகளிலொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (4) ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | டிராம் | ½ |
| லிக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis | ,, | 1 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | துளி | 40 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, ஒன்று முதல் மூன்று வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (5) பெர்ரீ எற் கொய்னைன் சிட்ரஸ் (Ferri et Quinine Citras | கிரைன்ஸ் | 10 |
| * லிக்கர் ஸ்டிரிக்னைன் ஐட்ரோ குளோரைட் (Liquor Strychnine Hydro Chloride) | துளி | 6 |
| டிஞ்சர் கலம்பா (Tincture Calumbae) | ,, | 45 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 1½ |
| தண்ணீர் | அவுன்ஸ் | 5 |

ஒன்று சேர்த்து, ஒன்று முதல் மூன்று வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப் பின் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (6) பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) | கிரைன்ஸ் | 10 |
| ஆஸிட் ஐட்ரோ குளோரிக் (Acid Hydrochloric) | துளி | 10 |

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 8 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | $2\frac{1}{2}$ |
| தண்ணீர் | அவுன்ஸ் | 8 |

இந்த மிக்ச்சரை மிகவும் ஜாக்கிரதையாகக் கீழ்க்கூறியிருக்கும் பிரகாரம் செய்யவேண்டும். முதவில் 10-அவுன்ஸ் பிடிக்கக்கூடிய கல் கார்க் சீசாவில் பொட்டாஷியம் குளோரஸைப்போட்டு, அதில், ஆஸிட் ஐட்ரோ குளோரிக்கை விட்டு கார்க்கால் மூடிவிடவேண்டும். அதில், ஒருவிதப் புகைக்கிளம்பி, அமரும் சமயம் அதாவது அரைமணி நேரத்திற்குப் பின் கார்க்கைத்திறந்து, 2-அவுன்ஸ் தண்ணீரை விட்டு, மறுபடியும் சீசாவை மூடிவிடவும். குளோரேட் உப்பு முழுமையும் தண்ணீருடன் கலந்து விட்டபின் கார்க்கைத் திறந்து, கொய்னைன் சல்பஸ், சிரப் ஆரண்டி முதலியவைகளைக் கணக்குப்படியும், பாக்கியுள்ள 6-அவுன்ஸ் தண்ணீரையும் விட்டு நன்றாய்க் குலுக்கிக்கொள்ளவும். இந்த மருந்தை "குளோரின் மிக்ச்சர்" என்று சொல்லப்படும். இதில் ஒன்று முதல் மூன்றுவயதுக் குழந்தைகளுக்கு 2-மணி நேரத்திற் கொருமுறை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

**அதிகமான நாவரட்சியிருந்தால்:—**

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (7) கோஷ்டம் | ரூபாயெடை | 1 | சந்தனம் | ரூபாயெடை | 1 |
| சீரகம் | ,, | 1 | மான்கொம்பு | ,, | 1 |
| ஏலம் | ,, | 1 | துடைப்பப்பூ | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | நெற்பொரி | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | வில்வவேர் | ,, | 1 |
| ஆமையோடு | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்திளம்வறுப்பாய் வறுத்திடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுக்கலாம்.

இதையும் அதிகமான நாவரட்சிக்குக் கொடுக்கலாம்:—

| | | |
|---|---|---|
| (8) பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) | கிரைன்ஸ் | 24 |
| பொட்டாஷியம் பைகார்போனேட் (Potassium Bicarbonate) | ,, | 48 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி மருந்துடன் அரைத் தேக்கரண்டி எலுமிச்சம் பழச்சாறும், கொஞ்சம் சர்க்கரையும் கலந்து கொடுக்கலாம்.

வாத பித்தச்சுரம்:—

தருணச் சுரமென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

வாத சிலேத்பனச்சுரம்:—

தருணச் சுரமென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

விடாச்சுரம்:—

பழஞ் சுரமென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

விஷச் சளிச்சுரம்:—

இன்புளூ வென்ஸாவென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

விஷச் சந்நிச்சுரம்:—

அபினியாச சந்நிச்சுரமென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

சுரங்களுக்குப் போதுமருந்துகள்:—

(1) கீழ்க்காய்நெல்லிவேர்சாறு தேக்கரண்டி 1 பாதிரிவேர்சாறு தேக்கரண்டி 1
முலைப்பால் ,, 2

ஒன்றுசேர்த்து சாதாரணச் சுரங்களுக்குக் காலை மாலை கொடுத்து வரலாம்.

(2) நிலவேம்பு ரூபாயெடை 1 சீந்தில்தண்டு ரூபாயெடை 1
பற்பாடகம் ,, 1 கோரைக்கிழங்கு ,, 1

ஒன்று சேர்த் திடித்து 24 அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சியக் கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(3) நிலவேம்பு ரூபாயெடை 1 மிளகு ரூபாயெடை 1
கறிமஞ்சள் ,, 1

ஒன்றுசேர்த் திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சியக் கஷாயத்தில், சாதாரணச் சுரங்களுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(4) பற்பாடகம் ரூபாயெடை 1 சுக்கு ரூபாயெடை 1
சீந்தில்தண்டு ,, 1 சிறுதேக்கு ,, 1
நன்னாரிவேர் ,, 1 தேவதாரு ,, 1
சிறுகாஞ்சொறி ,, 1 கோஷ்டம் ,, 1
பேய்ப்புடோல்வேர் ,, 1

ஒன்று சேர்த் திடித்து 24-அவுஸ் தண்ணீரில்போட்டு 3-அவுஸாகச் சுண்டக் காய்ச்சியக் கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(5) சிறுவழுதலை ரூபாயெடை 1 சுக்கு ரூபாயெடை 1
பெருவழுதலை ,, 1 கொத்தமல்லி ,, 1
தேவதாரு ,, 1

ஒன்றுசேர்த் திடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சியக் கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(6) வெட்டிவேர் ரூபாயெடை 1 சுக்கு ரூபாயெடை 1
விலாமிச்சம்வேர் ,, 1 செஞ்சந்தனம் ,, 1
கோரைக்கிழங்கு ,, 1 பற்பாடகம் ,, 1

ஒன்று சேர்த்திடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(7) பூனைக்காஞ்சொறி கிச்சிலிக்கிழங்கு ரூபாயெடை 1
ரூபாயெடை 1 சிற்றரத்தை ,, 1
துராயிலை ,, 1 திப்பிலி ,, 1
கண்டங்கத்திரிவேர் ,, 1 கோஷ்டம் ,, 1
சீந்தில்தண்டு ,, 1 தேவதாரு ,, 1
பற்பாடகம் ,, 1 சுக்கு ,, 1
நிலவேம்பு ,, 1 கடுக்காய்த்தோல் ,, 1
கடுகுரோகிணி ,, 1 கண்டுபாரங்கி ,, 1

ஒன்று சேர்த்திடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(8) கோரைக்கிழங்கு ரூபாயெடை 1 கடுக்காய்ப்பூ ரூபாயெடை 1
அதிவிடயம் ,, 1

ஒன்று சேர்த்துச் சூரணித்து, துணியில் வடிகட்டி $\frac{1}{4}$ ரூபாயெடைச் சூரணத்துடன் தேன் சேர்த்துக் காலை மாலை கொடுத்து வரலாம்.

(9) காட்டாத்திப்பூ ரூபாயெடை 1 வெள்ளிலோத்திரம் ரூபாயெடை 1
வில்வப்பழம் ,, 1 யானைத்திப்பிலி ,, 1

ஒன்று சேர்த்திடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் கஷாயத்தில் $\frac{1}{2}$-அவுன்ஸ் தேன் சேர்த்துக் கொடுத்து வரலாம்.

(10) கோரோசனை மாத்திரை; சுரபூபதி மாத்திரை; பாலசுரஹரா மாத்திரை; பாலவிநோத சஞ்சீவி மாத்திரை; பாலசஞ்சீவி மாத்திரை; பாலசுரகுடோரி

மாத்திரை; பாலசுர விஷஹர மாத்திரை; தக்காளிக்கோரோசனை மாத்திரை; கொவ்வைக்காய் கோரோசனை மாத்திரை முதலியவைகளில் ஒன்றைக் கொடுத்து வரலாம்.

(கொய்னைன் மிக்சர்)

| | | | |
|---|---|---|---|
| (11) | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 40 |
| | ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | துளி | 60 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nltrosi) | டிராம் | 4 |
| | சிரப் டோலூ (Syrup Tolu) | ,, | 1 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 4 |

முதலில் கொய்னைன் சல்பஸை ஆஸிட் சல்பியூரிக்டில் விட்டுக் கரைத்துக் கொண்டு, பின் மற்ற மருந்துகளைச் சேர்த்து ஒன்று முதல் மூன்று வயதுக் குழந்தைகளுக்கு 4-மணிநேரத்திற் கொரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

(கொய்னைன் குளோரஸ் மிக்சர்)

| | | | |
|---|---|---|---|
| (12) | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 15 |
| | ஆஸிட் ஹைட்ரோகுளோரிக் (Acid Hydrochloric) | துளி | 25 |
| | பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) | கிரைன்ஸ் | 15 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranit) | டிராம் | 4 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 8 |

முதலில் 10-அவுன்ஸ் பிடிக்கக்கூடிய கல்காரக் சீசாவில் பொட்டாஷியம் குளோரவைப் போட்டு அதில் ஆஸிட் ஹைட்ரோகுளோரிக்கை விட்டு காரக்கால்மூடிவிடவும். (அதில் ஒரு புகைக்கிளம்பி அமரும்) அரைமணி நேரம் சென்றபின் காரக்கைத்திறந்து 2-அவுன்ஸ் தண்ணீர்விட்டு மூடி உப்பு கரையும்வரை வைத்திருந்து, உப்புக்கரைந்து தண்ணீருடன் கலந்த பின் திறந்து ஒன்றின்பின் ஒன்றாக மற்ற மருந்துகளையும் சேர்த்து பாக்கியுள்ள 6-அவுன்ஸ் தண்ணீரையும் ஊற்றி நன்றாகக் குலுக்கிக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 2-மணிநேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

(கொய்னைன் சிட்ரஸ் மிக்சர்)

| | | | |
|---|---|---|---|
| (13) | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 2 |
| | ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | துளி | 6 |
| | பெர்ரீ எற் அமோனியம் சிட்ரஸ் (Ferriet Ammonium Citras) | கிரைன்ஸ் | 4 |
| | * லிக்கர் ஆர்ஸனிக்காலிஸ் (Liquor Arsenicalis) | துளி | 3 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1½ |

* விஷமானது; ஜாக்ரதையாக உபயோகிக்க வேண்டும்.

முதலில் கொய்னைன் சல்பஸை ஆஸிட் சல்பியூரிக் டில் விட்டுக் கரைத்துக்கொண்டு, பின் இதர மருந்துகளையும் சேர்த்துக் குலுக்கி, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப் பின் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(கொய்னைன் பெர்ரீ மிக்ச்சர்)

| | | |
|---|---|---|
| (14) பெர்ரீ எற் கொய்னைன் சிட்ரஸ் (Ferri et Quinine Citras) | கிரைன்ஸ் | 10 |
| * லிக்கர் ஸ்டிரிக்னைன் ஐட்ரோகுளோரைட் (Liquor Strychnine Hydrochloride) | துளி | 6 |
| டிஞ்சர் கலம்பா (Tincture Calumbae) | ,, | 45 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 1½ |
| தண்ணீர் | அவுன்ஸ் | 5 |

ஒன்று சேர்த்து, ஒன்று முதல் மூன்று வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப்பின், ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

**எவ்விதச் சுரத்திலும் சூடுதணிய:—**

| | | |
|---|---|---|
| (1) * டிஞ்சர் அக்கோனிட் (Tincture Aconite) | துளி | 4 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

இதை ஒன்றாக சேர்த்து, காச்சல் 105, 106-டிகிரியிலிருக்கும்போது வேறெந்தவிதத்திலும், திரேகோஷ்ணத்தைத் தணிக்கமுடியாதென்று தீர்மானித்தபின்பே, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 15-நிமிஷத்திற் கொரு தரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவந்து, உடனுக்குடன் தெர்மாமிட்டர் (Thermometer) வைத்துப் பார்த்து, உஷ்ணம் 101-டிகிரிக்கு இறங்கியவுடன், இந்த மருந்தை நிறுத்திக்கொண்டு 11, 12, 13, 14-இலக்க கொய்னைன் மிக்ச்சர்களிலொன்றைக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—டிஞ்சர் அக்கோனிட் மிகவும் நஞ்சாகையால் அளவுகளில் வெகு எச்சரிக்கையாகவே யிருக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| (-) காலோமல் (Calomel) | கிரைன்ஸ் | 1½ |
| பெனஸெட்டின் (Phenacetine) | ,, | 3 |
| காபீன் சிட்ரஸ் (Caffien Citras) | ,, | 1½ |
| சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 2 |

ஒன்று சேர்த்து, ஒன்று முதல் ஐந்து வயதுக் குழந்தைகளுக்கு, இரவில் படுக்கப் போகும்போது, ஒரே தடவையாக வாயில் கொட்டி எச்சில் கூட்டி விழுங்கச் செய்யலாம்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

குறிப்பு:—இது, காலையில் 2, 3-தரம் மலத்தைக் கழித்துப் பித்தத்தையும் தணித்து, திரேகோஷ்ணத்தையும் காச்சலையும் தணிக்கும். பின்னர் 11, 12, 13, 14-இலக்க கொய்னைன் மிக்ச்சர்களில் ஒன்றைக் கொடுத்து வரலாம். பெனு செட்டின் சேர்ந்த மருந்துகளைத் திரும்பக் கொடுக்க நேர்ந்தால் 8-மணி நேரத்திற்குள் கொடுக்கக்கூடாது.

| | | | |
|---|---|---|---|
| (3) | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | டிராம் | ½ |
| | லிக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) | ,, | 1 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | ,, | ¾ |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, ஒன்று முதல் மூன்று வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இதைக் காச்சல் 101, 102-டிகிரியிருக்கும்போது கொடுத்து வந்தால், காச்சல் சூடு தணியும். காச்சல் 101, 102-டிகிரியிருந்தால் வேறு மருந்துகளைக் கொடுக்காமலே இதைக் கொடுத்து வரலாம்.

(4) பல்விஸ் அன்டிமோனியாலிஸ் (Pulvis Antimonialis) கிரைன் ½

இதைத் தேனில் கலந்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—101, 102-டிகிரியுள்ள காச்சல்களுக்கு இதுவே போதுமானதாகும்.

| | | | |
|---|---|---|---|
| (5) | டிஞ்சர் சின்கோனு கோ (Tincture Cinchonae Co) | டிராம் | 1 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | ,, | 1 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | ,, | 1½ |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 4 |

ஒன்று சேர்த்து, ஒன்று முதல் மூன்று வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—காச்சல் 101, 102-டிகிரியிருந்தால் இந்த மருந்தையே கொடுத்து வரலாம். காச்சலதிகமா யிருந்தால், இந்த மருந்தினுல் சூட்டைத் தணித்துக்கொண்டு, பின் 11, 12, 13, 14-இலக்க கொய்னைன் மிக்ச்சர்களில் எதையாவதொன்றைக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | லிக்கர் அமோனியா அஸிடேடிஸ்(Liquor Ammonia Acetatis) | டிராம் | 2 |
| | பொட்டாஷியம் நைட்ரேட் (Potassium Nitrate) | கிரைன்ஸ | 12 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | துளி | 24 |
| | ஆக்குவா காம்பர் (Aqua Camphor) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்துக் குலுக்கிக்கொண்டு 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—சுரம் அதிகமாயிருக்கையில் இந்த மருந்தைக் கொடுத்து வந்தால் வியர்வைப்பிரிந்து சூடுமட்டுப்படும் சூடுமட்டுப்பட்டதும், 11, 12, 13, 14-இலக்க கொய்னேன் மிக்ச்சர்களிலொன்றைக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (7) | அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) | கிரைன்ஸ் | 20 |
| | * லைம் ஜூஸ் (Lime Juice) | டிராம் | 6 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | ,, | ½ |
| | டிஞ்சர் நட்மேக் (Tincture Nutmeg) | ,, | ½ |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணிநேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இதை நீடித்துக் கொடுக்கவேண்டாம். வியர்த்துச் சுரம் தணியும் வரை இரண்டு மூன்றுதடவை மட்டும் கொடுத்து, வியர்வை கண்டு காச்சல் சூடுதணிந்ததும் 11, 12, 13, 14-இலக்க கொய்னேன் மிக்ச்சர்களிலொன்றைக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (8) | பொட்டாஷியம் கார்போனேட் (Potassium Carbonate) | கிரைன்ஸ் | 1½ |
| | * லைம் ஜூஸ் (Lime Juice) | டிராம் | ½ |
| | ஆக்குவா காம்பர் (Aqua Camphor) | ,, | 1½ |

ஒன்று சேர்த்துப் பொங்கும்போது 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் இந்தவிதம் செய்து கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இதை நீடித்துக் கொடுத்துவரவேண்டாம். வியர்த்துக் காச்சலின் சூடுதணியும் வரை 2, 3-முறைக்கொடுத்து, சூடுதணிந்தபின் 11, 12, 13, 14-இலக்க கொய்னேன் மிக்ச்சர்களி லொன்றைக் கொடுத்து வரலாம்

| | | | |
|---|---|---|---|
| (9) | பொட்டாஷியம் நைட்ரேட் (Potassium Nitrate) | கிரைன்ஸ் | 3 |
| | அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) | ,, | 2 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | ½ |

ஒன்று சேர்த்துக் குலுக்கிக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தட்வை, தடவை ஒன்றுக்கு ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இதனால் வியர்வை கண்டு, சுரத்தின் சூடு தணியும். பின்னர் 11, 12, 13, 14-இலக்க கொய்னேன் மிக்ச்சர்களிலொன்றைக் கொடுத்துவரலாம்.

* சாதாரண எலுமிச்சம்பழச்சாறு.

| | | | |
|---|---|---|---|
| (10) | அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) | டிராம் | 4 |
| | ஸ்பிரிட் ரெக்ட்டிபைட் (Spirit Rectified) | ,, | 4 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 8 |

ஒன்று சேர்த்து, வெளிப்பிரயோகமாகக் காச்சலில் சூடு தணிவதற்கு, வெள்ளைத்துணியில் நனைத்து உடம்பின்மேல் துவட்டலாம். இதனால் வியர்வை கண்டு சூடு தணியும்.

குறிப்பு:—வெளிப்பிரயோகமட்டும்.

| | | | |
|---|---|---|---|
| (11) | அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) | அவுன்ஸ் | 2½ |
| | பொட்டாஷியம் நைட்ரேட் (Potassium Nitrate) | ,, | 2½ |
| | தண்ணீர் | ,, | 8 |

ஒன்று சேர்த்துக் கலக்கிக்கொண்டு வெளிப்பிரயோகமாக ஒரு வெள்ளைத் துணியில் நனைத்து உடம்பெங்கும் துவட்டலாம்.

குறிப்பு:—வெளிப்பிரயோகமாக மட்டும் இதைச் செய்யவேண்டும். இதனால் வியர்வை கண்டு சூடு தணியும்.

**சுரத்திலுண்டாகும் இருமலை நிறுத்த:—**

**சிகிச்சை**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | கண்டங்கத்திரிவேர் ரூபாயெடை | 1 | சிற்றரத்தை | ரூபாயெடை | 1 |
| | | | கோரைக்கிழங்கு | ,, | 1 |
| | சீந்தில்தண்டு ,, | 1 | சுக்கு | ,, | 1 |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | தூதுவேளையிலை | ரூபாயெடை 1 | திப்பிலி | ரூபாயெடை | 1 |
| | கண்டங்கத்திரிவேர் | ,, 1 | கொடிவேலி | ,, | 1 |
| | முசுமுசுக்கை | ,, 1 | கோஷ்டம் | ,, | 1 |
| | சுக்கு | ,, 1 | சிற்றரத்தை | ,, | 1 |
| | மிளகு | ,, 1 | | | |

ஒன்று சேர்த்திடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | லைக்கர் அமோனியம் அஸிடேடிஸ் (Liquor Ammonium Acetatis) | டிராம் | 2 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | ,, | 1 |
| | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | துளி | 10 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணிநேரத்திற்கொரு தடவை, ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

**சுரத்திலுண்டாகும் நாவரட்சியையும், தாகத்தையும் தணிக்க:—**

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) கோஷ்டம் | ரூபாயெடை | 1 | ஆமையோடு | ரூபாயெடை | 1 |
| சீரகம் | ,, | 1 | சந்தனம் | ,, | 1 |
| ஏலம் | ,, | 1 | மான்கொம்பு | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | நெற்பொரி | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | துடைப்பப்பில்பூ | ,, | 1 |

ஒன்று சேர்த்து, மண் சட்டியில் போட்டு இளவறுப்பாய் வறுத்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) பொட்டாஷியம் நைட்ரேட் (Potassium Nitrate) | கிரைன்ஸ் | 6 |
| சர்க்கரை | ,, | 12 |
| ஆக்குவா மெந்தா பிப் (Aqua Mentha Pip) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு தாகம் தணியும்வரை 3-மணி நேரத்திற் கொருமுறை ஒன்றரைத் தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (3) பொட்டாஷியம் டார்ட்ரஸ் அஸிடஸ் (Potassium Tartarus Acidus) | கிரைன்ஸ் | 30 |
| எலுமிச்சம்பழச்சாறு (Lime Juice) | டிராம் | ½ |
| சர்க்கரை | ,, | 2 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துக்கலந்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குத் தாகம் தணியும்வரை 3-மணிநேரத்திற்கொருமுறை 2-தேக்கரண்டி யளவாகக்கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (4) பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) | கிரைன்ஸ் | 15 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 5 |

ஒன்று சேர்த்துக் கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குத் தாகம் தணியும் வரை, 3-மணிநேரத்திற் கொருமுறை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—விடாச்சுரம்; சன்னிபாதச்சுரம் முதலிய சுரங்களிலுண்டாகும் தாகத்திற்கு இதைக் கொடுக்கலாம்.

(5) பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) கிரைன்ஸ் 4
பொட்டாஷியம் பைகார்போனேட் (Potassium Bicarbonate) ,, 8
தண்ணீர் அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்துக் கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குத் தாகம் தணியும் வரை 4-மணி நேரத்திற் கொருமுறை 2-தேக்கரண்டி மருந்தில்:—

எலுமிச்சம்பழச்சாறு டிராம் ½
சர்க்கரை கிரைன்ஸ் 30

சேர்த்துக் கொடுத்து வரலாம்.

சுரத்திலுண்டாகும் வயிற்றுப்பொருமலை நீக்க:—

சிகிச்சை

(1) நுணாயிலை ரூபாயெடை ¾ மிளகு ரூபாயெடை ¾
வேப்பங்கொழுந்து ,, ¾ ஓமம் ,, ¾
சுக்கு ,, ¾

முதலில் வேப்பங்கொழுந்தையும், நுணாயிலையையும் ஒரு மண் சட்டியில் போட்டு வறுத்து, சிவந்து வரும் சமயம் மற்றவைகளைப் பொடித்துப் போட்டு, அதில் 12-அவுன்ஸ் தண்ணீர் விட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) முருங்கையிலை ஒருபிடி பெருங்காயம்(சுட்டது)ரூபாயெடை ⅛
கறியுப்பு ரூபாயெடை ½ ஓமம் ,, ½

முதலில் முருங்கையிலையையும் உப்பையும் ஒன்றாகக் கசக்கி எடுத்தச் சாற்றில் சுட்ட பெருங்காயத்தையும், ஓமத்தையும் கலந்தரைத்து, ½-அவுன்ஸ் சுடுதண்ணீர் கலந்து கலக்கி வடிகட்டி, 1-அவுன்ஸ் உள்ளுக்குக் கொடுத்து:—

முருங்கையிலைச்சாறு அவுன்ஸ் 1 கறியுப்பு ரூபாயெடை ½
பெருங்காயம் ரூபாயெடை ⅛

ஒன்றாகச் சேர்த்துத் தொப்புளைச் சுற்றித் தடவி வரலாம்.

(3) சோடா பைகார்ப் (Soda Bicarb) கிரைன்ஸ் 10
பல்விஸ் ரீயை (Pulvis Rhei) ,, 4
ஒலியம் அனிசி (Oleum Anisi) துளி 2

எண்ணெய்க் கலந்துகொள்ளும்படியாக ஒன்றுசேர்த்துப் பிசரி, 4-பாகமாக்கி மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு பாகத்தைத் தேனில் கலந்து கொடுத்து வரலாம்.

(4) பல்விஸ் ரீயை (Pulvis Rhei) கிரைன்ஸ் 3
காலோமல் (Calomel) ,, 1

| | | |
|---|---|---|
| சோடா பைகார்ப் (Soda Bicarb) | கிரைன்ஸ் | 3 |
| ஓலியம் அனிசி (Oleum Anisi) | துளி | 1 |

எண்ணெய் கலந்துகொள்ளும்படியாக நன்றாகச் சேர்த்து, ஒரே தடவையாக 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குத் தேனில் கலந்துகொடுத்து, வயிற்றுப்பொருமல் குறைந்ததும்:—

| | | |
|---|---|---|
| பல்விஸ் ரீயை கோ (Pulvis Rhei Co) | கிரைன்ஸ் | 2 |
| சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 6 |
| ஓலியம் அனிசி (Oleum Anisi) | துளி | 1 |

எண்ணெய் கலக்கும்படியாய் நன்றாய்க் கலந்து, 4-பாகமாக்கி வடித்து வைத்துக்கொண்டு, 3-மணிநேரத்திற் கொருபாகமாகத் தேனில் கலந்து கொடுத்து வரலாம்.

**சுரத்திலுண்டாகும் ஜலதோஷத்தையும் இருமலையும் நிறுத்த:—**

**சிகிச்சை**

| | | |
|---|---|---|
| அமோனியம் கார்போனஸ் (Ammonium Carbonas) | கிரைன்ஸ் | 10 |
| டிஞ்சர் செனிகா (Tincture Senegae) | துளி | 40 |
| டிஞ்சர் சின்கோனு கோ (Tincture Cinchonae Co) | ,, | 40 |
| டிஞ்சர் சில்லி (Tincture Seille) | ,, | 15 |
| வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | ,, | 30 |
| ஸ்பிரிட் ஈதர் நைட்ரோசி (Spirit Aether Nitrosi) | ,, | 60 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 4 |

ஒன்று சேர்த்துக்கலந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

**சுரம் தணிந்தபின், கதகதப்பையும் களைப்பையும் ஆகார வெறுப்பையும் மாற்ற:—**

**சிகிச்சை**

| | | |
|---|---|---|
| டிஞ்சர் சின்கோனு கோ (Tincture Cinchonae Co) | துளி | 40 |
| ஆஸிட் நைட்ரோ ஐட்ரோ குளோரிக் டில் (Acid Nitro Hydrochloric Dil) | ,, | 15 |
| *டிஞ்சர் நக்ஸ் வாமிகா (Tincture Nux Vamica) | ,, | 12 |
| சிரப் ஆரண்டி (Syrup Aurauti) | டிராம் | $1\frac{1}{2}$ |
| தண்ணீர் | அவுன்ஸ் | 5 |

ஒன்று சேர்த்துக் கலந்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்க வேண்டும்.

## அம்மை—வைசூரி

## VARIOLA

அம்மை ஒருவரிடமிருந்து ஒருவருக்குத் தொத்தக்கூடிய சுபாவமுள்ள ஒரு தொத்து நோயாகும். அம்மை ரோகத்தை 'வைசூரி; குருநோய்; கோடகம்; மகமாரி' எனவெல்லாம் கூறுவர். அதிலும் பலவகைகள் உண்டு. அம்மை ரோகத்தில் பதினைன்குவித முண்டெனத் தமிழ் வைத்திய நூல்கள் கூறுகின்றன.

அம்மை விஷக்கிருமிகளால் திரேகத்தில் சேர்க்கப்படும் விஷத்தன்மையினுல் உண்டாவதாகும். விஷக்கிருமிகள் அஸ்தியில் ஆதிக்கம் பெற்று சுரத்தை முதல் குறியாகக் கொண்டு வருகிறது.

அம்மையானது 2-வயது முதல் 5-வயதுக் குழந்தைகளைத்தான் அதிகம் பாதிக்கிறதென்றும், ஒரு வயதிற்குக் குறைந்த குழந்தைகளுக்கு அதிகமாய் அம்மை நோய் வருவதில்லை யென்றும் டாக்டர் ரூடாக்ஸ் (Dr. Ruddocks) அபிப்பிராயப்படுகிறுர். மேலும் அம்மை ரோகமானது ஒருமுறைதான் வருமென்றும், அது அடிக்கடி வருவதில்லை யென்றும் கூறுகிறுர்.

அம்மை வருமுன் காச்சல் அடிக்கும்; நெற்றி வலியும், தும்மலும் ஏற்படும்; நாசியில் நீர் ஒழுகும்; சர்மம் வரட்சி யடையும்; நாடி தீவிரமாக நடக்கும்; வாந்தியும், அரோசிகமும் ஏற்படும்; நாவரட்சியும், தொண்டை புகைச்சலும் உண்டாகும்; இரண்டொரு நாளைக்கெல்லாம் 100, 120-இருக்கவேண்டிய நாடித் துடிப்பானது 130, 140-ஆக தீவிரப்பட்டிருக்கும்; ஆரம்பத்தில் நாக்கில் குழகுழப்பான மாவு படிந்திருக்கும்; அடி நாக்கும், நுனி நாக்கும் இரத்தச் சிகப்பாக விருக்கும்; கண் விழியானது சிவந்து மாமிசத் துண்டுபோல் காணப்படும்; நாவானது படிப்படியாக சுவாபீக நிலைக்கு வந்துவிடும்.

அம்மை ரோகத்தில் விஷ சந்நி சுரமும், மாந்த வியாதியும், தொண்டை வீக்கமும் ஏற்பட்டால் பரிகரிக்கக்கூடாத நிலைமையை அடையும். மேலும் அம்மை ரோகத்தினுல் ஈளை ரோகமும், மாந்த வியாதியும், கண்டக்குழல் வீக்கங்களும், எலும்பு வியாதிகளும், கண் கோளாறுகளும், செவி ரோகங்களும், சர்ம வியாதிகளும் உண்டாகும். அம்மை குறிகள் தோன்றினபிறகும் திரேகோஷ்ணம், 100-டிகிரிக்கு குறையாமலே இருக்கும்; அம்மைகளின் தனிப்பட்ட பெயரைக்கீழ் குறிப்பிடுகிறேம். அம்மையில் தண்ணீரை வேண்டிய மட்டும் குடிக்கக் கொடுக்கலாம். தனி வெந்நீரிலாவது அல்லது ஒருபங்குக் காடியும், மூன்றுபங்கு வெந்நீரும் கலந்த கலவை நீரிலாவது கடற்பஞ்சை நனைத்து, நாள்தோறும் 2-தடவை அம்மைச் சிரங்குகளை பதமாய் துடைப்பது மிகுந்த நன்மையைத் தரும்.

உப்புதரியம்மை
உமியம்மை
கடுகம்மை
கரும்பனிச்சையம்மை
கல்லுதரியம்மை
கொள்ளம்மை
கோணிதட்டம்மை
தவளையம்மை
நீர்க்குழுவானம்மை
பனைமுகரியம்மை
பாசிபயற்றம்மை
பாலம்மை
மொழுக்கனம்மை
வாகுதரியம்மை
விச்சரிப்பனம்மை
வெந்தயவம்மை

## உப்புதரி அம்மை—German Measles—False Measles

காச்சல் 101, 103-டிகிரிவரை அடித்து, மூன்றும் நாளில் முகத்தில் பொறிப்பொறியாக நமச்சல்போல் தோன்றும்; பின் திரேகமெல்லாம் உண்டாகும்; ஐந்தாம் நாளில் அவற்றில் நீர்க்கோத்து, அரிப்பு அதிகமாகத் தோன்றும்; ஏழாம்நாள் மறைந்துவிடும்; பதினோராம்நாளில் தலைக்கு தண்ணீர் விடலாம்.

## உமியம்மை—Rubella—Rotheln

காச்சல் 101, 102-டிகிரியிருக்கும்; வயிற்றோட்டமும் வாந்தியுமிருக்கும்; மூன்றும்நாள் முகத்தில் சிறு நமச்சல்கள்போல் தோன்றி, பின் உடலாதியந்தமும் உமிப்போல் இருக்கும்; ஐந்தாம்நாள் நமச்சல்களில் நீர்க்கோர்த்து, ஒன்பதாம்நாள் மறைந்துவிடும்; பத்தாம்நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

## கடுகம்மை—Scarlatina Anginosa

காச்சல் 101, 103-டிகிரி இருக்கும்; உடம்பெல்லாம் அசதியாகவும், சிறு வலியாகவுமிருக்கும்; தொண்டைகட்டிக் குரல் கம்மும்; வயிற்றோட்டமிருக்கும்; மூன்றும் நாளில் தலையில் கடுகுப்போன்ற நமச்சல்கள் தோன்றும்; நான்கு நாளைக்குள் நீர்கோர்த்துக் கொப்புளங்கள் நன்றாகத் தெரியும்; ஏழாம்நாள் ஒன்றுமில்லாமல் மறைந்துவிடும்; பதினோராம்நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

## கரும்பனிச்சையம்மை—Measles

காச்சல் 102, 104-டிகிரி இருக்கும்; நான்காம்நாள் சிரசில் மயிர்க்கால்கள் சமீபமாக கொப்புளங்கள் கிளம்பும்; இதில் வயிற்றோட்டம் ஏற்படுவது மிகவும் நல்லது; மலம் கட்டினால், உடம்பெல்லாம் பாளமாக வெடித்துச் சீழ் பிடித்து புழு உற்பத்தியாகிவிடும். முதல் முதல் நெற்றியிலும், தலை ரோமங்களிலும் கொப்புளங்கள் கிளம்பி, பின் முகத்திலும் கழுத்திலும் உடம்பிலும், கடைசியாகக் கால்களிலும் உண்டாகிவிடும். கொசுக்கடிமாதிரியாக உண்டாகி வட்டவளையமாக, கொப்புளங்களாக நீர் கோற்றுச் சற்றுச் சென்னிறமாக தோன்றும். கொப்புளங்கள் தோன்றிய மூன்று

நாளில் சுரம் விட்டுவிடும். வயிற்றோட்டம் ஏற்பட்டுவிட்டால், ஏழாம் நாள் கொப்புளங்கள் வாடிவிடும். மலம் கட்டுமானல் பதினன்காம் நாள்தான் கொப்புளங்கள் வாடும். இருபத்தோராம்நாள் தலைக்குத் தண்ணீர்விடலாம். இது மிகவும் கொடுமையான அம்மை ரோகமாகும். ஐந்துநாள்வரையிலும் காச்சல் 105-டிகிரி வரை அடிப்பதுண்டு. மலம் கட்டாதிருந்தால் யாதொரு குற்றமும் நேறுவதில்லை. மலம் கட்டிவிட்டால் அநேகமாக நம்பிக்கை யற்றதாகவே கூறவேண்டும்.

## கல்லுதரியம்மை—Scarlatina

கடுமையான சுரம் காயும்; ஒருசமயம் 104, 105-டிகிரியு மிருக்கும்; வயிற்றோட்டமும் வாந்தியும் அதிகமாயிருக்கும்; மூன்றும் நாள் முகத்தில் சிறு கொப்புளங்கள் உண்டாகி, ஏழாம் நாள் பெருங்கொப்புளங்களாக மாறிவிடும்; கொப்புளங்கள் சிவந்திருக்கும்; 10-ம் நாள் கொப்புளங்கள் வாடிவிடும் பதினேராம் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

## கோள்ளம்மை—Small Pox

காச்சல் 102, 104-டிகிரி யிருக்கும்; வாய்பிதற்றலும், சன்னியும், வலிப்பும், காணும்; மூன்றும் நாளில் முகப்பருபோல் அம்மைக் குறித்தோன்றி ஏழாம் நாள் நீர்க்கோர்த்து பதின்மூன்றும் நாள் மறையும் 16-ம் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

## கோணிதட்டம்மை:—

உப்புதரி அம்மை என்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## தவளையம்மை—Measles

இது சாதாரண காச்சலாக 102, 103-டிகிரியிலிருக்கும்; நடக்கமுடியாமல் கால்கள் கடுக்கும்; நெஞ்சில் வலி உண்டாகும்; நான்காம் நாள் சிரசில் அம்மைக் குறி தோன்றி ஏழாம் நாள் பெரும் கொப்புளங்களாக விருக்கும்; ஒன்பதாம் நாள் கொப்புளங்கள் வாடிவிடும். பதினேராம் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

## நீர்க்குழுவான் அம்மை:—

காச்சல் 101, 102-டிகிரி அடிக்கும்; மூன்றும் நாள் சுண்டக்காய் பெரிய கொப்புளங்கள் தோன்றும்; ஏழாம் நாள் வாடிவிடும். ஒன்பதாம் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

## பனைமுகரியம்மை—Small Pox

காச்சல் 101, 102-டிகிரி யிருக்கும்; கண் சிவந்து எரியும்; கைகால் வீங்கும்; குளிர் நடுக்கும்; வாய் பிதற்றல் யேற்படும்; சில சமயம் சன்னியும் வருவ

துண்டு. மூன்றும் நாள் முகத்தில் சிறு கொப்புளங்கள் தோன்றி பதின் மூன்றும் நாள் மறையும். பதினுறும் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

பாசிப்பயிற்றம்மை:—Chicken Pox Vericella Vesicularis

காச்சல் 102, 103-டிகிரி யிருக்கும்; இரண்டாம் நாள் முகத்தில் சிறு நமச்சல் போல் உண்டாகி ஏழாம் நாள் பாசிப்பயறுபோல் கொப்புளங்கள் காணப் பட்டு ஒன்பதாம் நாள் மறைந்துவிடும். பதின்மூன்றும் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

பாலம்மை—Scaratina

சுரம் கடுமையாக 103, 105-டிகிரி யிருக்கும்; உடம்பு கடுப்பு வலியாக விருக் கும்; மூன்றும் நாள் முகத்தில் கொப்புளங்கள் தோன்றும்; ஏழாம் நாள் கொப்புளங்கள் நீர்க்கோர்த்து மினுமினுப்பா யிருக்கும்; ஒன்பதாம் நாள் கொப்புளங்கள் வாடிவிடும். பதினைந்தாம் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

மோழுக்கம்மை—Scarlatina Maligna

ஏழுநாள்வரை காச்சல் 101, 103-டிகிரி அளவாகவே இருக்கும். ஏழுநாளைக் குப்பின் முகத்தில் அம்மைக் குறிகள் தோன்றும்; உடம்பாதியந்தமும் குடைச்சல் உண்டாகும்; இடுப்பும், முழங்காலும் வீங்கும்; உடம்பெல்லாம் எரிச்சல் உண்டாகும்; பதினைந்தாம் நாள் மறையும். பதினேழாம் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

வரகுதரியம்மை—Small Pox

காச்சல் அதிகமாய் 103, 104-டிகிரி இருக்கும்; வாயிலிருந்து இரத்தம் வரும்; நீர்தாரையிலும் இரத்தம் கசியும்; மூன்றும்நாள் முகத்தில் வரகரிசி போன்ற கொப்புளங்கள் தோன்றி, ஏழாம்நாள் கொப்புளங்கள் நீர்க் கோர்த்து காணப்படும்; பதினோராம் நாள் கொப்புளங்கள் மறையும். பதின் மூன்றும் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

விச்சிலுப்பையம்மை:—

உமி அம்மை என்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

வெந்தய அம்மை—Scarlatina Simplex

காச்சல் 101, 103-டிகிரி அடித்து உடம்பெல்லாம் குத்தலும், வலியும் காணும்; மூன்றும் நாள் வெந்தயம்போல் கொப்புளங்கள் உண்டாகி, ஏழாம் நாளில் கொப்புளங்களெல்லாம் நீர்க்கோத்து ஒன்பதாம் நாள் மறைந்து விடும். பதினைந்தாம் நாள் தலைக்குத் தண்ணீர் விடலாம்.

## அம்மை யிறங்கியபின்—After Variola

அம்மை யிறங்கியபின், அம்மையின் உத்வேகத்தைத் தணிக்கும் பொருட்டாக சில சிகிச்சை முறைகளைச் செய்யவேண்டும்.

அம்மை யிறங்கித் தண்ணீர்விடும்போது:—

| | | | |
|---|---|---|---|
| வேப்பிலை | இரண்டுபிடி | அறுகம்பில் | ரூபாயெடை 1 |
| மஞ்சள் | ரூபாயெடை 1 | | |

இவற்றை மைப்போலரைத்து, உடம்பெல்லாம் பூசியிருந்து, வேப்பிலைப் போட்டுக் காய்ச்சிய தண்ணீரைத் தாளுகவே குளிரவைத்து, அதனுல் ஸ்நானம் செய்விக்கவேண்டும். தண்ணீரில் அதிகநேரம் வைத்திருக்கக்கூடாது.

அம்மை இறங்கியதிலிருந்து ஒருவாரம் வரையில்:—

| | | | |
|---|---|---|---|
| அத்திபிஞ்சு | ரூபாயெடை ½ | சாதிக்காய் | ரூபாயெடை ½ |
| பருத்திப்பிஞ்சு | ,, ½ | சீரகம் | ,, ½ |

மைபோலரைத்து, மோரில் கலக்கிக் காலை நேரங்களில் நாள்தோறும் கொடுத்து வரலாம்.

அம்மை இறங்கியபின் ஒன்றுவிட்டொருநாள், மேற்சொல்லியவிதமாக மருந்தைப் பூசியிருந்து, வேப்பிலை போட்டத் தண்ணீரிஞல், ஸ்நானம் செய்வித்து வரவேண்டும்.

அம்மை யிறங்கியபின், அம்மைப் புண்களிருந்தால் வேப்பங் கொழுந்தையும், மஞ்சளையும் சமமாகவெடுத்து, மைபோலரைத்துப் பூசியிருந்து பின்னர், தயிரை உடலெல்லாம் தேய்த்து, வேப்பிலை போட்டத் தண்ணீரிஞல் ஸ்நானம் செய்துவைக்கலாம். இப்படி ஒன்றுவிட்டொருநாள் மூன்று ஸ்நானங்கள் செய்துவைத்தபின், சிற்றுமணக்கெண்ணெயைத் தடவி ஒன்றுவிட்டொரு நாள், மூன்று ஸ்நானங்கள் செய்துவைக்கவேண்டும்.

ஆறுமாதம் வரை, அம்மை வந்தவர்களுக்கு காரமான ஆகாரங்கள் கொடுத்தால் சில சமயம் கெடுதல்கள் நேரிடலாம். குழையவடித்தச் சோற்றில் வெங்காயத்தைக் குறுவ அரிந்து போட்டு, தயிர்விட்டுக் கொடுப்பதே அம்மை ரோகத்தில் கஷ்டப்பட்டவர்களுக்கேற்ற ஆகாரமாகும்.

## அம்மை ரோகத்திலேற்படும் கோளாறுகள்

## SEQUELAE BY VARIOLA

அம்மை ரோகமுண்டா யிருக்கும்போதும், அம்மை யிறங்கித் தலைக்குத் தண்ணீர் விட்டபின்பும், சில கோளாறுகள் ஏற்படுவதுண்டு. அதற்குத் தகுந்தப் பரிகாரங்கள், செய்யப்படாவிட்டால் அசம்பாவித மாகுமாதலால், தகுந்த சிகிச்சைகள் செய்யும்முறையை இதன் கீழ் கூறப்படுகிறது:—

## அம்மை அதிகப்படாதிருக்க:—

சிலருக்கு அம்மையானது, அகோரமாக உடலாதியந்தமும் பரவிக் கொப்புளிக்கும். அதை மட்டுப்படுத்தினால் சற்று இலகுவாயிருக்கும். அதற்கு ஆரம்பத்திலேயே, மட்டுப்படுத்தும்படியான சிகிச்சை செய்வதே உத்தமமானது.

### சிகிச்சை

(1) வெள்ளைக் குங்கிலியத்தை அவுரியிலைச் சாற்றால் 12-மணிநேரம் மைபோலரைத்துச் சுண்டக்காயளவு, மாத்திரைகளாகச் செய்து உலர்த்திக் கொண்டு, சுரம் காயும்போதேனும், அம்மைக் குறிகள் தோன்றின உடனேயேனும் ஒரு மாத்திரையை வெந்நீரில் கரைத்துக் கொடுத்து வந்தால் அம்மை அதிகப்படாதிருக்கும்.

(2) பழந்தோலை (பழய, செருப்பு முதலியது) சுட்டுக் கருக்கிய சாம்பலில் தேன் விட்டுப் பிசைந்து கழற்சிக்காயளவுக் கொடுத்துவந்தாலும் அம்மை அதிகப்படாது.

## அம்மை உள்ளே இறங்காதிருக்க:—

சில சமயங்களில் அம்மை ரோகக் குறிகள் அதிகம் வெளியில் தோன்றாமலிருக்கலாம். இவ்விதமாக அம்மைத் திரேகத்தினுள்ளே சர்மங்களுக்குள்ளும், அஸ்தி நரம்புகளிலும், ஜீரண உருப்புகளிலும், தொண்டை நாளங்களிலும் தாக்கி, வெளிக்குத் தெரியாமல் செய்து விபத்தை உண்டு பண்ணும். போதிய அளவாக மருந்தினாலல்லாது இயற்கை துற்குணத்தால், சர்மங்களுக்குக்கீழ் அம்மைக் கொப்புளங்கள் உண்டாகி மேற்தோன்றாதிருக்குமானால் அசாத்தியமாகவே முடியும். எவ்வளவு அம்மையின் கொரோம் வெளிக்குத் தோன்றுகிறதோ அவ்வளவாலும், உள் இறங்கவில்லை என்று சற்று நம்பலாம். எவ்வாறிருப்பினும் அம்மை ரோக ஆரம்பத்திலேயே காச்சலடிக்கும்போதே அம்மைக் காச்சலென்றுத் தெரிந்த உடனே தக்க அவுஷதப் பிரயோகங்களினால் உள்ளுக் கிறங்காமலிருக்கும் வழியைத் தேடவேண்டும்.

### சிகிச்சை

| | | |
|---|---|---|
| (1) தேற்றாவிரை ரூபாயெடை | $1\frac{1}{2}$ | * வேகவைத்த இளநீர் தண்ணீர் |
| கோரைக்கிழங்கு | $1\frac{1}{2}$ | அவுன்ஸ் 6 |

*இளநீர்க்காயின் மேல் மட்டையை நீக்கிவிட்டு, ஒட்டோடுக்கூடிய இளநீர்த் தேங்காயை தண்ணீரில்போட்டு நன்றாக வேகவைத்துப் பின் அதனுள்ளிருக்கும் தண்ணீரை எடுத்துக் கொள்ளவும்.

வேகவைத்த இளநீர் தண்ணீரால் அரைத்துக் கலக்கி வடிகட்டி நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்துவந்தால் அம்மை உள்ளுக்கிறங்காது.

| | | | |
|---|---|---|---|
| (2) | சீரகம் | ரூபாயெடை | 1 |
| | * வேகவைத்த இளநீர் தண்ணீர் | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்தரைத்துக் கலக்கி வடிகட்டி நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்துவந்தால் அம்மை உள்ளுக்கிறங்காது.

| | | | |
|---|---|---|---|
| (3) | சீரகம் | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| | ¶ நாக்குப்பூச்சி | ,, | $1\frac{1}{2}$ |
| | ‡ ஈஞக்கிடேரிச் சாணிப்பால் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்தரைத்துக் கலக்கி வடிகட்டி நாள் ஒன்றுக்கு மூன்றுவேளைக் கொடுத்துவரலாம். இதனால் அம்மை உள்ளுக்கிறங்காது.

| | | | |
|---|---|---|---|
| (4) | கருடக்கல் (பளிங்குபோலுள்ளது) | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| | மான் கொம்பு | ,, | $1\frac{1}{2}$ |
| | காண்டாமிருகத்தின் கொம்பு | ,, | $1\frac{1}{2}$ |

இவற்றை மான்கொம்பை அரத்தால் ராவிப்போட்டு ஆறவைத்த தண்ணீரினால் அரைத்துக் கலக்கி வடிகட்டி 4-அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வருவதினாலும் அம்மை உள்ளுக்கிறங்காது.

(5) பிராய மரத்து இலையை ஒரு மண் சட்டியில் போட்டுத் தண்ணீர்விட்டு நன்றாக அலசிக்கொண்டிருந்து, பின் அந்தத் தண்ணீர் 4-அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வருவதினாலும் அம்மை உள்ளுக்கிறங்காது.

## அம்மைப் புண்ணுகள்:—

அம்மை யிறங்கி தண்ணீர்விட்ட பின்னும் அம்மைப்புண்ணுகள் இருக்குமானால் அதில் ஈ, கொசு முதலிய விஷ சத்துருக்கள் வந்து உட்கார்ந்து கிருமிகளைப் பெருக்கி புண்ணைப் பின்னும் ஆறாமல் செய்து புழு உண்டாக்கிவிடும். அதனால் அதிக உபத்திரவங்கள் சம்பவிக்குமாதலால் கூடிய விரைவில் அப்புண்ணுகளை ஆற்றும்படியான சிகிச்சைகள் செய்துவர வேண்டும்.

---

* வேகவைத்த இளநீர்த்தண்ணீர் 158-ம் பக்கம் பார்க்கவும்.

¶ நாக்குப்பூச்சியைப் பாலில் போட்டுக் கொஞ்சநேரம் வைத்திருக்க, மண்ணைக் கக்கிவிடும்; பின்னர் எடுத்துக்கொள்ளவும்.

‡ கன்றுபோடாத பசுமாட்டின் சாணியைக் கரைத்து வடிகட்டியது.

சிகிச்சை

(1) வேப்பங்கொழுந்து ஒருபிடி விரலி மஞ்சள் (கறிமஞ்சள்) ரூபாயெடை 1 ஒன்று சேர்த்து மைபோலரைத்து புண்ணுகளில் பூசி வரலாம்.

(2) முற்றின தேங்காயைத் திருகிக் காய்ச்சி யெடுத்த தேங்காய் எண்ணெய் 1-அவுன்ஸில் $\frac{1}{4}$-ரூபா யெடை கடுக்காய்த்தூள் அல்லது மிளகு சாம்பல் போட்டு வெயிலில் வைத்திருந்து குளிர்ந்தபின் கோழி யிறகால் புண்ணின் மேல் தடவி வரலாம். அல்லது வெள்ளைத் துணியில் நனைத்து புண்ணின் மேல் போட்டு வரலாம்.

(3) நன்ருக முத்திய தேங்காயைத் திருகி, அந்தத் தேங்காய்ப் பூவுடன் நாலில் ஒருபங்கு நன்ருகத் தூள்செய்த புளியங்கொட்டையின் மேற் ருேலை பொட்டுப் பிசைய பசைபோல் வரும். அந்தப் பசையை வழித்து புண்ணுகளில் தடவி வரலாம்.

அம்மைப் பூரிக்க:—

அம்மை உள்ளே இறங்காதிருக்கவென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

அம்மையால் உண்டாகும் கதகதப்பு:—

அம்மை யிறங்கித் தலைக்குத் தண்ணீர் விட்டதன்பின், திரேகத்தில் அதிக கதகதப்பு இருந்துகொண்டே யிருக்கலாம். அவ்விதமாகக் கதகதப்பு நீடித்திருக்குமானல் வயிற்றிளைச்சலை உண்டுபண்ணி உடம்பை மெலியச் செய்துவிடும். தலைக்குத் தண்ணீர் விட்டபின் திரேகத்திலிருக்கும் கத கதப்பைத் தணிக்க கீழ்கண்ட சிகிச்சை செய்யலாம்.

சிகிச்சை

ஆவாரை யிலையை மோர்விட்டரைத்து உடம்பெல்லாம் பூசி வைத்திருந்து குளிப்பாட்டி வரலாம்.

அம்மையில் அதிசாரம் காண்டல்:—

கரும்பனச்சை யம்மையில் வயிற்ருேட்டமிருப்பது நன்மையானதாகும். மற் றய அம்மைகளில் வயிற்ருேட்டமிருந்தால் அதிகப்பலயீன மாக்கிவிடுமோத லால், வயிற்றுப்போக்கு அதிகமாயிருப்பதை நீக்கி, மலம் சாதாரணமாகக் கழியும்படி செய்யவேண்டியது அவசியமானதாகும். சில சமயங்களில் அம்மை யிறங்கித் தலைக்குத் தண்ணீர்விட்ட பின்பும் வயிற்ருேட்டம் காண்பதுண்டு. இவைகளுக்கெல்லாம் கீழ்கண்ட சிகிச்சை பயனளிக்கக் கூடியதாகவிருக்கும்.

சிகிச்சை

(1) சிறு சண்பகம் (பிச்சி) இலை இரண்டுபிடி புது மண்சட்டியில் போட்டு, நீராகாரம் (பழஞ்சோற்றுத் தண்ணீர்) 4-அவுன்ஸ் விட்டுக் கொஞ்சநேரம்

அலசிக்கொண்டிருந்து, பின் வடிகட்டிக் கொடுக்கலாம். இந்தவிதமாய் நாள் ஒன்றுக்கு 3-வேளை கொடுக்கவேண்டும்.

(2) சுக்கு ரூபாயெடை 1 எலுமிச்சைவேர் ரூபாயெடை 1
பேய்ப்பீர்கன்வேர் ,, 1 கோரைக்கிழங்கு ,, 1

இவற்றை நசுக்கி 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 3, 4-அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வரலாம்.

(3) ஆலஞ் † சருகு ரூபாயெடை 1 சிறு சண்பகச்சருகு (பிச்சி) ரூபாயெடை 1
அத்திச்சருகு ,, 1
இத்திச்சருகு ,, 1 துத்திச்சருகு ,, 1
மாவிலைச்சருகு ,, 1 நாணற்சருகு ,, 1
ஒதியஞ்சருகு ,, 1 சுக்கு ,, 1

ஒன்று சேர்த்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை 3, 4-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(4) சீந்தில்தண்டு ரூபாயெடை 1 சுக்கு ரூபாயெடை 1
கோரைக்கிழங்கு ,, 1

ஒன்று சேர்த்துப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை 2, 3-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(5) மான்கொம்பை, கோவையிலைச்சாற்றில் 3-நாள் ஊறவைத்தெடுத்து, கோவையிலையை அரைத்து அந்தக்கொம்புக்குக் கவசம்செய்து, 20-வரட்டியில் புடமிட பஸ்பமாகும். அந்தபஸ்பத்தில் ரூபாயெடை $\frac{1}{4}$-எடுத்து மான்கொம்பை ஊறவைத்தத் * தண்ணீர் 2-அவுன்ஸில் கலக்கி இந்தவிதமாக நாள் 1-க்கு 3-வேளை கொடுத்து வரலாம்.

## அம்மையில் இரத்தம் கக்குதல்:—

அம்மை யுண்டாயிருப்பதாலான அதிக உஷ்ணத்திலாவது, தொண்டை; ஜீரண உறுப்புகள்; சுவாசாசயம் முதலியவைகளில் அழலைக் கண்டு விடுவதினுலாவது, இருமும்போதாகிலும், அல்லது எச்சில் பெருக்கைப் போலென்கிலும் இரத்தம் வெளிப்படுவதுண்டு. இரத்தம் கக்கும் குணங்கள் கண்டால் சற்று அஞ்சவேண்டிய சந்தர்ப்பமாகவே யிருக்கும். ஆதலால் முடிந்தவரையில் இரத்தம் கக்குவதைத் தடுக்கவேண்டிய பரிகாரங்களைத் தேடவேண்டுவது அவசியமாகும்.

---

† சருகு என்றால் காய்ந்த இலை. * 164-ம் பக்கம் பார்க்க.

சிகிச்சை

நன்னாரிவேர் மேல்பட்டை மான்கொம்பு ரூபாயெடை $\frac{3}{4}$
ரூபாயெடை $\frac{3}{4}$ நாக்குப்பூச்சி $\frac{3}{4}$

இதில் நாக்குப்பூச்சியை முதலில் பாலில் போட்டு மண்ணைக் கக்கியபின் எடுத்துக்கொண்டு, மற்ற மருந்துகளையும் சேர்த்து மான்கொம்புத்தூள் ரூபாயெடை-6, போட்டு $\frac{1}{2}$-மணிநேரம் ஊறவைத்த தண்ணீரால் மைபோலரைத்துக் கலக்கி வடிகட்டி 2, 3-அவுன்ஸ் அளவாக நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வரலாம்.

## அம்மையில் கண்சிவந்து புண்பட்டிருத்தல்:—

அதிகமான உஷ்ணத்தினாலும், அம்மையின் பேதத்தினாலும், கண்சிவந்து பூழைக் கட்டிக்கொண்டு புண்பட்டுவிடும். பூழையை அப்போதைக் கப்போது சுத்தி செய்யாது விடுத்தால், கண்ணை ஒட்டிக் கொள்ளும்படி செய்து விஷத்தன்மையை உண்டாக்கி கண் பார்வையை மங்கச்செய்து விடும். ஆதலால் ஆரம்பத்திலேயே கண்சிவந்திருந்தால் தக்க சிகிச்சைகள் செய்யவேண்டும்.

சிகிச்சை

(1) சீரகத்தை அழுக்கில்லாத ஒரு சுத்தமான வெள்ளைத்துணியில் முடிந்து முலைப்பாலில் ஊறவைத்து கண்ணில் அடிக்கடி ஒற்றிடம் கொடுத்துக் கொண்டிருக்கலாம்.

(2) சுடுசோற்றில் பசு வெண்ணெயைப் போட்டுப் பிசைந்து, ஒரு வெள்ளைத் துணியில் முடிந்து நீராகாரத்தில் (பழஞ்சோற்றுத் தண்ணீரில்) நனைத்து அடிக்கடி கண்ணுக்கு ஒற்றிடம் கொடுத்து வரலாம்.

கண்ணில் அதிகமான பூழைச் சேர்ந்திருந்தால்:—

(3) போரிக் ஆஸிட் (Acid Boric) கிரைன்ஸ் 10
டிஸ்டில் வாட்டர் (Aqua Distill) அவுன்ஸ் 1

நன்றாகச் சேர்த்துக் கலந்துகொண்டு மிருதுவான சுத்த வெள்ளைத் துணியில் நனைத்து முதலில் கண்களை நன்றாகச் சுத்தம் செய்துவிட்டு, பின்னர் 1, 2-இலக்க சிகிச்சைகளைக் கையாளலாம்.

## அம்மையில் காச்சலிருந்தால்:—

அம்மைக் குறிகள் தோன்றும் வரை காச்சலதிகமிருக்கும். அம்மைக் குறிகள் கண்டவுடன் காச்சல் தணிந்துவிடும்; பின்னர் 100-டிகிரிக்கு அதிகப் படாமலே யிருந்துவரும்; சில சமயங்களில் அம்மைக்குறிகள் வெளித் தோன்றின பின்னும், காச்சல் மட்டுப்படாமல் இருந்துகொண்டிருக்கும்;

ஆகையினல், அம்மைக்குறிகள் தோன்றியபின்னும் காச்சல் அதிகமாக விருந்தால் தருந்த சிகிச்சை செய்யவேண்டும். காச்சலை மட்டுப்படுத்தாம லிருந்துவந்தால், காய்ச்சலதிகரித்து சந்நிதோஷத்தை உண்டுபண்ணி ஆபத்தை விளைவிக்குமாதலால் அம்மைக்குறிகள் கண்டவுடன் காச்சலதிக மிருந்தால் கீழ்கண்ட சிகிச்சைகளினுல் காச்சலின் உஷ்ணத்தைத் தணிக்க முயற்சிக்கலாம்.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) எலுமிச்சை வேர்ப்பட்டை | ரூபாயெடை | 1 | விலாமிச்சைவேர் | ரூபாயெடை | 1 |
| | | | ஏலம் | ,, | 1 |
| சீந்தில்தண்டு | ,, | 1 | சந்தனம் | ,, | 1 |
| பற்பாடகம் | ,, | 1 | கோரைக்கிழங்கு | ,, | 1 |

ஒன்று சேர்த்திடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) வெந்தயம் ரூபாயெடை 2 கோரோசனை ரூபாயெடை $\frac{1}{8}$

முதலில் வெந்தயத்தை 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயம் அவுன்ஸ் ஒன்றில் கோரோசனையைக் கரைத்து, நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (3) டிஞ்சர் காம்பர் கோ (Tincture Camphor Co) | டிராம் | $\frac{1}{4}$ |
| லைக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) | ,, | $\frac{3}{4}$ |
| பொட்டாஷியம் ஸிட்ரஸ் (Potassium Citras) | ,, | $\frac{1}{4}$ |
| சிரப் டோலு (Syrup Tolu) | ,, | $\frac{1}{4}$ |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கலக்கி, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 3-மணி நேரத்திற் கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

**அம்மையில் சந்நி உண்டாகுதல்:—**

அம்மைக் குறிகள் தோன்றிய பின்னும் காச்சல் அதிகரித்து வருவதினுலும், திரேகத்தினுள்ளுறுப்புகள் அழலைக்கொண்டு விடுவதினுலும், அம்மை யின் கொரேச் செய்கைகளினுல் தாங்கமுடியாததினுலும், சந்நிகண்டு விடலாம். சந்நி கண்டவுடன் தொண்டைக்கம்மும்; மேல்மூச்சு அதிக மாய் வாங்கும்; கண்ணைச் செருகும்; சில சமயங்களில் கைகால்கள் கோணி வலிப்பெடுக்கும். இவ்வித கோளாறுகள் கண்டுவிட்டால் அஞ்சவேண்டிய சந்தர்ப்பமாகவே கருதவேண்டும் ஆபினும், சிகிச்சை செய்து பார்ப் பதே நல்லது.

சிகிச்சை

| | | |
|---|---|---|
| நன்னாரிவேர்ப்பட்டை | மான்கொம்பு | ரூபாயெடை $\frac{3}{4}$ |
| ரூபாயெடை $\frac{3}{4}$ | நாக்குப்பூச்சி | $\frac{3}{4}$ |

முதலில் நாக்குப்பூச்சியை பாலில்போட்டு வைத்திருந்து மண்ணைக் கக்கிய பின் எடுத்து மற்றதைச் சேர்த்து, * மான் கொம்பு ஊறவைத்த தண்ணீரைவிட்டு மைபோலரைத்து * மான் கொம்பு ஊறவைத்தத் தண்ணீர் அவுன்ஸ் 4-ல் கரைத்து வடிகட்டி இந்தவிதமாக நாள் ஒன்றுக்கு மூன்று வேளை கொடுத்து வரலாம்.

அம்மையில் சீதபேதிக்காணுதல்:—

அம்மையின் கொடூரத்தினாலும், அதி உஷ்ணத்தினால் சிறுகுடல் புண்பட்டு விடுவதினாலும் சில சமயம் அம்மையுண்டாயிருக்கும்போது சீதபேதியும் காண்பதுண்டு. சிலசமயம் மலத்துடன் இரத்தமும் சீதமும் கலந்துக் கழியும். வயிற்றுவலியும், வயிறு ஆசனவாய் முதலியவைகளில் கடுப்பும் ஏற்படும். அம்மையில் சீதபேதிகண்டால் திரேகத்தை மிகவும் மெலிய செய்து பலயீனப் படுத்திவிடும்.

சிகிச்சை

(1) முற்றின நாவல்பட்டையைப் பசும்பால்விட்டு இடித்துப் பிழிந்த சாறு அவுன்ஸ் 1-ம், பசும்பால் அவுன்ஸ் 2-ம், ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வரலாம்.

(2)

| | | |
|---|---|---|
| கல்வத்திவேர்ப்பட்டை | வெங்காயம் | ரூபாயெடை $1\frac{1}{2}$ |
| ரூபாயெடை $1\frac{1}{2}$ | சீரகம் | $1\frac{1}{2}$ |

இவற்றை வெள்ளாட்டுப் பால்விட்டு இடித்துப் பிழிந்து வடிகட்டி 2, 3-அவுன்ஸ் அளவாக நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வரலாம்.

(3)

| | | |
|---|---|---|
| பழய மாங்கொட்டைப் பருப்பு | எருமைத்தயிர் | அவுன்ஸ் 3 |
| ரூபாயெடை $\frac{1}{2}$ | | |

மாம்பருப்பை எருமைத்தயிரில் அரைத்துக் கலக்கி நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வரலாம்.

(4) வெங்காயத்தைக் குறுவ அரிந்து பசுநெய்விட்டு வதக்கி வேண்டிய மட்டும் கொடுத்துவரலாம்.

(5) வெங்காயச்சாறு அவுன்ஸ் 1 பசுநெய் அவுன்ஸ் $\frac{1}{2}$

ஒன்றாக மத்தித்து காலை மாலை கொடுத்து வரலாம்.

---

* மான்கொம்பை தண்ணீரில் ஊறவைத்து, முள் அரத்தால் ராவியெடுத்த தூள் ரூபாயெடை 6, இதை 24-அவுன்ஸ் கடுஞ் சூடான தண்ணீரில் போட்டு $\frac{1}{2}$-மணிநேரம் சென்றபின் எடுத்து வடிகட்டி உபயோகிக்கவும்.

(6) வில்வப்பழ ஓட்டுக் கஷாயம் அதிவிடயம் ரூபாயெடை $\frac{1}{8}$
அவுன்ஸ் $1\frac{1}{2}$ கிராம்பு ,, ,,

கஷாயத்தில் பொடித்துப்போட்டு வடிகட்டி நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வரலாம்.

### அம்மையில் சுரமதிகமிருத்தல்:—

அம்மையில் காச்சலிருந்தால் என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

### அம்மையில் தாகம் காணுதல்:—

அம்மை வார்த்திருக்கும்போது, நாவரட்சி யதிக மிருக்கலாம். தண்ணீரைக் கொடுப்பதினுல் தாகம் தணியாமல் மேலுமேலும் தாகமெடுத்துக் கொண்டே யிருக்கும். ஆதலால், தாகமடங்கும்படியான சிகிச்சை செய்யவேண்டியது அவசியமாகும்.

சிகிச்சை

ஊறவைத்த மான்கொம்பை, முள்ளாரத்தால் ராவியெடுத்ததுள் ரூபாயெடை 6-ஐ 24-அவுன்ஸ் கடுஞ்சூடாயுள்ள தண்ணீரில் போட்டு $\frac{1}{2}$-மணி நேரம் வைத்திருந்து, வடிகட்டி வேண்டியமட்டும் கொடுத்து வரலாம்.

### அம்மையில் தொண்டைக் கம்முதல்:—

அம்மை ரோகத்தினுல் தேகம் மிகவும் உஷ்ணமடைந்து, தொண்டைக் கம்மலேற்படலாம் அல்லது அம்மைக் கொப்புளங்கள் தொண்டை நாளங்களில் தாக்கி, வீக்கத்தை யுண்டாக்கி தொண்டைக்கம்மலை உண்டுபண்ணலாம். அம்மை ரோகத்தில் தொண்டைக் கம்மலேற்பட்டால், அம்மை குணமானபின்பும் அந்தத் தொண்டைக் கம்மலிருந்துகொண்டே யிருக்கும்; ஆதலால், அம்மையில் தொண்டைக் கம்மலேற்பட்டால் உடனே தக்க பரிகாரம் செய்யவேண்டும்.

சிகிச்சை

(1) கர்ப்பூரவல்லிச்சாறு அவுன்ஸ் 1 கோரோசனை குன்றிமணியெடை 2
ஒன்று சேர்த்துக் கரைத்து காலை மாலை கொடுத்து வரலாம்.

(2) மாதுளம்பூக்கஷாயம் அவுன்ஸ் 4 தேன் அவுன்ஸ் 1
எலுமிச்சம்பழச்சாறு ,, 1

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு 3, 4-தடவை வாய் கொப்புளிக்கலாம்.

குறிப்பு:—இதை உள்ளுக்குக் கொடுக்கக்கூடாது.

### அம்மையில் நீர்த்தாரையில் இரத்தம் கசிந்தால்:—

அம்மை ரோகத்தில் அதிக உஷ்ணம் ஏற்பட்டாலும், மூத்திரத்தாரை, குண்டிக்காய் முதலியவைகளில் அழற்சிக்கொண்டாலும், அம்மை வார்த்திருக்

கும் காலங்களிலாகிலும், அம்மையிறங்கித் தலைக்குத் தண்ணீர் விட்ட பின்பாகிலும், மூத்திரம் பெய்யும்போதாவது அல்லது சாதாரண நோங் களிலாவது நீர்த்தாரையில் இரத்தம் கசிவதுண்டு.

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| மான்கொம்பு | ரூபாயெடை $\frac{3}{4}$ | நாக்குப்பூச்சு | ரூபாயெடை $\frac{3}{4}$ |
| நன்னாரிவேர்ப்பட்டை ,, | $\frac{3}{4}$ | | |

முதலில் நாக்குப்பூச்சியை பாலில்போட்டு வைத்திருந்து, மண்ணைக் கக்கியபின் எடுத்து, எல்லாம் ஒன்றுசேர்த்து ஊறவைத்து ராவிய மான்கொம்புத் தூள் ரூபாயெடை 6-ஐ, 24-அவுன்ஸ் அதி சூடான தண்ணீரில் போட்டு $\frac{1}{2}$-மணிநேரம் ஊறவைத்த தண்ணீர விட்டு அரைத்து 2-அவுன்ஸளவாகக் கரைத்து வடிகட்டி, 4-மணிநோத்திற் கொருதடவை கொடுத்து வாலாம்.

## அம்மையில் மலசலம் கட்டி வயிறு பொருமுதல்:—

அம்மை வார்த்திருக்கும்போதும், அம்மையிறங்கித் தலைக்குத் தண்ணீர் விட்ட பின்பும், மலசலம் கட்டுவதுண்டு. அவ்விதம் மலசலம் கட்டினால் பின்னர் கெடுதலேற்படலாமாதலால், சரியான விதமாய் மலசலம் கழியும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்.

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| சீனாகற்கண்டு | ரூபாயெடை $1\frac{1}{2}$ | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் 6 |
| வெங்காயம் | ,, $1\frac{1}{2}$ | | |

வெங்காயத்தையும், கற்கண்டையும் நன்றாகப் பொடித்து எண்ணெயில் போட்டு வெயிலில் வைத்திருந்து, ஆறினபிறகு $\frac{3}{4}$, 1-அவுன்ஸ் வீதம் அதிகாலையில் கொடுத்து வாலாம். அல்லது இரவு படுக்கைக்குப் போகுமுன், 1, $1\frac{1}{2}$-தேக் கரண்டி யளவாகக் கொடுத்து வாலாம்.

## அம்மையில் மூட்டுப்பிடிப் பேற்படுதல்:—

அம்மை வார்த்திருக்கும்போது, ஒரேபக்கமாகப் படுத்திருப்பதினாலாவது, மூட்டு எலும்புகளிலும், மூட்டை ஒன்றிக்கும் நரம்பு நார்களிலும் அம்மையின் கொப்புளங்களுண்டா யிருப்பதினாலும், மூட்டுகள் நீடித்த அசைவின்றி இருந்துவிடுவதினாலும் மூட்டுப்பிடிப் பேற்பட்டு, தலைக்குத் தண்ணீர் விட்டபின்பும் அவைகள் அசைவற்றிருக்கலாம்; தலைக்குத் தண்ணீர் விட்டவுடன், மூட்டுப் பிடித்திருப்பதாகத் தெரிந்தால் தாமதமின்றிப் பரிகாரங்கள் செய்யப்படாவிட்டால், ஸ்திரமான மூட்டுபிடிப் பேற்பட்டு விடலாம்.

சிகிச்சை

(1) பழைய வைக்கோலையும், வேப்பிலையையும் போட்டு அவித்து, அந்த ஆவியை மூட்டுப்பிடிப் புள்ளவிடங்களில் பிடிக்கலாம். அதோடு அவற்றை அரித்து துணியில் முடிந்து சுடச்சுட பிடிப்புள்ள விடங்களில் ஒற்றிடம் கொடுத்து சிற்றாமணக்கெண்ணெயை தாராளமாகத் தேய்த்து வைக்கலாம். இந்தவிதமாக காலையிலும், இரவில் படுக்கைக்குப் போகுமுனனும் 10, 15-நாளைக்குச் செய்யவேண்டும்.

(2) வட்டத் துத்திச்செடியை அப்படியே தண்ணீரில் போட்டு அவித்து, அந்த ஆவியை மூட்டுப்பிடிப்புள்ள விடங்களில் பிடித்தும், அவற்றை ஒரு துணியில் முடிந்து, சுடச்சுட பிடிப்புள்ளவிடங்களில் ஒற்றிடம் கொடுத்து, பின் சிற்றாமணக்கெண்ணெயைத் தடவி வரலாம். இப்படியே காலையிலும், இரவு படுக்கைக்குப் போகுமுன்னும் 10, 15-நாளைக்குச் செய்து வரலாம்.

## அம்மையில் வயிறு போருமி மலசலம் கட்டுதல்:—

அம்மையில் மலசலம் கட்டி வயிறு பொருமுதல் என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## அம்மை ரோகத்தால் கண்ணில் பூ விழுதல்:—

அம்மையின் கொரே உஷ்ணத்தினுல் கண்ணில் பூழை சார்ந்து புண்பட்டுப் போவதினுலாகிலும், அம்மைக் கொப்புளங்கள் கண்ணிலுண்டாவதினுலாகிலும், கண்ணின் கருமணிகளில் பூவும், பூப்போன்ற மாசும் விழுவதுண்டு. கருமணியில் அம்மைக் கொப்புளங்களுண்டாகி பூ விழுந்துவிட்டால், ஒரு வித சிகிச்சைக்கும் வசப்படாது; என்றாலும், முடிந்த வரையில் பரிகாரங்களைச் செய்வதே உத்தமமாகும். கண்ணில் பூழைச் சார்ந்து கருமணியில் பூ மாசு பிடித்திருந்தால் சிகிச்சையினுல் குணமுண்டாகும்.

சிகிச்சை

(1) பனங்குருத்தைத்தட்டி சாற்றைக் காலை மாலை கண்ணில் பிழிந்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முருங்கைப்பூ | ரூபாயெடை | $\frac{1}{4}$ | நந்தியாவட்டைப்பூ | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| நெருஞ்சிப்பூ | ,, | $\frac{1}{4}$ | சீரகம் | ,, | $\frac{1}{4}$ |

இவற்றை யொரு துய்ய வெள்ளைத் துணியில் முடிந்து தட்டி சாற்றைக் காலை மாலை கண்ணில் பிழியலாம்.

## அம்மை வராதிருக்க—Prevention of Variola

அம்மைரோகம் தொத்தும் தன்மையுள்ள விஷக்கிருமிகளால் வருவதென்பதை முன்னமே எழுதியிருக்கிறோம். அவ்விதமான தொத்து வியாதியி

விருந்து தப்பித்துக்கொள்ள ஒவ்வொருவரும் அம்மைக்குத்திக் (Vaccination) கொள்ளவேண்டும். அம்மைக்குத்தும் முறையை டாக்டர் ஜென்னர் (Dr. Jenner) என்பவர் முதல் முதல் கண்டுபிடித்து உலகிற் குதவினர். அம்மைக் குத்திக்கொள்ளுவதினல் அம்மை வியாதி வாரா தென்பதல்ல, ஒருமுறை அம்மைரோகம் உண்டானல் பின்னர் அந்நோய் வருவதேயில்லை. அதேமுறையில் அம்மைக்குத்தி அம்மைரோகத்தின் கொரேசெயல்களை குறைந்த அளவில் திரேகத்தில் வியாபிக்கச் செய்வதினல் அம்மை ஏற்படாதென்ற சித்தாந்தத்தின்மேல் அம்மைக்குத்தும் முறை கண்டுபிடிக்கப்பட்டதாகும். இயற்கை அம்மைக்கும் அம்மையின் தன்மையைச் செயற்கையினல் உட்புகுத்துவதற்கும் பெருத்த வித்தியாசங்கள் இருப்பதினலேயே அம்மைக் குத்திக்கொண்டவர்களுக்கும், அம்மைநோய் உண்டாகிறது; ஆனலும், அம்மையின் கொரேம் அடங்கினதாகவேதானிருக்கும்.

குழந்தைகள் பிறந்த ஆருமாதத்திலேயே அம்மைக் குத்தவேண்டியது மிகவும் அவசியமாகும். அவ்விதம் செய்வதினல் அனேக சிசு மரணங்களைத் தப்புவிக்கமுடியும்.

### சிகிச்சை

ஒரு மங்கு (Porcelain) ஜாடியில் 24-அவுன்ஸ் சுத்தமான எள்ளெண்ணெய் விட்டு, அதில் 4-செந்தாழம்பூவை குறுக நறுக்கிப்போட்டு வாயைமூடி சீலை மண்செய்து ஈரமில்லாத தரையில் 1-கஜ ஆழத்தில் புதைத்துவைத்து மூன்று மாதத்திற்குப்பின் அதை வெளியிலெடுத்து தேய்த்து ஸ்நானம் செய்துகொண்டும் தலையில் தடவிக்கொண்டுவந்தால் அம்மை ரோகம் உண்டாகாது.

## ஆராத அம்மைப்புண்:—

அம்மைப் புண்ணுகளென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கண்ணில் அம்மை வராதிருக்க:—

அம்மையானது உடலின் சகல அவயவங்களிலும், தன் கொரேசெய்கைகளைக்காட்டும் குணமுள்ளது. கண், காது, தொண்டை, நாக்கு முதலிய பாகங்களிலும் அம்மைதாக்கி தீங்குசெய்வதுண்டு மற்றெல்லா பாகங்களையும் விட கண் பிரதானமாயிருப்பதினல் அதில் அம்மைக் கொப்புளம் கண்டால் பூ விழுந்துவிடும். அதற்காக கண்ணில் அம்மை வார்க்காதிருக்கும்படியான முன் எச்சரிக்கையுடனிருக்கவேண்டும்.

### சிகிச்சை

அம்மைக் காச்சல்தானென்று தெரிந்தவுடனே ஒருவர் வாயில் வெங்காயத்தைப் போட்டு மென்று, அம்மைக் காச்சலடிப்பவர்களின் கண்களில் காலை மாலை ஊதுவதினல் அம்மைக் கொப்புளங்கள் கண்ணிலுண்டாகாது.

மறுமுள்:—

அம்மை சரிவர இறங்குமுன் தலைக்குத் தண்ணீர் விட்டதினாலும், கிரமமாகத் தண்ணீர் விட்டபின், வெயிலிலலைந்து திரிந்ததினாலென்கிலும், திரேகா ரோக்கியத்திற்கு தீங்கை விளைவிக்கும். அசுசியான விடங்களுக்கு அம்மை வார்த்தவர்கள் சென்றதினாலென்கிலும், அம்மை வார்த்தவர்கள் சுகாதாரக் குறைவான விடங்களி லிருந்ததினாலென்கிலும், அதிக காரம், அதிக உஷ்ண முதலிய ஆகாரங்களையும், ஜீரணிக்கத் தகுதியற்ற பதார்த்தங்களை யும் புசித்ததினாலென்கிலும், மறுபடியும் சுரம் கண்டு வாடியுள்ள அம் மைப் புண்ணுகள் சீழ்க்கொண்டு தடித்து ரணமாகி தீங்கை விளைவிப்ப தற்கே மறுமுள்ளென்று சொல்லப்படும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) சாதிக்காய் | ரூபாயெடை | $1\frac{1}{2}$ | கிராம்பு | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| நறுக்குமூலம் | ,, | $1\frac{1}{2}$ | சீரகம் | ,, | $1\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 8-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு ஒரு அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஷாயம் | அவுன்ஸ் | 1 | வேப்பிலைச்சாறு | அவுன்ஸ் | 1 |
| வெங்காயச்சாறு | ,, | 1 | தேன் | ,, | $\frac{1}{8}$ |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு 3-வேளை இந்த அளவாகக் கொடுத்து:—

| | | | | |
|---|---|---|---|---|
| வட்டத் துத்தியிலை | ஒருபிடி | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 1 |
| கற்பூரம் | ரூபாயெடை $\frac{1}{2}$ | | | |

முதலில் இலையையும், கற்பூரத்தையும் மைபோலரைத்து, பின் எண்ணெய் சேர்த்துக் குழப்பி வெளிப்பிரயோகமாகப் புண்களின்மேல் தடவி வரலாம்.

## கணை—கணம்

## CROUP

கணை ரோகத்திற்கும், மாந்த ரோகத்திற்கும் வித்தியாசம் சடுதியில் கண்டு பிடிப்பது முடியாததாகவிருக்கிறது. மாந்தம் முற்றியே கணை பிறப்பதாக தமிழ் வைத்தியம் கூறுகிறது.

குழந்தைகள் புறங்கையை மூகத்தில் தேய்த்துக்கொண்டு அழ ஆரம்பிக் கும்; சாச்சல், தொண்டைக்கம்மல், தொண்டைப் புகச்சல் ஏற்பட்டு, வரட்சி இருமலாகவிருக்கும்; இந்த ரோகத்தில் சுரம் கொஞ்சம் கடுமையாய் அதாவது 101, 105-டிகிரி இருக்கும்; முகம் கணகணப்பாகவும், சுவாசகஷ்டமும் ஏற் பட்டு, மூச்சு விடும்போது காபுரவெனச் சப்தம் உண்டாகும். அதிகமான கஷ் டத்தின்பின் இருமி, கொஞ்சம் சளி கக்கும்; பகலி லிருப்பதை காட்டிலும்

இரவிலேயே அஞ்சத்தக்கவிதமாக மாறிவிடும். குழந்தை கழுத்தின் பின்புறமாய் தலையை தொங்கவைத்துக்கொள்ளும்; நெஞ்சானது சுவாசிக்கும்போது உயர்ந்து சர்மமும் வியர்வையால் நனைந்திருக்குமானல் ஆபத்தையே விளைவிக்குமென்று அஞ்சவேண்டியதாகும். தண்ணீர் குடிப்பதுகூட கஷ்டத்துடனிருக்கும்; சில சமயம் இருமல் கொஞ்சம் கொஞ்சமாகவேனும், அல்லது இல்லாமலேனும் மறைந்துவிடும்; மிகவும் ஆபத்தான சமயத்தில் தொண்டைக்கம்மல் அதிகரித்து, சுவாசம் சீக்கிரமாக விடப்பட்டு, நாடிநடை மெலிந்து, முகம் வெளுத்து, உதடுகள் நீலமாக மாறிவிடும். இழுப்பு காண்பதினுலேயே சில மரணமும் சம்பவிக்கும்.

குழந்தைகளின் நாக்கு தண்டுகளிலும், தொண்டை உட்புற சிறு நாளங்களிலுமுள்ள இளஞ் சவ்வுகளின் வீக்கத்தினுலும், அவைகளில் இயற்கையாக உண்டாகும் நீர் பெருக்கத்தினுலும் குழந்தைகளுக்கு இது சம்பவிக்கிறது. பனிரெண்டு ஆண்டுவரையில் குழந்தைகளுக்கு கணைநோய் வருவதுண்டு. தொண்டை உட்புற எச்சிலூறும் நாளங்களில் கோழை மிகுதிபடுவதே காரணமாகும். அவைகளில் பொய்தசைகள் வளர்வது தின்றதானல்தான் மாந்தம் என்ற ரோகம் வருமென்று கூறுவர்.

சிசுவின் நாவின் தண்டும், தொண்டை உட்புற நாளங்களும் மிகவும் சிறுத்திருந்து, மூன்ருண்டுகளுக்குப் பின்னரே அவை பெரிதாகின்றன. அப்போது கணைக்கு ஆஸ்பதமான குணங்கள் மாறிவிடும். இதைத் தவிர்த்து கணைரோகத்திற்கு மற்றும் சில காரணங்களும் கூறுகின்றனர். தொண்டை வீங்கியதினுலும், மூக்கில் சதை வளர்ந்திருத்தலினுலும், சம சீதோஷ்ணத்திலிருந்து குளிர்ச்சியாக மாறுவதினுலும், குழந்தைகள் ஈரக்காலுடன் திரிவதினுலும், பால் மறக்கச் செய்யும்போது, சுத்தமான ஆகாரம் கொடுக்கப்படாததினுலும், கிரம வேளைகளில் ஆகாரம் கொடுக்காததினுலும், ஈரத் தரைகளில் குழந்தைகளைச் சயனிக்க விடுவதினுலும், கணைரோகம் தாக்கலாமென கொல்லப்படுகிறது. முக்கியமாக குளிர் காலத்திலும் மாரிகாலத்திலும்தான் இவ்வியாதி அடிக்கடி வருகிறதென்று டாக்டர் ருடாக்ஸ் (Dr. Ruddocks) கூறுகிருர்.

தமிழ் வைத்தியப்படி கணைரோகம் எட்டு என்று சிலரும், பதினெட்டென்று சிலரும், இருபத்தைந்தென்று சிலரும் கூறுகிருர்கள். என்ருலும், நமக்குத் தெரிந்தமட்டுள்ள பெயர்களையும் சிகிச்சைகளையும் கூறுகிறேம்.

| | | |
|---|---|---|
| அந்தகக்கணை | கொதிப்புக்கணை | தெற்கத்திக்கணை |
| ஆமக்கணை | சிங்கிமாந்தக்கணை | நீராமக்கணை |
| இரத்தக்கணை | சிலேத்பனக்கணை | நீர்க்கணை |
| ஊதுமாந்தக்கணை | சீதக்கணை | நீர்மாந்தக்கணை |
| எச்சிக்கணை | சுழிக்கணை | பித்தக்கணை |
| எரிக்கணை | சூலைக்கணை | பிரளிக்கணை |

| | | |
|---|---|---|
| பிறக்கணை | மந்தாரக்கணை | வரட்கணை |
| போமக்கணை | முக்குக்கணை | வாதக்கணை |
| மகாக்கணை | மூலக்கணை | விஷமாந்தக்கணை |

### அந்தகக் கணை:—

காச்சலும் கணைக்குரிய குறிகளோடும், நாவு உலர்தல்; விழிவெளுருதல்; முகம் மஞ்சளாகவும் மினுமினுப்பாகவும், மாறுதல் முதலிய குறிகளும் எற்படும்.

#### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சிறுகீரைவேர் | ரூபாயெடை | 3 | தேற்றுவிரை | ரூபாயெடை | 3 |
| பொன்னுங்காணிவேர் | ,, | 3 | கடுக்காய் | ,, | 3 |
| வரப்பூலாவேர் | ,, | 3 | அவுரிவேர் | ,, | 3 |
| பசுவெண்ணெய் | ,, | 10 | | | |

வெண்ணெய் நீக்கி மற்றவைகளை ஒன்றாக மைபோலரைத்து வெண்ணெயுடன் சேர்த்துக் கலந்து காய்ச்சி வடிகட்டி எடுத்து, காலை மாலை 2-தேக்கரண்டியளவாகக் கொடுத்து; நெய்யில் வெந்த மருந்தை தலையிலும் தடவி வரலாம்.

கணைப் பொதுமருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

### ஆமக் கணை:—

கணைரோகக் குறிகுணங்களுடன் இரவில் சுரமதிகமா யிருக்கும்; திரேகம் மெலிந்துவரும்; நாவரட்சி யதிகமுண்டாகும்; ஆகாரவெறுப்பேற்படும்; வயிறுபொருமி இரைச்சலுடன் வயிற்றோட்டமுண்டாகும்; குறும் சுவாசம் காணும்; கால்கள்மட்டும் குளிர்ந்திருக்கும்; கண்ணைத்திறவாமலே குழந்தை பயந்து அலறி அழும்; மூக்கு உயர்ந்தும் புருவம் வளைந்தும் தெரியும்.

#### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | இண்டுவேர்ச்சாறு | அவுன்ஸ் | 12 | மாசிப்பத்திரி | ரூபாயெடை | 3 |
| | மூங்கிலிலைச்சாறு | ,, | 12 | சாதிக்காய் | ,, | 3 |
| | நிலக்குமிழஞ்சாறு | ,, | 12 | ஏலம் | ,, | 3 |
| | புங்கனிலைச்சாறு | ,, | 12 | கிராம்பு | ,, | 3 |
| | நிலதுளசிச்சாறு | ,, | 12 | கடுகுரோகிணி | ,, | 3 |
| | வெங்காயச்சாறு | ,, | 12 | கடுக்காய் | ,, | 3 |
| | முடக்கொத்தான் சாறு | ,, | 12 | வால்மிளகு | ,, | 3 |
| | தூதுவேளையிலைச்சாறு | ,, | 12 | ஓமம் | ,, | 3 |
| | நுணயிலைச்சாறு | ,, | 12 | வசம்பு | ,, | 3 |
| | வல்லாரைச்சாறு | ,, | 12 | சுக்கு | ,, | 3 |
| | கஞ்சாங்கோரைச்சாறு | ,, | 12 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 24 |

சாற்றையும் எண்ணெயையும் ஒன்று சேர்த்து, அதில் இதா சரக்குகளை இளவறுப்பாய் வறுத்துப் பொடித்துப்போட்டுக் காய்ச்சிவடித்த எண்ணெயில் காலை மாலை 2-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) வேலிப்பருத்திவேர் | ரூபாயெடை | 1 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| | | | வெங்காயம் | ,, | 1 |
| கோழியவரைவேர் | ,, | 1 | கடுகுரோகிணி | ,, | 1 |
| கிளுவைவேர் | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| பொடுதலைவேர் | ,, | 1 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| கொடிக்கள்ளிவேர் | ,, | 1 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |
| சிவதைவேர் | ,, | 1 | வெள்ளாட்டுப்பால் | ,, | 12 |
| வெளுச்சிப்பிசின் | ,, | 1 | | | |

எண்ணெயுடன் பாலைச் சேர்த்துக்கொண்டு, மற்றய சரக்குகளையும் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடிகட்டி, காலை மாலை ½, 1-தேக்கரண்டி வீதம் ஒரு அவுன்ஸ் மூலைப்பாலில் கலக்கிக் கொடுத்து வரலாம். அல்லது பால் கொடுக்கும்போதெல்லாம் மூலைக்காம்பில் தாராளமாகத் தடவிக்கொண்டு பால் கொடுக்கும்படி செய்யலாம். (பத்தியம்)

கணைப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

## இரத்தக் கணை:—

கணைரோகக் குறிகளுடன், இருமலதிகமாயிருக்கும்; வயிற்றோட்டமேற்படும்; சில சமபங்களில் ஆசனம் கடுத்து இரத்தம் கழியும்; இடுப்பும் தொடையும் குடைச்சலுடன் வலியாயுமிருக்கும்; நாவரட்சி யதிகப்படும்; நாடி நடை க்ஷீணித்து மெதுவாய் நடக்கும்; ஆகாரம் செல்லாது.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) வில்வவேர் | ரூபாயெடை | $\frac{1}{8}$ | ஆவாரம்பூ | ரூபாயெடை | $\frac{1}{8}$ |
| கருவேலங்கொழுந்து | ,, | ,, | ஏலம் | ,, | ,, |
| கிராம்பு | ,, | ,, | சாதிக்காய் | ,, | ,, |
| வேப்பம்பருப்பு | ,, | ,, | சாதிப்பத்திரி | ,, | ,, |
| சீரகம் | ,, | ,, | | | |

இவற்றை மூலைப்பால் விட்டு மைபோலரைத்து, ஒரு அவுன்ஸ் மூலைப்பாலில் கலக்கி வடிகட்டி. நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கொடுத்து வரலாம். (பத்தியம்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) நன்னாரிவேர் | ரூபாயெடை | $\frac{1}{8}$ | ஏலம் | ரூபாயெடை | $\frac{1}{8}$ |
| தூதுவேளைவேர் | ,, | ,, | கோஷ்டம் | ,, | ,, |
| செங்கழுநீர்க்கிழங்கு | ,, | ,, | செண்பகப்பூ | ,, | ,, |
| அதிமதுரம் | ,, | ,, | சீரகம் | ,, | ,, |

ஒன்று சேர்த்து, முலைப்பால் விட்டு மைபோலரைத்து, நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை கழற்சிக்காயளவு, சமன் பசு நெய்யுடன் சேர்த்துக் குழப்பிக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முருங்கையிலைச்சாறு | அவுன்ஸ் | 12 | கோரோசனை | ரூபாயெடை | 1 |
| நல்லெண்ணெய் | ,, | 3 | கோஷ்டம் | ,, | 1 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 12 | அதிமதுரம் | ,, | 1 |
| பசுவெண்ணெய் | ரூபாயெடை | 10 | கொத்தமல்லி | ,, | 1 |
| கார்போகரிசி | ,, | 1 | ஏலம் | ,, | 1 |
| சாதிக்காய் | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| சாதிபத்திரி | ,, | 1 | லவங்கப்பத்திரி | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 | செங்கழுநீர்க்கிழங்கு | ,, | 1 |
| இலவங்கப்பட்டை | ,, | 1 | செண்பகப்பூ | ,, | 1 |

முதலில் சாற்றையும் எண்ணெய்யையும் ஒன்று சேர்த்துக்கொண்டு, பின்னர் சரக்குகளைப் பொடித்துப்போட்டு காய்ச்சிவடிகட்டி, காலை மாலை 2, 3-தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

கணைப் பொதுமருந்துகளி லொன்றையும் கொடுத்துவரலாம்.

## இளநீர்க் கட்டுக்கணை:—

எச்சில் கணை என்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## ஊதுமாந்தக் கணை:—

கணைரோகத்திற்குண்டான இதர குறிகளுடனும் கால், கை, கண்ணிமைகள் வீங்கியிருக்கும்; நாக்கு புண்பட்டிருக்கும்; ஆகாரம் செல்லாது; குறுமூச் சதிகரித்து வயிறூதித் தெரியும்; மூச்சானது துருத்தியின் சப்தம் போல் கேழ்க்கும்.

### சிகிச்சை

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நீர்முள்ளிச்சாறு | அவுன்ஸ் | 6 | தேங்காய்ப்பால் | அவுன்ஸ் | 6 |
| வாமுள்ளிச்சாறு | ,, | 6 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 24 |
| கருசலாங்காணிச்சாறு | ,, | 6 | இண்டுவேர் | ரூபாயெடை | 1 |
| கொட்டைக்கரந்தைச்சாறு | ,, | 6 | வாள்மிளகு | ,, | 1 |
| மாதுளம்பழச்சாறு | ,, | 6 | அதிவிடயம் | ,, | 1 |
| பற்பாடகச்சாறு | ,, | 6 | வசம்பு | ,, | 1 |
| வல்லாரைச்சாறு | ,, | 6 | வெட்பாலையரிசி | ,, | 1 |
| வட்டத்திருப்பிச்சாறு | ,, | 6 | பெருங்காயம் | ,, | 1 |
| செங்கழுநீர்க்கிழங்குச்சாறு | ,, | 6 | கோரைக்கிழங்கு | ,, | 1 |
| செந்தாமரைக்கிழங்குசாறு | ,, | 6 | இலவம்பிசின் | ,, | 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஒரிலைத்தாமரைச்சாறு | அவுன்ஸ் 6 | விளாம்பிசின் | ரூபாயெடை | 1 |
| சூரத்ததாவரைச்சாறு | ,, 6 | மதுக்காரைப்பிசின் | ,, | 1 |
| கண்டங்கத்திரிச்சாறு | ,, 6 | மாசிக்காய் | ,, | 1 |
| கலியாணமுருங்கை | | சாதிபத்திரி | ,, | 1 |
| யிலைச்சாறு | ,, 6 | செங்கத்தாரிப்பட்டை | ,, | 1 |

சாற்றையும், எண்ணெய் பால் முதலியவற்றை ஒன்று சேர்த்துக்கொண்டு அதில் மற்ற சரக்குகளைப் பொடித்துப்போட்டு காய்ச்சி வடித்து, காலை மாலை 1, 1½-தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம். (உப்பு, புளி நீக்கிக் கடும் பத்தியம்.)

| | | | | |
|---|---|---|---|---|
| (2) கரிசலாங்காணிச்சாறு | அவுன்ஸ் ½ | நாய்வேளைவேர் | ரூபாயெடை | ¼ |
| முலைப்பால் | ,, ½ | | | |

முதலில், வேரை சாற்றாலரைத்துக்கொண்டு பின், பாலைச் சேர்த்து வடி கட்டி, காலை மாலை கொடுத்து:—

நீர் முள்ளிச் சமூலத்தைச் சுட்டுச் சாம்பலாக்கி, அதைக் கரிசலாங்காணிச் சாறுவிட்டுக் கரைத்து, காலையில் உடம்பெல்லாம் தடவிவைத்து, சாயந்திரம் சுடுதண்ணீரால் குளிப்பாட்டி வரலாம். (பத்தியம்.)

### எச்சிக் கணை:—

இதை, இளநீர் கட்டுக்கணை என்றும் சொல்லப்படும். இது அமாவாசை பௌர்ணமி தினங்களில்தான் குணத்தை அதிகமாகக் காண்பிக்கும். மற்றைய நாட்களில் இதன் குணம் ஒன்றும் தோன்றாது. இது மிகவும் கொடுமையான வியாதி. நினையாத நேரத்தில் மரணத்தை யுண்டு பண்ணும்.

கணை ரோகத்தின் மற்றைய குறிகளோடும், குழந்தைகளின் மேல் வாயிலும், தாடையின் இருபக்கங்களிலும் உருண்டையான நீர்க்கொப்புளங்கள் உண்டாகும்; ஓயாமல் வாயில் எச்சில் தடித்து வடிந்துகொண்டே யிருக்கும்; மலச்சிக்கலேற்படும்; வாயில் அதிக வலி வேதனையிருப்பதால், ஆகாரம் உட்கொள்ள முடியாது; குழந்தை எப்போதும் குப்புறப்படுத்துக்கொண்டிருக்கும்.

#### சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) சந்தனம் | ரூபாயெடை 5 | வெட்டிவேர் | ரூபாயெடை | 5 |
| அறுகம்புல் தண்டு | ,, 5 | விலாமிச்சம்வேர் | ,, | 5 |

ஒன்றுசேர்த் திடித்து, 15-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஷாயம் | அவுன்ஸ் | 6 | பசுநெய் | அவுன்ஸ் | 24 |
| வெங்காயச்சாறு | ,, | 24 | கொம்புத்தேன் | ,, | 12 |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, | 24 | தேங்காய்ப்பால் | ,, | 32 |
| கோவையிலைச்சாறு | ,, | 24 | சாதிக்காய் | ரூபாயெடை | 5 |
| வல்லாரைச்சாறு | ,, | 24 | சாதிப்பத்திரி | ,, | 5 |
| வில்வயிலைச்சாறு | ,, | 24 | மாசிக்காய் | ,, | 5 |
| குட்டிவிளாயிலைச்சாறு | ,, | 24 | கடுக்காய் | ,, | 5 |
| அத்திப்பால் | ,, | 12 | நெல்லிக்காய் | ,, | 5 |
| ஆலம்பால் | ,, | 12 | தான்றிக்காய் | ,, | 5 |
| முலைப்பால் | ,, | 6 | சடாமாஞ்சில் | ,, | 5 |
| பசும்பால் | ,, | 24 | அதிவிடயம் | ,, | 5 |
| வெள்ளாட்டுப்பால் | ,, | 24 | | | |

முதலில், சாறு, பால், தேன், நெய் இவற்றை ஒன்று சேர்த்துக்கொண்டு, பின்னர் இதர சரக்குகளைப் பொடித்துப் போட்டுக் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி, காலை மாலை 1, 1½-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (உப்பு, புளி தள்ளி கடும் பத்தியம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | வில்வயிலைச்சாறு | அவுன்ஸ் | 6 | தேன் | அவுன்ஸ் | 2 |
| | மாசிபத்திரிச்சாறு | ,, | 6 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 12 |
| | நிலத்துளசிச்சாறு | ,, | 6 | சுக்கு | ரூபாயெடை | 1 |
| | துளசியிலைச்சாறு | ,, | 6 | மிளகு | ,, | 1 |
| | கஞ்சாங்கோரைச்சாறு | ,, | 6 | திப்பிலி | ,, | 1 |
| | வெங்காயச்சாறு | ,, | 6 | | | |

சாறு, எண்ணெய், இவைகளை ஒன்று சேர்த்துக்கொண்டு இதர சரக்குகளை இளவறுப்பாய் வறுத்துப் பொடிசெய்துப் போட்டுக் கலந்து காய்ச்சி வடித்து, காலை மாலை 1, 1½-தேக்கரண்டி யளவாகக் கொடுத்துவரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) | தென்னங்குரும்பைச்சாறு | அவுன்ஸ் | 12 | சோற்றுக்கற்றாழைச்சாறு | அவுன்ஸ் | 24 |
| | தகரையிலைச்சாறு | ,, | 12 | அதிமதுரம் | ரூபாயெடை | 1 |
| | நுணா (மஞ்சநெத்தி) யிலைச்சாறு | ,, | 24 | கோஷ்டம் | ,, | 1 |
| | வெங்காயச்சாறு | ,, | 24 | ஏலம் | ,, | 1 |
| | பழம்பாசிச்சாறு | ,, | 24 | சீரகம் | ,, | 1 |
| | சிற்றாமணக்கெண்ணெ | ,, | 24 | சந்தனம் | ,, | 1 |
| | | | | இலவங்கப்பட்டை | ,, | 1 |

சாற்றையும் எண்ணெயையும் ஒன்று சேர்த்துக்கொண்டு அதில் இதர சரக்குகளைப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடிகட்டி, காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

கணைப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

## எரிக் கணை:—

கணைரோகக் குறிகளோடும், தேகமெல்லாம் எரிச்சலாக விருக்கும்; வாய்நீர் சதா வடிந்துகொண்டே யிருக்கும்; வாயினால் சுவாசம் வாங்கும்; இரவு பகல் நித்திரையின்றி, குழந்தைகள் சதா அலறிக்கொண்டேயிருக்கும்.

சிகிச்சை

(1) எச்சிக் கணைக்குச்சொல்லிய மூன்றாவதிலக்க அவுஷதம் கொடுத்து வரலாம்.

(2) கணைப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

## கோதிப்புக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும், நெஞ்சும், விலாவும் தணல்போற் சுடும்; இருமலிருக்கும்; தொண்டைக் கம்மும்; கொடுமையான தலைவலியுண்டாகி, நெற்றியில் மட்டும் வியர்த்திருக்கும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| எலுமிச்சம்பழச்சாறு | அவுன்ஸ் | 12 | சோற்றுக்கற்றாழைச்சதை | ரூபாயெடை | 5 |
| இலந்தையிலைச்சாறு | ,, | 12 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| வெங்காயச்சாறு | ,, | 12 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 15 |

சோற்றுக்கற்றாழைச் சதையை எழுதரம் தண்ணீர்விட்டுச் சுத்தமாய் அலம்பி எடுத்துக்கொண்டு ஒரு மண் சட்டியில் எண்ணெயை விட்டு அதில் சாற்றையும், மற்றையவைகளையும் போட்டு அடுப்பிலேற்றி எரித்துச் சோற்றுக் கற்றாழைச் சதை நன்றாய் வெந்திருக்கும் சமயம் பார்த்திறக்கி வடிகட்டி, காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

கணைப்பொது மருந்துகளிலொன்றையும் கொடுத்து வரலாம்.

## சிங்கிமாந்தக் கணை:—

கணைரோகக் குறிகளோடும் காச்சல் மிகுந்திருக்கும்; சுவாசம் மேல்நோக்கிப் போகும்; குழந்தைக்குத் திக்குமுக்கடித்து மயக்கம் காணும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோசனை | ரூபாயெடை | 1 | கோஷ்டம் | ரூபாயெடை | 1 |
| கிராம்பு | ,, | 1 | சண்பகப்பூ | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | சகஸ்திரபேதி | ,, | 1 |
| ஏலம் | ,, | 1 | மாசிக்காய் | ,, | 1 |

இவற்றை ஒன்று சேர்த்து, வெட்டிவேர் கஷாயத்தால் ஒருமணி நேரமும், மாசிப்பத்திரிச் சாற்றால் ஒருமணி நேரமும், விலாமிச்சம்வேர்க் கஷாயத்தால்

ஒருமணி நேரமும், கருந்துளசிச் சாற்றால் ஒருமணி நேரமும் அரைத்து குன்றி மணி யளவாக மாத்திரைகள் செய்துலர்த்தி, காலை மாலை 1-அவுன்ஸ் மாசிப் பத்திரி கஷாயத்தில் ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

கணைப்பொது மருந்துகளி லொன்றையும் கொடுத்து வரலாம்.

## சிலேத்பனக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும் உடம்பெரிச்சல், கை கால் சோர்வு, கை கால் வீக்கம் முதலியதும் இருமலு மேற்படும்; அதிக நேரம் இருமியதற்குப் பின் சளி வெளிப்படும்; உதடும், வாயின் உட்புறங்களும் வெடித்திருக்கும்; வாய் நாற்றமடிக்கும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | வெங்காயம் | ரூபாயெடை 1 | வில்வப்பழத்து உள்தோல் | ரூபாயெடை 1 |
| | சீரகம் | ,, 1 | வெந்தயம் | ,, 1 |

ஒன்று சேர்த்து இளவறுப்பாக வறுத்து 10-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 2-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | |
|---|---|---|---|---|
| (2) | விலாமிச்சம்வேர் | ரூபாயெடை 5 | கோஷ்டம் | ரூபாயெடை 5 |
| | நிலக்குழிம்வோ | ,, 5 | கடுகுரோகிணி | ,, 5 |
| | அவுரிவேர் | ,, 5 | கிராம்பு | ,, 5 |
| | வெங்காயம் | ,, 5 | நல்லெண்ணெய் | அவுன்ஸ் 6 |
| | சண்பகப்பூ | ,, 5 | பசுநெய் | ,, 6 |

பொடிக்க வேண்டியவற்றைப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (3) | வேப்பிலையீர்க்கு | ரூபாயெடை 2 | பொன்னுங்காணிவேர் | ரூபாயெடை 2 |
| | புளியிலையீர்க்கு | ,, 2 | கோழியவரைவேர் | ,, 2 |
| | | | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் 12 |

ஒன்று சேர்த்துப் பொடித்து எண்ணெயில் கலந்து கடும் வெயிலில் 12-மணி நேரம் வைத்திருந்து அந்த எண்ணெயில் காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (4) | அவுரிவேர் | ரூபாயெடை 4 | வெங்காயம் | ரூபாயெடை 4 |
| | வில்வயிலை | ,, 4 | கடுக்காய் | ,, 4 |
| | | | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் 12 |

ஒன்று சேர்த்துப் பொடித்துப் போட்டு காய்ச்சி வடித்து காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

(5) இண்டிலை ரூபாயெடை 4 கடுக்காய் ரூபாயெடை 4
உசிலையிலை ,, 4 கடுகுரோகிணி ,, 4
காட்டுமல்லிகையிலை ,, 4 கருஞ்சீரகம் ,, 4
வெங்காயம் ,, 4 சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் 12

ஒன்று சேர்த்துப் பொடித்துக் காய்ச்சி வடித்து காலை மாலை ஒரு தேக்கரண்டி எண்ணெயை இரண்டு தேக்கரண்டி முலைப்பாலுடன் சேர்த்துக் கொடுத்து வரலாம்.

கணைப்பொது மருந்துகளி லொன்றையும் கொடுத்து வரலாம்.

## சீதக் கணை:—

ஆமக்கணை யென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## சுழிக் கணை:—

இதை நாய்க்கணை என்றும் சொல்லப்படும். கணைரோகக் குறிகளோடும் குளிர் நடுக்கம், மேல் மூச்சியும் உண்டாகும்; உச்சுக்குழி பள்ளமாகவே யிருக்கும்; கண் பஞ்சடைந்திருக்கும்; உடம்பு நச்சுவலியாகவும், நெஞ்சு எரிவாகவு மிருக்கும்; சில குழந்தைகளுக்கு மேல்மூச்சோடு இருமலு மிருக்கும்; சில குழந்தைகளுக்கு நெஞ்சில் கபம் கட்டி திட்டுமுட்டடிக்கும்; நெஞ்சும், முகமும் வீங்கி யிருக்கும்; தொண்டையும், நாவும் வெந்திருக்கும்; கை கால் குளிர்ந்திருக்கும்; வயிறு உப்புசமா யிருக்கும்; நாவு வறண்டிருக்கும்; இருமலும், இளைப்பும் காணும்; மார்பு பள்ளம் விழுந்திருக்கும்; வாயில் நுரைபோல் எச்சில் பெருகி யிருக்கும்; வாந்தியும் வயிற்றோட்டமு மேற்படும்; முகம் மஞ்சரித்துத் தெரியும்.

### சிகிச்சை

(1) உசிலம்பட்டை ரூபாயெடை 1 வெங்காயம் ரூபாயெடை 1
வசம்பு ,, 1

ஒன்று சேர்த்துப் பொடித்து 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 2-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை, ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) சீந்தில்தண்டு ரூபாயெடை 1 தூதுவேளையிலை ரூபாயெடை 1
வில்வப்பழத்தோடு ,, 1 கடுக்காப்பிஞ்சு ,, 1
கண்டங்கத்திரிவேர் ,, 1 சீரகம் ,, 1
முசுமுசுக்கை ,, 1 அதிவிடயம் ,, 1
முள்ளி ,, 1 கடுகுரோகிணி ,, 1
திப்பிலி ,, 1

ஒன்று சேர்த்திடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) காட்டுமல்லிகையிலை | ரூபாயெடை | 3 | வெங்காயம் | ரூபாயெடை | 3 |
| சோற்றுக்கற்றாழைச் சோறு | ,, | 3 | கடுக்காய் | ,, | 3 |
| சாரணத்திவேர் | ,, | 3 | வெந்தயம் | ,, | 3 |
| | | | சீரகம் | ,, | 3 |
| | | | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |

முதலில் சோற்றுக்கற்றாழைச்சோற்றை 7-முறை தண்ணீர்விட்டு சுத்தமாகக் கழுவி எடுத்து எண்ணெயில்போட்டு பின் மற்ற மருந்துகளைப் பொடித்துச் சேர்த்துச், சோற்றுக்கற்றாழைச் சோறு நன்றாக வேகுந்தனையும் எரித்து பின் வடித்து, காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (4) கிலுகிலுப்பைவேர் | ரூபாயெடை | 4 | துளசிவேர் | ரூபாயெடை | 4 |
| குன்றிமணிவேர் | ,, | 4 | வில்வவேர் | ,, | 4 |
| முசுமுசுக்கைவேர் | , | 4 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |

இவற்றை நன்றாகப் பொடித்து எண்ணெயில் போட்டு, கடும் வெயிலில் 6-மணிநேரம் வைத்திருந்து வடிகட்டி காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (5) இண்டிலைச்சாறு | அவுன்ஸ் | 6 | செம்முள்ளிச்சாறு | அவுன்ஸ் | 6 |
| சங்கனிலைச்சாறு | ,, | 6 | நுணாயிலைச்சாறு | ,, | 6 |
| பொடுதலைச்சாறு | ,, | 6 | வெள்ளைப்பூண்டுச்சாறு | ,, | 6 |
| பசுநெய் | ., | 12 | | | |

ஒன்று சேர்த்துக் கலந்து காய்ச்சி வடித்து, காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (6) குப்பைமேனிச்சாறு | அவுன்ஸ் | $\frac{1}{2}$ | கறியுப்பு | ரூபாயெடை | $\frac{1}{8}$ |
| வேப்பெண்ணெய் | ,, | $\frac{1}{2}$ | | | |

ஒன்றுசேர்த்தரைத்துக் கலக்கி காலையில் மட்டும் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (7) இன்புறாவேர் | ரூபாயெடை | 1 | கடுக்காய் | ரூபாயெடை | 1 |
| இண்டம்வேர் | ,, | 1 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |
| கண்டங்கத்திரிவேர் | ,, | 1 | | | |

நன்றாகப் பொடித்து எண்ணெயில் போட்டு, 6-மணிநேரம் கடும் வெயிலில் வைத்திருந்து காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (8) கோரோசனை | ரூபாயெடை | $\frac{1}{8}$ | செண்பகப்பூ | ரூபாயெடை | $3\frac{1}{2}$ |
| சாதிபத்திரி | ,, | $\frac{1}{8}$ | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |

பொடித்துப் போட்டு, இலேசாய் சூடேற்றி வைத்துக்கொண்டு, காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

கணைப் பொது மருந்துகளில் ஒன்றைக் கொடுத்து வரலாம்.

## சூலைக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும் வயிற்றுப் பொருமலிருக்கும்; இருமலதிகமாயிருக்கும்; மேல்மூச்சுக் காணும்; தொண்டையும், நாவும் சிவந்து புண்ணாயிருக்கும்; முகம் ஒருவித நாற்றமடிக்கும்; குழந்தை பாலுண்ணாமல் மயங்கும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாசிப்பத்திரிச்சாறு | அவுன்ஸ் | 6 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |
| கஞ்சாங்கோரைச்சாறு | ,, | 6 | தேன் | ,, | 2 |
| துளசிச்சாறு | ,, | 6 | சுக்கு | ரூபாயெடை | 1 |
| நிலதுளசிச்சாறு | ,, | 6 | திப்பிலி | ,, | 1 |
| வில்வயிலைச்சாறு | ,, | 6 | மிளகு | ,, | 1 |
| வெள்ளைப்பூண்டுச்சாறு | ,, | 6 | | | |

சாறுகளையும் எண்ணெயையும் ஒன்று சேர்த்து, அத்துடன் இதர சரக்குகளை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து, கலக்கிக் காய்ச்சி வடிகட்டி, காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

கணைப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

## தேற்கத்திக் கணை:—Periodical Delirium

இக்கணை நோய் அமாவாசை, பௌர்ணமி தினங்களில்தான் உண்டாகுமென்பதாகத் தமிழ் வைத்திய நூற்கள் கூறுகின்றன. இது, ஆரம்பத்தில் சொற்ப சளியோடும்,கணைரோகக் குறிகளுடனும் ஆரம்பித்து,மிகத் தீங்கை விளைவிக்கும் ஒரு பயங்கர வியாதி; கணைரோகத்தில் ஜீரணக் கருவிகளும் பெலஹீன மடைந்திருப்பதினால், அக்காலங்களில் இலகுவில் ஜீரணியாத கடின ஆகாராதிகளை அருந்தச் செய்துவிடுவதினால், கணைரோகக் குழந்தைகளுக்கு, அவ்வாகாரங்கள் குடலில் தங்கி, புளிப்பாகமாறி இரத்தத்தை விஷமிக்கச் செய்து, சன்னியையும், சன்னியில் வலிப்பையும் உண்டாக்கி விடுகிறது.

இது கணைரோகக் குறிகளோடு பற்கடிப்பையும், மூச்சுத் திணறலையும் உண்டு பண்ணி, திட்டுமுட்டடிக்கச்செய்யும்; தலை, கைகால், கழுத்து இவைகளைக் கோணி இழுக்கச் செய்வதோடுங்கூட, கண்களை மூடிமூடித் திறந்து, சன்னியின் சேஷ்டைகளை வெளியரங்கமாகக் காண்பிக்கும்; நெஞ்சு யெழும்பி யெழும்பி தணிந்து, மூச்சு முட்டேற்பட்டு எதிர்பாராதவிதமாய் மரணத்தை உண்டுபண்ணி விடும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) வேலிப்பருத்தியிலைச்சாறு அவுன்ஸ் | 12 | வெள்ளறுகுவேர் | ரூபாயெடை | 4 |
| குப்பைமேனியிலைச்சாறு ,, | 12 | நொச்சிவேர்ப்பட்டை | ,, | 4 |
| வேப்பெண்ணெய் ,, | 24 | முருங்கைவேர்ப்பட்டை | ,, | 4 |
| வெள்ளெருக்கம்பழுப் பின்சாறு ,, | 12 | வசம்பு | ,, | $\frac{1}{2}$ |
| | | சிற்றரத்தை | ,, | $\frac{1}{2}$ |

சாற்றையும், எண்ணெயையும் ஒன்று சேர்த்து, மற்றய மருந்துகளையும் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (2) வெள்ளைப்பூண்டு ரூபாயெடை | 1 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| பெருங்காயம் ,, | 1 | ஓமம் | ,, | 1 |
| வேப்பெண்ணெய் அவுன்ஸ் | 12 | | | |

பொடித்து எண்ணெயில் போட்டு, அடுப்பிலேற்றி 3-மணி நேரம் சிறு தீயாக எரித்து, கொதி கிளம்பியவுடன் இறக்கி, 6-மணிநேரம் கடும் வெயிலில் வைத்திருந்து, பின் காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

கணைப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

## நாய்க் கணை:—

அள்ளுமாந்தமென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## நீராமக் கணை:—

கணை ரோகத்திற்குண்டான குறிகளுடனும், மலம் சில சமயம் தண்ணீராகவும், சில சமயம் சீதம் கலந்தும், சில சமயம் பச்சிலைச்சாறுபோலும், மஞ்சளைக் கரைத்ததைப்போலும் கழியும்; கண்களில் பூழை யதிகமாய் சேர்ந்திருக்கும்; கண்ணீர் அருவிபோல் வடிந்தோடிக்கொண்டே யிருக்கும்; ஆயாசமும் மயக்கமும் காணும்.

சிகிச்சை

இரண்டு ரூபாயெடை பசுவின் வெண்ணெய்யை ஒரு மண்சட்டியில் போட்டு உருக்கி, அதில் அரை ரூபாயெடை மணித்தக்காளி இலையை அரைத்துப்போட்டுக் கிண்டி சிவந்துவரும் சமயமிறக்கி நெய்யை வடித்து காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

கணைப் பொது மருந்துகளி லொன்றையும் கொடுத்து வரலாம்.

**நீர்க் கணே:—**

கணேரோகக் குறிகளுடனும் சுரம் விட்டு விட்டு காயும்; வியர்வையதியகமாகக்காணும்; நாவரச்சியும் தாகமுமேற்படும்; கண்குழி விழுந்திருக்கும்; நாக்கும் உதடும் வெடித்து புண்ணுகவிருக்கும்; மலம் தண்ணீராய் கழியும்; கைகால் சோர்ந்துக் குளிர்ந்திருக்கும்; தலைச்சுற்றேற்படும்; கால் கை முகம் வீங்கித் தெரியும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சத்திச்சாரணேக்காய் | ரூபாயெடை | 2 | சுக்கு | ரூபாயெடை | 2 |
| | | | திப்பிலி | ,, | 2 |
| மூக்குரெட்டைக்காய் | ,, | 2 | மிளகு | ,, | 2 |
| பொடுதலைக்காய் | ,, | 2 | சீரகம் | ,, | 2 |

ஒன்று சேர்த்துப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதமாகக் கொடுத்து வரலாம்.

கணேப் பொதுமருந்துகளி லொன்றையும் கொடுத்துவரலாம்

**நீர்மாந்தக் கணே:—**

கணேரோகக் குறிகளுடனும் மூக்கில் சதா நீர் வடிந்துகொண்டே யிருக்கும்; நெஞ்சு இடுப்பு இவ்விடங்களில் சூடு அதிகமாயிருக்கும்; வயிறு பொருமியும் இறைந்தும் தண்ணீராகவும், பலவிதமாகவும் கழியும்; தலைச்சுற்றும், மயக்கமும் கண்டு உடல் சோர்ந்து வாடிவிடும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெட்டிவேர் | ரூபாயெடை | 1 | அதிமதுரம் | ரூபாயெடை | 1 |
| விலாமிச்சம்வேர் | ,, | 1 | ஏலம் | ,, | 1 |
| கோரோசனே | ,, | 1 | செண்பகப்பூ | ,, | 1 |
| கோஷ்டம் | ,, | 1 | சகஸ்திரபேதி | ,, | 1 |
| மாசிக்காய் | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்து ஆடாதோடையிலைச் சாற்றால் 3-மணிநேரம் மைபோல் அரைத்துக் குன்றுமணியவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொண்டு, காலை மாலை ஒரு மாத்திரை வீதம் முலைப்பாலில் கரைத்துக் கொடுத்து வரலாம்.

கணேப் பொதுமருந்துகளி லொன்றையும் கொடுத்து வரலாம்.

**பித்தக் கணே:—**

கணேரோகக் குறிகளுடனும், மஞ்சளேக் கரைத்ததைப்போல் வயிற்றால் போகும்; நாக்கும், கடைவாயும் புண்பட்டிருக்கும்; திரேகாதியந்தமும்

நெருப்பால் சுட்டதைப்போ லெரியும்; தலை கிறுகிறுப்பும் மயக்கமு முண்டாகும்.

### சிகிச்சை

சிலேத்பனக் கணை அவுஷதங்களி லொன்றையாவது, கணைப் பொது மருந்துகளி லொன்றையாவது கொடுத்து வரலாம்.

## பிரளிக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும், வயிறு பொருமி யிருக்கும்; எப்பமுண்டாகும்; உடலாதியந்தமும் நச்சுவலியா யிருக்கும்; குழந்தை துடிதுடித்து அழுது, தரையில் அங்குமிங்கும் உருளும்; மலம் மாவைக் கரைத்ததைப்போல் வெள்ளையாகக் கழியும்; சில குழந்தைகளுக்கு மலச்சிக்கலேற்பட்டு வயிறு பொருமிப் போவதுமுண்டு. அடிக்கடி அடிவயிற்றைப் புரட்டிப் புரட்டி வலியுண்டாகுமாதலால், குழந்தைக்கு மூக்கலும் மேல்மூச்சுமுண்டாகும்; வாயுலர்ந்து தாகமதிகரிக்கும்; மூக்கில் மட்டும் நீர்வடிந்துகொண்டேயிருக்கும்; இளைப்புக் காணும்; உடல் மஞ்சள் நாற்றமடிக்கும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெங்காயம் | ரூபாயெடை | 30 | கருஞ்சீரகம் | ரூபாயெடை | 1 |
| பேய்க்கும்மட்டிக்காய் | ,, | 10 | கஸ்தூரிமஞ்சள் | ,, | 1 |
| கடுகுரோகிணி | ,, | 1 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 24 |

வெங்காயத்தையும், கும்மட்டிக்காயையும் குறுவ அரிந்தும், மற்ற சரக்குகளைத் தூள் செய்தும் எண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டி, காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (கடும் பத்தியம்; கஞ்சி ஆகாரமட்டுந்தான் கொடுக்கலாம்)

கணைப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

## பிறக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும் வயிறு பொருமியிருக்கும்; மலம் பச்சிலைச் சாறு போலும் தயிர்க்கட்டிபோலும் கழியும்; குழந்தை குடித்த பாலை அப்படியே வாந்தி எடுத்துவிடும்; சதாகாலமும் தூங்கிக்கொண்டேயிருக்கும்; கைகால் குளிர்ந்து கண்விழி மேல்நோக்கிச் சொருகும். குழந்தை படுக்கையிலிருக்கும்போது தலையை மட்டும் இப்படியும் அப்படியும் உருட்டிக்கொண்டேயிருக்கும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஞ்சாங்கோரைச்சாறு | அவுன்ஸ் | 6 | முடக்கொத்தான்சாறு | அவுன்ஸ் | 6 |
| பொன்னாங்காணிச்சாறு | ,, | 6 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 24 |
| வல்லாரைச்சாறு | ,, | 6 | பெருங்காயம் | ரூபாயெடை | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோழியவரைச்சாறு | அவுன்ஸ் | 6 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| தைவேளைச்சாறு | ,, | 6 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| பேய்மிரட்டிச்சாறு | ,, | 6 | வெள்ளைப்பூண்டு | ,, | 1 |
| சிறுபுள்ளடிச்சாறு | ,, | 6 | | | |

சாற்றையும் எண்ணெயையும் ஒன்று சேர்த்து, மற்றவைகளைப் பொடித்துப் போட்டு, காய்ச்சி வடித்து, காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

கணைப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

### பேராமக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும், வயிற்றுப் பொருமலும், வயிற்றோட்டமுமிருக்கும்; வாந்தியுண்டாகும்; கைகால் குளிர்ந்திருக்கும்; விழித்திருக்கும்போதே குழந்தை பயந்து திடுக்கிட்டு அழும்.

#### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கொழுஞ்சிவேர் | ரூபாயெடை | $\frac{1}{4}$ | ஓமம் | ரூபாயெடை | $\frac{1}{8}$ |
| பொடுதலைவேர் | ,, | $\frac{1}{4}$ | திப்பிலி | ,, | ,, |
| தும்பைவேர் | ,, | $\frac{1}{4}$ | சீரகம் | ,, | ,, |

ஒன்றுசேர்த்து, பசுமோர் விட்டரைத்துக் கலக்கி வடிகட்டி, ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

கணைப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

### மகாக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும், முகம், பின்னங்கால், பின்னங்கை இவைகள் வீக்கம் கண்டிருக்கும்; கண் வெளுத்திருக்கும்; உதடும் நாவும் வெடித்திருக்கும்.

#### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆடாதோடையிலை | ரூபாயெடை | 2 | கீழ்க்காய்நெல்லி | ரூபாயெடை | 2 |
| சீந்தில்தண்டு | ,, | 2 | சிறுகீரைவேர் | ,, | 2 |
| வெதுப்படக்கி | ,, | 2 | சிறுபூளை | ,, | 2 |

ஒன்று சேர்த்துத் தட்டியிடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

கணைப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

மந்தாரக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும், வயிறு பொருமியிருக்கும்; மேல்மூச்சும் மயக்கமு முண்டாகும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கவுதும்பைச்சாறு | அவுன்ஸ் | 8 | மிளகு | ரூபாயெடை | 4 |
| கண்டங்கத்திரிச்சாறு | ,, | 8 | திப்பிலி | ,, | 4 |
| கரிசலாங்கண்ணிச்சாறு | ,, | 8 | கடுக்காய் | ,, | 4 |
| வல்லாரைச்சாறு | ,, | 8 | தான்றிக்காய் | ,, | 4 |
| நொச்சியிலைச்சாறு | ,, | 8 | நெல்லிவற்றல் | ,, | 4 |
| நாயுருவிச்சாறு | ,, | 8 | வெள்ளைப்பூண்டு | ,, | 4 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 36 | வசம்பு | ,, | 1 |
| சுக்கு | ரூபாயெடை | 4 | கிராம்பு | ,, | 1 |

சாற்றையும் எண்ணெயையும் ஒன்றுசேர்த்து, மற்ற சரக்குகளையும் பொடித்துப்போட்டு காய்ச்சி வடித்து காலை மாலை 1, 1½-தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

கணைப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

முக்குக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும், வாந்தி யதிகமாயிருக்கும்; முக்கிமுக்கி சீதமும் மலமுமாகக் கழியும்; மலம் கழியும்போது ஆசனவாய் நெருப்புச் சுட்டதைப்போ லெரியுமாதலால், மலம் கழிக்கும்போதெல்லாம் குழந்தை கதரியழும்; ஆசனவாய் வெளிப்பிதுங்கித் தெரியும்; நாக்கு வெடித்திருக்கும்; தலைவலியும், தலைநடுக்கமும் காணும்; நாவரண்டு அதிக தாகத்தை யுண்டு பண்ணும்; மூட்டுகளில் வலியதிகமா யிருக்குமாதலால் குழந்தை திரும்பிப்படுக்கும்போதும், கையிலெடுக்கும்போதும் கதரியழும்; உடம்பு கருத்து குழந்தை மயங்கித் தள்ளாடும்.

சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) சோற்றுக்கற்றாழைச்சதை | ரூபாயெடை 5 | வெந்தயம் | ரூபாயெடை | 3 |
| | | எலுமிச்சம்பழச்சாறு | அவுன்ஸ் | 2 |

முதலில் சோற்றுக் கற்றாழைச்சோற்றை 7-தரம் தண்ணீர்விட்டுக் கழுவி ஒரு மண்சட்டியில் போட்டு அதில் பொடித்த வெந்தயத்தையும், எலுமிச்சம் பழச்சாற்றையும் கலந்து, அடுப்பேற்றி சிறுதீயாக எரித்துக் காய்ச்சி அதில் கசிந்திருக்கும் தண்ணீரை இறுத்து, காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) எலுமிச்சம்பழச்சாறு | அவுன்ஸ் | 6 | முருங்கைவிரை | ரூபாயெடை | 2 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 30 | கோஷ்டம் | ,, | 2 |
| முலைப்பால் | ,, | 8 | விலாமிச்சைவேர் | ,, | 2 |
| சோற்றுகற்றாழைச்சாறு | ,, | 8 | கோங்கிலவன் பிசின் | ,, | 2 |
| அதிமதுரம் | ரூபாயெடை | 2 | துளசிவிரை | ,, | 2 |
| அக்கிரகாரம் | ,, | 2 | ஓரிலைத்தாமரை | ,, | 2 |
| தாளிசபத்திரி | ,, | 2 | விஷ்ணுகிரந்தி | ,, | 2 |
| கோரைக்கிழங்கு | ,, | 2 | வில்வயிலை | ,, | 2 |

முதலில், எண்ணெய், சாறு, பால் இவற்றை ஒன்று சேர்த்து, அதில் இதர மருந்துகளை இளவறுப்பாய் வறுத்துப் பொடித்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்து, காலையில் மட்டும் 1, 1½-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இண்டந்தண்டுச்சாறு | அவுன்ஸ் | 6 | சீரகம் | ரூபாயெடை | 1 |

இண்டந்தண்டை இடித்துச் சாறெடுத்து, அத்துடன் சீரகத்தை வறுத்துப் பொடித்துப்போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டிய சாற்றில் சாயந்திரம் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

மூலக்கணைக்குரிய மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

### மூலக் கணை:—

இதன் குறிகளும் முக்குக் கணைக்குண்டானதைப்போலவே யிருக்கும். இது கணைரோகக் குறிகளுடனும் வயிறு இரைந்து, இரத்தமும் சீதமுமாகக் கழியும்; ஆசனவாய் கடுத்து எரியும்; ஆசனவாய் வெளிப்பிதுங்கி மூலத்தைப்போலிருக்கும்; தலைவலியதிகமாயிருக்கும்; உடல் கருப்பாகவும் சிகப்பாகவும் நிறம் மாறும்.

#### சிகிச்சை

(1) பழம்பாசி ரூபாயெடை இரண்டை 3-அவுன்ஸ் வெள்ளாட்டுப் பாலில் போட்டு வேகவைத்துக் கசக்கிப் பிழிந்த பால் அவுன்ஸ் ஒன்றரையில், ½-அவுன்ஸ் எலுமிச்சம்பழச்சாறு சேர்த்து, காலை மாலை கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) சிற்றாமுட்டிவேர் | ரூபாயெடை | 5 | நெல்லிவற்றல் | ரூபாயெடை | 5 |
| செம்பருத்திவேர் | ,, | 5 | அதிவிடயம் | ,, | 5 |
| விலாமிச்சைவேர் | ,, | 5 | சீரகம் | ,, | 5 |
| வில்வவேர் | ,, | 5 | சுக்கு | ,, | 5 |
| சந்தனத்தூள் | ,, | 5 | பறங்கிப்பட்டை | ,, | 5 |
| சாதிப்பத்திரி | ,, | 5 | கற்கண்டுத்தூள் | ,, | 8 |
| கடுக்காய் | ,, | 5 | பசுநெய் | ,, | 12 |

ஒவ்வொரு சரக்கையும் தனித்தனியே காயவைத்துச் சூரணித்து, துணியில் சலித்து, 5-ரூபாயெடை வீதமாக எடுத்து கலந்துக்கொண்டு, பசு நெய்யைச் சட்டியிலிட்டு உருகிவரும் சமயம், சூரணத்தை கொட்டிக்கிண்டி, சற்று வேக வைத்து, பின் கற்கண்டுப் பொடியை சேர்த்துக் கிளரி, லேகிய பதமாக்கி வைத்துக்கொண்டு, காலை மாலை கழற்சிக்காயளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) சீரகம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ | அதிமதுரம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| ஏலம் | ,, | $\frac{1}{4}$ | பெருமரத்துப்பட்டை | ,, | $\frac{1}{4}$ |

இவற்றை கருவேலம்பட்டைக் கஷாயம் விட்டரைத்து, காலை மாலை ஒரு கழற்சிக்காயளவாக $1\frac{1}{2}$, 2-அவுன்ஸ் வெள்ளாட்டுப் பாலில் கரைத்து வடிகட்டி கொடுத்து வரலாம். (பத்தியம்)

## வறட் கணை:—

கணைரோகக் குறிகளுடனும், இருமலும், சளியுமதிகமாயிருக்கும்; நெஞ்சு படபடவென் றடித்துக்கொள்ளும்; உடம்பெல்லாம் சிவந்து தோன்றும்; முகம் மஞ்சனித்திருக்கும்; வயிற்றில் எரிச்சலேற்படும்; நாக்குக் கருத்திருக்கும்; சில குழந்தைகளுக்கு நடுநாக்கு வெடித்து, மஞ்சள் வெண்மையான நமச்சல்கள்போன்ற முட்கள் தோன்றும்; கிறுகிறுப்பும் ஆயாசமும் கண்டு குழந்தை மயங்கிவிழும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) நீர்முள்ளிவேர் | ரூபாயெடை | 1 | செவ்வல்லிக்கிழங்கு | ரூபாயெடை | 1 |
| தூதுவேளையிலை | ,, | 1 | தண்ணீர்விட்டான்கிழங்கு | ,, | 1 |
| கண்டங்கத்திரியிலை | ,, | 1 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| முசுமுசுக்கையிலை | ,, | 1 | வசம்பு | ,, | 1 |
| திருகுக்கள்ளிவேர் | ,, | 1 | வெள்ளைப்பூண்டு | ,, | 1 |
| மணித்தக்காளியிலை | ,, | 1 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 24 |
| சீரகம் | ,, | 1 | | | |

பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் உள்ளுக்குங் கொடுத்து, உடம்பிலும் பூசிவரலாம். (பத்தியம்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) அதிமதுரம் | ரூபாயெடை | $\frac{3}{4}$ | செண்பகப்பூ | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| கோஷ்டம் | ,, | $\frac{3}{4}$ | கொன்றைப்பிசின் | ,, | $\frac{3}{4}$ |
| சகஸ்திரபேதி | ,, | $\frac{3}{4}$ | கொத்தமல்லி | ,, | $\frac{3}{4}$ |
| சந்தனத்தூள் | ,, | $\frac{3}{4}$ | விலாமிச்சைவேர் | ,, | $\frac{3}{4}$ |
| ஏலம் | ,, | $\frac{3}{4}$ | வெள்ளைச்சர்க்கரை | ,, | $1\frac{1}{2}$ |
| சீரகம் | ,, | $\frac{3}{4}$ | பருத்திக்காய்ச்சாறு | அவுன்ஸ் | 12 |
| உருத்திராக்ஷம் | ,, | $\frac{3}{4}$ | பொன்னாங்காணிச்சாறு | ,, | 12 |
| நெல்லிவற்றல் | ,, | $\frac{3}{4}$ | பசுநெய் | ,, | 24 |

சாற்றையும், நெய்யையும் ஒன்று சேர்த்து, அதில் சரக்குகளைப் பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(3)

| | | | |
|---|---|---|---|
| ஓரிலைத்தாமரைவேர் ரூபாயெடை | 1 | அகத்தியிலைச்சாறு அவுன்ஸ் | 24 |
| | | கருவேலங்கொழுந்துச்சாறு ,, | 24 |
| தகரைவேர் ,, | 1 | முசுமுசுக்கைச்சாறு ,, | 24 |
| பழம்பாசிவேர் ,, | 1 | செம்முள்ளிச்சாறு ,, | 24 |
| நெருஞ்சில்வேர் ,, | 1 | வல்லாரைச்சாறு ,, | 24 |
| நாணல்வேர் ,, | 1 | மிளகுத்தக்காளிச்சாறு ,, | 24 |
| நன்னாரிவேர் ,, | 1 | கரிசலாங்காணிச்சாறு ,, | 24 |
| சாரணத்திவேர் ,, | 1 | சிற்றாமணக்கெண்ணெய் ,, | 48 |
| நொச்சிவேர் ,, | 1 | பற்பாடகம் ரூபாயெடை | 1 |
| சங்கன்வேர் ,, | 1 | சீரகம் ,, | 1 |
| இன்புரூவேர் ,, | 1 | கடுகுரோகிணி ,, | 1 |
| ஆடாதோடைவேர் ,, | 1 | கஸ்தூரிமஞ்சள் ,, | 1 |
| சிறுவழுதலைவேர் ,, | 1 | திப்பிலி ,, | 1 |
| சோற்றுக்கற்றாழைவேர் ,, | 1 | வசம்பு ,, | 1 |
| வேலிப்பருத்திவேர் ,, | 1 | சிற்றரத்தை ,, | 1 |
| நாயுருவிவேர் ,, | 1 | மாசிக்காய் ,, | 1 |
| தூதுவேளைவேர் ,, | 1 | கடுக்காய ,, | $\frac{1}{2}$ |
| மூக்குரெட்டைவேர் ,, | 1 | கருஞ்சீரகம் ,, | $\frac{1}{2}$ |
| செங்கழுநீர்க்கிழங்கு ,, | 1 | கிராம்பு ,, | $\frac{1}{2}$ |
| மிளகுதக்காளிவேர் ,, | 1 | சாதிக்காய் ,, | $\frac{1}{2}$ |
| கண்டங்கத்திரிவேர் ,, | 1 | கொடிவேலி ,, | $\frac{1}{2}$ |
| வெதுப்படக்கிச்சாறு அவுன்ஸ் | 24 | திப்பிலிமூலம் ,, | $\frac{1}{2}$ |
| பேய்மருட்டிச்சாறு ,, | 24 | செவ்வியம் ,, | $\frac{1}{2}$ |
| முடக்கொத்தான் சாறு ,, | 24 | ஓமம் ,, | $\frac{1}{2}$ |
| விஷ்ணுகிரந்திச்சாறு ,, | 24 | தேவதாருச்சக்கை ,, | $\frac{1}{2}$ |
| சங்கனிலைச்சாறு ,, | 24 | வெள்ளைப்பூண்டு ,, | 2 |
| தகரையிலைச்சாறு ,, | 24 | வெங்காயம் ,, | 6 |

சாற்றையும், எண்ணெயையும் ஒன்றுசேர்த்து, அத்துடன் வேர்களையும், சரக்குகளையும் பொடித்துப் போட்டு காய்ச்சி வடித்து காலை மாலை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம். (கடுகு, உப்பு, புளி நீக்கி கடும்பத்தியம்.)

குறிப்பு:—இதைச் சலக்கண ரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

(4)

| | | | |
|---|---|---|---|
| சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் | 24 | விஷ்ணுகிரந்திவேர் | ஒருபிடி |
| | | கடுக்காய் ரூபாயெடை | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பசும்பால் | ,, | 24 | தான்றிக்காய் | ,, | 1 |
| கீழ்க்காய்நெல்லிச்சாறு | ,, | 6 | சுக்கு | ,, | 1 |
| துளசி | | ஒருபிடி | அதிமதுரம் | ,, | 1 |
| தூதுவேளையிலை | ,, | | | | |

சாற்றையும் எண்ணெயையும், ஒன்று சேர்த்துக்கொண்டு மற்றவைகளைத் தண்ணீர் விட்டரைத்து எல்லாம் ஒன்றாகச் சேர்த்துக் கரைத்துக் காய்ச்சி வடித்து, இரவில் ஆகாரத்திற்குப்பின் $1\frac{1}{2}$, 2-தேக்கரண்டி கொடுக்க காலையில் 2, 3-தடவை மலம் கழியும்; பின் காலையிலும் $\frac{1}{2}$, 1-தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்)

### வாதக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும், இளைப்பும், நாவரட்சியும் காணும்; தொண்டைப் புகைச்சலு மிருமலுமேற்படும்; மலச்சிக்கலேற்படும்; நீர் சுருக்குண்டாகும்; உடலாதியந்தமும் வீங்கித் தெரியும்.

#### சிகிச்சை

சிலேத்பனக் கணைமருந்துகளி லொன்றையாவது, கணைப் பொது மருந்து களிலொன்றையாவது கொடுத்து வரலாம்.

### விஷமாந்தக் கணை:—

சிங்கிமாந்தக் கணையென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

### வீக்கக் கணை:—

கணைரோகக் குறிகளுடனும், குழந்தையின் உடல் முழுதும், வீக்கம் கண்டிருக்கும்; மேல்மூச்சு வாங்கும்; சுவாசிக்கக் கஷ்டப்படும்; குளிர் நடுக்கமும், உடலாதியந்த வலியுமேற்படும்; உண்ட ஆகாரத்தை உடனே வாந்தி பண்ணும்.

#### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | ரூபாயெடை | $\frac{3}{4}$ | மிளகு | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| கோஷ்டம் | ,, | $\frac{3}{4}$ | கிராம்பு | ,, | $\frac{3}{4}$ |
| வசம்பு | ,, | $\frac{3}{4}$ | வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{3}{4}$ |
| ஓமம் | ,, | $\frac{3}{4}$ | கூத்தங்குதம்பைவேர் | ,, | $\frac{3}{4}$ |
| ஏலம் | ,, | $\frac{3}{4}$ | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |
| சுக்கு | ,, | $\frac{3}{4}$ | | | |

ஒன்று சேர்த்து, நன்றாகப் பொடித்து எண்ணெயில் போட்டு, 6-மணி நேரம் கடும் வெயிலில் வைத்திருந்து எண்ணெயை வடித்து, காலை காலை 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

கணைப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

கண்ணரோகத்திற்குப் போது மருந்துகள்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) வெட்டிவேர் | ரூபாயெடை | 3 | அறுகம்வேர் | ரூபாயெடை | 3 |
| விலாமிச்சைவேர் | ,, | 3 | | | |

இதைப் பொடித்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஷாயம் | அவுன்ஸ் | 6 | வல்லாரைச்சாறு | அவுன்ஸ் | 20 |
| ஆலம்பால் | ,, | 24 | வெங்காயச்சாறு | ,, | 20 |
| அத்திப்பால் | ,, | 24 | எலுமிச்சம்பழச்சாறு | ,, | 20 |
| வெள்ளாட்டுப்பால் | ,, | 24 | அதிவிடயம் | ரூபாயெடை | 3 |
| கொம்புத்தேன் | ,, | 24 | சாதிக்காய் | ,, | 3 |
| பசுநெய் | ,, | 24 | சாதிபத்திரி | ,, | 3 |
| முலைப்பால் | ,, | 6 | மாசிக்காய் | ,, | 3 |
| மாசிப்பத்திரிச்சாறு | ,, | 20 | சடாமாஞ்சில் | ,, | 3 |
| குட்டிவிளாயிலைச்சாறு | ,, | 20 | கடுக்காய் | ,, | 3 |
| வில்வயிலைச்சாறு | ,, | 20 | தான்றிக்காய் | ,, | 3 |
| கோவையிலைச்சாறு | ,, | 20 | நெல்லிவற்றல் | ,, | 3 |

சாற்றையும், பாலையும், நெய்யையும், கஷாயத்தையும் ஒன்று சேர்த்து, அத்துடன் சரக்குகளை மாவுபோல் தூள்செய்து, துணியில் சலித்துச் சேர்த்து நன்றாகக் கலக்கி, காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) வெட்டிவேர் | ரூபாயெடை | 3 | சகஸ்திரபேதி | ரூபாயெடை | 3 |
| விலாமிச்சைவேர் | ,, | 3 | இலுப்பைப்பூ | ,, | 3 |
| நன்னாரிவேர் | ,, | 3 | கிராம்பு | ,, | 3 |
| கோரைக்கிழங்கு | ,, | 3 | கடுகுரோகிணி | ,, | 3 |
| கோஷ்டம் | ,, | 3 | திப்பிலி | ,, | 3 |
| அதிமதுரம் | ,, | 3 | திராக்ஷைப்பழம் | ,, | 3 |
| ஏலம் | ,, | 3 | பேரீச்சம்பழம் | ,, | 3 |
| சந்தனத்தூள் | ,, | 3 | | | |

ஒன்று சேர்த்து, கரிசலாங்காணிச் சாற்றால் மைபோலரைத்து, பட்டாணிக் கடலைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து உலர்த்திவைத்துக்கொண்டு, காலை மாலை ஒரு அவுன்ஸ் முலைப்பாலிலாவது, சுடுதண்ணீரிலாவது ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) வெந்தயம் | ரூபாயெடை | 20 | வெங்காயம் | ரூபாயெடை | 5 |
| சோற்றுகற்றாழைசதை | ,, | 20 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 24 |

முதலில் சோற்றுக்கற்றாழைச்சோற்றை ஏழுமுறை தண்ணீர்விட்டுச் சுத்தமாய்க்கழுவி எடுத்து எண்ணெயில்போட்டு அத்துடன் வெந்தயத்தையும், வெங்காயத்தையும் நசுக்கிப்போட்டுக் காய்ச்சி சோற்றுக் கற்றாழைச்சோறு சிவந்து வரும் சமயம் இறக்கிவடித்து காலை மாலை 1, $1\frac{1}{2}$ தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (4) மான்கொம்புத்தூள் | ரூபாயெடை | 2 | ஏலம் | ரூபாயெடை | 2 |
| சந்தனத்தூள் | ,, | 2 | திப்பிலி | ,, | 2 |
| புளியங்கொட்டைமேல் தோல் | ,, | 2 | உருத்திராக்ஷம் | ,, | 2 |
| | | | கோரோசனை | ,, | 2 |
| நன்னாரிவேர் | ,, | 2 | குப்பைமேனிவேர்த்தோல் | ,, | 2 |
| கோரைக்கிழங்கு | ,, | 2 | பொன்னாங்காணிவேர்தோல் | ,, | 2 |
| சாதிக்காய் | ,, | 2 | சிறுகீரைவேர்த்தோல் | ,, | 2 |
| சாதிபத்திரி | ,, | 2 | நாயுருவிவேர்த்தோல் | ,, | 2 |
| செண்பகப்பூ | ,, | 2 | வல்லாரைவேர்த்தோல் | ,, | 2 |
| சீரகம் | ,, | 2 | ஓரிலைத்தாமரை | ,, | 2 |
| கருஞ்சீரகம் | ,, | 2 | * கல்நார்பஸ்பம் | ,, | 2 |
| இலவங்கப்பட்டை | ,, | 2 | சகஸ்திரபேதி | ,, | 2 |

இதனுள் மான்கொம்பை தண்ணீரில் ஊறவைத்து முள்ளரத்தால் ராவி தூள் செய்துகொண்டு எல்லாம் ஒன்று சேர்த்து, பொன்னாங்காணிச்சாற்றால் 2 மணிநேரமும், வல்லாரைச்சாற்றால் 2-மணிநேரமும் மைபோலரைத்துச் சுண்டக்காயவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக்கொண்டு, காலை மாலை ஒரு அவுன்ஸ் முலைப்பாலிலாவது, சுடுதண்ணீரிலாவது ஒரு மாத்திரை வீதம் கரைத்துக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (5) சங்கன்வேர் | ரூபாயெடை | 1 | கடுக்காய் | ரூபாயெடை | 1 |
| நீர்முள்ளி | ,, | 1 | தான்றிக்காய் | ,, | 1 |
| வெங்காயம் | ,, | 1 | நெல்லிவற்றல் | ,, | 1 |

இவற்றைப் பொடித்து 12-அவுன்ஸ் பசுமோரில்போட்டு 3-அவுன்சாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தைச் சுத்தம் செய்து நெருப்பில் காயவைத்த இரும்பு சட்டியில் ஊற்றி முறித்து வைத்துக்கொண்டு காலை மாலை 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(6) 188-ம் பக்கமுள்ள மூன்றாமிலக்க மருந்தையும் கொடுத்து வரலாம்.

(7) கணத்தெண்ணெய்; கனைநெய்; வெங்காய எண்ணெய்; வெந்தய எண்ணெய்; இவற்றிலொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

* செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (8) | சிரப் இப்பிகாக் (Syrup Ipecac) | டிராம் | 9 |
| | சிரப் சில்லி (Syrup Scillae) | ,, | 1½ |
| | டிஞ்சர் ஒபியம் காம்பரேட்டா (Tincture Opium Camphorata) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ½-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (9) | பல்விஸ் இப்பிக்காக் (Pulvis Ipecac) | கிரைன்ஸ் | 3 |

இதைக் கணையில் தொண்டைக்கம்மலும், சளியும் அதிகமிருந்தால் கால் மணிநேரத்திற் கொருதரம் இந்த அளவாக 2, 3-தடவை மட்டும் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (10) | வைனம் அன்டிமோனியாலிஸ் (Vinum Antimonialis) | டிராம் | 4 |
| | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | ,, | 4 |
| | சிரப் சில்லி (Syrup Scillae) | ,, | 4 |
| | ஆக்குவா டிஸ்டில் (Aqua Distill) | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, தொண்டைக்கம்மலும், சளியுமிருந்தால் 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு வாந்தியுண்டாகும் வரை கால்மணி நேரத்திற்கொரு தரம் அரைத் தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். தொண்டையில் வலி வேதனை யிருந்தால் சுடுதண்ணீர் ஒற்றிடம் கொடுக்கலாம்; அல்லது ஆளிவிரைக் களியையாவது, அன்டிபிளாஜெஸ்டைன் (Antiphilogistine) என்ற மருந்தையாவது சுடசுட துணியில் தடவி நெஞ்சிலும், தொண்டைக் குழியிலும் போடலாம்.

| | | | |
|---|---|---|---|
| (11) | டிஞ்சர் டோலு (Tincture Tolu) | அவுன்ஸ் | 3 |
| | சிரப் ஸ்குயில்ஸ் (Syrup Squills) | டிராம் | 4 |
| | டிஞ்சர் காம்பர் கோ (Tincture Camphor Co) | ,, | 4 |
| | கிளிசரின் (Glycerine) | ,, | 12 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 5 |

இதை ஒன்று சேர்த்து, இழுப்பு அதிகமாயுள்ள கணைரோகத்திற்கு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குப் பகல் நேரங்களில் 3-மணி நேரத்திற் கொருதரம் ½-தேக்கரண்டி வீதமும், இரவில் 4-மணி நேரத்திற் கொருதரம் ½-தேக்கரண்டி வீதமும் கொடுத்து வரலாம். மருந்து கொடுத்த இடை நேரங்களில், 100-பங்கு தண்ணீரில் 2-பங்கு கொக்கோயின் சொலுஷன் (Solution Cocaine) கலந்து வெளிப்பிரயோகமாகத் தொண்டையில் தெளித்து, 8-அவுன்ஸ் தண்ணீரில் ஒரு தேக்கரண்டி சீமைக் கடுகையரைத்துக் கலக்கி, உள்ளங்கை யளவு துணியில் நனைத்து, தொண்டைக்குழியில் போட்டு வைக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (12) | காலோமல் (Calomel) | கிரைன்ஸ் | 2 |
| | சோடியம் பைகார்ப் (Sodium Bicarb) | ,, | 24 |

| | | |
|---|---|---|
| பல்விஸ் இப்பிக்காக் (Pulvis Ipecac) | ,, | 1 |
| பல்விஸ் பெப்சீனு (Pulvis Pepsinae) | ,, | 24 |

ஒன்றாகக் கலந்து 12-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, இருந்தாப் போலிருந்து தொண்டையைக் கட்டிவிடும் கணைரோகத்திற்கு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு இரண்டுமணி நேரத்திற் கொருதரம் ஒரு பொட்டலம் வீதம் வாயில் கொட்டி விழுங்கச் செய்யலாம்.

வெளிப்பிரயோகமாக ஆஸிட் லாக்டிக் (Acid Lactic) கில் 20-பங்கும், தண்ணீர் 100-பங்கும் சேர்த்துத் தொண்டையில் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (13) | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | கிரைன்ஸ் | 8 |
| | குளோரால் ஐட்ராஸ் (Chloral Hydras) | ,, | 4 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | டிராம் | 1 |
| | தண்ணீர் | ,, | 4 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(14) பத்து அவுன்ஸ் கொதிக்கிற தண்ணீரில் 3-கிரைன்ஸ் அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) போட்டு, அதிலிருந்து வரும் ஆவியை வாயால் இழுக்கும்படிச் செய்யலாம்.

(15) 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, இரவில் படுக்கைக்குப் போகுமுன் ஒரு கிரைன் (Antipyrin) அன்டிபைரின் கொடுத்தால், இரவில் கணை நோயில் உண்டாகும் இழுப்பு ஏற்படாது.

## கணைரோகத்தினால் ஏற்படும் வியாதிகள்

## DISEASES CAUSED BY CROUP

குழந்தைகள் கணைரோகத்தினால் பாதிக்கப்படும் சமயங்களிலும், கணை ரோகத்தினால் பாதிக்கப்பட்ட பின்பும், சில கோளாறுகளும், திரேகமாறுதல் களு முண்டாகலாம். கணைரோகத்தால் பாதிக்கப்படும் சமயங்களிலும், கணை ரோகம் சௌகரியமான பின்பும் அவர்களுக்கு:—

| | | |
|---|---|---|
| அடித்தள்ளுதல் | இருமல் | பலவீதக்கழிச்சல் |
| ஆசனக்கடுப்பு | கணைச்சூடு | மூலம் |
| இரத்தபேதி | நீர்ச்சுருக்கு | வயிற்றுப்பொருமல் |
| | | வாய்நாற்றம் |

முதலிய வியாதிகளேற்படலாம்; அவைகளுக்கு அவ்வப்போது தகுந்த சிகிச்சைகள் மூலம், பரிகாரங்கள் தேடாதுபோனால் அவை திரேகத்தில் சாஸ்வதமாகக் குடிக்கொண்டு சில சமயங்களில் அகாலமரணத்தை யுண்டுபண்ணவு மேதுவா யிருக்கலாம்.

**அடித்தள்ளுதல்:—**

குழந்தைகளுக்குக் கணை ரோகத்திலுண்டான அதிகமான வயிற்றோட்டத்தினு லாகிலும், நிரேக மெலிவுனாலாகிலும், ஆசனக் கடுப்பேற்பட்டக் காலங் களில் முக்கிமுக்கி மலம் கழித்ததினுலாகிலும், ஆசன வாயானதுப் பெருத் துக்கீழ் தொங்கிவிடும். இதற்கே அடிதள்ளுதல் (Prolapsus Ani) என்று சொல்லப்படும். இது மூலரோகத்தைப்போல் மலக்குடல் வெளியில் பிதுங்கி வந்துவிடாமல், ஆசன வாய்மட்டும் கனத்துப் பெருத்து, வெளித் தெரியும்படியாக கீழ் இறங்கியிருக்கும். இதனுல் ஆசனத்துவாரம் திறந்துப் போய் மலத்தை யடக்கும் தத்துவமும் க்ஷீணித்துப்போகும்.

**சிகிச்சை**

(1) பழையபுளி ரூபாயெடை $\frac{1}{4}$ கரிசலாங்காணி ரூபாயெடை $\frac{1}{2}$
இதில் புளியை கொட்டை, கோது நீக்கி மைபோலரைத்து, காலை மாலை ஒரு கொட்டைப்பாக்களவு கொடுத்து வரலாம். (பத்தியம்)

(2) ஒரு பெரும் இஞ்சியை எடுத்துத் தோல்சீவி, இரண்டாகப் பிளந்து, இரண்டுக்கும் மத்தியில் குழியாகச் செய்து, அதில் $\frac{1}{4}$·ரூபாயெடை பெருங் காயத்தை வைத்து இரண்டையும் ஒன்று சேர்த்து, நூலால் சுற்றிக்கட்டி, பசுந் தயிரில் போட்டு வேகவைத்தெடுத்து, பசுந் தயிரிலரைத்துக் கலக்கி காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(3) மாசிக்காய்த்தூள் ரூபாயெடை 1 அபினி ரூபாயெடை $\frac{1}{2}$
வாசலீன் (Vaseline) ,, 3

ஒன்று சேர்த்துக் குழப்பி வெளிப்பிரயோகமாக வெளித்தள்ளியிருக்கும் ஆசனத்தை நன்றாகக் கழுவிவிட்டு காலை மாலை அதில் தடவி வரலாம்.

**கணை ஆசனக் கடுப்பு:—**

கணை ரோகத்தால் பாதிக்கப்படும் சமயங்களிலாவது, கணைரோகம் சொஸ்த மான பின்னுவது, மலம் கழிக்கும்போது ஆசனவாய் கடுப்பேற்படலாம். மலம் கழிக்கும்போது, ஆசனவாயில் நெருப்புசுட்டதைப்போல் எரிச்ச லும் கடுப்புமிருக்கும்.

சில சமயங்களில் கணைரோகத்தில், சீதபேதி காணும் சமயங்களிலும், கணை முற்றிலும் சௌகர்யமானபின், கணையுண்டாயிருந்த சமயங்களில் மலச் சிக்கல் ஏற்பட்டு அதனுல், முக்கி மலம் கழிக்கும்போது ஆசனவாயில் விரி வேற்பட்டு புண்பட்டு போவதினுலாவது, ஆசனக்கடுப் புண்டாகலாம்.

**சிகிச்சை**

(1) வேப்பிலைச்சாறு அவுன்ஸ் $\frac{1}{2}$ வெந்தயம் ரூபாயெடை $\frac{1}{2}$
சிற்றுமணக்கெண்ணெய் ,, $\frac{1}{2}$

எண்ணெயையும், சாற்றையும் ஒன்றுசேர்த்து வெந்தயத்தை தண்ணீர் விட்டரைத்து, அத்துடன் கலக்கி காலையில் கொடுத்து வரலாம்.

(2) கால்ரூபாயெடை வெந்தயத்தை எலுமிச்சம்பழச்சாற்றில் வேகவைத் தெடுத்து, அப்படியே வாயில் கொட்டி விழுங்கச் செய்யலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) வெட்டிவேர் | ரூபாயெடை | 1 | சாகஸ்திரபேதி | ரூபாயெடை | 1 |
| கோஷ்டம் | ,, | 1 | தான்றிக்காய் | ,, | 1 |
| ஏலம் | ,, | 1 | மாசிக்காய் | ,, | 1 |
| கோரோசனை | ,, | 1 | அதிமதுரம் | ,, | 1 |
| செண்பகப்பூ | ,, | 1 | | | |

இவற்றை ஒன்றுசேர்த்து வெட்டிவேர் கஷாயம்விட்டு, 2-மணி நேரம் மைபோலரைத்து பட்டாணிபயிறு அவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திவைத்துக்கொண்டு காலை, மாலை ஒரு அவுன்ஸ் முலைப்பாலில் ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

## கணை இரத்தபேதி:—

கணைரோகத்தால் பீடிக்கப்பட்டிருக்கும் சமயங்களிலும், கணைரோகம் சௌகர்யமானதன் பின்னும் இது உண்டாகலாம். சில சமயங்களில் கணைரோக முண்டாயிருப்பதாகத் தெரியாமல் மலம்மட்டும் இரத்தம் சேர்ந்து கழியும்; இரவில் சுரம் காயும்; மலத்துடன் இரத்தமும், சீதமும் கலந்து ஆசனவாய் கடுப்புடன் மலம் கழியும். இது குழந்தைகளுக்குச் சதைப் பிடிக்கவிடாமல் எலும்புந் தோலுமாக்கி, ஆசனவாயை வெளிக்குத் தள்ளும்படியாக செய்துவிடும். ஆகார வெறுப்பையும், ஆயாசத்தையு முண்டு பண்ணும். இவ்வித குறிகளெல்லா மிருக்குமானல் கணைரோகம் சம்பந்தப்பட்ட இரத்தபேதியென்றே தீர்மானிக்கலாம். இதைப்பற்றி, "கணையினல் முக்கல் வயிற்றுக்கடுப்பு" என்ற தலைப்பின்கீழும் கூறப்பட்டிருக்கிறது.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) ஆவாரம்வேர்ப்பட்டை | ரூபாயெடை | 4 | விஷ்ணுகிரந்தி | ரூபாயெடை | 4 |
| | | | அம்மாம்பச்சரிசி | ,, | 4 |
| கொன்றைவேர்ப் பட்டை | ,, | 4 | கணைப்பூண்டு | ,, | 4 |
| | | | அதிமதுரம் | ,, | 3 |
| எருக்கம்வேர்ப்பட்டை | ,, | 4 | சீரகம் | ,, | 3 |
| திலக்குமிழம்வேர்ப் பட்டை | ,, | 4 | ஏலம் | ,, | 3 |
| | | | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 24 |

இதில், வேர்ப்பட்டைகளையும், பச்சிலைகளையும் பொடித்து, எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து, அதில், அதிமதுரம், ஏலம், சீரகம் இவைகளை இள

வறுப்பாய் வறுத்துத் தூள்செய்து போட்டுக் கலந்து, காலை மாலை $\frac{1}{2}$, 1-தேக்கரண்டி வீதம் 1-அவுன்ஸ் முலைப்பாலில் கலந்து கொடுத்து வரலாம்.

(2) கோரோசனை ரூபாயெடை $1\frac{1}{2}$ கடுகுரோகிணி ரூபாயெடை $1\frac{1}{2}$
பால்துத்தம் ,, $1\frac{1}{2}$ கொழிஞ்சிவேர் ,, $1\frac{1}{2}$
வெண்காரம் ,, $1\frac{1}{2}$

இவற்றை ஒன்றுசேர்த்து அகத்தியிலைச்சாறு விட்டு, 3-மணிநேரம் மைபோலரைத்து, உளுந்தவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக்கொண்டு, காலை மாலை 1-அவுன்ஸ் முலைப்பாலில் 1-மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

(3) எலுமிச்சம்பழசாறு அவுன்ஸ் $\frac{1}{2}$ தென்னம்பூச்சாறு அவுன்ஸ் $\frac{1}{2}$
பசுந்தயிர் ,, $\frac{1}{2}$

ஒன்று சேர்த்து, காலை மாலை கொடுத்து வரலாம். (புளிதள்ளி பத்தியம்.)

(4) நன்னாரிவேர் ரூபாயெடை $\frac{1}{4}$ கிராம்பு ரூபாயெடை $\frac{1}{4}$
பொன்முசுட்டை ,, $\frac{1}{4}$ சாதிக்காய் ,, $\frac{1}{4}$
சீரகம் ,, $\frac{1}{4}$ பருத்திவிரைப்பருப்பு ,, $\frac{1}{4}$

ஒன்று சேர்த்துத் தட்டி, சிறுபுள்ளடிச் சாற்றில் கலந்து, ஒன்றுக்குப் பாதியாக வற்றவைத்து வடிகட்டி, அதில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(5) பசுநெய் அவுன்ஸ் 24 கார்போகரிசி ரூபாயெடை 3
சிற்றாமணக்கெண்ணை ,, 12 கோரோசனை ,, 3
நல்லெண்ணெய் ,, 6 கோஷ்டம் ,, 3
முருங்கையிலைச்சாறு ,, 24 செண்பகப்பூ ,, 3
செங்கழுநீர்க்கிழங்கு கொத்தமல்லி ,, 3
ரூபாயெடை 3 இலவங்கப்பட்டை ,, 3
அதிமதுரம் ,, 3 சாதிக்காய் ,, 3
சீரகம் ,, 3 சாதிபத்திரி ,, 3
ஏலம் ,, 3 கிராம்பு ,, 3

எண்ணெயையும், சாற்றையும் ஒன்று சேர்த்துக்கொண்டு, அத்துடன் இதர சரக்குகளையும் நன்றாகப் பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை $1\frac{1}{2}$, 2-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(6) வெள்ளைபூண்டு ரூபாயெடை $\frac{1}{4}$ விளாம்பிசின் ரூபாயெடை $\frac{1}{4}$

இவற்றை 2-அவுன்ஸ் பசுந்தயிரில் அரைத்துக் கலக்கி வடிகட்டி, காலையில் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(7) பல்விஸ் இப்பிக்காக் (Pulvis Ipecac) கிரைன்ஸ் 1
பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக் (Pulvis Creta Aromatic) ,, 15

ஒன்று சேர்த்து 6-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (8) | மன்னு ஆப்டிமா (Mannae Optimae) | கிரைன்ஸ் | 15 |
| | சிரப் சென்னு (Syrup Sennae) | துளி | 12 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | ,, | 12 |
| | லிக்கர் மாக்னிஷி கார்போனஸ் (Liquor Magnesi Carbonas) | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை, ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (9) | டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | துளி | 4 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 10 |

ஒன்று சேர்த்து, இரத்தம் அதிகமாய் கழிவதாயிருந்தால், ஆசனத்தின் மூலம் பீச்சங்குழலால் (Enema) உட்செலுத்தலாம்.

**கணை இருமல்:—**

கணை ரோகத்தால் பீடிக்கப்பட்டிருக்கும்போதும், கணைரோகம், சொஸ்தமான பின்னும் இருமல் தாக்குவதுண்டு. இரவில் மட்டும் சுரம் காயும்; எந்நேரமும் ஓயாமல் இருமும்; ஆனால், சளிவராது. இது கணைரோகமென்று வெளிக்குத் தெரியாமலும் வரட்சியிருமலாகவு மிருப்பதுண்டு. இதனால் கணைரோகம் உடலில் சார்ந்திருப்பதாகத் தீர்மானிக்கலாம்.

**சிகிச்சை**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 24 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| | | | | வெள்ளைப்பூண்டு | ,, | 1 |
| | கண்டங்கத்திரிச்சாறு | ,, | 6 | சுக்கு | ,, | 1 |
| | கரிசலாங்காணிச்சாறு | ,, | 6 | திப்பிலி | ,, | 1 |
| | தூதுவேளைச்சாறு | ,, | 6 | மிளகு | ,, | 1 |
| | வல்லாரைச்சாறு | ,, | 6 | கடுக்காய் | ,, | 1 |
| | நாயுருவிச்சாறு | ,, | 6 | தான்றிக்காய் | ,, | 1 |
| | நொச்சிச்சாறு | ,, | 6 | நெல்லிவற்றல் | ,, | 1 |

சாற்றையும் எண்ணெயையும் ஒன்று சேர்த்து, அத்துடன் இதர சரக்குகளையும் பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடிகட்டி, காலை மாலை 1, $1\frac{1}{2}$-தேக்காண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | வெங்காயம் | ரூபாயெடை | 1 | வெந்தயம் | ரூபாயெடை | 3 |
| | ஏலம் | ,, | $\frac{1}{2}$ | மணத்தக்காளியிலை | ,, | 3 |

ஒன்று சேர்த்து, ஒரு மண் சட்டியில் போட்டு சிவக்க வறுத்து, அதில் 24-அவுன்ஸ் தண்ணீர் விட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு 3-வேளை 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(3) இரண்டவுன்ஸ் அதிகம் சுடுகிற தண்ணீரில் 1-டிராம் கிளிசரினை (Glycerine) விட்டு, நாள் ஒன்றுக்கு 3-தடவை கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | வைனம் இப்பிகாக் (Vinum Ipecac) | துளி | 12 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | ,, | 15 |
| | இன்பியூஷன் செனிகா (Infusion Senegae) | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

### கணை சீதபேதி:—

கணை இரத்தபேதி என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

### கணைச் சூடு:—

இதைக் கணைக்காச்சல் என்றும் சொல்லுவதுண்டு. இக்கணைச் சூடு குழந்தைகளுக் கேற்பட்டால் சரியானவிதமாய் சிகிச்சை செய்து, வேருடன் போக்கும்படிச் செய்யவேண்டியது. அப்படிச் சரியான சிகிச்சையினால் இவ்வியாதியைப் போக்கடிக்காவிட்டால், இது குழந்தைகளுக்கு 12-வயது வரையிலும் ஸ்திரமாயிருந்து, அதற்குப் பின்னும் பலவீனமுடையவர்களாகவே இருக்கச்செய்யும். இவ்வியாதிகளினால் உயிருக்கு ஹானியேற்படாதென்றாலும், சரீரத்தை க்ஷீண தசையில் ஸ்திரப்படுத்தி விடும்.

இதில் திரேகம் சதாகாலமும் உஷ்ணமாகவே இருக்குமென்றாலும், பகலைவிட இரவில் உஷ்ணம் மிகுதிப்படும்; வயதிற்குத்தக்க வளர்ச்சியின்றி உடல் க்ஷீணித்திருக்கும்; அன்னத்துவேஷம், ஆயாசம் முதலியவைகளேற்படும்; நெஞ்சுக் கூடுகட்டி உயர்ந்திருக்கும்; கண்ணெரிச்சலும் கண்ணில் பூளையும் உண்டாகும்; வாய் நாற்றமடிக்கும்.

இதற்குத் தக்க மருந்துகளைப் பிரயோகம் செய்யாமல், நம் நாட்டு மக்கள் சூடுபோட்டு வருகின்றனர். அஸ்தியில் கனலேறியிருப்பதற்கும், எலும்பின் தத்துவம் கேடுற்றிருப்பதற்கும் சூடு போடுவதினால் பயன் என்ன கிடைக்கப்போகிறது? குழந்தைகளை ஹிம்சிப்பதைத் தவிர, சூடு போடுவதினால் கூடு கட்டிய நெஞ்சு வலுபெற்று அமிழ்ந்துவிடுமென்று நினைக்கவே கூடாது.

மேலும் கணைச் சூட்டிற்கு உபசாந்திகளாக எண்ணெய் ஸ்நானம், குளிர்ச்சியான ஆகாரம், சந்துஷ்டியான போஷிப்பு முதலியவைகளினால் திரேகோஷ்ணத்தை சமரசப்படுத்தி வரவேண்டும்.

### சிகிச்சை

(1) சிற்றாமணக்கெண்ணெய் வல்லாரைச்சாறு அவுன்ஸ் 24
அவுன்ஸ் 32 வெந்தயம் ரூபாயெடை 3

இவற்றுள் வெந்தயத்தைப் பசும்பால்விட் டரைத்து கலந்துக் கரைத்து எரித்து வடித்து காலை, மாலை 2, $2\frac{1}{2}$-தேக்கரண்டியளவாகச் சர்க்கரை சேர்த்துக் கொடுத்து வரலாம்.

(2) பேயன் வாழைப்பழத்தை சுண்டுவிரல் கனமான பில்லைகளாக நறுக்கி, சிற்றாமணக்கெண்ணெயில் போட்டு வெயிலில் வைத்திருந்து, இரவு படுக்கைக்குப் போகுமுன் ஒரு துண்டுவீதம் கொடுத்து வரலாம்.

(3)

| | | |
|---|---|---|
| லைக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) | டிராம் | 1 |
| ஸ்பிரிட் ஈதர் னைட் ரோஸி (Spirit Aether Nitrosi) | ,, | $\frac{1}{2}$ |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | துளி | 40 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்றுசேர்த்து 4 மணி நேரத்திற்கொருத் தேக்கரண்டிவீதம் நீடித்துக் கொடுத்து வரலாம்.

(4) டி ஜாங்க்ஸ் காட் லிவர் ஆயில் (De Jounghs Cod Liver Oil);
ஸ்காட்ஸ் எமுலுஷன் ஆப் காட் லிவர் ஆயில் (Ccott's Emulsion of Cod Liver Oil)
அல்லன்பரீஸ் காட் லிவர் ஆயில் (Allenbury's Cod Liver Oil)
கிரிமால்ட்ஸ் மால்ட் எக்ஸ்டிராக்ட் ஆப் காட் லிவர் ஆயில் (Gremalt's Malt Extract of Cod Liver Oil)
பவல்ஸ் காட் லிவர் ஆயில் வித் ஐபோபாஸ்பேட் அண்டு லைம் (Powell's Cod Liver Oil with Hypophospate and Lime)

இவற்றி லேதேனு மொன்றையாகிலும், இதுபோன்ற இதர மீன் எண்ணெய்களி லொன்றையாகிலும் நீடித்துக் கொடுத்து வரலாம்.

**கணை மூலம்:—**

கணைரோகத்தால் பாதிக்கப்பட்டிருக்கும் சமயங்களிலாவது, கணைரோகம் சொஸ்தமான பின்னாவது, வயிற்றுக்கடுப்பும், ஆசனக்கடுப்பு மேற்பட்டு, மலம் வருவதைப்போல் அடிக்கடி உணர்ச்சியேற்பட்டு, மலம் கழியாததால், முக்கிமுக்கி மலம் கழிப்பதாலும்; ஆசனக்கடுப்பின் உபத்திரவம் தாங்காது, சதா முக்கிக்கொண்டிருப்பதாலும், மலக்குடலின் கடைசிபாகம் வெளிக்குத் தள்ளிவிடுவதுண்டு. அதினால் மலம் கழிக்கும்போதெல்லாம், அந்த மலக்குடல் கடைசிபாகம் பிதுங்கி வெளியே வந்துவிடும்.

இது பெரியவர்களுக்குண்டாகும் மூல வியாதியைபோலவே காணப்படும். மலம் கழித்தபின் சுத்தி செய்தவுடன் தானுகவேனும், கையால் தள்ளிவிடுவதினாலேனும், அதன் ஸ்தானத்திலேறிக்கொள்ளும். குழந்தைகளுக்கு வரும் கணைமூலத்தில், அவர்கள் மலவாயிலை திறந்துகொண் டிருப்பதினால், கொசு, ஈ முதலியவைகள் உட்கார்ந்து கிருமிகளைத் தொத்தச் செய்ததினாலென்கிலும்; அடிக்கடி மலம் கழிப்பதினாலென்கிலும், மலக்குடல் கடைசி பாகம் ஆசனத்துவாரத்தின் வழியே உரசிவந்துகொண்டிருப்பதால் தேய்வுபட்டென்கிலும், இயற்கையாகக் கணைரோகத்தின் கோளாரினாலென்கிலும், வெளித் தள்ளியுள்ள மூலத்திலிருந்து, இரத்தமும் சீழும் கசிவதுண்டு. இதற்குத் தக்கவிதமான சிகிச்சைகள் செய்யாத பக்ஷத்தில், மூலம் ஸ்திரப்பட்டு, ஆயுள் வரையில் உபத்திரவத்தை யுண்டுபண்ணிக் கொண்டிருக்கும்.

சிகிச்சை

(1) கோரோசனை ரூபாயெடை 1 திப்பிலி ரூபாயெடை 1
கிராம்பு ,, 1 சாதிக்காய் ,, 1
சீரகம் ,, 1 மாசிக்காய் ,, 1

ஒன்று சேர்த்து மூலைப்பாலில் மைபோலரைத்து, குன்றிமணிப் பிரமாணமாக மாத்திரைகள் செய்து உலர்த்திக்கொண்டு, இரத்தம் கசிந்துகொண் டிருக்கும் கணை மூலத்திற்கு, காலை மாலை ஒரு அவுன்ஸ் மூலைப்பாலில் ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

(2) சோற்றுக்கற்றாழைச்சோறு ரூபாயெடை 5 சர்க்கரை ரூபாயெடை 2
நல்லெண்ணெய் அவுன்ஸ் 18
செங்காயுருவியிலை ,, 1

சோற்றுக்கற்றாழையை 7-முறை தண்ணீர்விட்டுக் கழுவி பின் எல்லாம் ஒன்று சேர்த்து, எண்ணெயில் போட்டு, சோற்றுக்கற்றாழைச்சோறு சிவந்து வரும்வரை பதமாய் காய்ச்சி இறக்கி வடிகட்டி, சீழ் கசிந்துகொண்டிருக்கும் கணைமூலத்திற்கு காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

(3) மாசிக்காய்த்தூள் ரூபாயெடை 1 வாசலின் (Vaseline) ரூபாயெடை 3
அபினி ,, $\frac{1}{4}$

ஒன்றுசேர்த் தரைத்து, மலம் கழிக்கும் ஒவ்வொருதாமும் மூலத்தை நன்றாய் சுத்திசெய்து வெளிப்பிரயோகமாகத் [illegible]வி வரலாம்.

(4) கொக்கோயின் ஐட்ரோ குளோரேட் (Cocaine Hydro chlorate) கிரைன்ஸ் 2
சொலுஷன் அட்ரினலின் குளோரைட் (Solution Adrenalin Chloride) டிராம் $\frac{1}{2}$

| | | |
|---|---|---|
| பிஸ்மத் சப்நைட்ரஸ் (Bismuth Subnitras) | கிரைன்ஸ் | 10 |
| வாசலின் (Vaseline) | அவுன்ஸ் | 1 |

ஒன்றுசேர்த்து களிம்பாக அரைத்துக்கொண்டு, மலம் கழித்த ஒவ்வொரு நேரமும், இரவு படுக்கைக்குப் போகு முன்னும், மூலத்தை சுடுதண்ணீரால் சுத்திசெய்துவிட்டு வெளிப்பிரயோகமாகத் தடவி வரலாம்.

| | | |
|---|---|---|
| (5) பல்விஸ் கிளிசரிஸா கோ (Pulvis Glycyrrhizae Co) | டிராம் | 1 |

இதைத் தேனில் குழைத்து 5-வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு இரவில் படுக்கைக்குப் போகுமுன் ஒரே தடவையாகக் கொடுத்துவந்தால் காலையில் முக்கலில்லாமல் மலம் சாதாரணமாகக் கழிந்து, மூலத்தில் வடியும், இரத்தத்தையும், சீழையும் மட்டுப்படுத்தும்.

| | | |
|---|---|---|
| (6) ஐட்ராஸ்டின் (Hydrastin) | கிரைன்ஸ் | 5 |
| கொக்கோயின் ஐட்ரோ குளோரேட் (Cocaine Hydro chlorate) | ,, | 3 |
| பல்விஸ் அலம் (Pulvis Alum) | ,, | 5 |
| பசுவெண்ணெய் | போதுமானது | |

களிம்புசெய்யப் போதுமான பசுவெண்ணெய் செய்து களிம்பாக்கி 20-பாகமாகப் பிரித்து, இரவு படுக்கைக்குப் போகும்போதும், காலையில் மலம் கழித்த உடனேயும் ஆசனவாயை சுடுத்தண்ணீரால் கழுவிவிட்டு ஒரு பாகத்தைத் தடவி வரலாம்.

குறிப்பு:—உள்ளுக்கு மருந்துகள் கொடுப்பதோடும் 3, 4, 6-வெளிப் பிரயோகக் களிம்புகளையும் உபயோகிப்பது நல்லது.

## கணைரோகத்தில் இருந்தாப்போலிருந்து தொண்டை கட்டிவிடுதல்:—

சில சமயம் கணைரோகத்தின் கொரோம் மிகுதிபட்டு விடுமானால் எதிர்பாராதவிதமாய், இருந்தாப்போ விருந்து தொண்டைக் கட்டிவிடும். குழந்தை அழுவதற்கும் முடியாமல் திட்டுமுட்டடித்து கண்விழியை மேலே சொருகும்.

### சிகிச்சை

| | | |
|---|---|---|
| (1) காலோமல் (Calomel) | கிரைன்ஸ் | 2 |
| சோடியம் பைகார்ப் (Sodium Bicarb) | ,, | 24 |
| பல்விஸ் இப்பிக்காக் (Pulvis Ipecac) | ,, | 1 |
| பல்விஸ் பெப்ஸினல் (Pulvis Pepsinal) | ,, | 24 |

ஒன்றாய்ச் சேர்த்து 12-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, இரண்டு மணி நேரத்திற் கொருதரம் ஒரு பாகத்தை வாயில் கொட்டி விழுங்கும்படி செய்யலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | கிரைன்ஸ் | 2 |
| | குளோரால் ஐட்ரஸ் (Chloral Hydras) | ,, | 1 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | துளி | 15 |
| | தண்ணீர் | டிராம் | 1 |

ஒன்றுசேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரே தடவையாகக் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | ஆஸிட் லாக்டிக் (Acid Lactie) | டிராம் | 1 |
| | தண்ணீர் | ,, | 6 |

ஒன்றுசேர்த்து வெளிப்பிரயோகமாக மட்டும் வெளிப்புறம் தொண்டைக் குழியில் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | சுடுதண்ணீர் | அவுன்ஸ் | 10 |
| | அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) | கிரைன்ஸ் | 3 |

இதில், தண்ணீர் நன்ருகக் கொதிக்கும் சமயம் மருந்தைப் போட ஆவி யுண்டாகும் அதை சுவாசிக்கும்படி செய்யலாம்.

**குறிப்பு:—**உள்ளுக்கு மருந்து கொடுக்கும்போதும் 3, 4-இலக்க வெளிப் பிரயோக மருந்துகளையும், வெளிப்பிரயோகமாக உபயோகித்து வரலாம்.

## கணையில் இழுப்பு:—

கணை ரோகத்தில் சாதாரணமாகவே இழுப்பு இருப்பதுண்டு; என்ருலும், இழுப்பு அதிகமாகச் சில கணைரோகங்களில்தானிருக்கும். அவ்விதமான சமயங்களில் இழுப்பைக் கண்டிக்கும்படியான ஔஷதப்பிரயோகம் செய்ய வேண்டும். கணையில் இழுப்பு சாதாரணமாகவே இருக்குமென்று மிதமா யிருந்துவிட்டால், இழுப்பானது உக்கிரமாக ஆரம்பித்து விபத்தை உண்டு பண்ணும்.

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | டிஞ்சர் டோலு (Tincture Tolu) | டிராம் | 3 |
| | சிரப் ஸ்குவில்ஸ் (Syrup Squills) | ,, | 4 |
| | டிஞ்சர் காம்பர் கோ (Tincture Camphor Co) | ,, | 4 |
| | கிளிசரின் (Glycerine) | ,, | 12 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 5 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, பகல் நேரங்களில் 3-மணிநேரத்திற் கொருமுறை $\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகவும், இரவில் 4-மணி நேரத்திற் கொருமுறை $\frac{1}{2}$-தேக்கரண்டி யளவாகவும் கொடுத்து, இடை நேரங் களில்,

| | | |
|---|---|---|
| கொக்கோயின் சொலுஷன் (Cocain Solution) | டிராம் | ¼ |
| தண்ணீர் | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்து, வெளிப்பிரயோகமாக தொண்டையில் கொஞ்சம் தெளித்து, 8-அவுன்ஸ் தண்ணீரில் ஒரு தேக்கரண்டி சீமைக் கடுகையரைத்துக் கலக்கி, உள்ளங்கை யளவு துணியை அதில் நனைத்து, தொண்டையின்மேலும் தொண்டைக் குழியிலும் போட்டு வைக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | கிரைன்ஸ் | 2 |
| | குளோரல் ஹட்ரஸ் (Chloral Hydras) | ,, | 1 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | துளி | 15 |
| | தண்ணீர் | டிராம் | 1 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு இழுப்பு வரும் சமயத்தில் ஒரே தடவையாகக் கொடுக்கலாம்.

## கணையில் தொண்டைக் கம்மி சளி அதிகரித்தல்:—

கணை ரோகத்தினுல் பாதிக்கப்படும் சமயங்களில் தொண்டைக்கம்ம லேற்பட்டு, கீச்சுக்குரலாய் குழந்தையழும்; சளியும் மிகுதிப்பட்டு தொண்டையில் அடைத்துக்கொண்டு, குறுகுறுவென்ற சப்தம் ஏற்படும்; இது சளியின் மிகுதியினுல் தொண்டைக் கம்முவதாயிருப்பதால், சளியை வெளிப்படுத்தும்படியான மருந்துகளை முதலில் பிரயோகித்துச் சளியை வெளிப்படுத்தி, கணையையும் சொஸ்தம் செய்யவேண்டும்.

### சிகிச்சை

(1) பல்விஸ் இப்பிக்காக் (Pulvis Ipecac) கிரைன்ஸ 5

இதை 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குச் சளியை வெளிப்படுத்தி தொண்டைக் கம்மலை நீக்க, கால்மணிநேரத்திற் கொருதரம் இந்தவிதமாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | வைனம் ஆன்டிமோனியாலிஸ் (Vinum Antimonialis) | டிராம் | 4 |
| | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | ,, | 4 |
| | சிரப் சில்லி (Syrup Seille) | ,, | 4 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து வாந்தியுண்டாகும் வரை, கால்மணி நேரத்திற்கு ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து, பின் இரண்டுமணி நேரத்திற் கொருதரம் ½-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(3) ஆளிவிரையைக் களி கிண்டியாவது, அல்லது அன்டிபிலாஜெஸ்டைன் (Antiphlogistine) என்ற மருந்தையாவது சுடசுட துணியில் தடவி தொண்டைக்குழியில் போடலாம்.

**கணையினால் ஆசனம் வெளித்தள்ளுதல்:—**

அடித் தள்ளுதலென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**கணையினால் இரத்தம் விழுதல்:—**

கணை இரத்தபேதியென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**கணையினால் நீர்ச்சுருக்கு:—**

கணைரோகத்தினால் பாதிக்கப்படும் சமயங்களிலாவது, கணைரோகம் சொஸ்தமான பின்னாவது, நீர்ச்சுருக் கேற்படுவதுண்டு; மூத்திரம் கடுகடுத்து இறங்கும்; அடிக்கடி மூத்திரம் வருவதைப்போன்ற உணர்ச்சியேற்பட்டு மூத்திரம்பெய்ய எண்ணினால் மூத்திரமிறங்காது; அப்படி இறங்கினாலும் துளித் துளியாகக் கடுத்திறங்கும். இது கணைரோகத்திலேற்பட்ட திரேகோஷ்ணத்தின் மிகுதியினா லுண்டாவதாகும்.

**சிகிச்சை**

(1) எலுமிச்சம்பழச்சாறு அவுன்ஸ் ¼ இளந்தென்னம்பூச்சாறு அவுன்ஸ் ½
பசுந்தயிர் ,, ½

ஒன்று சேர்த்து, காலை மாலை இந்தவிதமாக செய்து கொடுத்து வரலாம். (புளியில்லா பத்தியம்)

(2) பொட்டாஷியம் சிட்ரஸ் (Potassium Citras) கிரைன்ஸ் 16
டிஞ்சர் ஐயோஸியாமஸ் (Tincture Hyoscyammus) துளி 20
இன்பியூஷன் பக்கு (Infusion Buchu) அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணிநேரத்திற்கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

**கணையினால் பலவிதக் கழிச்சல்:—**

குழந்தைகளுக்குக் கணைரோகம் சொஸ்தமான பின்பும், மலம் பலவிதமாகக் கழிவதுண்டு. சில சமயங்களில் மலம் கட்டியாகவும், குழம்பாகவும், தண்ணீராகவும், சளிபோன்றும், பால்போன்றும், பச்சையாயும் கழிவதுண்டு. இது ஜீரணக்கருவிகள் கணைரோகத்தினால் பாதிக்கப்பட்டுப் போவதினாலேயே இவ்விதக் கழிச்சல்கள் உண்டாகின்றன.

**சிகிச்சை**

(1) வெங்காயச்சாறு அவுன்ஸ் ½ அதிமதூரம் ரூபாயெடை ½
பருத்திப்பிஞ்சுசாறு ,, ½ குப்பைக்கீரைவேர் ,, ½

சாற்றைக் கலந்துகொண்டு, அதிமதுரம் குப்பைக்கீரை இவைகள் இரண்டையும் சேர்த்து மைபோலரைத்து, 2-அவுன்ஸ் வெள்ளாட்டுப் பாலில் கலக்கி வடிகட்டி, காலை மாலை 1½, 2-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | சோடியம் பைகார்போனஸ் (Sodium Bicarbonas) | டிராம் | 1 |
| | லிக்கர் பிஸ்மத் (Liquor Bismuth) | ,, | 2 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | ,, | 2 |
| | இன்பியூஷன் குவாஷியா (Infusion Quassiae) | ,, | 1 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | சோடியம் பைகார்போனஸ் (Sodium Bicarbonas) | கிரைன்ஸ் | 6 |
| | பல்விஸ் ரீயை (Pulvis Rhei) | ,, | 6 |

ஒன்று சேர்த்து, 6-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணிநேரத்திற் கொருதரம் ஒரு பாகத்தைக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | டிஞ்சர் கைநோ கோ (Tincture Kino Co) | துளி | 16 |
| | சிரப் சிம்பிள் (Syrup Simple) | ,, | 40 |
| | ஆக்குவா சின்னமோனி (Aqua Cinnamoni) | டிராம் | 4 |

ஒன்று சேர்த்துக் கலக்கிக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணிநேரத்திற் கொருதரம் கொடுத்து வரலாம்.

## கணையினால் முக்கல் வயிற்றுக் கடுப்பு:—

இதைப்பற்றி "கணை இரத்தபேதி" என்ற தலைப்பின்கீழும் கூறப்பட்டிருக்கிறது. கணைரோகத்தினால் திரேகத்தில் மிகுதியான உஷ்ணம் தங்கி, இரைப்பை, குடல் முதலியவைகளில் அழலைக்கண்டு, அடிக்கடி மலம் வருவதைப்போன்ற உணர்ச்சியேற்படும். அந்தச் சமயத்தில் மலம் கழிக்க முக்கலேற்படும். மலம் கொஞ்சமாகவும், சீதம் இரத்தம் கலந்தும் கழியும்; ஆசன வாய்நெருப்பால் சுட்டதைப்போலெரியும்; இந்தச் சமயத்தில் ஆகாரம் காரமற்றதாகக் கொடுத்துவரவேண்டும்.

### சிகிச்சை

(1) சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் 24   நிலக்குமிழம்வேர்பட்டை ரூபாயெடை 8

வெந்தயம் ரூபாயெடை 8

பொடித்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(2) எருமைத்தயிர் அவுன்ஸ் 1   மணித்தக்காளியிலைச்சாறு அவுன்ஸ் ½

ஒன்று சேர்த்து, காலைநேரங்களில் மட்டும் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(3) சீரகம் ரூபாயெடை ½ பருத்திப்பிஞ்சு ரூபாயெடை ½

பசும்பால் விட்டரைத்துக் கலக்கி, 1, 1½-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(4) வெந்தயம் ரூபாயெடை 10 நல்லவெல்லம் ரூபாயெடை 5
பசுநெய் அவுன்ஸ் 10

முதலில் வெந்தயத்தைப் பசும்பாலில் வேகவைத்து அரைத்து, பின் ஒன்று சேர்த்து லேகியம்போல் கிண்டி, காலை மாலை ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் கொடுத்து வரலாம்.

(5)

| | | | | |
|---|---|---|---|---|
| நாவற்பட்டை | ரூபாயெடை | 5 | ஆலம்விழுதின்கொழுந்து | ரூபாயெடை 5 |
| நாவற்கொழுந்து | ,, | 5 | | |
| விடத்தலாப்பட்டை | ,, | 5 | அத்திப்பட்டை | ,, 5 |
| விடத்தலாயிலை | ,, | 5 | அத்திப்பிஞ்சு | ,, 5 |
| கருவேலம்பட்டை | ,, | 5 | சாதிக்காய் | ,, 5 |
| கருவேலங்கொழுந்து | ,, | 5 | மாசிக்காய் | ,, 5 |
| ஆவரம்பட்டை | ,, | 5 | கிராம்பு | ,, 5 |
| ஆவரங்கொழுந்து | ,, | 5 | சீரகம் | ,, 5 |
| ஆலம்பட்டை | ,, | 5 | அதிவிடயம் | ,, 5 |

முதலில், பட்டை, யிலை, கொழுந்து, பிஞ்சு இவற்றை இடித்து, 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 12-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், இதர சரக்குகளை இளம்வறுப்பாய் வறுத்துப் பொடித்துப்போட்டுக் கலக்கி வடிகட்டி, காலை மாலை 1, 1½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(6) பல்விஸ் கைனோ கோ (Pulvis Kino Co) கிரைன்ஸ் 6
பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக் கம் ஒபியம் (Pulvis Creta Aromatic Cum Opium) ,, 9
பிஸ்மத் சப் நைட்ரஸ் (Bismuth Subnitras) ,, 6

ஒன்று சேர்த்து, 4-பாகமாகப் பிரித்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணிநேரத்திற் கொரு பாகம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(7) டோவர்ஸ் பவுடர் (Dover's Powder) கிரைன்ஸ் 5
ஆஸிட் காலிக் (Acid Gallic) ,, 5
பிஸ்மத் சப் நைட்ரஸ் (Bismuth Subnitras) ,, 5

ஒன்று சேர்த்து, 4-பாகமாகப் பிரித்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணிநேரத்திற் கொரு பாகம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

### கணையினால் வெள்ளைப் படுதல்:—

இது பெண் குழந்தைகளுக்கு மட்டுமே சம்பவிக்கும். பிரமேக ரோகமுள்ள தாய், தந்தையர்க் குற்பத்தியான குழந்தைகளுக்கும், மெலிந்த சரீர பிர

கிருதியுள்ள குழந்தைகளுக்கும், கணை ரோகத்தால் பாதிக்கப்படும் குழந்தைகளுக்கும், கணை ரோகத்தால் பாதிக்கப்பட்ட குழந்தைகளுக்கும் இது ஏற்படுவதுண்டு. பெண்குறியிலிருந்து தயிரைப்போல் வெளிறின பதார்த்தம் கசிந்துகொண்டேயிருக்கும். இது சிறு குழந்தையிலே ஏற்பட்டுவிட்டால் பின்னர் சதாகாலமு மிருந்துகொண்டே இருக்கும். இரவில் தூங்கி எழுந்தவுடன் பார்த்தால் தொடைகளில் ஒடி வெண்மையாகக் காய்ந்துபோயிருக்கும். இதற்குப் பிரமாதமான சிகிச்சைக ளொன்று மில்லை. குழந்தைகளுக்குக் குளிர்ச்சியான போஷணையுள்ள ஆகாராதிகளைக் கொடுத்து வரவேண்டும். குளிர்ந்த தண்ணீர் ஸ்நானம், சூரிய ஒளியில் திரேகாப்பியாசம் முதலியவைகளால் நன்மையுண்டாகும். இரும்பு சேர்ந்த மருந்துகள், மீன் எண்ணெய் முதலியவைகளைப் பிரயோகித்து வரலாம்.

## கணை வயிற்றுப் போருமல்:—

கணை ரோகத்தினுல் ஜீரணக்கருவிகள் க்ஷீணப்பட்டு, ஆகாரத்தைச் சரியான விதமாய் ஜீரணிக்கச் செய்ய சக்தியற்று, அஜீரணத்தை யுண்டு பண்ணி வயிற்றை ஊதச் செய்துவிடும். ஆகாரம் ஒன்றும் உட்கொள்ளாமலிருக்கும்போதே வயிறு பெருத்து, காற்று நிறைந்திருப்பதைப்போல் தோன்றி, சுவாசிக்கக் கஷ்டப்படும்; மூச்சுத் திணறல் ஏற்படும்.

### சிகிச்சை

(1) தேசாவரம் ரூபாயெடை 1 சாரணத்திவேர் ரூபாயெடை 1 ஒன்று சேர்த்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2)

| | | | |
|---|---|---|---|
| தைவேளையிலை | ஒருபிடி | செம்முள்ளியிலை | ஒருபிடி |
| துளசி | ,, | கஞ்சாங்கோரை | ,, |
| தும்பை | ,, | சீரகம் | ,, |

ஒன்றுசேர்த்திடித்து, பிழிந்த சாறு அவுன்ஸ் 1, $1\frac{1}{2}$-வீதம் கொடுத்து வரலாம்.

(3)

| | | |
|---|---|---|
| பல்விஸ் ரீயை (Pulvis Rhei) | கிரைன்ஸ் | 2 |
| சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 6 |
| ஓலியம் அனிஸி (Oleum Anisi) | துளி | 1 |

ஒன்று சேர்த்து, 4-பாகமாகப் பிரித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 3-மணிநேரத்திற் கொரு பாகம் தேனில் கலந்து கொடுத்து வரலாம்.

(4) சோடா பைகார்ப் (Soda Bicarb) கிரைன்ஸ் 6
டிஞ்சர் கார்டமம் கோ (Tincture Cardamom Co) துளி 8
ஆக்குவா மெந்தாபிப் (Aqua Menthapip) அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்து நன்ருகக் குலுக்கிக்கொண்டு 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

**கணை வாய்நாற்றம்:—**

கணைரோகத்தால் பீடிக்கப்பட்டிருக்கும் குழந்தைகளுக்கு வாய்நாற்ற மேற்படுவதுண்டு. வாயிலிருந்துவரும் சுவாசமோ, காற்ருே, சுண்ணும்பு அல்லது புண் நாற்றமாயிருக்கும்; இது கணைரோகத்திலேற்படும் ஜீரண உருப்புகளின் பெலஹீனத்தினுலேயே ஏற்படுகிறது. கணைச்சூடுள்ள குழந்தைகளுக்கு, வாய்நாற்றம் முதல் அறிகுறியாகவிருக்கும்.

சிகிச்சை

(1) ஏலம் ரூபாயெடை ½ வெங்காயம் ரூபாயெடை 2
வெந்தயம் ,, 2 மணித்தக்காளியிலை ஒருபிடி

ஒன்ருகத் தட்டி சிவக்க வறுத்து, 24-அவுன்ஸ் தண்ணீர்விட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) காலோமல் (Calomel) கிரைன்ஸ் 1½
சோடா பைகார்ப் (Soda Bicarb) ,, 8

ஒன்று சேர்த்து 4-பாகமாகப் பிரித்து, நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒருபாகம் வீதம் வாயில் கொட்டி யெச்சில் கூட்டி விழுங்கச் செய்யலாம்.

குறிப்பு:—இந்த மருந்தை இந்தவிதமாக 3, 4 நாள் கொடுத்து நிறுத்திக்கொண்டு பின், 8-நாள் கழித்து கொடுத்து பின் நிறுத்தி, இந்தவிதமாகவே சௌகர்யமாகும் வரை கொடுத்து வரலாம்.

## வயிற்ருேட்டம்

## DIARRHOEA

இதைக் கழிச்சல், வயிற்றுப்போக்கு, பேதி என்றெல்லாம் சொல்லுவர். இது குழந்தைகளுக்கு அடிக்கடி உண்டாகக்கூடியதோர் சாதாரண வியாதி. வயிற்ருேட்டம் பெரியவர்களுக் கேற்படுவதைப்போலில்லாமல், குழந்தைகளுக்கு வயிற்ருேட்டத்தில் சிலது தனிபட்டதாகவேயிருக்கும். பல் முளைக்கும் போதும், கணை ரோகத்திலும், தோஷம், மாந்தம் முதலிய வியாதிகளிலு மேற்

படும் வயிற்றோட்டங்கள் குழந்தைகளுக்கு மட்டும்தான், தாக்கக்கூடியதாக விருக்கின்றன.

வயிற்றோட்டம் அஜீரணத்தினாலும், தொத்துவிஷக் கிருமிகளின் சேர்க்கையாலும், ஜீரண உருப்புகளின் பலஹீனம், சிறுகுடல் பெருங்குடலழற்சி, மண் முதலிய ஜீரணியாத பொருட்களைத் தின்றல் முதலியவற்றாலும் ஏற்படலாம். வயிற்றோட்டம் கோடை காலங்களிலும், மழை காலங்களிலும் விசேஷமாக ஏற்படலாமென்று, டாக்டர் ரூடாக் (Dr. Ruddock) அபிப்பிராயப்படுகிறார். குழந்தைகளுக்குக் கோடை காலங்களில்தான் தொத்துவிஷக் கிருமிகளா லுண்டாகும் வயிற்றோட்டம் யேற்படலாமென்றும், வெப்பம் எவ்வளவுக் கெவ்வளவு கொரோமா யிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு வயிற்றோட்டமும் உண்டாகலாமென்று, டாக்டர் ரூடாக்கை யநுசரித்தே டாக்டர் ஹூட்சின்சனும் (Dr. Hutchinson) அபிப்பிராயப்படுகிறார்.

கோடைக் காலங்களில் தண்ணீர் நிலயங்களில் தண்ணீர்வற்றி, அதில் கிருமிகள் பெருகிவிடுவதாலும்; மழைக்காலங்களில் அசுசியானவற்றை மழை வெள்ளம் அடித்துக்கொண்டுவந்து பல நீர் நிலயங்களிலும் தொத்துவிஷக் கிருமிகளைப் பரப்பிவிடுவதாலுமே, இக் காலங்களில் மற்ற காலங்களைவிட வயிற்றோட்டமிருக்கும் என்பதை ஏற்றுக்கொள்ள போதிய காரணங்களாக விருக்கின்றன.

வயிற்றோட்டம் பலதிரப்பட்டதாக விருக்குமென்றாலும், அடிக்கடி மலம் கழிவதாகிய குணத்தை யுண்டுபண்ணும் வியாதிக்கு, வயிற்றோட்டமென்று பொதுவாகக் கூறப்படும். மண், சாம்பல் முதலிய ஜீரணிக்காத வஸ்துக்களா லேற்படும் வயிற்றோட்டம் குழந்தை நடக்க வாரம்பிக்கும் காலங்களில் மட்டும்தானேற்படும். மேலும் குழந்தைகள் நடக்க வாரம்பிக்கும் காலங்களிலும் இயற்கையான வயிற்றோட்டமும் வாரம்பிப்பதுண்டு.

இதன்கீழ் கூறப்பட்டுள்ள வேறுபட்ட வயிற்றோட்டங்களுக்கு அவ்வவற்றின் தலைப்பின்கீழ் காரணங்களும், குறி, குணங்களையும் கூறப்பட்டிருப்பதால், இவ்விடம் அந்த விளக்காது விடப்படுகிறது. குழந்தைகளுக் குண்டாகும் வயிற்றோட்டங்கள் பலவாயிருப்பினும், அவற்றுள் அடிக்கடி யுண்டாகும் வயிற்றோட்டங்களைமட்டும் இதன் கீழ் கூறப்படுகிறது. அவையாவன:—

| | | |
|---|---|---|
| அதிசாரம் | தோஷக்கழிச்சல் | டாகும் கழிச்சல் |
| ஆமக்கழிச்சல் | நாள்பட்டக்கழிச்சல் | பால்போல்கழிதல் |
| இரத்தக்கழிச்சல் | பச்சிலைச்சாறுபோல் | மாந்தக்கழிச்சல் |
| கணைக்கழிச்சல் | கழிதல் | முட்டை யுடைத்ததை |
| சலக்கழிச்சல் | பலவிதமாய்கழிதல் | போல் கழிதல் |
| சுரக்கழிச்சல் | பல்முளைக்கும்போதுண் | வெப்புக்கழிச்சல் |

## அதிசாரம்—Dyspepsia

அதிசாரம் அஜீரணத்தினு லேற்படுகிறது. குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் தாய்மார்கள் இலகுவில் ஜீரணியாத பதார்த்தங்களைப் புசித்தால் பால் குடிக்கும் குழந்தைக்கு அதிசார மேற்படலாம்.

பழங்கறிகள், மிகுந்த எண்ணெய், கொழுப்புள்ள ஆகாரங்கள்; அரைகுறை வேக்காடுள்ள பதார்த்தங்கள்; மீன் கருவாடு சேர்ந்த கறிவகைகள்; பட்டாணி, மொச்சை, கடலைப்போன்ற தானியங்கள்; புளிப்பேறிய பால்; அதிக மாவுசத்துள்ள தின்பண்டங்கள் முதலியவற்றைப் புசிப்பதினுலேயே அதிசார முண்டாகின்றது. அதிசார ரோகத்தை அஜீரண வயிற்ளூட்டம், அஜீரணக்கழிச்சல், அஜீரணபேதி, செரியாக் கழிச்சல் என்றும் சொல்லப்படும்.

சிறு குழந்தைகளுக்குத் தாய், பால் கொடுக்கும்போது சரியான விதமாய் முலைக்காம்பைக் கழுவி, பீச்சுவிட்டுப் பால் கொடுக்காததினுல் (33-ம் பக்கம் பார்க்க) முலைக்காம்புகளிலுள்ள அழுக்காலும், முலையில் அதிகநேரம் தங்கி கேடுற்றிருந்த பாலாலும், சிறு குழந்தைகளுக்கு அதிசாரமேற்படுகிறது.

அதிசாரம் கண்டால், இருந்தாப்போலிருந்து வயிறிரைந்து, மலம் தண்ணீராகக் கழியும். பால் குடிக்கும் குழந்தைகளுக்கானுல், பால் திரண்டு புளிப்பு நாற்றத்துடன் தண்ணீர் கலந்து கழியும்; வயிற்ளூட்டம் அதிகமாயிருக்கும்; வாந்தியும் மயக்கமு முண்டாகும்; நாவில் மாபடிந்திருக்கும்; திரேகம் உஷ்ணித்திருக்கும்; சில சமயங்களில் வயிறு பொருமும்; உண்ட ஆகாரம் அரை குறையாய்க் கழியும்; வயிறு மடமடவென்றிரையும்; மலம் சில சமயம் தண்ணீராகவும், சில சமயம் மாவைக் கரைத்ததைப்போலும், அரை குறையாக ஜீரணித்த ஆகாரங்களாகவும் கழியும்; மலத்திலதிகமான புளிப்பு நாற்றமிருக்கும்; நாவரட்சி காணும்.

### சிகிச்சை

(1) அத்திக்காயை இடித்துப் பிழிந்த சாற்ருல், ஓமத்தை மைபோலரைத்து, ஒரு கழற்சிக்காயளவாக 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் பசுந்தயிரில் கலக்கி காலையில் மட்டும் கொடுத்து வரலாம்.

(2) ஒரு முத்தின சாதிக்காயைத்துளைத்து, அந்தத் துளையில் மிளகளவு அபினியைத் திணித்து அரைத்த மஞ்சளால் ஜாதிக்காய்க்கு ஒரு விரல் கனத்தில் கவசம் செய்து நெருப்பிலிட்டுப் புறட்டி மஞ்சள் கறுகும் சமயம் எடுத்து மஞ்சள் கரியை நீக்கிவிட்டு, சாதிக்காயையும் அபினியையும், முலைப்பால்விட்டு ஒருமணிநேரம் மைபோலரைத்துக் கடுகளவாக மாத்திரைகள் செய்து காயவைத்துக் கொண்டு, காலை மாலை ஒரு அவுன்ஸ் முலைப்பாலில் ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

(3) காட்டாத்திப்பூ ரூபாயெடை 1 வில்வக்கொழுந்து ரூபாயெடை 1
கருங்காலிவேர்ப்பட்டை ,, 1 திப்பிலி ,, 1

ஒன்று சேர்த்துப் பொடித்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன் ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(4) சிறுநாகப்பூ ரூபாயெடை 1 வில்வவேர் ரூபாயெடை 1
கொத்தமல்லி ,, 1 வில்வப்பட்டை ,, 1
திப்பிலி ,, 1 கோரைக்கிழங்கு ,, 1

ஒன்று சேர்த்துப் பொடித்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன் ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(5) ஓமம் ரூபாயெடை 3 காட்டாத்திப்பூ ரூபாயெடை 3

ஓமத்தை முதலில் இளவறுப்பாய் வறுத்துத் தேய்த்து உமியை நீக்கி பின் னிரண்டையும் சூரணித்து, காலை மாலை $\frac{1}{8}$-ரூபாயெடை சூரணத்தை இஞ்சிச் சாற்றில் கொத்து வரலாம்.

(6) ஓமம் ரூபாயெடை 1 பிரண்டை ரூபாயெடை 1

ஒன்று சேர்த்துத்தட்டி 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன் ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(7) தைவேளையிலை ரூபாயெடை 1 வெள்ளைப்பூண்டு ரூபாயெடை 1
வசம்பு ,, 1

ஒன்று சேர்த்துத் தட்டிப் பிழிந்தசாறு, அவுன்ஸ் 1, $1\frac{1}{2}$-வீதம் காலை மாலைக் கொடுத்து வரலாம்

(8) கீழ்க்காய்நெல்லிவேரை அரைத்து, ஒரு கழற்சிக்காயளவு ஒரு அவுன்ஸ் முலைப்பாலில் கலக்கி வடிகட்டி இந்த விதமாய் காலை மாலை கொடுத்து வரலாம்.

(9) வேலிப்பருத்தியிலை ரூபாயெடை 1 முடக்கொத்தானிலை ரூபாயெடை 1
வெங்காயம் ,, 1

ஒன்று சேர்த்து வதக்கித் தட்டிப் பிழிந்த சாற்றில் காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(10) காசுக்கட்டி ரூபாயெடை $\frac{1}{4}$ கோரோசனை ரூபாயெடை $\frac{1}{4}$
களிப்பாக்கு ,, $\frac{1}{4}$ சீரகம் ,, $\frac{1}{4}$

ஒன்று சேர்த்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டு மைபோலரைத்து, காலை மாலை ஒரு கழற்சிக்காயளவு 1, 1½-அவுன்ஸ் முலைப்பாலில் கலக்கிக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (11) | தைவேளைவேர் | ரூபாயெடை 1 | செம்முள்ளி | ரூபாயெடை | 1 |
| | பொடுதலை | ,, 1 | வேலிப்பருத்தி | ,, | 1 |
| | மாவுலிங்கப்பட்டை | ,, 1 | எருமைவெண்ணெய் | ,, | 5 |
| | சங்கனிலை | ,, 1 | | | |

ஒன்றாகத்தட்டி வெண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடிகட்டி காலை மாலை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(12) அரைவீசை ஓமத்தை மெல்லிய துணியில் முடிந்து, ஒரு பாத்திரத்தில் பத்து டம்ளர் தண்ணீர்விட்டு முடிச்சுயானது சட்டியின் அடிபாகத்தில் படாதபடி ஒரு நூலில் கட்டித் தொங்கவிட்டு அடுப்பிலேற்றி, தண்ணீர் 5-டம்ளராகச் சுண்டும்வரை தீ எரித்து, அதில் மிதக்கும் தைலத்தை கோழியிறகால் ஒன்றுசேர்த்து எடுத்துக்கொண்டு காலை, மாலை அந்த ஓமத் தைலத்தில் கால் அவுன்சும், தண்ணீர் ஒரு அவுன்சுமாகக் கலந்து கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (13) | மரமஞ்சள் | ரூபாயெடை 3 | சிறுநாகப்பூ | ரூபாயெடை | 3 |
| | கடுக்காய்ப்பூ | ,, 3 | போஸ்தக்காய் | ,, | 3 |
| | அதிவிடயம் | ,, 3 | சடாமாஞ்சில் | ,, | ¾ |

இவற்றை ஒன்றசேர்த்துத் தூள்செய்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-மணி நேரம் ஊறவைத்து, வடித்தத் தண்ணீரில் 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (14) | வாழைப்பூ | ரூபாயெடை 2 | புளியாரை | ரூபாயெடை | 2 |

ஒன்றுசேர்த் திடித்து, பிட்டவிப்பதைப்போல் அவித்துப் பிழிந்த சாற்றில் ஒரு அவுன்சும், தேன் கால் அவுன்சும் ஒன்று சேர்த்துக் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (15) | காட்டாத்திப்பூ | ரூபாயெடை 1 | வெள்ளிலோத்திரம் | ரூபாயெடை | 1 |
| | வில்வப்பழம் | ,, 1 | யானைத் திப்பிலி | ,, | 1 |

ஒன்றாகப் பொடித்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (16) | காட்டாத்திப்பூ | ரூபாயெடை 1 | நன்னாரிவேர் | ரூபாயெடை | 1 |
| | மஞ்சிஷ்டி கிழங்கு | ,, 1 | வெள்ளிலோத்திரம் | ,, | 1 |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன் ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்று வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(17) அதிவிடயத்தைச் சூரணித்து, காலை மாலை $\frac{1}{8}$-ரூபாயெடையாகத் தேனில் கலந்து கொடுத்து வரலாம்.

(18) அதிசார மாத்திரையில் காலைமாலை, ஒரு மாத்திரைவீதம் தேனில் கொடுக்க லாம். லகு அதிசார மாத்திரையில் காலை மாலை $\frac{1}{2}$-மாத்திரைவீதம் கொடுத்து வரலாம். ஜாதிபலாதிச் சூரணம் $\frac{1}{8}$-ரூபாயெடை கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் காண்க.

| | | | |
|---|---|---|---|
| (19) | ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Snlphuric Dil) | டிராம் | $\frac{1}{2}$ |
| | சர்க்கரை (Sugar) | ,, | 1 |
| | டிஞ்சர் கார்டமம் கோ (Tincture Cardamom Co) | ,, | 1 |
| | ஆக்குவா மெந்தாபிப் (Aqua Menthapip) | அவுன்ஸ் | $1\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்து, ஒன்றுமுதல் மூன்றுவயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (20) | பல்விஸ் காட்டிகியூ (Pulvis Catechue) | கிரைன்ஸ் | 10 |
| | பல்விஸ் சின்னமோனி (Pulvis Cinnamoni) | ,, | 10 |

ஒன்று சேர்த்து, 4-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, ஒன்றுமுதல் மூன்றுவயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை, ஒருபாகம் வீதம் தேனில் குழப்பி காச்சலில்லாத அதிசார ரோகத்திற்குக் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (21) | அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) | கிரைன்ஸ் | 9 |
| | சிரப் ரோஸி (Syrup Rosae) | டிராம் | 1 |
| | ஆக்குவா மெந்தாபிப் (Aqua Mnethapip) | அவுன்ஸ் | 1 |

ஒன்றுசேர்த்துக் குலுக்கிக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை, தடவை யொன்றுக்கு ஒரு தேக்கரண்டி யள வாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (22) | ஒலியம் ரெசினி (Oleum Ricini) | டிராம் | 2 |
| | ஒலியம் அமிக்டாலி டல்ஸிஸ் (Oleum Amygdalae Dulcis) | ,, | 2 |
| | சக்காரியம் (Saccharum) | ,, | 2 |
| | கம் அக்கேஷியா (Gum Acacia) | ,, | 1 |
| | ஆக்குவா சின்னமோனி (Aqua Cinnamoni) | அவுன்ஸ் | 3 |

முதலில் ஒலியம் ரெசினியையும், ஒலியம் அமிக்டாலி டல்ஸியையும், கம் அக்கேஷியா சேர்த்துப் பசையாக்கிக்கொண்டு பிறகு மற்றவைகளையும் சேர்த்து, நன்றாய்க் கரைத்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(23) மெக்னிஷியா கார்போனஸ் (Magnesia Carbonas) கிரைன்ஸ் 3
பிஸ்மத் சப்நைட்ரஸ் (Bismuth Subnitras) ,, 5
பல்விஸ் ரூபார்ப் (Pulvis Rhubarb) ,, 3

ஒன்று சேர்த்து, 3-பாகமாகப் பிரித்து, மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயது குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருமுறை, ஒருபாகம் வீதம் தேனில் கலந்து கொடுத்து வரலாம்.

(24) டிஞ்சர் காட்டிகு (Tincture Catechue) துளி 1
பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக் (Pulvis Creta Aromatic) கிரைன்ஸ் 6
ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) துளி 6
தண்ணீர் டிராம் 3

ஒன்று சேர்த்துக் கலந்துகொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(25) சோடா பைகார்ப் (Soda Bicarbe) டிராம் 1
லிக்கர் பிஸ்மத் (Liquor Bismuth) ,, 2
ஆக்குவா கருய் (Aqua Carici) அவுன்ஸ் 2

ஒன்று சேர்த்து நன்ருய்க் குலுக்கிக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

(26) ஆயில் ஒலிவா (Oil Olivae) அவுன்ஸ் 1
ஐயோடைன் (Iodine) கிரைன்ஸ் 20

ஒன்று சேர்த்தரைத்து வெளிப்பிரயோகமாக வயிற்றின்மேல் தடவி வரலாம்.

(27) மிக்ச்சர் ஒலியம் ரெசினி (Mixture Oleum Ricini) டிராம் 4
கிளிசரின் ஆஸிட் கார்பாலிக் (Glycerine Acid Carbolic) துளி 2
டிஞ்சர் காம்பர் கோ (Tincture Champhore Co) ,, 15

ஒன்றுசேர்த்துக் கலந்துகொண்டு 1-முதல், 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(28) மிக்ச்சர் ஒலியம் ரெசினி (Mixture Oleum Ricini) டிராம் 2
கிரியோ சோட் (Creasote) துளி 1
டிஞ்சர் காம்பர் கோ (Tincture Camphore Co) ,, 10
தண்ணீர் அவுன்ஸ் 1

ஒன்றுசேர்த்து 1-முதல், 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருமுறை தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (29) | எக்ஸ்டிராக்ட் ஓபியம் லிக்குட் (Extract Opium Liquid) | துளி | 15 |
| | பெர்ரீ சல்பஸ் (Ferri Sulphus) | கிரைன்ஸ் | 15 |
| | லைக்கர் மாக்னிஷ் (Liquor Magnesa) | அவுன்ஸ் | 2 |
| | சிரப் சிஞ்ஜிபர் (Syrup Zingiber) | ,, | 1 |

ஒன்று சேர்த்து 1-முதல், 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கோருத் தேக்கரண்டிவீதம் கொடுத்து வரலாம்.

அதிசார வயிற்றுப்போருமல்:—

இதை அஜீரண வயிற்றுப்பொருமல், பொருமல் கழிச்சல் என்றும் சொல்லப் படும். அதிசார ரோகத்தில் வயிறு ஊதி, இரைந்து, சப்தத்துடன் மலம் கழியும்; அதிசாரத்தில் காணும் சகல குறிகளும் இதிலும் காணப்படும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | அதிவிடயம் | ரூபாயெடை 1 | மிளகு | ரூபாயெடை | 1 |
| | ஆமையோடு | ,, 1 | பாவட்டையிலை | ,, | 1 |
| | ஓமம் | ,, 1 | வட்டத்திருப்பி | ,, | 1 |
| | சுக்கு | ,, 1 | | | |

ஒன்றுசேர்த்து சுடுதண்ணீர்விட்டு 6-மணி நேரம் மைபோலரைத்து குன்றி மணியவ்வளவு பெரிய மாத்திரைகள்செய்து உலர்த்திக்கொண்டு காலை, மாலை ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | |
|---|---|---|---|
| (2) | பெர்ரீ சல்பஸ் (Ferri Sulphus) | கிரைன்ஸ் | 16 |
| | எக்ஸ்டிராக்ட் ஓபியம் லிக்குட் (Extract Opuim Liquid) | துளி | 15 |
| | லைக்கர் மாக்னிஷியா (Liquor Magnesia) | அவுன்ஸ் | 2 |
| | சிரப் சிஞ்ஜிபர் (Syrup Zingiber) | ,, | 1 |

ஒன்று சேர்த்து 1-முதல், 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | சோடியம் பைகார்ப் (Sodium Bicarbe) | டிராம் | 1 |
| | லைக்கர் பிஸ்மத் (Liquor Bismuth) | ,, | 2 |
| | சிரப் டோலு (Syrup Tolu) | ,, | 2 |
| | ஆக்குவா கரூய் (Aqua Carui) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துக்கொண்டு 1-முதல், 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருத் தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

அஜீரணவயிற்றுப் போருமல்:—

அதிசாரவயிற்றுப் பொருமலென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

அஜீரண வயிற்றோட்டம்:—

அதிசாரமென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

ஆமக்கழிச்சல்:—

ஆமாசயங்களாகிய ஜீரண உருப்புகளும் சிறுகுடல், பெருங்குடல் முதலியவைகளும் அழலைக்கொண்டுவிடுவதால், இந்தக் கழிச்சலேற்படுகிறது. இந்தக் கழிச்சலில் சுரம்காயும்; கை கால்மட்டும் ஜில்லிட்டிருக்கும்; வயிறிரைந்து மலம் கழியும்; சில சமயம் மலத்துடன் இரத்தம் கலந்திருக்கும்; வாந்தியும், அரோசிகமு மேற்படும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | கோரோசனை | ரூபாயெடை $\frac{1}{8}$ | காசுக்கட்டி | ரூபாயெடை $\frac{1}{8}$ |
| | களிப்பாக்கு | ,, ,, | சீரகம் | ,, ,, |

இவற்றை ஒன்றுசேர்த்து எலுமிச்சம்பழச் சாற்றால் மைபோலரைத்து, ஒரு அவுன்ஸ் முலைப்பாலில் கலக்கி காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | ஒலியம் ரெஸினி (Oleum Ricini) | டிராம் | 2 |
| | அக்கேஷியா கம்மி (Acasia Gummi) | ,, | $1\frac{1}{2}$ |
| | ஒலியம் கரியோபில்லம் (Oleum Caryophyllum) | துளி | 2 |
| | சிரப் சிஞ்ஜிபர் (Syrup Zingibar) | டிராம் | 2 |
| | ஆக்கு மெந்தாபிப் (Aqua Menthapip) | அவுன்ஸ் | $1\frac{1}{2}$ |

முதலில், ஒலியம் ரெஸினியையும், ஒலியம் கரியோபில்லத்தையும் ஒன்றுசேர்த்து, அதில் அக்கேஷியா கம்மியைப்போட்டு கிண்டினால் எண்ணெய்ப் பசையற்று எல்லாம் ஒன்று சேர்ந்துவிடும். பின்னர் மற்றவைகளையும் சேர்த்துக் கலந்து, 1-முதல் 3 வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | ஆஸிட் காலிக் (Acid Gallic) | கிரைன்ஸ் | 10 |
| | வைனம் ஒபியம் (Vinum Opium) | துளி | 4 |
| | ஸ்பிரிட் வைனம் ரெக்டிபைட் (Spirit Vinum Rectified) | டிராம் | $1\frac{1}{2}$ |
| | ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | அவுன்ஸ் | $1\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை, தடவை ஒன்றுக்கு ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

## இரத்தக் கழிச்சல்—Dysentery

இதை, இரத்தபேதி, வயிற்றுக் கடுப்பு, வயிற்றுளைவு, கிராணி, கிரகணி என்றெல்லாம் சொல்லுவர். இவ்வியாதி குளிர் காலங்களில் அதிகமாய்ப் பீடிக்கக்கூடியத் தன்மையுடையதாக விருக்கிறது. இவ்வியாதியிலும் பல வகைகளுண்டென்றாலும், பொதுவாக எல்லாவற்றையும், சீதபேதியென்றே கூறலாம்.

குழந்தைகளுக்கு இரண்டாவது பற்கள் முளைக்கும்போது இது சாதாரணமாக உண்டாகலாம். சீதபேதியானது கிருமிகளின் செயற்கையினாலும், திரேகம் மிகுதியும் வெப்பங்கொண்டு விடுவதினாலும், ஆகாரங்களில் சர்க்கரையும், மாவும் அதிகமாக உபயோகிப்பதினாலும், சீனி, வெல்லப்பாகுகளினால் தயாரிக்கப்படும் மிட்டாய்களை எதேஷ்டமாக உட்கொள்ளுவதினாலும் ஏற்படக்கூடியதாக விருக்கிறது.

சீதபேதியிலும், சிறுகுடல், பெருங்குடல் புண்பட்டு அடிக்கடி மலம் கழியும்; கழியும் மலத்துடன், இரத்தம் கலந்தும், சீதமென்றுச் சொல்லப்பட்ட மூக்குச்சளிப்போன்ற பிசுபிசுப்பான வெண்ணிற பதார்த்தம் கலந்துமிருக்கும்; முதலில் ஆசனவாய்க் கடுப்புடன் மலம் கொஞ்சமாகக் கழிந்து பின் தொப்புளையும் அடிவயிற்றையும் பிசைந்து வலித்து, சீதமும் இரத்தமும் விழுகும்; சிலசமயம் மலத்துடன் சீதமும் இரத்தமும், மாமிசம் கழுவிய தண்ணீர்போலும் கலந்து கழிவதுமுண்டு. இதனால் பசி, மந்தம், அரோசிகம் ஏற்படலாம்; நாவில் வெண்ணிற மாவு படிந்திருப்பதுமுண்டு. இவ்வியாதியில் காரம் சேர்க்காத ஆகாரங்களை கொடுத்து வரவேண்டும். தயிர் மோர் இவைகளை ஏதேஷ்டமாகச் சேர்க்கலாம்.

## சிகிச்சை

(1) சீரகம் ரூபாயெடை 3 கொட்டைக்கரந்தை ரூபாயெடை 3

ஒன்று சேர்த்து மைபோலரைத்து கால் ரூபா யவ்வளவு பெரிய பில்லைகளாக்கி பசுநெய்யில் வறுத்து காலை மாலை ஒரு பில்லை வீதம் கொடுத்து வரலாம்.

(2) சீரகம் ரூபாயெடை 1 கடுக்காய்ப்பூ ரூபாயெடை 4
வெங்காயம் ,, 2

ஒன்று சேர்த்து இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து காலையில்மட்டும் $\frac{1}{4}$-ரூபா யெடை சூரணத்தை $1\frac{1}{2}$, 2-அவுன்ஸ் எருமைத் தயிரில் கலக்கிக் கொடுத்து வரலாம்.

(3) சீரகம் ரூபாயெடை 7 சீனுகற்கண்டு ரூபாயெடை 1

முதலில் சீரகத்தை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்துக்கொண்டு பின் கற்கண்டையும் சூரணித்துச் சேர்த்து காலை மாலை அரைரூபாயெடைச் சூரணம் வீதம் பசுநெய்யில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(4) ஒத்தை வெள்ளைப்பூண்டை அதிகமாயெடுத்து, ஒவ்வொன்றிற்கும் தனித் தனியே கறியுப்பை அரைத்துக் கனமாகக் கவசம்செய்து உமிக்காந்தலில் வெதுப்பி யெடுத்து, உப்புக்கவசத்தை நீக்கி வெள்ளைப்பூண்டை மட்டும் அரைத்து, காலையில்மட்டும் கழற்சிக்காய்ப் பிரமாணம் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் எருமைத் தயிரில் கலக்கிக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (5) வெந்தயம் | ரூபாயெடை | 1 | மாதுளம்பழத்தோல் | ரூபாயெடை | 1 |
| நெல்லிவற்றல் | ,, | 1 | கறிவேப்பிலை | ,, | 1 |
| சுண்டைவற்றல் | ,, | 1 | ஓமம் | ,, | 1 |
| மாம்பருப்பு | ,, | 1 | | | |

ஒன்றுசேர்த்து உலர்த்தி இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து காலையில் மட்டும் $\frac{1}{4}$-ரூபாயெடைச் சூரணத்தை எருமைத் தயிரில் கலக்கிக் கொடுத்து வரலாம்.

(6) புளியாரை ரூபாயெடை 3 வாழைப்பூ ரூபாயெடை 3

ஒன்றுசேர்த்து பிட்டவியலாய் அவித்துப் பிழிந்தசாறு அவுன்ஸ் 1, $1\frac{1}{2}$-ல் அரைத் தேக்கரண்டி தேன் சேர்த்து இந்த அளவாகக் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (7) சுக்கு | ரூபாயெடை | 3 | கண்டத்திப்பிலி | ரூபாயெடை | 1 |
| கிராம்பு | ,, | 1 | | | |

ஒன்றுசேர்த்து எருமைத் தயிரில் மைபோலரைத்து சுத்தமான வெள்ளைத் துணிகளில் சிறு சிறு முடிச்சாக முடிந்து, ஒரு சட்டியில் 24-அவுன்ஸ் எருமை மோர்விட்டு அதில் முடிச்சுகளைப்போட்டு எரித்து, முடிச்சுகள் வெந்து மேலே மிதக்கும் சமயம் எடுத்து, அத்துடன் தேன் ரூபாயெடை 1-ம், நெய் ரூபாயெடை $1\frac{1}{2}$ம் சேர்த்துக் குழப்பி, கழற்சிக்காய்ப் பிரமாணமாகக் காலை மாலை கொடுத்து வரலாம்.

(8) மாம்பருப்பு ரூபாயெடை 1 கறிவேப்பிலை ரூபாயெடை 1

ஒன்றுசேர்த்தரைத்துப் பிழிந்தசாற்றில் 4-மணி நேரத்திற் கொருத் தேக்கரண்டிவீதம் கொடுத்து வரலாம்.

(9) மாசிக்காயைப் பொடித்து, நெய்யில் வறுத்துத் தூள்செய்து வைத்துக் கொண்டு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை, 5, 10-கிரைன்ஸ் வீதம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(10) காய்ந்த வில்வப்பழத்தின் ஓடு, ரூபாயெடை மூன்றைப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (11) கடுக்காப்பூ | ரூபாயெடை | 3 | சீரகம் | ரூபாயெடை | 1 |
| வெங்காயம் | ,, | 3 | | | |

ஒன்று சேர்த்து இளவறுப்பாய் வறுத்து, 6 அவுன்ஸ் எருமைத் தயிரில் அரைத்துக் கலக்கி காலையில்மட்டும் 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(12) மாதுளம்பிஞ்சு ரூபாயெடை $\frac{1}{4}$ சீரகம் ரூபாயெடை $\frac{1}{4}$
கொத்தமல்லி ,, $\frac{1}{4}$ கீழ்க்காய்நெல்லிவேர் ,, $\frac{1}{4}$

ஒன்று சேர்த்துச் சுடுதண்ணீர் விட்டரைத்துக் காலை மாலை கழற்சிக்காயளவாகக் கொடுத்து வரலாம். தயிரன்னம் கொடுக்கவும்.

(13) இளநீர்த் தண்ணீர் அவுன்ஸ் 1 சுக்கு ரூபாயெடை $\frac{1}{8}$
எலுமிச்சம்பழச்சாறு ,, 1 சீரகம் ,, ,,
தாழைவிழுதின்சாறு ,, 1

சுக்கையும், சீரகத்தையும் இளவறுப்பாய் வறுத்துத் தூள்செய்து சாற்றுடன் சேர்த்துக் கலந்து, காலை மாலை 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(14) லகுக்கிராணி மாத்திரை; லகு சங்குவடி; அயச்செந்தூரம்; மகா தாளிசப் பத்திரிச்சூரணம்; ராஜ அம்ஸபோடலி மாத்திரை; ஜாதி பலாதிச்சூரணம் முதலியவைகளிலொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(15) பல்விஸ் கைநோ (Pulvis Kino) கிரைன்ஸ் 6
பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக்கம் ஒபியம் (Pulvis Creta Aromaticcum Opium) ,, 9
பிஸ்மத் சப்நைட்ரஸ் (Bismuth Subnitras) ,, 6

ஒன்று சேர்த்து, 3-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற் கொருபாகம் வீதம், தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(16) டோவர்ஸ் பவுடர் (Dover's Powder) கிரைன்ஸ் $1\frac{1}{2}$
பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக் (Pulvis Creta Aromatic) ,, 9

ஒன்று சேர்த்து, 3-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணிநேரத்திற் கொருதடவை ஒரு பாகத்தை தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(17) மன்னு ஆப்டிமா (Mannae Optimae) கிரைன்ஸ் 15
சிரப் சென்னு (Syrup Sennae) துளி 15
சிரப் டோலு (Syrup Tolu) ,, 15
லிக்கர் மாக்னிஷி கார்போனஸ் (Liquor Magnesi Carbonas) டிராம் 4

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (18) | டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | துளி | 4 |
| | அக்கேஷியா கம்மி (Acasia Gummi) | அவுன்ஸ் | ½ |
| | தண்ணீர் | ,, | 1 |

ஒன்று சேர்த்து, அதிகமான இரத்தமும் சீதமும் கழிவதற்கு பீச்சாங் குழலால் ஆசனத்தின் வழியே சிரஞ் செய்யலாம்.

**உஷ்ணக் கழிச்சல்:—**

வெப்புக்கழிச்சலென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**கணைக் கழிச்சல்:—**

இது கணைரோகத்தி லேற்படக்கூடிய கழிச்சல் வியாதி. இதிலும் கணை ரோகக் குறிகளுமிருக்கும். சுரம் இலேசாகக்காயும்; கை கால் குளிரும்; மலம் மாமிசம் சழுவியத் தண்ணீர்ப்போன்று சிறிது கருப்பாயும், மாமிசம் கரைந்ததுபோலும் கழியும். சில சமயங்களில் மலமானது தயிர்க் கட்டிகளைப்போலும், சீதம் கலந்தும் கழிவதுண்டு.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | வெந்தயம் | ரூபாயெடை | ¾ | வெங்காயம் | ரூபாயெடை | 5 |
| | சீரகம் | ,, | ½ | கருவேலம் ஈர்க்கு | ,, | 1 |

இவற்றைப் பொடித்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், காலை மாலை 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | முத்திருக்கஞ்சாறு | அவுன்ஸ் | 32 | ஓரிலைத்தாமரைச்சாறு | அவுன்ஸ் | 32 |
| | சாரணத்திச்சாறு | ,, | 32 | செந்நெருஞ்சில்சாறு | ,, | 24 |
| | முடக்கொத்தான்சாறு | ,, | 32 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 32 |
| | மூக்குரெட்டைச்சாறு | ,, | 32 | மயிலிறகு | ரூபாயெடை | 4 |

ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து, காலையில் மட்டும் 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) | நாரத்தை ஈர்க்கு | ரூபாயெடை | 1 | இலந்தை ஈர்க்கு | ரூபாயெடை | 1 |
| | நெல்லி ஈர்க்கு | ,, | 1 | கணைப்பூண்டு | ,, | 1 |
| | புளியீர்க்கு | ,, | 1 | | | |

ஒன்றுசேர்த்துப் பொடித்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை, 1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | ஆஸிட் காலிக் (Acid Gallic) | கிரைன்ஸ் | 10 |
| | வைனம் ஓபியம் (Vinum Opuim) | துளி | 4 |

| | | |
|---|---|---|
| ஸ்பிரிட் வைனம் ரெக்டிபைட் (Spirit Vinum Rectified) | டிராம் | 1½ |
| ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்து 1-முதல், 3 வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

### கழிச்சலு மிருமலும்:—

சில சமயங்களில் குழந்தைகளுக்கு வயிற்றோட்டத்துடன் இருமலு மிருப்பதுண்டு. எந்தவிதமான வயிற்றோட்டத்துடனு மிருமலு மிருந்தால் கீழ்கண்ட மருந்துகள் பிரயோசனமுள்ளதாக விருக்கும்.

#### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | கடுக்காய் | ரூபாயெடை 1 | சிறுதேக்கு | ரூபாயெடை | 1 |
| | நெல்லிக்காய் | ,, 1 | கோஷ்டம் | ,, | 1 |
| | தான்றிக்காய் | ,, 1 | கோரைக்கிழங்கு | ,, | 1 |
| | சுக்கு | ,, 1 | ஆடுதின்னாப்பாலையிலை | ,, | 1 |
| | வசம்பு | ,, 1 | ஆடுதின்னாப்பாலைவேர் | ,, | 1 |
| | மிளகு | ,, 1 | இன்புறாயிலைச்சாறு | அவுன்ஸ் | 32 |
| | அதிமதுரம் | ,, 1 | பசுநெய் | ,, | 24 |

ஒன்றுசேர்த்துப் பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | எருமைவெண்ணெய் | ரூபாயெடை 5 | வேலிப்பருத்திச்சாறு | அவுன்ஸ் | 5 |
| | | | கருஞ்சீரகம் | ரூபாயெடை | 5 |

ஒன்றுசேர்த்துக் காய்ச்சி வடித்து காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | பெப்ஸின் (Pepsin) | கிரைன் | 1 |
| | ஆஸிட் ஐட்ரோகுளோரிக் டில் (Acid Hydrochloric Dil) | துளி | 3 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | ,, | 30 |
| | இன்பியூஷன் குவாஷியா (Infusion Quassiae) | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து 1-முதல், 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப் பின் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

### கழிச்சலும் வாந்தியும்:—

சில சமயம் குழந்தைகளுக் கேற்படும் வயிற்றோட்டத்துடன் வாந்தியு மிருப்பதுண்டு. வாந்தி இலேசாக விருந்தால் தனிப்பட்ட சிகிச்சைகள் ஒன்றும் தேவையில்லை. வாந்தி யதிகமாக விருக்கும்பக்ஷத்தில் சிகிச்சை செய்யவேண்டிய தவசியமாகும்.

### சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) அரசம்பட்டை | ரூபாயெடை 1 | பருத்திப்பிஞ்சு | ரூபாயெடை | 1 |
| அத்திப்பட்டை | ,, 1 | அத்திக்கொழுந்து | ,, | 1 |
| நெல்லிப்பட்டை | ,, 1 | பருத்திவிரைப்பருப்பு | ,, | 1 |
| மாம்பட்டை | ,, 1 | | | |

ஒன்று சேர்த்திடித்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

வயிற்றோட்டத்திற்குண்டான மருந்துகளி லொன்றையும் கொடுத்து வரலாம்.

## கழிச்சல்:—

வயிற்றோட்டமென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## சலக் கழிச்சல்:—

அடிக்கடி மலம் தண்ணீராகவே கழியும்; சில சமயம், மலம் கலந்திருக்கும் ஆகாரம் தின்றவுடன் மலம் கழிந்தால், தின்ற ஆகாரம் உருக்குலையாமல் தண்ணீருடன் கலந்து வெளிப்படும்.

### சிகிச்சை

(1) அத்திப்பால் ரூபாயெடை ½ வெள்ளைக்குன்றிமணிபருப்பு
புளியங்கொட்டை ரூபாயெடை ½
மேற்றோல் ,, ½

ஒன்று சேர்த்து மைபோலரைத்து, காலை மாலை ஒரு கழற்சிக்காயளவு சமன் எருமை வெண்ணெயுடன் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(2) ஒரு முத்தின சாதிக்காயை துளைத்து, அதில் ஒரு மிளகளவு அபினியைச் செலுத்தி, முழு சாதிக்காய்க்கும், அரைத்த மஞ்சளால் ஒரு விரல் கனத்துக்குக் கவசம் செய்து, உமிக்காந்தலில் போட்டுப் புரட்டி மஞ்சள் தீய்ந்தது மெடுத்து, மஞ்சட்கரியை நீக்கிவிட்டு, சாதிக்காயையும், அபினையும் அப்படியே முலைப்பால் விட்டு 2-மணிநேரம் மைபோலரைத்து, கடுகுக்குஞ் சற்றுப் பெரிய மாத்திரைகள் செய்து, காலை மாலை ஒரு மாத்திரை முலைப் பாலில் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (3) மிக்ச்சர் ஓலியம் ரெஸினி (Mixture Oleum Ricini) | டிராம் | 2 |
| லிக்கர் பிஸ்மத் (Liquor Bismuth) | துளி | 15 |
| டிஞ்சர் ஓபியம் (Tincture Opuim) | ,, | 3 |
| ஆக்குவா மெந்தாபிப் (Aqua Menthapip) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நோத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | எக்ஸ்ட்ராக்ட் ஓபியம் லிக்குட் (Extract Opium Liquid) | துளி | 20 |
| | பெர்ரீ சல்பஸ் (Fern Sulphus) | கிரைன்ஸ் | 16 |
| | லைக்கர் மாக்கினிஷியா (Liquor Magnesia) | அவுன்ஸ் | 2 |
| | சிரப் சிஞ்ஜிபர் (Syrup Zingiber) | ,, | 1 |

ஒன்றுசேர்ந்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நோத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## சன்னிபாத சுரத்திலுண்டாகும் கழிச்சல்—Diarrhoea in Typhoids

சன்னிபாத சுரத்தில் வயிற்றோட்ட மிருப்பது இயற்கையாகும். மலம் அடிக்கடி குழம்பாகவும், கெட்ட நாற்றத்துடனும் கழியும். சில சமயம் மாமிசம் கழுவியத் தண்ணீர்போலவும் கழியும். மலம் அதிகமாய்க் கழிந்தால், மலப் பிரவர்த்தியை சமனப் படுத்த வேண்டும்.

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | எக்ஸ்ட்ராக்ட் ஹெமாடாக்ஸிலி (Extract Hematoxyli) | கிரைன்ஸ் | 20 |
| | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | துளி | 25 |
| | வைனம் ஓபியம் (Vinum Opium) | ,, | 15 |
| | இன்பியூஷன் கலம்பா (Infusion Calumbae) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நோத்திற் கொரு தேக் கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

## சீத பேதி:—

இரத்தக் கழிச்ச லென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## சுரக்கழிச்சல்—Febrile Diarrhoea

திரேகோஷ்ணம் அதிகப்பட்டு, அடித் தொடையும், கீல்களும், புண் வலியாக விருக்கும். உடலாதியந்தமு மெரிச்சலுண்டா யிருக்கும். ஓயாத வயிற்றோட்டமும், மயக்கமு முண்டாகும். மலம் குழம்பாகவும், தண்ணீராகவும் கழியும். இருமலும், நாவரட்சியும், நீரடைப்புங் காணும்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | அத்திபட்டை | ரூபாயெடை | 10 | அதிவிடையம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| | மாதுளங் கொழுந்து | ,, | 10 | அபினி | ,, | $\frac{1}{4}$ |
| | சாதிக்காய் | ,, | $\frac{1}{4}$ | சீரகம் | ,, | $\frac{1}{4}$ |
| | சாதிபத்திரி | ,, | $\frac{1}{4}$ | மிளகு | ,, | $\frac{1}{4}$ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கடுக்காய் | ,, | $\frac{1}{4}$ | கருஞ்சீரகம் | ,, | $\frac{1}{4}$ |
| தான்றிக்காய் | ,, | $\frac{3}{4}$ | ஏலம் | ,, | $\frac{1}{2}$ |

முதலில், அத்திப்பட்டையையும், மாதுளங் கொழுந்தையும் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சி ஒரு மங்கு பாத்திரத்தில் வடிகட்டிவைத்துக்கொண்டு, இதர சரக்குகளை மைபோலரைத்து பில்லையாகத்தட்டி அந்த பில்லையின் இருபுறமும் அரசனிலையால் சுற்றி நூலால் கட்டி, ஒரு புதுமண்சட்டியை அடுப்பின்மேல் கவிழ்த்து, தீயெரித்து, அந்தப் பில்லையைச் சட்டியின்மேல் வைத்து தீய்ந்துபோகாதபடி, கஷாயத்தில் கொஞ்சம் கொஞ்சமாகவிட்டு ஒரு மணிநேரம் வேகவைத்தெடுத்து பின் இலையை நீக்கி, மறுபடியும் அந்தக் கஷாயத்தை விட்டு மைபோலரைத்து, பட்டாணிக் கடலையளவாக மாத்திரைகள் செய்து உலர்த்தி, காலையில் எருமைத்தயிரை வடிகட்டிய தண்ணீர் 1-அவுன்ஸில் ஒரு மாத்திரைவீதமும், சாயந்திரத்தில் 1-அவுன்ஸ் சுடுதண்ணீரில் ஒருமாத்திரை வீதமும் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) எக்ஸ்ட்ராக்ட் ஹெமாடாக்ஸிலி (Extract Hematoxyli) | கிரைன்ஸ் | 20 |
| வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | துளி | 25 |
| வைனம் ஓபியம் (Vinum Opium) | ,, | 15 |
| இன்பியூஷன் கலம்பா (Infusion Calumbae) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துக்கொண்டு 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து இடை நேரங்களில் சுரத்தை மட்டுப்படுத்தும்படியான சுரப் பொதுமருந்துகளி லொன்றையும் கொடுத்து வரலாம்.

## தோஷக் கழிச்சல்:—

தோஷரோகத்தில் சாதாரணமாகக் கழிச்சலுமிருக்கு மென்றாலும், அதிகமானக் கழிச்சலேற்பட்டால், தோஷரோகத்தின் வீரியத்தை யதிகரிக்கச் செய்யுமாகையால், கழிச்சல் அதிகமாயிருந்தால் மட்டுப்படுத்த வேண்டியது.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) மஞ்சள் | ரூபாயெடை | 1 | கோரைக்கிழங்கு | ரூபாயெடை | 1 |
| வசம்பு | ,, | 1 | தேவதாரு | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | கடுக்காய் | ,, | 1 |

ஒன்று சேர்த்து, பொடுதலைச்சாற்றால் மைபோலரைத்து, பட்டாணிக் கடலையவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக்கொண்டு, காலை மாலை ஒரு மாத்திரை வீதம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | கால்ஷி பாஸ்பஸ் (Calcii Phosphas) | கிரைன்ஸ் | 9 |
| | கம் அக்கேஷியா (Gum Acasia) | ,, | 15 |
| | சிம்பிள் சிரப் (Simple Syrup) | துளி | 45 |
| | தண்ணீர் | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | டிஞ்சர் காஸ்காரில்லா (Tincture Cascarillae) | துளி | 25 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 1 |
| | கம் அக்கேஷியா (Gum Acasia) | கிரைன்ஸ் | 30 |
| | தண்ணீர் | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை, ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## நாள்பட்டக் கழிச்சல்—Chronic Diarrhoea

விடாக் கழிச்சலென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## நீர்க் கழிச்சல்:—

சலக் கழிச்சலென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## பச்சிலைச்சாறுபோல் கழிதல்—Green Motion Diarrhoea

குழந்தைகள் பச்சிலையைக் கசக்கிப் பிழிந்த சாறுபோலவே கழிவதுண்டு. மலம் தண்ணீராகவும், பச்சையாகவும், நுரைக் கலந்துமிருக்கும்; மலம் கழிக்கும்போது சப்தமுண்டாகும்; இது தோஷ ரோகத்தினாலாவது, கணை ரோகத்தினாலாவது யேற்படலாம்.

### சிகிச்சை

(1) அதிமதுரம் ரூபாயெடை ½ சகஸ்திரபேதி ரூபாயெடை ½
ஏலம் ,, ½

ஒன்று சேர்த்து, 2-அவுன்ஸ் நீராகாரம் (பழயசாதத்தின் நீர்) விட்டு அரைத்துக் கலக்கி காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | ஆஸிட் லாக்டிக் (Acid Lactic) | துளி | 18 |
| | கிளிசரின் (Glycerine) | அவுன்ஸ் | 1 |
| | தண்ணீர் | டிராம் | 6 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 2-மணி நேரத்திற் கொருதரம், ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | துளி | 6 |
| | பெர்ரீ சல்பஸ் (Ferri Sulphus) | கிரைன்ஸ் | 4 |

| | | |
|---|---|---|
| சிரப் சிஞ்ஜிபர் (Syrup Zingiber) | டிராம் | 1 |
| லிக்கர் மாக்னிஷி கார்போனஸ் (Liquor Magnesi Carbonas) | ,, | 3 |

ஒன்றுசேர்த்து 1-முதல், 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## பலவிதமாய்க் கழிதல்—Polychromatic Diarrhoea

குழந்தைகளுக் கேற்படும் கழிச்சலில் இது ஒரு வகையானது. சில சமயம் மலம் தண்ணீராகவும், மாவு கரைத்ததைப்போல் வெண்மையாகவும், நுரையாகவும், மஞ்சளாகவும், முட்டையை உடைத்து ஊற்றியதைப்போலும், கழிவதுண்டு. இந்தக் கழிச்சல் அநேகமாக தோஷவியாதியி லேற்படுவதென்றாலும், க்ஷயரோகத்திலும், மாந்தரோகத்திலும் இந்தக் கழிச்சலிருப்பதுண்டு. குழந்தைகள் திரேகம் க்ஷீணிக்கும்; திரேகம் கதகதப்பாகவு மிருக்கும்; நாவரண்டு கண்கள் குழிவிழுந்திருக்கும்.

### சிகிச்சை

(1)

| | | | | |
|---|---|---|---|---|
| வெங்காயச்சாறு | அவுன்ஸ் 1 | அதிமதுரம் | ரூபாயெடை | 1 |
| பருத்திபிஞ்சுச்சாறு | ,, 1 | குப்பைக்கீரை | ,, | 1 |
| அரசம்பட்டைச்சாறு | ,, 1 | | | |

குப்பைக்கீரையையும், அதிமதுரத்தையும் ஒன்றுசேர்த்து சாற்றைவிட்டரைத்து காலை மாலை ஒரு கழற்சிக்காயளவு 2-அவுன்ஸ் வெள்ளாட்டுப் பாலில் கரைத்து வடிகட்டிக் கொடுத்து வரலாம்.

(2)

| | | |
|---|---|---|
| சோடியம் பைகார்ப் (Soduim Bicarb) | கிரைன்ஸ் | 10 |
| பல்விஸ் ரீயை (Pulvis Rhei) | ,, | 6 |
| ஆக்குவா அனிதி (Aqua Anithi) | டிராம் | 4 |

ஒன்றுசேர்த்து 1-முதல், 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொருமுறை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## பல் முளைக்கும்போதுண்டாகும் கழிச்சல்—Diarrhoea in Dentition

குழந்தைகளுக்கு முதற் பல் முளைக்கும்போதும், இரண்டாம்பல் முளைக்கும் போதும் வயிற்றோட்டம் காண்பதுண்டு. அடிக்கடி அஜீரணக் கழிச்சலைப் போல் மலம் தண்ணீராயும், குழம்பாயும் கழியும்.

### சிகிச்சை

(1) வாழைப்பூவையும், புளியாரையையும் சமமாக இடித்து, பிட்டவியலாக அவித்து பிழிந்தெடுத்த சாற்றில் காலை மாலை ஒரு அவுன்ஸ் சாற்றில் ஒரு தேக்கரண்டி தேன் சேர்த்துக் கொடுத்து வரலாம்.

(2) பிஸ்மத் கார்போனஸ் (Bismuth Carbonas) கிரைன்ஸ் 12
சாலல் (Salol) ,, 3
பல்விஸ் டிரககந் கோ (Pulvis Tragacanth Co) ,, 18
சிரப் ஆரண்டி (Syrup Auranti) டிராம் 1
ஆக்குவா அனித்தி (Aqua Antihi) ,, 5

ஒன்று சேர்த்து, 3-மணி நேரத்திற்கொருத் தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

(3) பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) கிரைன்ஸ் 10
சிரப் டோலு (Syrup Tolu) டிராம் $1\frac{1}{2}$
ஆக்குவா அனித்தி (Aqua Anithi) ,, 5

ஒன்று சேர்த்து, 4-மணி நேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

பால்போற் கழிதல்:—

குழந்தைகளின் ஆகாரக் கேடுகளினால், பாற்போல் கழிவதேற்படலாம். மலம் அடிக்கடி மாவைக்கரைத்ததைப்போல் வெண்ணிறமாகக் கழியும்.

சிகிச்சை

(1) பெருந்தும்பையிலை ஒருபிடி கஸ்தூரிமஞ்சள் ரூபாயெடை $\frac{1}{8}$
பிரண்டையிலை ,, கருஞ்சீரகம் ,, $\frac{1}{8}$
கோரோசனை ரூபாயெடை $\frac{1}{8}$

முதலில் பெருந்தும்பை யிலையையும், பிரண்டை யிலையையும் முலைப் பால் விட்டிடித்துப் பிழிந்த சாறு அவன்ஸ் 1, $1\frac{1}{2}$-ல் மூன்று சரக்கையும் சேர்த்து பொடித்த சூரணம் ரூபாயெடை $\frac{1}{8}$-போட்டுக் கலக்கி காலை மாலை கொடுத்து வரலாம்.

(2) டிஞ்சர் ரீயை கோ (Tincture Rhei Co) துளி 20
அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) கிரைன்ஸ் 8
சோடா சாலிஸிலஸ் (Soda Salycilas) ,, 6
சிரப் சிம்பிள் (Syrup Simple) துளி 20
ஆக்குவா அனிஸி (Aqua Anisi) அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 2-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக் கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

போருமற் கழிச்சல்:—

அதிசார வயிற்றுப் பொருமலென்றத் தலைப்பின் கீழ் பார்க்கவும்.

போருமற் வயிற் றோட்டம்:—

அதிசார வயிற்றுப் பொருமலென்றத் தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**மாந்தக் கழிச்சல்:—**

மாந்தரோகத்திலேற்படும் கழிச்சலில், மலம் பலவிதமாயிருக்கும்; சில சமயம் நுரையாகவும், குழம்பாகவும், தண்ணீராகவும், பாசிபோலும், முட்டை வெண்கருவைப்போலு மிருக்கும்; திரேகோஷ்ணம் மிகுதிப்பட்டிருக்கும். உள்ளங்கை, உள்ளங்கால் இவற்றில் குழிவிழுந்து இழுக்கும். வாய் உலர்ந்து குரல் கம்மிவிடும்; வாந்தியும் மயக்கமுமுண்டாகும்.

**சிகிச்சை.**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | ஓமம் | ரூபாயெடை | $1\frac{1}{2}$ | கடுக்காய் | ரூபாயெடை | 5 |
| | சுக்கு | ,, | $1\frac{1}{2}$ | வசம்பு | ,, | 1 |
| | மிளகு | ,, | $1\frac{1}{2}$ | சாரணத்திவேர் | ,, | 2 |
| | திப்பிலி | ,, | $1\frac{1}{2}$ | வேலிப்பருத்தியிலை | ,, | 1 |
| | வெள்ளைப்பூண்டு | ,, | $1\frac{1}{2}$ | பொடுதலைக்கொழுந்து | ,, | 1 |
| | பெருங்காயம் | ,, | $1\frac{1}{2}$ | பெருந்தும்பையிலை | ,, | 1 |
| | கருஞ்சீரகம் | ,, | $1\frac{1}{2}$ | | | |

இவற்றையெல்லாம் ஒன்று சேர்த்து, இளவறுப்பாய் வறுத்து பொடுதலைச் சாற்றால் ஒருமணிநேரமும்; பெருந்தும்பைச் சாற்றால் 2-மணி நேரமும், அரைத்து, சுண்டைக்காயளவாக மாத்திரைகளாகச் செய்து உலர்த்திக்கொண்டு, காலை மாலை ஒரு மாத்திரைவீதம் சுடுதண்ணீரில் கரைத்துக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | வேலிப்பருத்தியிலை | ஒருபிடி | அகத்திப்பழுப்பு | | ஒருபிடி |
| | குப்பைமேனியிலை | ,, | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| | நைவேளையிலை | ,, | வசம்பு | ,, | $\frac{1}{2}$ |
| | நாய்வேளையிலை | ,, | | | |

ஒன்று சேர்த்துத் தட்டிப்பிழிந்த சாற்றில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் உள்ளுக்கும் கொடுத்து உடம்பிலும் பூசிவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | டிஞ்சர் காட்டிகியூ (Tincture Catechu) | துளி | 15 |
| | பல்விஸ் கிரீட்டா அரோமாட்டிக் (Pulvis Creta Aromatic) | கிரைன்ஸ் | 6 |
| | ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chlorofor n) | துளி | 6 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | மெக்னிஷியம் கார்போனஸ் (Magnesium Carbonas) | கிரைன்ஸ் | 3 |
| | பிஸ்மத் சப்நைட்ரஸ் (Bismuth Subnitras) | ,, | $4\frac{1}{2}$ |
| | பல்விஸ் ரூபார்ப் (Pulvis Rhubarb) | ,, | 3 |

ஒன்று சேர்த்து, 3-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக்குழந்தைகளுக்கு 4-மணிநேரத்திற்கொருபாகம், தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

## முட்டை உடைத்ததைப்போல் கழிதல்:—

இக்கழிச்சல் அநேகமாய் தோஷரோகத்தில்தான் ஏற்படலாம். கழியும் மலமானது, முட்டையின் வெள்ளைக் கருவைப்போன்று, வழுவழுப்பாகவும்' கொக்கின் மலம்போன்றுமிருக்கும்.

### சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) அவரையிலை | ஒருபிடி | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | 1 |
| வேலிப்பருத்தியிலை | ,, | எருமைவெண்ணெய் | ,, | 5 |

ஒன்று சேர்த்து, வெண்ணெயில் போட்டு, இலைகள் வறுபட்டதும் நெய்யை வடித்து, காலை மாலை ஒரு அவுன்ஸ் முலைப்பாலுடன் ஒரு தேக்கரண்டி நெய் சேர்த்துக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | துளி | 8 |
| பெர்ரீ சல்பஸ் (Ferri Sulphus) | கிரைன்ஸ் | 4 |
| சிரப் சிஞ்சிபர் (Syrup Zingiber) | டிராம் | 1 |
| லிக்கர் மாக்னிஷியா கார்போனஸ் (Liquor Magnesia Carbonas) | ,, | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (3) * டிஞ்சர் நக்ஸ் வாமிகா (Tinctrue Nux Vamica) | துளி | 3 |
| சோடா பைகார்ப் (Soda Bicarb) | கிரைன்ஸ் | 6 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 1 |
| இன்பியூஷன் ஜென்ஷன் கோ (Infusion Gention Co) | ,, | 3 |

ஒன்றுசேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டிவீதம் கொடுத்து வரலாம்.

## வயிற்றுவலியுடன் வயிற்றோட்டம்—Colic Diarrhoea

ஜீரணியாத ஆகாரம் வயிற்றிலிருந்து புளிப்பேறி யிருந்தாலும், வயிற்றுள் நாக்குப்பூச்சிகள் விசேஷித்திருந்தாலும், ஜீரணிக்கக்கூடாத கல், மண் போன்ற இதர பொருட்கள் வயிற்றுள்ளிருந்தாலும், வயிற்றோட்டமும், வயிற்றுவலியு முண்டாகலாம். திரேகத்தில் அதிக உஷ்ணம் யேற்பட்டிருந்தாலும், வயிற்றுவலியோடு வயிற்றோட்டமு முண்டாகும்.

ஜீரணியாத ஆகாரம் வயிற்றுள்ளிருந்து புளிப்பேறியதானல் வயிறு பொருமி வயிற்றை இலேசாகப் பிசைந்து வலித்து இரைச்சலுடன் மலம் கழியும்

* விஷமானது; ஜாக்கிரதையாக உபயோகிக்க வேண்டும்.

மலம் கழிந்ததும் வயிற்றுவலி நின்றுவிடும். இவ்விதமாகவே ஒவ்வொரு தடவையும் மலம் கழியும்போது வயிற்றுவலி யுண்டாகும்.

நாக்குப்பூச்சி, கீரைப்பூச்சி இவைகள் வயிற்றுள் விசேஷித்துவிட்டால் மெது மெதுவாக இரைப்பையிலும் ஏறி, அவற்றின் வாயிலிருந்து கசியும் ஒருவிதப் பதார்த்தத்தினால் வயிற்ரோட்டத்தை யுண்டுபண்ணும். கிருமிகளாலுண்டாகும் வயிற்ரோட்டத்தில் ஒக்காளமு மிருக்கும். கிருமிகள் ஒன்றுசேர்ந்து குடலில் சுருண்டு புரளுவதினால் வயிற்றைச்சுருட்டி இழுத்து வலியுண்டாகிறது. இந்த வயிற்ரோட்டத்தில் மலம் அடிக்கடி கழிந்தாலும், வயிற்றுவலிமட்டும் இருந்துகொண்டே யிருக்கும். சிலசமயம் மலத்துடன் நாக்குப்பூச்சிகளும், கீரைப்பூச்சிகளும் விழுவதுமுண்டு.

கல், மண் போன்ற ஜீரணிக்கக்கூடாத இதரப் பதார்த்தங்கள் வயிற்றுள் ளிருக்குமானால், வயிற்றுப்பிசமில்லாமலே வயிறு நிறைந்திருப்பதைப் போலும், கல்போலு மிருக்கும்; மலம் தண்ணீராய்க் கழியும்; வயிற்றில் சிறு வலியிருக்கும்.

காங்கையினால் வயிற்றுவலியும், வயிற்ரோட்டமு மேற்பட்டால், வயிற்றைப் பிசைத்து வலித்து, ஆசனவாய் கடுத்து புருபுருவென்ற சப்தத்துடன் மலம் கபிலநிறமாக நுரைக்கலந்து கழியும்; அடிக்கடி வயிற்றில் வலியுண்டாகி மலம் குழம்பாகவே கழியும்; ஆசனவாய் அதிகம் கடுக்கும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) அதிவிடயம் | ரூபாயெடை | ½ | கோரைக்கிழங்கு | ரூபாயெடை | ½ |
| தேவதாரு | ,, | ½ | மிளகு | ,, | ½ |
| வட்டத்திருப்பி | ,, | ½ | வெட்பாலையரிசி | ,, | ½ |
| வாய்விளங்கம் | ,, | ½ | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) ஒலியம் ரெசினி (Oleum Ricini) | டிராம் | 2 |
| ஒலியம் கரியோபில்லம் (Oleum Caryophyllum) | துளி | 3 |
| கம் அக்கேஷியா (Gum Acasia) | டிராம் | 1¼ |
| சிரப் சிஞ்ஜிபர் (Syrup Zingiber) | ,, | 2 |
| ஆக்குவா மெந்தா பிப் (Aqua Mentha Pip) | அவுன்ஸ் | 1 |

முதலில் ஒலியம் ரெசினியையும், ஒலியம் கரியோபில்லத்தையும், கம் அக்கேஷியா சேர்த்து அரைத்துக்கொண்டு பின் மற்றவைகளைச் சேர்த்துக் கலக்கி, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## விடாக் கழிச்சல்—Chronic Diarrhoea

இது நாட்பட்ட கழிச்சல். கழிச்சலுக்கு சிகிச்சைகள் செய்தும் நிற்காமல் போய்க் கொண்டிருந்தாலும், அற்பமாக நினைத்து சிகிச்சை ஒன்றும் செய்யாமல் நீடித்த நாட்களாக வயிற்றோட்டம் இருந்துவந்தாலும் விடாக் கழிச்சலென்று சொல்லப்படும்.

### சிகிச்சை

(1) ஒரு முற்றிய சாதிக்காயைத் துளைத்து, அதனுள் ஒரு குன்றிமணி யவ்வளவு அபினியைச் செலுத்தி, மஞ்சளை யரைத்து முழு சாதிக்காய்க்கும் ஒரு விரல் கனத்தில் கவசம்செய்து உமிக்காந்தலில் போட்டுப் புரட்டி, மஞ்சள் தீய்ந்தவுடன் எடுத்து, மஞ்சள்கரியை போக்கிவிட்டு, சாதிக்காயையும், அபினியையும் ஒன்றாக முலைப்பால்விட்டு ஒருமணி நேரம் மைபோலரைத்து, கடுகவவளவு பெரிய மாத்திரைகள் செய்து காலை மாலை ஒரு மாத்திரை வீதம் முலைப்பாலில் கொடுத்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிவிடயம் | ரூபாயெடை | 1 | வெட்பாலைவிரை | ரூபாயெடை | 1 |
| சுக்கு | ,, | 1 | கொத்தமல்லி | ,, | 1 |
| சீமைகிலவேம்பு | ,, | 1 | சீந்தில்தண்டு | ,, | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 1 | தாமரைவளையம் | ,, | 1 |
| வில்வப்பிஞ்சு | ,, | 1 | வெட்டிவேர் | ,, | 1 |
| குருவேர் | ,, | 1 | செஞ்சந்தனம் | ,, | 1 |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு அவுன்ஸ்வீதம் நாள் ஒன்றுக்கு 3-வேளைக் கொடுத்து வரலாம்.

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| காச்சுக்கட்டி | ரூபாயெடை | $\frac{1}{4}$ | கோரோசனை | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| களிப்பாக்கு | ,, | $\frac{1}{4}$ | சீரகம் | ,, | $\frac{1}{4}$ |

ஒன்று சேர்த்து எலுமிச்சம்பழச் சாற்றால் மைபோலரைத்து காலை மாலை கழற்சிக்காயளவு முலைப்பாலில் கலந்து கொடுத்து வரலாம்.

(4) அதிசார மாத்திரை; லகு அதிசார மாத்திரை; லகு கட்டுவாங்க மாத்திரை; பயிரவவடி; ஜாதிபலாதிச் சூரணம்; அயச்செந்தூரம்; மகா தாளிசபத்திரிச் சூரணம்; ராஜ அம்ஸபோடலி மாத்திரை; முதலியவைகளிலொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(5)

| | | |
|---|---|---|
| எக்ஸ்ட்ராக்ட் ஹெமாடாக்ஸ்லி (Extract Hematoxly) | கிரைன்ஸ் | 20 |
| வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | துளி | 25 |
| வைனம் ஓபியம் (Vinum Opium) | ,, | 15 |
| ஆக்குவா சின்னமோனி (Aqua Cinnamoni) | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | ஆஸிட் காலிக் (Acid Gallic) | கிரைன்ஸ் | 10 |
| | வைனம் ஓபியம் (Vinum Opium) | துளி | 8 |
| | ஸ்பிரிட் வைனம் ரெக்டிபைட் (Spirit Vinum Rectified) | டிராம் | 1½ |
| | ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (7) | டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | துளி | 8 |
| | பெர்ரீ சல்பஸ் (Ferri Snlphus) | கிரைன்ஸ் | 4 |
| | சிரப் சிஞ்ஜிபர் (Syrup Zingiber) | டிராம் | 1 |
| | லிக்கர் மாக்னிஷி கார்போனஸ் (Liquor Magnesi Carbonas) | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்துவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (8) | சோடியம் பைகார்போனஸ் (Sodium Bicarbonas) | கிரைன்ஸ் | 20 |
| | லிக்கர் பிஸ்மத் (Liquor Bismuth) | டிராம் | 2 |
| | * டிஞ்சர் நாக்ஸ் வாமிகா (Tincture Nux Vamica) | துளி | 13 |
| | டிஞ்சர் கார்டமம் கோ (Tincture Cardamom Co) | டிராம் | 1 |
| | லிக்கர் மார்பைன் ஐட்ரோகுளோரைட் (Liquor Marphin Hydrochloride) | துளி | 4 |
| | ஆஸிட் ஐட்ரோசினியாக் டில் (Acid Hydrocyniac Dil) | ,, | 5 |
| | ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | அவுன்ஸ் | 2 |

ஒன்றுசேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## வெப்புக் கழிச்சல்—Febrile Diarrhoea

இது உஷ்ணத்தினாலேற்படும் கழிச்சல். தேகம் மிகுதியும் உஷ்ணமடைந்து விடுவதினால், குடல்களிலுள்ள வழுவழுப்பான பசை வரண்டு இது யேற்படுகிறது. மலம் கழிக்கும்போது, குடல், ஆசனவாய் இவைகள் யெரியும். மலம் நெகிழ்த்தியாய் புருபுரு வென்ற சப்தத்துடனும், கபில நிறமாயும் கழியும். சில சமயம் மலம் இருகின மஞ்சள் நிறமாகவுமிருக்கும். மலம் கழிந்தவுடன் மறுபடியும் மலம் வருவதைப் போலிருக்கும் ஆசன வாய்கடுப்பும், ஆயாசமும் படபடப்புமுண்டாகும்; ஆகார வெறுப்பும், அடிவயிற்றில் கடுப்பும் வலியுமிருக்கும்.

---

* விஷமானது; ஜாக்கிரதையாக உபயோகிக்க வேண்டும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) அதிவிடயம் | ரூபாயெடை | 1 | சீரகம் | ரூபாயெடை | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | மாதுளம்பூ | ,, | 1 |
| சாதிக்காய் | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்து, புளியாரைச்சாற்றால் மைபோலரைத்து, சுண்டக்காயளவு மாத்திரைகளாகச் செய்து, காலை மாலை ஒரு அவுன்ஸ் மாதுளம்பழச் சாற்றிலாவது, காய்ந்த மாதுளம் பழத்தோல் கஷாயத்திலாவது கொடுத்து வரலாம்.

(2) சதையுடன் காய்ந்த வில்வப்பழத்தோடு ரூபாயெடை ஒன்றை 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

இரத்தக் கழிச்சலுக்குச் சொல்லிய மருந்துகளிலொன்றையும் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (3) சோடியம் கிரிஸோடேட் (Sodium Cresotate) | கிரைன்ஸ் | 12 |
| ஸ்பிரிட் அமோனியம் அரோமாட்டிக் (Spirit Ammonium Aromatic) | துளி | 24 |
| எக்ஸ்ட்ராக்ட் கிளிசரிஸா லிக்குட் (Extract Glycyrrhiza Liquid) | டிராம் | 1½ |
| ஆக்குவா அனித்தி (AquaAnithi) | ,, | 3 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (4) மன்னு ஆப்டிமா (Mannae Optimae) | கிரைன்ஸ் | 20 |
| சிரப் சென்னு (Syrup Sennae) | துளி | 30 |
| சிரப் டோலு (Syrup Tolu) | ,, | 30 |
| லிக்கர் மாக்னிஷியம் கார்போனஸ் (Liquor Magnesium Carbonas) | டிராம் | 4 |

ஒன்று சேர்த்து 6-மாதமுதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

## கரப்பான்—செவ்வாப்பு

## ERUPTIONS—DERMATITIS

கரப்பான் சர்மத்தைப்பற்றிய வியாதி. அது தொத்தும் குணமுடையது. கரப்பான் சொறியிலிருந்து கசியும் நீர் இதர குழந்தைகளுக்குப் பட்டால் அவர்களுக்கும் கரப்பான்சொறி உண்டாகிவிடும். கரப்பான் சொறிகளையும், புண்களையும் சுத்தமாய் வைத்துக்கொள்ளாததினாலேயே, அது சீக்கிரம்

ஆராமலு மிருப்பதுந் தவிர; அந்த நீர்பட்ட விடங்களிலெல்லாம் மறுபடியும் சிரங்குகளை உற்பத்தியாக்கிவிடுகிறது.

கரப்பான் குழந்தைகளுக் கேற்படும் சாதாரண சர்மவியாதியாக விருந் தாலும், சீக்கிரத்தில் குணமாகாமல் உபத்திரவத்தைக் கொடுக்கக் கூடியதாக விருக்கிறது. கரப்பானில் புண்ணுகள் காய்ந்தபின் தழும்புகளிருப்பதில்லை. இது 5-வயதுக் குட்பட்ட குழந்தைகளுக்கே அதிக மூண்டாகிறது.

ஆரம்பத்தில் சர்மம் சிவந்து சிறு நமச்சல்கள்போ லுண்டாகி, நமச்சல் களில் நீர் சேர்ந்து சொறிவதினுல் தோல் எடுபட்டு சிவந்து வீங்கி புண்ணுகி விடும். பின் அதிலிருந்து நீர் கசிந்துகொண்டே யிருக்கும். சில நாள் நீர் வடிந்தபின் பக்குக்கட்டி காய்ந்துவிடும். பக்கை பெயர்த்துவிட்டால் மறுபடி யும் அதில் வெள்ளைப்பக்குகள் கட்டிக்கொண்டு நமச்சலதிகரிக்கும். நமச்சல் தாங்கமாட்டாமல் சொறிய, மறுபடியம் நீர்க்கோர்த்து, நீர் கசிந்து பக்கங்களி லும் பரவ ஆரம்பித்துவிடும்.

கரப்பான் தொத்தும் கிருமிகளால் (Acarus Scabies) சர்மத்தில் ஸ்தி ரம்பெற்று யேற்படுகிறது. இது விசேஷமாக அஜீரணரோகங்களிலும், பல் முளைக்கும்போதும் ஏற்படலாம். மேலும் கரப்பான் அதி பலயீனமான குழந்தைகளையே அதிகம் உபத்திரவிக்கும். முதல் கரப்பான் ஆரம்பத்தி லிருந்து 15-தினத்தில் அது காய்ந்து மறுபடியும் பக்கத்திலேற்படும். இவ் விதமாகவே காய்ந்து காய்ந்து புண்ணுகள் சினைக்கும்.

கரப்பான் புண்ணுகளைத் துடைத்தத் துணியில் கரப்பான் கிருமிகள் தொத்திக்கொண்டு பிறருக்காவது, பிற இடங்களிலாவது துடைக்கும்போது அங்கும் கரப்பான் பரவி விடும். விசேஷமாகக் கரப்பான் துடைக்கும் துணியின் உதவியால் தொத்திக்கொள்வதா யிருப்பதால் இதைத் "துவாலைச் சிரங்கு" (Napkin Rash) என்று ஆங்கிலேயர்கள் கூறுகிறுர்கள்.

கரப்பான் ரோகம் 18-வகையென்று தமிழ் வைத்திய நூற்கள் கூறுகின் றன; ஆனுல், அத்தனைவிதமாக ஆங்கில வைத்திய சாஸ்திரம் ஒருமித்துக் கூருமல் தனித்தனி வியாதியாகவே கூறுகின்றது. நாம் இந்நூலில் கூறி யுள்ள சர்ம ரோகங்களின் எண்ணிக் கையைக் கீழ்கூறப்பட்டவிதமாகப்பிரித்து, ஒவ்வொன்றிற்கும் சிகிச்சைகளைத் தனித்தனியே கூறிவந்திருக்கிறேம்.

கரப்பான் வகையாவன:—

| | | |
|---|---|---|
| அக்கி | ஊமைச்சிரங்கு | கால்கடுவன் |
| அரைக்கரப்பான் | எச்சிற்றழும்பு | கால்கரப்பான் |
| அழுகச்சிரங்கு | எரிகரப்பான் | கொள்ளிக்கரப்பான் |
| உதிரக்கரப்பான் | கபாலக்கரப்பான் | சிறுசிரங்கு |
| ஊதுகரப்பான் | கருங்கரப்பான் | சூலைக்கரப்பான் |

| | | |
|---|---|---|
| செங்கரப்பான் | நாய்முள் | பொரிகரப்பான் |
| செந்தீ | படர்தாமரை | மண்டைக்கடுவன் |
| சொறிகரப்பான் | பாலகரப்பான் | மண்டைக்கரப்பான் |
| சொறிசிரங்கு | புடைகரப்பான் | யானைச்சிரங்கு |
| தாடைச்சிரங்கு | பூதக்கரப்பான் | வரட்சிக்கரப்பான் |
| தேமல் | பெருஞ்சிரங்கு | விஷவாதக்கரப்பான் |
| நமட்டுச்சிரங்கு | பேய்சொறி | வீங்குக்கரப்பான் |

அக்கி:—

கொள்ளிக் கரப்பானென்றத் தலைப்பின் கீழ் பார்க்கவும்.

அரைக்கரப்பான்—Vulva Eczema

இது பெண் குழந்தைகளுக்கு மட்டுமே யேற்படும். வயிற்றிலுள்ள கீரைப் பூச்சியென்று சொல்லப்படும். அரை அங்குல நீலமுள்ள வெள்ளிய கிருமிகள், எதேஷ்டமாகப் பெருகி, இரவில் நித்திரை செய்யும்போது ஆசனவாய் வழியே வெளியேறி, யோனித் துவாரத்தின் வழியே உட் சென்று, குடைவதினாலாவது, அக்கிருமிகளின் மலநீரைக் கக்குவதினா லாவது, பொறுக்கமுடியாத நமச்சல் யேற்பட்டு, சொறிவதினால் சிறு வியர்க்கூருபோன்று உண்டாகி, சொறியச் சொறிய புண்ணாகிவிடும்.

கடிதடத்திலும் (1-ம் பக்கம் பார்க்கவும்) யோனித்துவாரத்திலும் இந்நீர் கோர் வைகள் அதிகமாகி புண்பட்டு, பக்குக் கட்டிக்கொண்டு ஆராமலிருக்கும். ஓயாத நமச்சலுண்டாகி எப்போதும் சொறிந்துகொண்டிருக்கும்படியான நிலமை ஏற்பட்டுவிடும்; இது பெருந்துடையிலும், அடிவயிற்றிலும் படரு வதுமுண்டு. இந்தக் கரப்பான் சொறி உண்டாயிருக்கும், குழந்தைகளுக்கு யோனியிலிருந்து தயிர்போன்ற வெண்ணிறமான பதார்த்தம் கசிந்துக் கொண்டிருப்பதுமுண்டு. இதையே வெள்ளை (206-ம் பக்கம் பார்க்கவும்) வடிதலென்று சொல்லப்படும்.

சிகிச்சை

(1) வேலிப்பருத்திவேர்ப்பட்டை ரூபாயெடை 1
வட்டக்கிலுகிலுப்பைவேர்ப் பட்டை ,, 1
மதுக்காரைவேர்பட்டை ,, 1
எருக்கம்வேர்பட்டை ரூபாயெடை 1
வெள்ளைப்பூண்டு ,, 1
கடுக்காய் ,, 1
நல்லெண்ணெய் அவுன்ஸ் 12

இவற்றைப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி, காலை மாலை சுட்ட இலுப்பை அரப்பினால் நன்றாகத் தேய்த்துக் கழுவியபின்னர் வெளிப்பிரயோகமாகத் தடவி வரலாம். (பத்தியம்)

(2) கொட்டைக்கரந்தைவேர் ரூபாயெடை 2
சிறுசெருப்படிவேர் ,, 2
வல்லாரைவேர் ,, 2
கரிசலாங்காணிவேர் ,, 2
பொன்னாங்காணிவேர் ,, 2
பெய்மருட்டிவேர் ,, 2
சிறுகீரைவேர் ,, 2
வட்டத்திருப்பிவேர் ,, 2
சதுரக்கள்ளிவேர் ,, 2
வேலிப்பருத்திவேர் மேல்தோல் ரூபாயெடை 2
மிளகாணை வேர்மேல்தோல் ,, 2
கோடகசாலைவேர்மேல்தோல் ,, 2
பெருங்கிளாவேர் மேல்தோல் ,, 2
அவுரிவேர்மேல்தோல் ,, 2
தரைப்பசலை ,, 2
வசம்பு ,, 2
சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் 12

பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை 2-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

கரப்பான்மேற் பிரயோக மருந்துகளையும், உட்பிரயோக மருந்துகளையும் கொடுத்து வரலாம்.

**வெளிப்பிரயோகமாக சுத்திசெய்ய கார்பாலிக் லோஷன்:—**
(Carbolic Lotion)

(3) கார்பாலிக் ஆஸிட் (Acid Carbolic) அவுன்ஸ் 1
சுடுத்தண்ணீர் ,, 50

ஒன்றுசேர்த்து நன்றாகக் கலக்கிக்கொண்டு தினம் 2, 3-முறை நன்றாகப் புண்ணைச் சுத்திசெய்து தண்ணீரில்லாமல் ஒற்றியபின் கீழ்கண்ட மருந்துகளி லொன்றை மேல் பூசி வரலாம்.

(4) போரிக் ஆஸிட் (Acid Boric) டிராம் 1
பிரிபேர்ட் சாக் (Prepared Chalk) ,, 1

ஒன்றுசேர்த்து மேல்பிரயோகமாகப் புண்ணின்மேல் தூற்றி வரலாம்.

(5) ஐட்ரார் ஜரி கம் கிரீட்டா (Hydrargeri Cum Creta) டிராம் 1
சிங் ஆக்ஸைட் (Zinc Oxide) ,, 6

ஒன்று சேர்த்து மேல் பிரயோகமாகப் புண்ணின்மேல் தூற்றி வரலாம்.

**அழுகச் சிரங்கு:—**

யானைச் சிரங்கென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**உதிரக் கரப்பான்:—**

இந்தக் கரப்பான் ரோகத்தில் சுரமும் இலேசாய்க் காயும்; உடலிலெந்த பாகத்திலாவது சொறிக்கண்டு புண்பட்டுவிடும். அதில் பக்குக்கட்டி இரத்தம்போன்ற ஊன்னீர் வடிந்துகொண்டே யிருக்கும்; சொல்லமுடி யாத நமச்சலேற்படும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) எருக்கம்பழுப்புச்சாறு | | | நல்லெண்ணெய் | அவுன்ஸ் | 24 |
| | அவுன்ஸ் | 12 | சுக்கு | ரூபாயெடை | 3 |
| தைவேளையிலைச்சாறு | ,, | 12 | திப்பிலி | ,, | 3 |
| மணித்தக்காளியிலைசாறு | ,, | 24 | மிளகு | ,, | 3 |
| வெற்றிலைச்சாறு | ,, | 24 | வசம்பு | ,, | 3 |

பொடிக்கவேண்டியவற்றைப் பொடித்துப்போட்டு காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு காலை மாலை புண்ணைச் சுட்ட இலுப்பை அரப்பால் தேய்த்துக் கழுவியபின் இந்த எண்ணெயை வெளிப்பிரயோகமாக மேல் தடவி வரலாம்.

தினம் காலை மாலை * கார்பாலிக் லோஷனாலும், (Carbolic Lotion) கரப்பான் கழுவுநீராலும் † சுத்திசெய்துவிட்டுக் கீழ்கண்ட மருந்துகளை மேல் பிரயோகமாகத் தடவி வரலாம்.

(2) சந்தன எண்ணெ (Sandal Wood Oil) யை மேல்தடவி வரலாம்.

| | | |
|---|---|---|
| (3) சிங் ஆக்ஸைட் (Zinc Oxide) | டிராம் | 1 |
| லனோலின் (Lanolin) | ,, | 4 |
| சல்பர் பிரிசிபிடேட் (Sulphur Precipitate) | கிரைன்ஸ் | 15 |
| வாசலின் (Vaseline) | அவுன்ஸ் | 1 |

ஒன்றுசேர்த்து மேல் பிரயோகமாகத் தடவி வரலாம்.

**ஊதுக்கரப்பான்:—**

அற்பசுரத்துடன் குளிர்நடுக்கம் கண்டு உடல்வீங்கும்; உடலில் எந்தப்பாகத்திலாகிலும் சிறு கழலைகள்போன்ற கொப்புளங்கள் உண்டாகி, அவற்றில் நீர்க்கோர்த்து வெடித்து புண்ணாகும்; ஊதுக்கரப்பான் விசேஷமாக மூக்கில்தான் அதிக முண்டாகும். மூக்குத் துவாரங்கள்மேல் உதடு முதலியவைகள் சீழ்ப்பிடித்துப் பக்குக்கட்டி புண்ணாசவிருக்கும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கருநொச்சியிலை | ரூபாயெடை | 3 | கொடிவேலி | ரூபாயெடை | 3 |
| கழற்சியிலை | ,, | 3 | வெள்ளை அறுகு | ,, | 3 |
| முடக்கொத்தானிலை | ,, | 3 | சிவனார்வேம்பு | ,, | 3 |
| செங்கத்தாரிப்பட்டை | ,, | 3 | கண்டங்கத்திரிவேர் | ,, | 3 |
| கிரந்திநாயகம் | ,, | 3 | வேம்பாடம்பட்டை | ,, | 3 |
| சிறுசெருப்படை | ,, | 3 | சீதகரப்பன்பட்டை | ,, | 3 |
| சங்கன்வேர் | ,, | 3 | சிவதைவேர் | ,, | 3 |

* 236-வது பக்கம் 3-வது இலக்கம் பார்க்கவும்.

† சரப்பான் பொது கழுவுநீரைப் பார்க்கவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சங்கன்குப்பிவேர் | ,, | 3 | கருஞ்சீரகம் | ,, | 3 |
| சிறுசின்னி | ,, | 3 | சீரகம் | ,, | 3 |
| வேலிப்பருத்தி | ,, | 3 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 48 |
| முதியார்க்கூந்தல் | ,, | 3 | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

கரப்பான் பொது மேல்பூச்சு மருந்துகளி லொன்றையும், உட்பிரயோக மருந்துகளி லொன்றையும் உபயோகித்து வரலாம்.

## ஊமைச் சிரங்கு—Psoriasis

இந்தச் சிரங்குக் கிருமிகள் முதல் முதல் கைவிரல்களின் இடுக்குகளில் ஆதிக்கம் பெற்று சிறுநமச்சல்களை உண்டாக்கும். நமச்சல்கள் வியர்க்குரு போலிருக்கும்; ஆனால், நீர் கோர்த்திருக்காது நமச்சல் தாங்கமுடியாதபடி யிருக்கும். சொறிய கையைவைத்து விட்டால் கையை எடுக்கமனதில்லா திருக்கும். கைவிரல்கள் இடுக்குகளிலிருந்து மெதுமெதுவாகக் கைமுழுமையும் திரேகத்திலும் பரவிவிடும். ஊமைச்சிரங்கு உண்டானதிலிருந்து உருவில் பெருப்பது மில்லை. சீழ் கொள்ளுவதுமில்லை. அழுத்திச் சொறிந்தால் சற்று நீர் கசியும்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | அரிதாரம் | ரூபாயெடை | 1 | துருசு | ரூபாயெடை | 1 |
| | கெந்தகம் | ,, | 1 | தேங்காய்ப்பால் | அவுன்ஸ் | 12 |

இவற்றைப் பொடித்துத் தேங்காய்பாலில்போட்டு எண்ணையாகும் வரைக் காய்ச்சி வைத்துக்கொண்டு காலை மாலை சிரங்கை சுட்ட இலுப்பை அரப்பால் நன்றாகத் தேய்த்துக் கழுவி இந்த எண்ணெயை மேல்தடவி வரலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | சந்தனம் | ரூபாயெடை | 1 | நீரடிமுத்து | ரூபாயெடை | 1 |

ஒன்று சேர்த்துத் தண்ணீர்விட்டு மைபோலரைத்துக்கொண்டு, காலை மாலை இரங்கை சுட்ட இலுப்பை அரப்பால் தேய்த்துக் கழுவியபின் பூசிவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | அங்குவண்டம் ஐட்ரார்ஜரி (Unguentum Hydrargeri) | டிராம் | ½ |
| | சிங் ஆக்ஸைட் (Zinc Oxide) | ,, | 1 |
| | டைலியூட்டட் சிட்ரின் ஆயன்ட்மென்ட் (Dilluted Citrin Ointment) | அவுன்ஸ் | ¼ |
| | வாசலின் (Vaseline) | ,, | 1 |

ஒன்று சேர்த்து, காலை மாலை சிரங்கை * கார்பாலிக் லோஷனால் கழுவி சுத்திசெய்து, மேல்பிரயோகமாகத் தடவி வரலாம்.

---

* 236-வது பக்கம் 3-இலக்கம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (4) | ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) | துளி | 6 |
| | பிஸ்மத் சப்னைட்ரஸ் (Bismuth Subnitras) | டிராம் | ½ |
| | அங்குவண்டம் ஐட்ரார்ஜரி (Unguentum Hydrargeri) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து காலை மாலை * கார்பாலிக் லோஷனுல் சுத்தி செய்தபின் மேல்பிரயோகமாகத் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (5) | லனோலின் (Lanoline) | அவுன்ஸ் | 1 |
| | ஆயில் ஒலிவ் (Oil Olive) | டிராம் | 1 |

ஒன்று சேர்த்து, ஒன்றுவிட்டொருநாள் * கார்பாலிக் லோஷனுல் சுத்தி செய்தபின் மேல்பிரயோகமாகத் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | ஐட்ரார்ஜரி அமோமாட் (Hydrargeri Ammomat) | கிரைன்ஸ் | 15 |
| | லைக்கர் பிகிஸ் கார்போனஸ் (Liquor Picis Carbonas) | டிராம் | 1 |
| | வாசலின் (Vaseline) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து குழம்பாக்கி * கார்பாலிக் லோஷனுல் காலை மாலை சுத்தி, செய்து மேல் பிரயோகமாக மட்டும் சிரங்கின் மேல் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (7) | பொட்டாஷியம் ஐயோடைட் (Potassium Iodide) | கிரைன்ஸ் | 3 |
| | கிளிசரின் (Glycerine) | துளி | 45 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | ½ |

ஒன்றுசேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை, வேளை ஒன்றுக்கு ஒரு தேக்கரண்டிவீதம் உள்ளுக்குக் கொடுத்து:—

| | | | |
|---|---|---|---|
| | லைக்கர் பிகிஸ் கார்போனஸ் (Liquor Picis Carbonas) | டிராம் | 1 |
| | அங்குவண்டம் சாலி ஸிலிக் (Unguentum Salicylic) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து காலை மாலை * கார்பாலிக் லோஷனுல் சுத்திசெய்து மேல் பிரயோகமாகமட்டும் சிரங்கின் மேல் தடவி வரலாம்.

எச்சிற்றழும்பு:—

தேமலென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

எரிகரப்பான்:—

இது முழங்காலின் கீழ்பாகமாகிய கிரண்டைக்காலிலும், கணுக்கைக்கு மேல் பாகத்திலுமட்டும் உண்டாகக்கூடியதோர் வியாதி. இந்தச் சிரங்கு தேகத்தின் இதரபாகங்களில் உண்டாவதில்லை.

ஆரம்பத்தில் தேகோஷ்ணம் சற்று அதிகமாக விருக்கும்; நாசியிலிருந்து நீர் வடிந்துகொண்டே யிருக்கும்; கிரண்டைக்காலிலும், முன் கையி

* 236-வது பக்கம் 3-இலக்கம் பார்க்கவும்.

லும் கொசுக்கடிப்போன்ற நமச்சல்கள் உண்டாகி பின் ஏகமாய் புண்ணுகி விடும். புண் தீச்சுட்டதைப்போன்ற எரிச்சலுள்ளதா யிருக்கும்.

கிரண்டைக்காலிலும், முன்கையிலும் ஏகத்திற்குப் பரவி சர்மமே இல்லாமல் புண் ஒன்ருேடொன்று சேர்ந்து புண் மயமாகவே யிருக்கும்; ஆனல் புண்ணும் ஆழமாவது மில்லை. இதில் எரிச்சலும் வலியும் அதிகமாக விருக்கும்.

### சிகிச்சை

கரப்பான் பொது மேற்பிரயோக மருந்துகளையும், உட்பிரயோக மருந்துகளை யும் உபயோகித்து வரலாம்.

## கபாலக் கரப்பான்—Porrigo Favosa

இது தலை மயிர்க்கால்களுக்குள் சிறு நமச்சல் கொப்புளங்களாக உண்டாகி சினைத்து அதிலிருக்கும் நீர் வியர்வையுடன் கலந்து தலைமுழுவதிலும் பரவி பக்குக்கட்டி பெரும்புண்ணுகி தலைமயிரை ஒன்ருேடொன்று சேர்த்துத் துர்நாற்றத்தை யுண்டாக்கும். சில சமயங்களில் முகங்களிலும், அதிலிருந்து உடல் முழுவதும்கூட பரவிவிடும்.

புண்ணுகள் மிருதுவாகவும், மஞ்சள் வெள்ளை முதலிய நிறங்களில் பக்குக் கட்டிக்கொண்டு யிருக்கும்; புண்ணைச்சுற்றிலும் சிவந்து தடித்திருக்கும்; திரேகம் சற்றுக் கதகதப்பாகவே யிருக்கும்; கண்ணில் நமச்சலுடன் நீர் வடிந்துக்கொண் டிருக்கும்; நாசியிலிருந்தும் நீர்வடியும்; புண் அதிகமான அரிப்புள்ளதாக விருக்கும்; இதில் தலைமயிர் இருப்பதால் புண் ஆறுவதற்கு அநுகூலமின்றி யிருக்கும்; ஆதலால், கபாலக் கரப்பானுக்குச் சிகிச்சை செய்யுமுன் தலைமயிரை சுத்தமாக வெட்டி எடுத்துவிடவேண்டும்.

### சிகிச்சை

(1) இரவில் சிற்ருமணக்கிலையை வதக்கி புண்ணுகளில் வைத்துக் கட்டி யிருந்து, காலையில் கட்டை அவிழ்த்து, சுட்ட இலுப்பை யரப்பினல் சுத்தமாகத் தேய்த்துக்கழுவி சுத்தமான தேங்காயெண்ணெயைத் தடவி அதன்மேல் பீனுறிச்சங்கனிலையைச் சட்டியில் போட்டு வறுத்த சாம்பலை தூவிவாலாம். அத்துடன் கீழ்கண்ட எண்ணெயையும் உள்ளுக்குக் கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| பாவட்டையிலை | ரூபாயெடை | 5 | வசம்பு | ரூபாயெடை 5 |
| இலுப்பைப்பட்டை | ,, | 5 | சிற்ருமணக்கெண்ணெய் | அவுன்ஸ் 24 |
| வெங்காயம் | ,, | 5 | | |

ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் உள்ளுக்குக் கொடுத்து வரலாம் (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) பொன்னுங்காணிவேர் | ரூபாயெடை | 3 | மலைத்தாங்கிவேர் | ரூபாயெடை | 3 |
| தூதுவேளைவேர் | ,, | 3 | அதிமதுரம் | ,, | 1 |
| செவ்வல்லிக்கிழங்கு | ,, | 3 | கடுக்காய் | ,, | 1 |
| ஓரிலைத்தாமரைவேர் | ,, | 3 | கடுகுரோகணி | ,, | 1 |
| நரிமுருக்கன்வேர் | ,, | 3 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| சங்கன்வேர் | ,, | 3 | சுக்கு | ,, | 1 |
| கொன்றைவேர் | ,, | 3 | திப்பிலி | ,, | 1 |
| நிலவேம்பு | ,, | 3 | மிளகு | ,, | 1 |
| சிவனார்வேம்பு | ,, | 3 | வெள்ளைப்பூண்டு | ,, | 1 |
| குப்பைமேனிவேர் | ,, | 3 | வசம்பு | ,, | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 3 | வெளிச்சிப்பிசின் | ,, | 1 |
| | | | நல்லெண்ணெய் | அவுன்ஸ் | 32 |

ஒன்று சேர்த்துப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாக உள்ளுக்கும் கொடுத்து, காலை மாலை சுட்ட இலுப்பை அரப்பினுல் சுத்தமாகத் தேய்த்துக் கழுவி புண்ணிலும் தடவி வரலாம்.

| | | |
|---|---|---|
| (3) ஆஸிட் பிக்ரிக் (Acid Picric) | கிரைன்ஸ் | 8 |
| காம்பர் (Camphor) | டிராம் | 4 |
| ஆல்கோஹால் (Alcohol 90°/°) | ,, | 4 |

ஒன்று சேர்த்து வெளிப்பிரயோகமாகப் புண்ணின்மேல் காலை மாலை தடவி வரலாம்.

குறிப்பு:—இந்த மருந்தை தடவி வருவதால், திராவகம் ஆவியாய்ப் போனபின் புண்ணின்மேல் மஞ்சளான வஸ்து காய்ந்துபோ யிருக்குமாதலால், வாரத்திற்கிருதரம் * காரபாலிக் லோஷனினுலாவது † கரப்பான் பொது கழுவுநீராலாவது சுத்தி செய்து வரவும்.

| | | |
|---|---|---|
| (4) அமோனியேட்டட் மெர்குரி (Ammoniated Mercury) | கிரைன்ஸ் | 6 |
| ரெட் ஆக்ஸைட் ஆப் மெர்க்குரி (Red Oxide of Mercury) | ,, | 6 |
| ஓலியம் அமிக்டாலி (Oleum Amygdalae) | துளி | 4 |
| பென்ஸோடேட் லார்ட் (Benzoated Lard) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து களிம்பாகச் செய்துகொண்டு, காலை மாலை * கார்பாலிக் லோஷனுலாவது, † கரப்பான் பொது கழுவுநீராலாவது, சுத்தி செய்தபின் மேல்பிரயோகமாக மட்டும், தடவி வரலாம்.

---

* 236-ம் பக்கம் 3-இலக்கம் பார்க்கவும்.

† கரப்பான் பொது கழுவுநீரைப் பார்க்கவும்.

### கருங்கரப்பான்—Black Eczema

இது அக்கி இனத்தில் சேர்ந்த ஒரு சொறிப்புண்ணாகும். திரேகம் சிறிது கதகதப்பாகவும்; நிறம் மாறியுமிருக்கும்; திரேகத்திலுள்ள பச்சை நரம்புக ளெல்லாம் நன்றாகக் கண்ணுக்குத் தெரியும்; முகத்திலும் முழங்கால்களுக் கடிபாகத்திலும் நமச்சல்களேற்பட்டு சொறிவதினால் புண்ணுண்டாகும்; புண் கருநிறமாயும், அதிலிருந்து வடியும் ஊன்னீர் கருநிறமாகவுமிருக்கும்.

#### சிகிச்சை

கரப்பான் பொது உள்பிரயோக மருந்துகளையும், வெளிப்பிரயோக மருந்து களையும் உபயோகித்து வரலாம். செங்கரப்பானுக்குச் சொல்லியுள்ள, எண் ணெய், நெய் இவைகளி லொன்றையும் கொடுத்து வரலாம்.

### கால்கடுவன்:—

இது குழந்தைகளுக்கு பாதத்தின் மேலும், முழங்கால்களுக்குக் கீழுமுள்ள, கிரண்டை யென்ற பாகத்தில்மட்டும் வரக்கூடிய ஒரு சொறிப்புண்; இதர பாகங்களில் இது உண்டாவதில்லை; சில குழந்தைகளுக்கு ஒரேபக்கத்துக் காலிலும், மற்றும் சில குழந்தைகளுக்கு இரண்டு கால்களிலுமேயேற்படுவ துண்டு.

முதல் முதல் புண்ணுண்டாகும் அறிகுறிகள் ஒன்றும் வெளிக்குத் தோற் றாது. குழந்தை அடிக்கடி சொறிந்துகொண்டிருக்கும்; சொறிவதனால் சர்மம் வழண்டு அதிலிருந்து, சிறு நமச்சல் கொப்புளங்களுண்டாகி பின் சர்மமேயில்லாது முழங்காலிலிருந்து கணுக்கால்வரை யேகத்திற்கும் ஒரே புண்ணாகவிருக்கும்.

#### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) வெங்காயம் | ரூபாயெடை | 2 | சதுரக்கள்ளிப்பட்டை | ரூபாயெடை | 2 |
| வசம்பு | ,, | 2 | பாலமரத்துப்பட்டை | ,, | 2 |
| இலுப்பைப்பட்டை | ,, | 2 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |

இவற்றைத் தண்ணீர் விட்டு மைபோலரைத்து எண்ணெயுடன் கலக்கிக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டிவீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

(2) சுட்ட இலுப்பை அரப்பினால் காலை மாலை தேய்த்து சுடுதண்ணீர் விட்டுக் கழுவி, செம்மரத்தை யுரைத்துப் பூசிவரலாம்.

(3) சுட்ட இலுப்பை அரப்பினால் காலை மாலை தேய்த்து சுடுதண்ணீர் விட் டுக் கழுவி, கோவைத் தண்டை சிறுதுண்டுகளாக வெட்டிவைத்திருக்க அதிலிருந்து வரும்பாலைத் தடவிவரலாம்.

(4) சுட்ட இலுப்பை அரப்பினல் காலை மாலை தேய்த்து சுடுதண்ணீர் விட்டுக் கழுவி சந்தனமும் நீரடிமுத்தும் சமன் சேர்த்தரைத்துப் பூசி வரலாம்.

(5) இரவில் சிற்றாமணக்கிலையை வதக்கி வைத்துக்கட்டி யிருந்து காலையில் சுட்ட இலுப்பை அரப்பினுல் தேய்த்து சுடுதண்ணீரால் கழுவிய பின்னர் சுத்தமான தேங்காயெண்ணெயைத் தடவி அதன்மேல் சட்டியில் போட்டுக் கறுக்கிய சங்கங்குப்பியிலை சாம்பாலைத் தூற்றி வரலாம்.

கபாலக் கரப்பானுக்குச் சொல்லியுள்ள மேல்பூச்சு மருந்துகளிலொன்றையும், உட்பிரயோக மருந்துகளிலொன்றையும், கரப்பான் பொது உட்பியோக மருந்துகளிலொன்றையும், மேன்பிரயோக மருந்துகளி லொன்றையும் உபயோகித்து வரலாம்.

**கால் கரப்பான்:—**

காலகடுவனென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## கொள்ளிக் கரப்பான்—Erysipelas—St., Anthony's Fire

இதை அக்கி, செந்தீ என்று சொல்லுவர். அக்கி முகத்தில் நாசித்தண்டின் பேரிலாவது, காதுகளின் பக்கங்களிலாவது முகவாய்க்கட்டையி (தாடை) லாவது மட்டுமுண்டாகும். வேறிடங்களில் உண்டாவதில்லை.

அக்கியுண்டாவதற்கு சில மணிநேரங்களுக்கு முன்னாவது சில நாட்களுக்கு முன்னாவது சுரம் உண்டாகும். சுரமுண்டானபின் தான் அக்கி முகத்தில் நாசித்தண்டின்பேரிலாவது, காதுகளின் பக்கங்களிலாவது, முகவாய்க் கட்டையிலாவது, சிவந்து வீங்கி பின் சிறுநமச்சல்கள் தோன்றி இரண்டு மூன்று நாளையில் நீர்க்கோர்த்து, கொப்புளங்களாக மாறி முகம் முழுவதுமே பரவி புண்ணுக்கி பக்குக் கட்டிக் கொண்டுவிடும்.

அக்கியுண்டான ஆரம்பத்தில், கண்ணிரப்பைகள் வீங்கி யிருந்து பின் வீக்கம் வற்றிவிடும். முதுகு வலியும், சில சமயம் மலச்சிக்கலும் வாந்தியு மேற்படும். அக்கியில் வலி அதிகமாயிருந்தால் சில குழந்தைகளுக்கு இழுப்பு காண்பதுமுண்டு. அக்கிக்குச் சிகிச்சை செய்யுமுன் விரேசனகாரிகளை (Cathartics)க் கொடுத்து மலசுத்தி செய்யவேண்டும்.

**சிகிச்சை**

(1) செம்மரத்தைத் தண்ணீர்விட் டுரைத்துப் பூசி வரலாம்.

(2) காவிக்கட்டியைக் கரைத்துப் பூசி வரலாம.

(3) தரைபசலைக் கீரையை அரைத்துத் தடவி வரலாம்.

(4) சந்தன எண்ணெயைத் தடவி வரலாம்,

(5) படுவனிலையை அரைத்து சமன் வெண்ணெய்யுடன் குழப்பிப் பூசி வரலாம்.

(6) எழும்புச் சாம்பலுடன் வெண்ணெய் சேர்த்துக் குழப்பிப் பூசி வரலாம்.

(7) பழயத்தோலை சுட்ட சாம்பலுடன் வெண்ணெய் சேர்த்துக் குழப்பிப் பூசி வரலாம்.

(8)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விழுதியிலைச்சாறு | அவுன்ஸ் | 24 | தூதுவேளைச்சாறு | அவுன்ஸ் | 24 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 24 | சிறுபூனைக்காஞ்சொறிசாறு | ,, | 24 |
| வெள்ளறுகுச்சாறு | ,, | 24 | கரிசலாங்காணிச்சாறு | ,, | 24 |
| சங்கங்குப்பியிலைசாறு | ,, | 24 | சாரணத்திச்சாறு | ,, | 24 |
| சிவனார்வேம்புச்சாறு | ,, | 24 | கழற்சியிலைச்சாறு | ,, | 24 |
| பொடுதலைச்சாறு | ,, | 24 | கருநொச்சியிலைச்சாறு | ,, | 24 |
| நுணா (மஞ்சநெத்தி) இலைச்சாறு | ,, | 24 | வெங்காயம் | ரூபாயெடை | 3 |
| | | | கருஞ்சீரகம் | ,, | 3 |

வெங்காயத்தையும், கருஞ்சீரகத்தையும் பொடித்துப் போட்டு ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம். (கடும்பத்தியம்.)

(9)

| | | |
|---|---|---|
| டிஞ்சர் பெர்ரீபெர் குளோரைட் (Tincture Ferri Perchloride) | துளி | 10 |
| கிளிசரின் (Glycerine) | டிராம் | 1 |
| தண்ணீர் | ,, | 3 |

ஒன்றுசேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டிவீதம் கொடுத்து † கரப்பான் பொதுகழுவுநீரிலாவது * கார்பாலிக் லோஷனிலாவது வாயில்படாமல் கழுவி கீழ்கண்ட மேல் பூச்சு மருந்துகளி லொன்றையும் உபயோகித்து வரலாம்.

(10)

| | | |
|---|---|---|
| சாண்டல் வுட் ஆயில் (Oil Sandal wood) | டிராம் | 1 |
| ஆயில் ஒலிவ் (Oil Olive) | ,, | 1 |

ஒன்று சேர்த்துக்கொண்டு முதலில் * கார்பாலிக் லோஷனிலாவது சந்தன சோப்பி (Soap) னிலாவது † கரப்பான் பொது கழுவு நீரிலொன்றிலாவது வாயில் படாமல் சுத்தி செய்தபின் மேல் பிரயோகமாகத் தடவி வரலாம்.

(11)

| | | |
|---|---|---|
| ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) | டிராம் | 1 |
| டிஞ்சர் ஐயோடின் (Tincture Iodine) | ,, | 1 |

† கரப்பான் பொது கழுவு நீரைப் பார்க்கவும்.

* 248-பக்கம் 1-இலக்கம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| ஸ்பிரிட் வைனம் ரெக்டிபைட் (Spirit Vinum Rectified) | ,, | 1 |
| ஆயில் டிரிபிந்த் (Oil Terebinth) | ,, | 2 |
| கிளிசரின் (Glycerine) | ,, | 5. |

ஒன்று சேர்த்து * கார்பாலிக் லோஷன் அல்லது சந்தன சோப்பினு (Soap) லாவது † கரப்பான் பொது கழுவு நீரிலொன்றுலாவது சுத்தி செய்த பின், காலை மாலை வெளிப்பிரயோகமாக மட்டும் மேல் தடவி வரலாம்.

## சிறு சிரங்கு—Itch

சிரங்கு, கிருமிகளாலேற்படும் ஒரு தொத்து நோய். சிரங்குரோகக் கிருமிகள் சர்மத்தின் கீழ் தங்கி முட்டையிட்டுப் பெருகி புண்ணை விருத்தி செய்கிறது. பெருஞ் சிரங்கிற்குமிதற்கும் அதிகம் வித்தியாசமில்லை. சிறு சிரங்கு விசேஷமாய் இடுக்கான பாகங்களில் தான் அதிக நாள் தங்கி தொந்திரவுசெய்யும். கைவிரல்களின் இடுக்குகளே சிரங்குக் கிருமிகள் வாசம் செய்ய ஏற்ற ஸ்தானமாயிருக்கிறது. சிறு சிரங்கு உள்ளங்கையிலும், புறங்கையிலும், தொடை முதலிய பாகங்களிலும் அதிகமா யுண்டாகும்.

சிறு சிரங்கு ஆரம்பத்தில் வியர்க்குருபோன்று சிறு நமச்சலுண்டாகி, அதி விரைவில் சீழ்கொண்டு மிளகு பெரிய சீழ் கொப்புளங்களாகிவிடும். அந்தக் கொப்புளங்களைக் குத்தினுல் வெளிரின மஞ்சள் நிறமான சீழ் வெளிப்படும். அந்தச் சீழ் பட்டவிடங்களெல்லாம் சிரங்குண்டாகும்.

சிரங்குக்குச் சிகிச்சை செய்யுமுன் சிரங்கு சீழ் தண்ணீரை சுத்தம் செய்து, சிரங்கு இதரவிடங்களிலும், வியாபியாமலிருக்கும்படியான உபாயங்கள் செய்யவேண்டும். சிரங்குள்ளவர்கள் அணிந்திருக்கும் துணிகளை நாள் தோறும் மாற்றி, சுடுதண்ணீரில் போட்டு வேகவைக்கவேண்டும். சிரங்குள்ளவர்கள் படுக்கைகளைத் தனிமையாக வைத்திருப்பதுந் தவிர, இரண்டு படுக்கையாக வைத்துக்கொண்டு, ஒன்றை கடுமையான வெயிலில் மாற்றி மாற்றி காயவைத்து உபயோகிக்கவேண்டும். இவ்விதமெல்லாம், சிரங்கை தடுக்கக் கூடியவிதமாக உப பிரயத்தினங்களும் செய்துவந்தால் சிரங்கு சீக்கிரத்தில் சொஸ்தமாகும்.

### சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | அரிதாரம் | ரூபாயெடை 1 | கெந்தகம் | ரூபாயெடை 1 |
| | துருசு | ,, 1 | தேங்காய்ப்பால் | அவுன்ஸ் 32 |

ஒன்று சேர்த்து தூள் செய்து போட்டு எண்ணெயாகும் வரை காய்ச்சி வைத்துக்கொண்டு காலை மாலை, சுட்ட இலுப்பை அரப்பினுல் சுத்தமாய்த் தேய்த்துக் கழுவியபின் தடவி வரலாம்.

---

* 236-பக்கம் 3-இலக்கம் பார்க்கவும்.

† கரப்பான் பொது கழுவு நீரைப் பார்க்கவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | நீரடிமுத்து | ரூபாயெடை 1 | துருசு | ரூபாயெடை | 1 |
| | கெந்தகம் | ,, 1 | பாதரசம் | ,, | $\frac{1}{2}$ |
| | நல்லெண்ணெய் | அவுன்ஸ் 12 | | | |

முதலில் நீரடிமுத்து, கெந்தகம், துருசு, பாதரசம் இவைகளை எலுமிச்சம் பழச்சாறு விட்டு, ரசம் மறையும்வரை அரைத்து பின் எண்ணெயில் கலக்கிக் காய்ச்சி, காலை மாலை நன்றாய் சுத்தி செய்தபின் வெளிப்பிரயோகமாகத் தடவி வரலாம்.

(கழுவுநீர்—Lotion)

| | | | |
|---|---|---|---|
| (3) | ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) | டிராம் | $\frac{1}{4}$ |
| | வினிகர் (காடி—Vinegar) | அவுன்ஸ் | $1\frac{1}{4}$ |
| | தண்ணீர் | ,, | 25 |

ஒன்று சேர்த்துக்கொண்டு, காலை மாலை இந்த லோஷனு (Lotion) ல் சிரங்கை சுத்தமாய் கழுவியபின்னர் கீழ்கண்ட மருந்துகளிலொன்றை மேல் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | சல்பர் சப்ளிமெண்ட் (Sulphur Subliment) | டிராம் | 2 |
| | பொட்டாஷியம் கார்போனேட் (Potassium Carbonate) | ,, | 1 |
| | வாசலின் (Vaseline) | ,, | 1 |

ஒன்று சேர்த்து காலை மாலை 3-ம் இலக்க கழுவுநீரால் சுத்தம் செய்த பின்னர் மேல் பிரயோகமாகச் சிரங்கின்மேல் பூசி வரலாம்.

பெருஞ் சிரங்கிற்குச் சொல்லிய எல்லா மருந்துகளையும் உபயோகித்து வரலாம்.

## சூலைக்கரப்பான்:—

இந்தக் கரப்பான்ரோகத்தில் மூட்டுகளில் (Joints) வீக்கம் கண்டு முரடு கட்டி புண்ணுண்டாகும்; சுரமும் இலேசாய் காயும்; கை கால் மூட்டுகளில் நமச்சலுண்டாகி புண்ணாக மாறும்; முகம் வாடி கை கால் நீட்ட மடக்க வியலாம லிருக்கும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் | 24 | கடுகுரோகிணி | ரூபாயெடை | 1 |
| | | | ஆதண்டைவேர் | ,, | 1 |
| | முடக்கொத்தான் சாறு ,, | 3 | சங்கன்வேர் | ,, | 1 |
| | வெங்காயச்சாறு ,, | 6 | புங்கன்வேர் | ,, | 1 |

இவற்றைப் பொடித்துப்போட்டு சாற்றையும் விட்டு ஒன்றுசேர்த்து 6-மணி நேரம் கடும்வெயிலில் வைத்திருந்து காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

ஆங்கிலத் தமிழ் கரப்பான் பொது மேல் பூச்சு மருந்துகளையும், உள் பிரயோக மருந்துகளையும் உபயோகித்து வரலாம்.

## செங்கரப்பான்—Red Eczema

இது கருங்கரப்பான் ரோகத்தைச் சேர்ந்ததென்றாலும், புண்களும், சிலநீரும் இரத்தச் சிகப்பாகவிருக்கும்; உடல் முழுவதும் சிவந்திருக்கும்; உடலில் எந்தப் பாகத்திலாவது நமச்சல்களேற்பட்டுப் புண்ணுகளாக மாறி எரிச்சலும், வலியுமுண்டாக்கும்; இதில் தலைவலி யேற்படும்; மூத்திரத்தை கடுப்பும், நீர்க்கட்டு மேற்படும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) வல்லாரைவேர் | ரூபாயெடை | 3 | வேலிப்பருத்திவேர் மேல் தோல் | ரூபாயெடை | 3 |
| சிறுசெருப்படிவேர் | ,, | 3 | மிளகரணைவேர்மேல்தோல் | ,, | 3 |
| கொட்டைகரந்தைவேர் | ,, | 3 | கோடகசாலைவேர்மேல்தோல் | ,, | 3 |
| சிறுகீரைவேர் | ,, | 3 | பெருங்கிளாவேர்மேல்தோல் | ,, | 3 |
| வட்டத்திருப்பிவேர் | ,, | 3 | தரைபசலை | ,, | 3 |
| சதுரக்கள்ளிவேர் | ,, | 3 | வசம்பு | ,, | 3 |
| அவுரிவேர்மேற்றோல் | ,, | 3 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 12 |

பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்துக் காலை மாலை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) பூவரசம்பட்டை | ரூபாயெடை | 1 | நெருஞ்சில் | ரூபாயெடை | 1 |
| முடக்கொத்தன் | ,, | 1 | முதியார்க்கூந்தல் | ,, | 1 |
| ஆதண்டைவேர் | ,, | 1 | வெங்காயம் | ,, | 1 |
| முருங்கையிலை | ,, | 1 | பசுநெய் | அவுன்ஸ் | 12 |

பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

கரப்பான் பொது மேல் பூச்சு மருந்துகளையும், உள் பிரயோக மருந்துகளையும் உபயோகித்து வரலாம்.

## செந்தீ:—

கொள்ளிக் கரப்பா னென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## சோறிகரப்பான்:—

பொரிகரப்பா னென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## சோறிசிரங்கு:—

ஊமைச்சிரங் கென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## தாடைச்சிரங்கு—Impetigopustular Eczema

இது விசேஷமாக தாடையிலும், கடைவாயிலுமே உண்டாகும். பொது வாகக் கரப்பான் ரோகத்திற்கே தொத்தும்தன்மை யுண்டென்றாலும், தாடைச் சிரங்குக்கு அதிகமான தொத்தும், சந்தர்ப்பங்களும், தன்மையு முண்டா யிருக்கிறது. குழந்தைகள் ஒன்றோடொன்று கொஞ்சுவதாலும், முத்தம் கொடுப்பதினாலும், ஒரு குழந்தையின் எச்சில் பட்ட பதார்த்தங் களை ஏனைய குழந்தைகள் தின்பதாலும், தாடைச் சிரங்கு விரைவில் குழந் தைகளுக்குள் பரவ யேதுவா யிருக்கிறது.

முகத்தில் சிவந்த தடிப்புகளுண்டாகி அதன் மத்தியில் சிறு கொப்புளங்கள் காணப்படும். அந்தக் கொப்புளங்கள் சீழ்பிடித்து, மிளகவ்வளவு பெரிதாகி மஞ்சள் நிறமாக வாகிவிடும்; ஆனால், இது சர்மத்திலிருந்து உயர்ந்திருப்ப தில்லை. சீழ் பிடித்தவுடன் கொப்புளங்கள் நசுங்கி சலம் வெளிப்பட்டு வடிந்து, அந்தச் சலம் பட்டவிடமெல்லாம் சிரங்குண்டாகும்.

### சிகிச்சை

(கழுவுநீர்—Lotion)

| | | | |
|---|---|---|---|
| (1) | ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) | துளி | 10 |
| | கிளிசரின் (Glycerine) | அவுன்ஸ் | 1 |
| | ஆக்குவா ரோஸா (Aqua Rosae) | ,, | 1 |

ஒன்று சேர்த்து, தாடைச் சிரங்குகளைக் காலை மாலை சுத்தம் செய்து, பின்னர் கீழ்கண்ட மருந்துகளைத் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | சல்பர் சப்ளிமென்ட் (Sulphur Sublimate) | டிராம் | 2 |
| | பொட்டாஷியம் நைட்ரஸ் (Potassium Nitras) | கிரைஞ்ஸ் | 10 |
| | கிளிசரின் (Glycerine) | டிராம் | ½ |
| | லனோலின் (Lonoline) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் களிம்பாகச் செய்துகொண்டு, காலை மாலை 1-ம் இலக்க கழுவு நீரால் வாயில் படாமல் சுத்திசெய்து பின் மேல் பிரயோகமாகமட்டும் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | * லைக்கர் ஆர்ஸனிக்காலிஸ் (Liquor Arsanicalis) | துளி | 3 |
| | சோடியம் பைகார்போனேட் (Sodium Bicarbonate) | கிரைன்ஸ் | 5 |
| | ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) | துளி | 8 |
| | டிஞ்சர் ஜென்ஷன் கோ (Tincture Gentain Co) | ,, | 15 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்க வேண்டும்.

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒவ்வொரு தேக்கரண்டி யளவாக உள்ளுக்குக் கொடுத்து வரலாம்.

சிரங்குக்குச் சொல்லிய மருந்துகளிலொன்றை உபயோகித்து வரலாம்.

## தேமல்—Tinea Tonsurans—Ringworm

இதை எச்சிற்றழும்பு; படர்தாமரை என்றும் சொல்லப்படும். கரப்பான் ரோகத்தைப்போல் இதில் புண்ணுகள் ஒன்றும் உண்டாவதில்லை. இது சர்மத்திலிருந்து உயரமாயிருக்கும்; மத்தியில் பள்ளமாகவுமிருக்கும். தேமல் வட்ட வட்டமாக ஓரங்கள் மட்டும் கனத்துப் பார்வைக்கு விகாரமாகத் தெரியும்; ஓரத்திலுள்ள தடிப்புகள் சிவந்திருக்கும்; இது சரீரத்தின் எந்தப் பாகத்திலு முண்டாகும்; நமைச்சல் சகிக்கக்கூடததாயிருக்கும்.

### சிகிச்சை

(1) வெற்றிலையையும், வெள்ளைப்பூண்டையும் சமமாகவெடுத்து அரைத்துப் பூசி வரலாம்.

(2) பால் துத்தத்தை விளக்கெண்ணெயில் அரைத்துத் தடவிவரலாம்.

(3) தகரைவிரையை எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்துத் தடவிவரலாம்.

(4) புரசன் விரையை எலுமிச்சம்பழச் சாறுவிட்டரைத்துத் தடவிவாலாம்.

(5)

| | | |
|---|---|---|
| ஆஸிட் அஸிடிக் கிள்ாசியல் (Acid Acetic Glacial) | கிரைன்ஸ் | 4 |
| வாசலின் (Vaseline) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, களிம்பாகச் செய்து காலை மாலை தடவிவரலாம்.

(6)

| | | |
|---|---|---|
| பார்மோலின் (Farmolin) | டிராம் | 1 |
| லனோலின் (Lanolin) | அவுன்ஸ் | 3 |
| தண்ணீர் | டிராம் | 2 |

ஒன்று சேர்த்து, மேல்பிரயோகமாகத் தடவிவரலாம்.

(7)

| | | |
|---|---|---|
| டிஞ்சர் ஐயோடின் (Tincture Iodine) | டிராம் | 2 |
| ஆயில் காடினி (Cadini) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து மேல்பிரயோகமாகத் தடவிவரலாம்.

(8)

| | | |
|---|---|---|
| கிரிசரோபைனம் (கோவாபவுடர்-Chrysorobinum) | டிராம் | 1 |
| ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) | துளி | 3 |
| வாசலின் (Vaseline) | டிராம் | 4 |

ஒன்று சேர்த்து களிம்பாக்கிக்கொண்டு மேல்பிரயோகமாகத் தடவிவாலாம்.

## நமட்டுச் சிரங்கு:—

பேய்ச்சொறி யென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## நாய்முள்—Urticaria—Nettle Rash

சர்மத்திற்குமேல் உயர்ந்து கூர்மையாக உண்டாகி சுருக்கு சுருக்கென்று தைக்கும் தன்மையுள்ள ஒரு சர்மரோகத்தையே நாய்முள்ளென்றுக் கூறுவர். இது சர்மத்திலிருந்து மேடாக ஒரு பாசிபயறு பெரிய தடிப்பு உண்டாகி அதன் மத்தியில் முள்போன்ற ஒரு வஸ்துவிருக்கும். இது குழந்தைகளுக்கு அடிக்கடி யுண்டாவதாயும், உண்டானது நீடித்துமிருக்கும் தன்மையுடையதாயு மிருக்கிறது.

ஒழுங்கில்லாத ஆகாரவகைகளினாலும், பிரதானமாய் இலகுவில் ஜீரணிக்கக் கூடாத ஆகாரங்களினாலும், மீன் முதலியவற்றை அதிகமாய் புசித்து வருவதினாலும், சீதோஷ்ணமாற்றத்தினாலும், குழந்தைகளுக்கு நாய்முள் ரோக மேற்படலாம்.

### சிகிச்சை

(1) சுண்ணும்புத் தண்ணீரையும், தேங்காய் யெண்ணெயையும் சமன் கலந்து மத்தித்துத் தடவி வரலாம்.

(2)

| | | |
|---|---|---|
| * ஐட்ரார் ஜரி பெர்குளோரைட் (Hydrargeri Perchloride) | கிரைன்ஸ் | 2 |
| ஆஸிட் ஐட்ரோகுளோரிக் டில் (Acid Hydrochloric Dil) | துளி | 6 |
| தண்ணீர் | அவுன்ஸ் | $2\frac{1}{2}$ |

ஒன்றுசேர்த்துக் கரைத்துக்கொண்டு மேல் பிரயோகமாக மட்டும் அடிக்கடி தடவி வரலாம்.

(3)

| | | |
|---|---|---|
| சிங் கார்போனேடிஸ் பிரிஸிபிடேட் (Zinc Carbonatis precipitate) | டிராம் | 1 |
| சிங் ஆக்ஸைட் (Zinc Oxide) | ,, | $\frac{1}{2}$ |
| கிளிசிரின் (Glycerine) | ,, | $\frac{1}{2}$ |
| ஆக்குவா ரோஸா (Aqua Rosae) | அவுன்ஸ் | 2 |

ஒன்றுசேர்த்து மேல் பிரயோகமாக மட்டும் நாள் ஒன்றுக்குப் பல தடவை தடவி வரலாம்.

## படர்தாமரை:—

தேமலென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## பாலகரப்பான்—Struma—Infantile Scrofula

இது குழந்தைப் பருவத்திலேற்படும் ஒருவித கண்டமாலை ரோகம். குழந்தைகளின் தொண்டைக்கும், நாடிக்கு மிடையிலுள்ள சர்மத்தில் கழலைப்போ

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

லுண்டாகும். பால கரப்பான்ரோகம் தாய் தந்தையர்களிடமிருந்து, திரேகத்திலூறி இரத்தத்தை விஷமிக்கச்செய்து உண்டாகுமொரு துர்நீர் வியாதி.

ஆரம்பத்தில் கைகால் மூட்டுகளில் வீக்கம் கண்டு, பின் கழுத்தில் வீக்கம் காணும். இந்த வீக்கம் வலியில்லாமல் சிவந்திருக்கும். பின் இந்த வீக்கம் வாதுமைக் கொட்டையைப்போல் வெளிக்குத் தோன்றி சீழ் பிடித்து வெடித்துப் புண்ணுகும். அந்தப் புண்ணிலிருந்து விஷநீர் வடிந்து கொண்டேயிருக்கும். இந்த பால கரப்பான் ரோகத்தில் திரேகாதியந்தமும் சொறிசொறியாகக் கிளம்பி அரிப்பையுண்டாக்கும். திரேகம் ஒருவித நாற்றமடிக்கும். சிகிச்சையினல் ஒரு கழலையை குணம் செய்தால் அதற்கடுத்து ஒரு கழலையேற்படும். அதுவும் இதே விதமாக புண்ணுகி உபத்திரவிக்கும்.

பாலகரப்பான் ரோகத்திற்கு ஆரம்பத்திலேயே தகுந்த சிகிச்சைகள் செய்யப்படாவிட்டால், திரேகமுழுமையும் துர்நீர் வியாபித்து, புண்ணிலிருந்து வடியும் சிலநீரும் இரத்தம்போல் ஓயாமல் ஒழுகிக் கொண்டே யிருக்கும்.

ஆரம்பவீக்கத்திலேயே இது பாலகரப்பானென்று தெரிந்துகொண்டவுடன் சஸ்திரச் சிகிச்சைச் செய்வதால் மிகுந்த நன்மையுண்டாகும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் 32 | ஏலம் | ரூபாயெடை | 6 |
| | பூவரம்பட்டைச்சாறு | ,, 32 | கிராம்பு | ,, | 6 |
| | பசும்பால் | ,, 32 | சடாமாஞ்சில் | ,, | 6 |
| | கருஞ்சீரகம் | ரூபாயெடை 6 | சீரகம் | ,, | 6 |
| | கார்போகவரிசி | ,, 6 | கறிப்பாலைவேர் | ,, | 6 |
| | | | நுணுவேர் | ,, | 6 |

முதலில் சாற்றையும் எண்ணெயும் பாலையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி மெழுகுபோல் திரண்டுவரும் சமயமிறக்கி, அதில் இதரச் சரக்குகளைத் தனித் தனியே சூரணித்துப்போட்டு கடும்வெயிலில் 6-மணி நேரம் வைத்திருந்து, காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்தும் எண்ணெயில் தங்கியிருக்கும் அடிவண்டலைப் புண்ணின்மேல் தடவியும் வரலாம் (பத்தியம்)

(2) ஐட்ரார் ஜரி ஒலியம்; (Oleum Hydrargeri) இதை நாள் ஒன்றுக்கு 3, 4-தடவை கட்டியின் பேரில் மேல்பிரயோகமாக மாத்திரம் தடவி வந்தால் கட்டிப் பழுத்து உடையும். உடைந்தபின் கரப்பானுக்குச் சொல்லிய மேற்பூச்சுக் களிம்புகளி லொன்றைத் தடவி புண்ணை ஆற்றி வரலாம்.

(3) லினிமென்ட் ஐயோடின் (Liniment Iodine) இதை நாள் ஒன்றுக்கு 2, 3-தடவை கட்டியின்பேரில் தடவிவந்தால், கட்டி பழுத்து உடையும்;

உடைந்தபின், கரப்பானுக்குச் சொல்லிய மேல்பிரயோக களிம்புகளி லொன்றைத் தடவி ஆற்றிவரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | காயவைத்த பசும்பால் (சூட்டுடன்) | அவுன்ஸ் | 2 |
| | ஸ்காட்ஸ் எமுல்ஷன் காட் லிவர் ஆயில் (Scott's Emulsion Cod Liver Oil) | டிராம் | 1 |
| | சிரப் பெர்ரீ ஐயோடைட் (Syrup Ferri Iodide) | துளி | 4 |

ஒன்று சேர்த்து. 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, இந்த அளவாகக் காலையிலும், இரவில் படுக்கைக்குப் போகுமுன்னும், நீடித்துக் கொடுத்துவந் தால், பால கரப்பானிருக்கும் சமயத்திலும், சொஸ்தமான பின்பும், இரத்தத்தி லுள்ள விஷத்தன்மையை நீக்கி, இரத்தத்தை விருத்தி செய்யும்.

கரப்பான் பொது உட்பிரயோக மருந்துகளிலொன்றைக் கொடுத்து வர லாம். கட்டி உடைந்து புண்ணானல், கரப்பான் உட்பிரயோக, வெளிப்பிர யோக மருந்துகளையும் உபயோகித்து வரலாம்.

## புடைக்கரப்பான்:—

ஊது கரப்பானென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## பூதக்கரப்பான்:—

ஊது கரப்பானென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## பெருஞ்சிரங்கு—Scabies

அஹாருஸ் ஸ்காபீஸ் என்ற (Acarus Scabies) நுண்ணிய தொத்து வியாதி கிருமிகளால் சிரங்கு உண்டாகிறது. சிரங்கில் சிறுசிரங்கு, பெருஞ்சிரங்கு, ஊமைச்சிரங்கென பலவிதம் கூறுவதுண்டு. இது தொத்துவியாதி இனத் தைச் சேர்ந்ததாக விருப்பினும், மக்களிடையில் நெருங்கிப் பழகி யிருப்ப தால், சாதாரண வியாதியாகவே பாவிக்கப்படுகிறது. இந்த நுண்ணிய கிருமிகளானது, சர்மத்திலேயே ஜீவிக்க ஆரம்பிக்கிறது. ஆண், பெண் கிருமிகள் சம்பந்தப்பட்டு கெற்பமுண்டாகி தன் முட்டைகளைப் பீச்சுவதற் காகச் சதைபாகத்தில் சற்று பிரவேசிக்க ஆரம்பிக்கும்போது தான் வலியும், நமச்சலும் அதிகமாய் உண்டாகிறது. அழுக்கு மிகுதியும் உள்ள பாகங் களில்தான் இந்தக் கிருமிகளும் வசிக்கின்றன. இக் கிருமிகளுக்கு தகுதி யான வாசஸ்தலம் கைவிரல்களின் இடுக்கு, கைமடிப்புகள், தொடை, புட்டம், (பிரிஷ்டம்) அடிவயிற்றின் கீழ்மடிப்பு முதலிய இடங்களே. கொப்புளங்கள் முத்துபோல் உண்டாகி அதில் நீர்போன்ற பதார்த்தம் நிறைந்திருக்கும் கிருமிகள்கூடி முட்டையிடுவதே சீழ் என்று சொல்லுவ தாகும். இந்த முட்டைகள் 15-நாளில் மறுபடியும் புழுவாக மாறிவிடு கின்றன. இப்படி கிருமிகள் அதிகரிக்க அதிகரிக்க சிரங்கும் உடல் முழு

வதும் பரவ ஆரம்பிக்கிறது. சற்று குணமாகிவிட்டது என்றி அசட்டை செய்தால், சர்மத்துள் எச்சரிக்கையுடன் பதுங்கியிருக்கும் பெண் கிருமிகள், மறுபடியும் முட்டையிட்டு புண்பட செய்துவிடும். மக்களுள் சிரங்கு கேவலமாக மதிக்கப்படுவதைப் போலவே, சிரங்குக் கிருமிகளும் வைத்தியர்களைக் கேவலமாக மதிக்கின்றன. எப்போதும் சிரங்குக்குச் சிகிச்சை செய்ய முன்வந்தால், மருந்து சோப்புகளினலாவது, சல்பர் சோப் (Sulphur Soap) குட்டிச்யூர சோப் (Cuticura Soap) மர்கோ சோப் (Murgo Soap) கிரிமால்ட்ஸ் சோப் (Grimalts Soap) அல்லது சுட்ட இலுப்பை அரப்பினலாவது, நன்ருகச் சுத்திசெய்யவேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு சுத்தம் செய்து வைத்துக்கொள்ளுகிறேமோ அவ்வளவு சடுதியில் சிரங்கு புண்கள் ஆறிவிடும்.

முக்கியமாகச் சிரங்குக்குச் சிகிச்சை செய்யும் முறை சுசீகரமா யிருப்பதில் அடங்கியிருக்கிறது. சிரங்குக்கு மேல்பூச்சு மருந்துகளை இரண்டு மூன்று நாளைக்குக் காலையிலும், இரவு படுக்கைக்குப் போகும்போதும் தடவிக்கொண்ட 12-மணி நேரத்திற்குப் பின் * கார்பாலிக் லோஷனிலாவது, சுட்ட அரப்பினலாவது, மருந்து சோப்பு (Medicinal Soaps) களினலாவது சுத்தமாய் புண்ணுகளைத் தேய்த்தும், சுடுதண்ணீரில் ஸ்நானம் செய்துகொண்டும், புதுத் துணியை உடுத்திக்கொள்ளவேண்டும். படுக்கை இரண்டாக வைத்துக்கொண்டு, முன் படுத்திருந்த படுக்கையை, 2, 3-நாளைக்கு வெயிலில் காயப்போடவேண்டும். கட்டியிருந்தத் துணியை சுடுதண்ணீரில் போட்டு அவித்து, பின் துவைத்துக் காயப்போட்டுக்கொண்டு இவ்விதமாகவே மாற்றி மாற்றி செய்து வரவேண்டும். இப்படிச் சுசீகரமான முறைகளைக் கையாளாவிட்டால், சிரங்கு பிறருக்கு முண்டாவதோடுங்கூட, ஆறினமாதிரியாக விருந்த சிரங்கும், துணியிலும், படுக்கையிலுமிருந்த கிருமிகளால் மறுபடியும் உற்பத்தியாகிவிடும்.

சிரங்கு ஒன்றிரண்டு கண்டவுடன் கொப்புளங்களைக் கத்திரித்துவிட்டு, கார்பாலிக் காஸிட் (Carbolic Acid) 15-துளியும், தண்ணீர் அரை டிராமும் சேர்த்துக் குலுக்கிக்கொண்டு ஒரு குச்சியில் தொட்டு அந்தக் கொப்புளங்களில் விட்டால், சிரங்கு அற்றுப்போகும்.

## சிகிச்சை

(1) நாள் ஒன்றுக்கு இரண்டு தடவை, சுட்ட இலுப்பை அரப்பினல் நன்ருகத் தேய்த்துக் கழுவியபின்னர், நீரடிமுத்தும், சந்தனமும் சமமாக வரைத்துப் பூசிவரலாம்.

* 236-ம் பக்கம் 3-ம் இலக்கம் பார்க்கவும்.

(2) கெந்தகம் ரூபாயெடை 1 துருசு ரூபாயெடை 1
குங்கிலியம் ,, 1

ஒன்று சேர்த்து, சிற்றாமணக்கெண்ணெய் விட்டு மைபோலரைத்து, காலை மாலை நன்றாகச் சுத்தம் செய்தபின் தடவி வரலாம்.

(3) கஸ்தூரிமஞ்சள் ரூபாயெடை 1 நீரடிமுத்து ரூபாயெடை 1
கார்போகவரிசி ,, 1 ஏலம் ,, 1
காட்டுச்சீரகம் ,, 1 மிளகு ,, 5
சுடுக்காய் ,, 1 தேங்காயெண்ணெய் அவுன்ஸ் 24

ஒன்று சேர்த்துத் தூள்செய்து, ஊமத்தங் காய்களைக் குடைந்து அதற்குள் தூளைச்செலுத்தி ஒவ்வொரு ஊமத்தங் காயையும் தனித்தனியே $1\frac{1}{2}$-வரட்டி (எருவு) யில் புடம் போட்டெடுத்து, மைபோலரைத்து, தேங்காயெண்ணெயில் கலக்கி, மூன்றுநாள் கடும் வெயிலில் வைத்திருந்து, சிரங்குகளைக் காலையில் நன்றாய்த் தேய்த்துக் கழுவியபின்னர், ஒரு நாளைக்குப் பலதடவை மேல்பிரயோகமாகப் பூசி வரலாம்.

(4) கருஞ்சீரகம் ரூபாயெடை 1 மரமஞ்சள் ரூபாயெடை 1
கல்லுப்பு ,, 1 மிளகு ,, 1
தேங்காய்ப்பால் அவுன்ஸ் 48

ஒன்று சேர்த்துப் பொடித்துப்போட்டுக் காய்ச்சி, புண்ணின்மேல் தடவியிருந்து சாயந்திரம் இலுப்பை அரப்பும் வேப்பிலையையும் சமனாயரைத்துத் தேய்த்துக் கழுவி மறுபடியும் எண்ணெயைத் தடவி வரலாம்.

(5) பச்சைக்கற்பூரம் ரூபாயெடை $\frac{1}{8}$ வெள்ளைக்குங்கிலியம் ரூபாயெடை 1
மிர்தார்சிங்கி ,, 1 பூங்காவி ,, 1
இரசக்கற்பூரம் ,, 1 நாட்டுக்கற்பூரம் ,, $1\frac{1}{2}$
பசுவெண்ணெய் ,, 15

ஒன்று சேர்த்து மைபோலரைத்து, 7-தரம் குளிர்ந்த தண்ணீர் விட்டுக் கழுவி வைத்துக்கொண்டு புண்ணின்மேல் தடவியிருந்து சாயந்திரம் சுட்ட இலுப்பை அரப்பால் தேய்த்துக் கழுவி மறுபடியும் மேல் தடவி வரலாம்.

(சிரங்கு கழுவுநீர்—Lotion)

(6) சல்பர் சப்ளிமேட் (Snlphur Sublimate) அவுன்ஸ் 4
நீற்றின சுண்ணாம்பு (Slaked Lime) ,, 4
நாட்டுச்சவர்க்காரம் (Country Soap) ,, 1
தண்ணீர் ,, 35

ஒன்று சேர்த்து, 20-அவுன்ஸாகும்வரை சுண்டவைத்து சிரங்குகள் கழுவ உபயோகிக்கலாம்.

(7) சல்பர் பிரிசிபிடேட்டம் (Sulphur Precipitatum) டிராம் 1
வாசலின் (Vaseline) ,, 1

ஒன்று சேர்த்துக்கொண்டு * கார்பாலிக் லோஷனினாலாவது † சிரங்கு கழுவு நீராலாவது, சொப்பினாலாவது, காலை மாலை சுத்தம் செய்த பின் மேல் பிரயோகமாகத் தடவி வரலாம்.

(8) சுட்ட சுண்ணாம்பு (Slaked Lime) அவுன்ஸ் 4
சல்பர் சப்ளிமேட் (Suplhur Sublimate) ,, 4
தண்ணீர் ,, 35

ஒன்று சேர்த்து, 20-அவுன்ஸாகச் சுண்டும்வரை காய்ச்சவும். அப்போது கருநிறமான அழுக்குபடியும் அதை மெதுவாக வழித்து எடுத்துவிட்டு, மஞ்சள் நிறமான தைலத்தைமட்டும் எடுத்துக்கொண்டு, காலை மாலை † சிரங்கு கழுவு நீராலாவது * கார்பாலிக் லோஷனாலாவது, சோப்பினாலாவது சுத்தம் செய்த பின் வெளிப்பிரயோகமாகத் தடவிவரலாம்.

(9) அங்குவண்டம் சல்பரிஸ் (Unguentum Sulphuris) அவுன்ஸ் 1
டிஞ்சர் லவண்டுலா கோ (Tincture Lavendulae Co) டிராம் 1

ஒன்று சேர்த்துக் காலை மாலை † சிரங்கு கழுவு நீராலாவது, * கார்பாலிக் லோஷனாலாவது, சோப்புகளினாலாவது சுத்தம் செய்தபின் மேல்பிரயோகமாகத் தடவிவரலாம்.

(10) இக்தியால் (Ichthyol) டிராம் 1
சல்பர் (Sulphur) ,, 1
லனோலின் (Lanoline) ,, 3

ஒன்று சேர்த்து, காலை மாலை † சிரங்கு கழுவு நீராலாவது, * கார்பாலிக் லோஷனாலாவது, சோப்பினாலாவது சுத்தம் செய்தபின் மேல்பிரயோக மட்டும் தடவிவரலாம்.

(11) ரிசார்ஸின் (Resorsin) கிரைன்ஸ் 15
வாசலின் (Vaseline) அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்து, † சிரங்கு கழுவுநீராலாவது * கார்பாலிக் லோஷனாலாவது, காலை மாலை சுத்தி செய்தபின் மேல்பிரயோகமாக மட்டும், தடவிவரலாம்.

## பேய் சொறி—Prurigo Pruritus

பேய் சொறியானது; முன்னறிகுறிகள் ஒன்றுமில்லாதிருக்கும்போதே திடீரென்று, திரேகாதியந்தமும், சகிக்கக்கூடாத நமச்சலையுண்டாக்கும். நமச்சலை சகிக்கக்கூடாமல் கடினமாய் சொறிவதால் சர்மத்தில் தடிப்புகளேற்

* 236, 246-ம் பக்கம் 3-ம் இலக்கம் பார்க்கவும்.
† 254-ம் பக்கம் 6-ம் இலக்கம் பார்க்கவும்.

பட்டுவிடும். கம்பளிப் பூச்சியாவது, பூனைக்காஞ்சொறி யிலையாவது உடம்பில் பட்டால் எவ்விதம் நமச்சலுண்டாகுமோ, அவ்விதமே பேய் சொறியிலும் நமச்சல்களேற்படும்; மயிர்க் கூச்சமுண்டாகி, சர்மம் வரண்டிருக்கும்; இரத்தம் வருந்தனையும் சொறிந்தாலும் இன்பமாகவேயிருக்கும்.

பேய் சொறி, நீடித்திருக்கக்கூடிய தொன்றல்ல; சொறிகண்ட ஒன்றிரண்டு நாட்களுக்கு மட்டுமிருக்கும்; நமச்சலைத் தாங்கிக்கொண்டிருக்க முடியுமானல் சிகிச்சையே செய்யவேண்டியதில்லை; நமச்சல் தாங்காமல் சொறிந்து விடுவதால் சர்மம் வழன்று புண்பட்டுவிடும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | கார்போகவரிசி | ரூபாயெடை ½ | கசகசா | ரூபாயெடை | ½ |
| | நீரடிமுத்துப்பருப்பு | ,, ½ | கெந்தகம் | ,, | ½ |
| | கொப்பரைத்தேங்காய் | ,, ½ | | | |

ஒன்று சேர்த்து, புளித்த மோரிலரைத்துக் கலக்கி, உடம்பெல்லாம் பூசியிருந்து, சாயந்திரம் இலுப்பை அரப்பைத் தேய்த்துக் குளிக்கச் செய்துவரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | இந்துப்பு | ரூபாயெடை 1 | பசுநெய் | அவுன்ஸ் | 12 |

தூள்செய்து போட்டு, கடும் வெயிலில் வைத்திருந்து உடம்பெல்லாம் தேய்த்துக்கொண்டு, சாயந்திரம் இலுப்பை அரப்பால் தேய்த்துக் குளிக்கச் செய்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) | சீந்தில்தண்டு | ரூபாயெடை 5 | நெல்லிவற்றல் | ரூபாயெடை | 1 |
| | வேம்பாடம்பட்டை | ,, 5 | செஞ்சந்தனம் | ,, | 1 |
| | பேய்ப்புடோல்வேர் | ,, 5 | மரமஞ்சள் | ,, | 1 |
| | கடுக்காய் | ,, 1 | தக்கோலம் | ,, | 1 |
| | கோஷ்டம் | ,, 1 | விலாமிச்சைவேர் | ,, | 1 |
| | தேவதாரு | ,, 1 | மஞ்சள் | ,, | 1 |
| | தான்றிக்காய் | ,, 1 | பசுநெய் | அவுன்ஸ் | 24 |

முதலில், வேம்பாடம்பட்டை, பேய்ப்புடோல்வேர், சீந்தில்தண்டு இம் மூன்றையும் பொடித்து, 32-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சி அத்துடன் இதர சரக்குகளையும், நெய்யையும் சேர்த்துக் கடும் வெயிலில் மூன்றுநாள் வைத்திருந்து பின் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் உள்ளுக்குக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | |
|---|---|---|---|
| (4) | லிக்கர் பிளம்பி சப்அஸிடேட் (Liquor Plumbi Sub acetate) | டிராம் | 4 |
| | ஆஸிட் ஐட்ரோஸினியாக் டில் (Acid Hydrocyniac Dil) | ,, | 2 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்துக் கலக்கிக்கொண்டு சொறியுள்ளவிடத்தில் வெளிப் பிரயோகமாகத் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (5) | ஆஸிட் ஐட்ரோஸினியாக்டில் (Acid Hydrocyniac Dil) | டிராம் | 1 |
| | சோடியம் போராஸிஸ் (Soduim Borasis) | ,, | ½ |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 4 |

ஒன்று சேர்த்துச் சொறியுள்ளவிடத்தில் வெளிப்பிரயோகமாகத் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | சோடா சாலிஸிலஸ் (Soda Salicylas) | கிரைன்ஸ் | 10 |
| | தண்ணீர் | டிராம் | 5 |

ஒன்றுசேர்த்துச் சொறியுள்ள விடத்தில் வெளிப் பிரயோகமாகத் தடவி வரலாம்.

**போரிக்கரப்பான்:—**

உடலாதியந்தமும், கொசுக்கடிப்போல் சர்மத்தைத் தடிக்கச்செய்து, பின் சீழ்க் கோர்த்து, சிறுசிறு கொப்புளங்களாக்கி, புண்பட்டு, படை படையாய் ஒன்று சேர்ந்துக் கொள்ளும் ஒரு சர்மவியாதி.

சிகிச்சை

கரப்பான் உட்பிரயோக மேல் பிரயோக மருந்துகளை உபயோகித்து வரலாம்.

**மண்டைக்கடுவன்:—**

கபாலக் கரப்பானென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்

**மண்டைக் கரப்பான்:—**

கபாலக் கரப்பானென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**யானைச் சிரங்கு:—**

பெருஞ்சிரங் கென்றத் தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**வரட்ச்சிக் கரப்பான்:—**

சர்மத்தில் அதிகமான அரிப்பு உண்டாகி, சிறு சிரங்கைப்போன்ற கொப்புளங்கள் திரேகாதியந்தமு மூண்டாகும். கொப்புளங்களில் சீழில்லாமல் வரண்டு தடித்திருக்கும். நமச்சலதிகமா யிருக்கும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | ஓரிலைத்தாமரைவேர் ரூபாயெடை | 1 | நல்லெண்ணெய் | அவுன்ஸ் | 12 |
| | | | கார்போகவரிசி | ரூபாயெடை | 1 |
| | வெள்ளெருக்கன்வேர் ,, | 1 | கருஞ்சீரகம் | ,, | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தூதுவேளைவேர் | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| கொடிவேலிவேர் | ,, | 1 | ஓமம் | ,, | 1 |
| அவுரிவேர் | ,, | 1 | கந்தகம் | ,, | 1 |

ஒன்று சேர்த்துப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் உள்ளுக்கும் கொடுத்து, உடம்பு முழுதும் தேய்த்தும் வரலாம். (பத்தியம்)

| | | | |
|---|---|---|---|
| (2) | போரக்ஸ் (Borax) | டிராம் | ½ |
| | மார்பியா சல்பஸ் (Marphia Sulphus) | கிரைன்ஸ் | 1 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கரைத்து உடம்பெல்லாம் தடவியிருந்து சாயந்திரம் மருந்து சோப்பு (Madicinal Soap) களினல் சுடுதண்ணீரில் குளிப்பாட்டி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) | துளி | 5 |
| | மார்பியா சல்பஸ் (Marphia Sulphus) | கிரைன்ஸ் | 1 |
| | ஆஸிட் போரிக் (Acid Boric) | ,, | 12 |
| | வாசலின் (Vaseline) | டிராம் | 2 |

ஒன்று சேர்த்துக் கலந்து உடம்பில் தடவியிருந்து சாயந்திரங்களில், சோப்புத் தேய்த்துக் குளிப்பாட்டி மறுபடியும் தடவி வாலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | காம்பர் (Camphor) | டிராம் | 1 |
| | குளோரல் ஐட்ரஸ் (Choloral Hydras) | ,, | ½ |
| | வாசலின் (Vaseline) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்தரைத்து மேல் பிரயோகமாகத் தடவியிருந்து சாயந்திரம் சோப்பினல் குளிப்பாட்டி மறுபடியும் தடவி வரலாம்.

கரப்பான் பொது உட்பிரயோக, வெளிப்பிரயோக மருந்துகளையும் உபயோகித்து வரலாம்.

## விஷவாதக் கரப்பான்:—

இது இதர கரப்பான் ரோகத்தைப்போல் சிரங்குகள் வெடிக்காமல் சர்மங்கள் வீக்கம் கண்டு வெடித்துப் புண்பட்டுப் போகும். ஆரம்பத்தில் இலேசான சுரம் காயும்; உடம்பெல்லாம் நச்சுவலியாயும், நமச்சலாகவுமிருக்கும். கை கால், அடிவயிறு, தொடைச் சந்துகள், இவைபோன்ற விடங்களில் சர்மம் வீக்கம் கண்டு வெடித்துப் புண்பட்டுவிடும்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | தாழைவேர் | ரூபாயெடை | 15 | கற்கண்டு | ரூபாயெடை | 1 |
| | ஓரிலைத்தாமரைவேர் | ,, | 15 | கோரைக்கிழங்கு | ,, | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வேலிப்பருத்திவேர் | ,, | 15 | சொடிமுந்திரிப்பழம் | ,, | 1 |
| வெள்ளையறுகம்புல் | ,, | 15 | பேரீச்சம்பழம் | ,, | 1 |
| நத்தைச்சூரிவேர் | ,, | 15 | சுக்கு | ,, | 1 |
| நாய்க்கடுகுவேர் | ,, | 15 | திப்பிலி | ,, | 1 |
| நாயுருவிவேர் | ,, | 15 | மிளகு | ,, | 1 |
| நன்னாரிவேர் | ,, | 15 | கடுக்காய் | ,, | 1 |
| சிறியாநங்கைவேர் | ,, | 15 | தான்றிக்காய் | ,, | 1 |
| கருந்தும்பைவேர் | ,, | 15 | நெல்லிவற்றல் | ,, | 1 |
| சிற்றாமுட்டிவேர் | ,, | 15 | தேங்காய்ப்பால் | அவுன்ஸ் | 48 |
| பேராமுட்டிவேர் | ,, | 15 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 32 |
| மாவிலிங்கம்வேர் | ,, | 15 | | | |

முதலில் வேர்வகைகளை இடித்து 96-அவுன்ஸ் தண்ணீரில்போட்டுப் பாதியாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயம் அவுன்ஸ் 48-டடன் பால், எண்ணெய்யும் சேர்த்து, இதர சரக்குகளையும் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்காண்டி வீதம் கொடுத்து வரலாம். (கடும்பத்தியம்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) பூவரசம்பூவைக்கறுக்கிய சாம்பல் | ரூபாயெடை | 2 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| நெல்லிவற்றல் | ,, | 2 | வெங்காயம் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | நல்லெண்ணெய் | அவுன்ஸ் | 12 |

எண்ணெயைத் தவிர்த்து மற்றவைகளை, ஆடுதீண்டாப்பாளைச் சாறு விட்டரைத்துப் பின் எண்ணெயுடன் கலக்கிக் காய்ச்சி வெளிப்பிரயோகமாகத் தடவிவரலாம்.

கரப்பான் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

### வீங்குக்கரப்பான்:—

புடை கரப்பானென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கரப்பான் போது உட்பிரயோக மருந்துகள்—Internal Medicines

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) சிறுகுறிஞ்சாவேர் | ரூபாயெடை | 10 | மிளகரணைவேர் | ரூபாயெடை | 10 |
| கொடிப்பாலைவேர் | ,, | 10 | ஆகாசக்கருடன்கிழங்கு | ,, | 10 |
| காட்டுமல்லிகைவேர் | , | 10 | வசம்பு | ,, | 10 |
| குட்டிவிளாவேர் | ,, | 10 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 24 |

முதலில் எண்ணெயை நீக்கி, மற்றவைகளைப் பொடித்து 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 24-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சி வடித்து, அத்துடன் எண்ணெயைச் சேர்த்துக் காய்ச்சி காலையில் மட்டும் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம். (உப்பு, புளி தள்ளி பத்தியம்)

(2) செம்முள்ளிச்சாறு அவுன்ஸ் 12
செங்தொட்டிச்சாறு ,, 12
கண்டங்கத்திரிச்சாறு ,, 12
சோற்றுக்கற்றாழைச் சாறு ,, 12
தூதுவேளைச்சாறு ,, 12
மணித்தக்காளிச்சாறு ,, 12
கருஞ்சீரகம் ரூபாயெடை 1
வாதமடக்கிவேர் ,, 1
சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் 32
சங்கனிலைச்சாறு ,, 12
சங்கங்குப்பிச்சாறு ,, 12
இண்டங்கொழுந்துச்சாறு ,, 12
கருநொச்சிச்சாறு ,, 12
நிலவகைச்சாறு ,, 12
வெங்காயச்சாறு ,, 12
செங்கத்தாரிப்பட்டை ரூபாயெடை 1
கடுக்காய் ,, 1

ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(3) அவுரிவேர்மேல்தோல் ரூபாயெடை 6
கோடகசாலைவேர் மேல் தோல் ,, 6
மிளகரணைவேர்மேல் தோல் ,, 6
பெருங்கிளாவேர்மேல் தோல் ,, 6
வேலிப்பருத்திவேர்மேல் தோல் ,, 6
இண்டம்வேர் ,, 6
வல்லாரைவேர் ரூபாயெடை 6
சிறுசெருப்படைவேர் ,, 6
பொன்னாங்காணிவேர் ,, 6
கரிசலாங்காணிவேர் ,, 6
பேய்மருட்டிவேர் ,, 6
வட்டத்திருப்பிவேர் ,, 6
சிறுகீரைவேர் ,, 6
தரைப்பசலை ,, 6
வசம்பு ,, 6
கொட்டைக்கரந்தைவேர் ,, 6
சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் 32

ஒன்று சேர்த்தரைத்து எண்ணெயுடன் கலக்கிக்காய்ச்சி வடிகட்டி, காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

(4) நிலவாகைவேர் ரூபாயெடை 10
செந்தத்தாரிபட்டை ,, 10
பூவரசம்பட்டை ,, 10
வசம்பு ,, 1
வெள்ளைப்பூண்டு ,, 1
வலம்புரிக்காய் ,, 1
கார்போகவரிசி ,, 1
கருஞ்சீரகம் ,, 1
பூதக்கரப்பான்பட்டை ரூபாயெடை 10
கண்டங்கத்திரிவேர் ,, 10
பறங்கிப்பட்டை ,, 1
மிளகு ,, 1
சதகுப்பை ,, 1
சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் 24
வெள்ளாட்டுப்பால் ,, 24

முதலில் வேர்களையும், பட்டைகளையும் பொடித்து 48-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 24-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்துடன், எண்ணெயில் மற்ற சரக்குகளையும் பொடித்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்து காலை மாலை ஒரு தேக்கரண்டிவீதம் உள்ளுக்கும் கொடுத்து, மேலுக்கும் பூசி வரலாம். (பத்தியம்.)

(5) கரப்பான் எண்ணெய்; கிரந்தி எண்ணெய்; சௌந்தரிய கிருதம்; உலகோத்தம செந்தூரம் முதலியவற்றி லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(6) ஐட்ரார்ஜரி கம் கிரீட்டா (Hydrargeri Cum Creta) கிரைன்ஸ் $1\frac{1}{2}$

இதை 3-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை, வேளை ஒன்றுக்கு ஒரு பாகம் வீதம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இந்த மருந்து முதல் 3-நாளைக்கு, நாள் ஒன்றுக்கு 3-வேளைக் கொடுத்து, பின் இரவில் மட்டும் 3-நாளைக்குக் கொடுத்து, 3-நாளைக்கு மருந்தை நிறுத்தி பிறகு 3-நாளைக்குப்பின் மருந்தை ஆரம்பித்து மறுபடியும் இந்த விதமாகவே மாற்றி மாற்றி நிறுத்தி நிறுத்திக் கொடுத்து வரலாம்.

### கரப்பான் போது கழுவுநீர்கள்—Lotions

(1) இத்தியால் (Ichthyol) டிராம் 1
டிஸ்டில்ட் வாட்டர் (Distilled Water) அவுன்ஸ் 2

ஒன்று சேர்த்துக் கரப்பான் புண்ணுகளைக் கழுவி வரலாம்.

(2) சிங் ஆக்ஸைட் (Zinc Oxide) டிராம் 1
லிக்கர் பிளம்பி சப் அஸிடேட் (Liquor Plumbi Sub-acetate) ,, 2
ஆக்குவா ரோஸி (Aqua Rosae) அவுன்ஸ் 10

ஒன்று சேர்த்துக் கரப்பான் புண்ணுகளைக் கழுவி வரலாம்.

(3) கார்பாலிக் ஆஸிட் (Acid Carbolic) டிராம் 1
சுடுதண்ணீர் அவுன்ஸ் 10

ஒன்றுசேர்த்துக் கரப்பான் புண்ணுகளைக் கழுவி வரலாம்.

(4) பொட்டாஷியம் பெர்மாங்குனேட் (Potassium Permangnate) டிராம் $\frac{1}{2}$
டிஸ்டில்ட் வாட்டர் (Distilled Water) அவுன்ஸ் 10

ஒன்றுசேர்த்துக் கரப்பான் புண்ணுகளைக் கழுவி வரலாம்.

### கரப்பான் போது மேல்பூச்சு மருந்துகள்—External Oils & Ointments

(1) மருக்காரைவேர் ரூபாயெடை 1
வட்டக்கிலுகிலுப்பை வேர் ,, 1
எருக்கம்வேர் ,, 1
வேலிப்பருத்திவேர் ரூபாயெடை 1
வெள்ளைப்பூண்டு ,, 1
கடுக்காய் ,, 1
நல்லெண்ணெய் அவுன்ஸ் 12

ஒன்று சேர்த்துப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி, புண்ணின்மேல் தடவியிருந்து சாயந்திரம் இலுப்பை அரப்பால் தேய்த்துக் கழுவி மறுபடியும் தடவி வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) திருகுக்கள்ளிச்சாறு | அவுன்ஸ் | 12 | சிற்றாமணக்கிலைச்சாறு | அவுன்ஸ் | 12 |
| இண்டுச்சாறு | ,, | 12 | நொச்சியிலைச்சாறு | ,, | 12 |
| இலைக்கள்ளிச்சாறு | ,, | 12 | எருமைச்சாணிப்பால் | ,, | 12 |
| விடத்தலாச்சாறு | ,, | 12 | நல்லெண்ணெய் | ,, | 24 |
| சதுரக்கள்ளிச்சாறு | ,, | 12 | கோரைக்கிழங்கு | ரூபாயெடை | 3 |
| சங்கனிலைச்சாறு | ,, | 12 | கடுகு | ,, | 3 |
| மாவிலிங்கப்பட்டைசாறு | ,, | 12 | சீரகம் | ,, | 3 |
| தாழைவிழுதின்சாறு | ,, | 12 | கருஞ்சீரகம் | ,, | 3 |
| குப்பைமேனிச்சாறு | ,, | 12 | சுக்கு | ,, | 3 |
| கொம்மட்டியிலைச்சாறு | ,, | 12 | திப்பிலி | ,, | 3 |
| பொடுதலைச்சாறு | ,, | 12 | மிளகு | ,, | 3 |
| அவுரிச்சாறு | ,, | 12 | குங்கிலியம் | ,, | 3 |
| கிலக்கடம்புச்சாறு | ,, | 12 | | | |

சாற்றையும், எண்ணெயையம் ஒன்று சேர்த்து, இதா சரக்குகளையும் பொடித்துப் போட்டுக் காய்ச்சி, புண்ணின்மேல் பூசியிருந்து சாயந்திரங்களில் இலுப்பை அரப்பால் தேய்த்துக் கழுவிய பின் மறுபடியும் தடவிவரலாம்.

| | | |
|---|---|---|
| (3) பீத்தா நாப்தால் (Betanaphthol) | டிராம் | 1 |
| சல்பர் (Sulphur) | ,, | 1 |
| பால்சம் பெரு (Balsam Peru) | ,, | 2 |
| பெட்ரோலாட்டம் (Petrolatum) | ,, | 1 |

ஒன்று சேர்த்து * கழுவு நீரால் புண்களைச் சுத்திசெய்த பின் மேல்பிரயோக மாகமட்டும் காலை மாலை தடவி வரலாம்.

| | | |
|---|---|---|
| (4) சிங் ஆக்ஸைட் (Zinc Oxide) | அவுன்ஸ் | 1 |
| அடிபிஸ் லானு (Adipis Lanae) | டிராம் | 2 |
| ஒலியம் ஒலிவா (Oleum Olivae) | ,, | 1 |
| ஆக்குவா கால்ஸிஸ் (Aqua Calcis) | அவுன்ஸ் | 4 |

ஒன்று சேர்த்து நன்றாய்க் கலந்துகொண்டு, காலை மாலை * கழுவி நீர்களால் புண்களைக் கழுவியபின், மேல் பிரயோகமாக மாத்திரம் தடவி வரலாம்.

---

* 261-ம் பக்கம் பார்க்கவும்.

(5) லைக்கர் பிளம்பி சப் அஸிட்டேட் (Liquor Plumbi Subacetate) அவுன்ஸ் 1
கிளிசரின் (Glycerine) ,, ½
தண்ணீர் ,, 3½

ஒன்று சேர்த்துக் காலை மாலை * கழுவு நீரால் புண்களைச் சுத்தம் செய்த பின் மேல் பிரயோகமாக மட்டும் தடவி வரலாம்.

(6) நாப்தால் (Naphthol) கிரைன்ஸ் 10
காம்பர் (Camphor) ,, 10
ரிசார்ஸின் (Resorcin) ,, 10
சல்பர் (Sulphnr) டிராம் 1
வாசலின் (Vaseline) அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்துக் களிம்பாகச் செய்துகொண்டு, காலை மாலை * கழுவுநீரால் புண்களைச் சுத்தம் செய்த பின்னர், மேல் பிரயோகமாக மட்டும் தடவி வரலாம்.

(7) பிஸ்மத் சப் நைட்ரஸ் (Bismuth Subnitras) டிராம் 2
சிங் ஆக்ஸைட் (Zinc Oxide) ,, ½
ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) துளி 20
வாசலின் (Vaseline) அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்துக் களிம்பாகச் செய்துகொண்டு காலை மாலை * கழுவு நீரால் புண்களைச் சுத்தம் செய்த பின் மேல் பிரயோகமாகமட்டும் தடவி வரலாம்.

(8) பிளம்பி அஸிடஸ் (Plumbi Acetate) கிரைன்ஸ் 10
சிங் ஆக்ஸைட் (Zinc Oxide) ,, 20
காலோமல் (Calomel) ,, 20
வாசலின் (Vaseline) அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்துக் களிம்பாகச் செய்துக்கொண்டு காலை மாலை * கழுவுநீரால் புண்களை சுத்தம் செய்த பின்னர் மேல் பிரயோகமாகமட்டும் தடவி வரலாம்.

(9) ஆஸிட் சாலிஸிசிக் (Acid Salicylic) கிரைன்ஸ் 3
சிங் ஆக்ஸைட் (Zinc Oxide) டிராம் ½
மாவு (Starch) ,, ½
வாசலின் (Vaseline) ,, 1

ஒன்று சேர்த்துக் களிம்பாகச் செய்துகொண்டு, காலை மாலை * கழுவு நீரால் புண்களைச் சுத்தம்செய்த பின்னர் மேல் பிரயோக மாகமட்டும் தடவி வரலாம்.

* 261-ம் பக்கம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (10) | காம்பர் (Camphor) | கிரைன்ஸ் | 20 |
| | ஸிங் ஆக்ஸைட் (Zinc Oxide) | டிராம் | 4 |
| | பல்விஸ் அமைல் (Pulvis Amyli) | ,, | 4 |

ஒன்று சேர்த் தரைத்துக் கலந்துகொண்டு காலை மாலை புண்களை * கழுவு நீரால் சுத்தம்செய்த பின்னர் மேல் பிரயோகமாகமட்டும் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (11) | பிஸ்மத் சப் நைட்ரஸ் (Bismuth Subnitras) | டிராம் | 2 |
| | ஸிங் ஆக்ஸைட் (Zinc Oxide) | ,, | 1½ |
| | கிளிசரின் (Glycerine) | ,, | 2 |
| | ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) | துளி | 20 |
| | அங்குவண்டம் ஸிம்ப்ளக்ஸ் (Unguentum Simplex) | அவுன்ஸ் | 1 |

ஒன்றுசேர்த்துக் களிம்பாகச் செய்துகொண்டு காலை மாலை புண்களைக் * கழுவுநீரால் சுத்தம்செய்த பின்னர் மேல் பிரயோகமாக மட்டும் தடவி வரலாம்.

கரப்பான் புண்ணிலுள்ள அதிகமான அசடைநீக்க:—

கரப்பான் சடுதியில் பக்குக்கட்டி அதிகமான அசடை (கசடு அல்லது அழுக்கு) உண்டாகிக்கொண்டே யிருக்கும். அந்த அசடை கழுவு நீர்களினுல் போக்குவது முடியாதவிதமாக விருக்கும். அந்த அசடுகளை நீக்காமல் மேல் பிரயோகமாக மருந்துகளை உபயோகிப்பதும் பயன்படா திருக்கும். ஆகையால், கரப்பான் புண்ணில் அசடு அதிகமாக யிருந்தால் கீழ்கண்ட விதமாக அசட்டை நீக்கி, பின்னர் கழுவுநீரால் சுத்தம்செய்து வெளிப் பிரயோக மருந்துகளைத் தடவி வரலாம்.

சிகிச்சை

| | | |
|---|---|---|
| ஆஸிட் போரிக் (Acid Boric) | டிராம் | 2 |
| பச்சரிசி மாவு (Starch) | ,, | 4 |

ஒன்று சேர்த்துப் பசைபோலாக்கப் போதுமான சுடுதண்ணீர்விட்டு பசையாக்கி, ஒரு மெல்லிய வெள்ளைத் துணியின்பேரில் கனமாகத் தடவி, இரவு படுக்கைக்குப் போகும்போது, புண்ணுள்ள பாகத்தின்மேல் அப்படியே போட்டுக் கட்டிவிடவேண்டும். காலையில் கழுவுநீரால் கழுவினுல் புண சுத்தமாக விருக்கும். புண்ணில் அசடு இன்னும் நீங்காமலிருந்தால் மறுநாளும் கட்டலாம்.

குறிப்பு:—இந்த முறை புண்ணைச் சுத்தம்செய்யுமே யல்லாது, புண்ணை ஆற்றுது.

---

* 261-ம் பக்கம் பார்க்கவும்.

## அச்சரம்—வாய்க்கிரந்தி

## THRUSH—APHTHA

அச்சரமென்பது வாயிலுண்டாகும் ஒருவிதப் புண். அசுசியான விடங்களில் வசிப்பதினாலாவது, துர்வாடையான காற்றைச் சுவாசிப்பதினாலாவது, காற்றோட்டமற்ற அறையில் நித்திரை செய்வதினாலாவது, ஒரே அறையில் பலர் படுத்து நித்திரை செய்வதினாலாவது, அஜீரண ரோகத்தினாலாவது இந்த வாய்ப்புண்ணு ரோகம் எல்லா வயதினர்களுக்கு முண்டாகலா மென்றாலும், 2-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கே அதிகம் அச்சர வியாதியுண்டாகின்றது. புட்டிப்பால் பருகும் குழந்தைகளுக்கு விசேஷமாக அச்சரம் ஏற்படுவதுண்டு.

ஆரம்பத்தில் பல்லீறுகளின் ஓரங்களில் எரிச்சலுடன் சிவந்த வீக்கம் காணும்; பல்லீறு வெளுத்துப் பஞ்சைப்போல் மிருதுவாயிருக்கும்; ஆரம்பத்தில் சிவந்து தெரிந்தவிடத்தில் குழியாக விழுந்து அந்தக் குழி அகண்டு கொண்டே வரும்; அந்தக் குழியில், தயிராடைப்போன்று வெள்ளிய மாசுப் பிடித்திருக்கும்; அதைச் சுற்றிலும் சதை சிவந்து சற்று உயர்ந்திருக்கும்; தயிராடைபோன்ற அந்த வெள்ளிய வஸ்துவை அப்புறப்படுத்தினால் இரத்தம் கசியும்; வாயைத் திறப்பதினாலும், பேசுவதினாலும் எரிச்சலும் வலியு மதிகரிக்கும்; அச்சரமேற்பட்டிருந்தால், திரேகோஷ்ணம் சற்று அதிகரிக்கும்; குளிர் நடுக்க முண்டாகியு மிருக்கும்; தலைநோயுண்டாகும்; நாசியிலிருந்து நீர்வடிந்து கொண்டே இருக்கும்.

அச்சரம் பல்லீறுகளிலும், நாக்கு, உதடு, கன்னத்தின் உட்புற மிருதுவான சதை முதலியவிடங்களில் உண்டாகும்.

தமிழ் வைத்திய நூற்கள் அச்சரம் 8 என்று கூறுகின்றன. ஆங்கில வயித்திய நூற்கள் இதை "கான்க்ரம் ஓரீஸ்" (Cancrum Oris) என்ற ஒரே பெயருடன் கூறுகின்றன. தமிழ் வைத்திய நூற்கள் கூறும் வண்ணம் அச்சரங்களுக்குத் தனித்தனிப் பெயர்களைக் கீழே கூறி, அவற்றிற்கான சிகிச்சா முறைகளைத் தனியாகவும், பொதுவாகவும் இத்தலைப்பின்கீழ் கூறப்படுகிறது.

**அச்சர வகைகள்**

| | |
|---|---|
| உள் அச்சரம் | சூலையச்சரம் |
| கபாலியச்சரம் | சோதியச்சரம் |
| குண்டியச்சரம் | நீலியச்சரம் |
| குமரியச்சரம் | வீமியச்சரம் |

**உள் ளச்சரம்:—**

அச்சரரோகக் குறிகளுடனும், நாவில் மாவுபடிந்து, நாவரட்சியுண்டாகும். வாய் உவர்மண் நாற்றமடிக்கும். முகம் வெளுத்து மூக்கிலிருந்து நீர்

வடிந்துகொண்டே யிருக்கும். உதடுகளினுட்புறம் புண்களுண்டாயிருக்கும். தூக்கமதிகமேற்படும்.

#### சிகிச்சை

புங்காங்கொட்டைப்பழச்சதை ரூபாயெடை 2
அதிமதுரம் ரூபாயெடை 2
பசுநெய் அவுன்ஸ் 12

மூலைப்பால் விட்டரைத்து, நெய்யில் கலக்கிக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம்.

அச்சரப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

### கபாலி யச்சரம்:—

அச்சாரோகக் குறிகளுடனும், திரேகம் கனத்திருக்கும்; வயிற்றோட்டமேற்படும்; தலைவலியும், நெஞ்சுவலியுமிருக்கும்; சுரம் காயும்; இழுப்பு உண்டாகும்; தொண்டையும் நாக்கும் புண்பட்டிருக்கும்.

#### சிகிச்சை

அச்சரப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

### குண்டி யச்சரம்:—

அச்சாரோகக் குறிகளுடனும், இடுப்புக்குமேல் சூடு அதிகமா யிருக்கும்; உடல்முழுவதும் நச்சுவலியாக விருக்கும்; திரேகம் வெளுத்து இளைத்திருக்கும்; நெஞ்செரிவும், நெஞ்சுவலியும், வாந்தியும், வயிற்றோட்டமுமுண்டாகும்; தொண்டையில் வலியேற்படும்; விலாப்பக்கங்களில் மிகுந்த வலியிருக்கும்; நாவு சிவந்து புண்பட்டிருக்கும்; மூத்திரம் மஞ்சளைக் கரைத்ததைப்போலிறங்கும்; ஆசனவாயில் ஊசியால் குத்துவதைப் போலிருக்கும்.

#### சிகிச்சை

(1) சீரகத்தையும், கரிசலாங்காணியும் சமமாயெடுத் தரைத்ததில், காலை மாலை கால் ரூபாயெடை யவ்வளவு, சமன் பசு நெய்யுடன் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(2) வேப்பங்காயும், சுண்டைவேரும் சமமாயரைத்ததில், காலை மாலை கால் ரூபாயெடை யவ்வளவு சமன் பசுநெய்யில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

அச்சுரப் பொதுமருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

### குமரி யச்சரம்:—

அச்சாரோகக் குறிகளுடனும், நாவு தடித்து, மாவ படிந்து வெடித்திருக்கும்; சுரம் காயும்; வாய் கசக்கும்; இரத்தக்கழிச்சலும்; வாந்தியும், கண்ணெரிச்

சலு முண்டாகும்; பற்கள் மஞ்சனித்திருக்கும்; சில சமயம் மூக்கிலிருந்து இரத்தம் சொட்டும்; உள்நாக்கு வளர்ந்திருக்கும்.

சிகிச்சை

அச்சரப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

சூலை யச்சரம்:—

அச்சரரோகக் குறிகளுடனும், நாவில் மாவு படிந்து, வெடித்துப் புண்ணு யிருக்கும்; வெள்ளைநிறமான வாந்தி யுண்டாகும்; வாய் உவர்மண் நாற்ற மடிக்கும்; எச்சில்பெருக் கதிகமா யிருக்கும்; இடுப்புவலி யதிகமா யிருக்கும்.

சிகிச்சை

அச்சரப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

சோதி யச்சரம்:—

அச்சரரோகக் குறிகளுடனும், வாந்தியும், வயிற்றோட்டமு மிருக்கும்; வாயுள் புண்களுண்டா யிருக்கும்; நாவும், பல்லும் அழுக்கு நிறமாக விருக்கும்; காச்சலும், தலைவலியு முண்டாகும்; அடிவயிறும், முதுகும் எரிச்சலாக விருக்கும்.

சிகிச்சை

அச்சரப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

நீலி யச்சரம்:—

அச்சரரோகக் குறிகளுடனும், உடல் கறுத்திருக்கும்; உட்டொண்டையும், ஈரலும், புண்பட்டு வாய் புண்ணுற்றமடிக்கும்; குளிர் நடுக்கத்துடன் சுரம் காயும்; மயிர் சிலிர்த்திருக்கும்; நெஞ்சும், தலையும் அதிக வலியா யிருக்கும்.

சிகிச்சை

அச்சரப் பொது மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

அச்சரப் போது மருந்துகள்:—

(1) வெங்காரம் ரூபாயெடை $\frac{3}{4}$ தேன் அவுன்ஸ் $\frac{1}{2}$

ஒன்று யரைத்து வாயில் புண்ணுள்ளவிடங்களில் தடவி வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) சந்தனம் | ரூபாயெடை | $\frac{1}{2}$ | வட்டத்திருப்பிவேர் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| கொத்தமல்லி | ,, | $\frac{1}{2}$ | மாதுளம்பிஞ்சு | ,, | $\frac{1}{4}$ |
| கடுக்காய் | ,, | $\frac{1}{2}$ | அத்திப்பட்டை | ,, | $\frac{1}{4}$ |
| செவ்வல்லிக்கிழங்கு | ,, | $\frac{1}{2}$ | கொட்டைப்பாக்கு | ,, | $\frac{1}{4}$ |
| நாயுருவிவேர் | ,, | $\frac{1}{4}$ | வல்லாரையிலை | ,, | $\frac{1}{4}$ |
| ஆதுவேளைவேர் | ,, | $\frac{1}{4}$ | இலந்தையிலை | ,, | $\frac{1}{4}$ |

ஒன்று சேர்த்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 12-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், காலை மாலை $\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வல்லாரை | ரூபாயெடை | 1 | அதிமதுரம் | ரூபாயெடை | 1 |
| கற்பூரவல்லி | ,, | 1 | ஓமம் | ,, | 1 |
| வெங்காயம் | ,, | 1 | சீரகம் | ,, | 1 |

ஒன்று சேர்த்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், காலை மாலை 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(4)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆடாதோடையிலை | ரூபாயெடை | 1 | அக்ரகாரம் | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| வட்டத்திருப்பி | ,, | 1 | ஏலம் | ,, | $\frac{1}{2}$ |
| நாயுருவி | ,, | 1 | கிராம்பு | ,, | $\frac{1}{2}$ |
| கண்டங்கத்திரி | ,, | 1 | மாசிக்காய் | ,, | $\frac{1}{2}$ |
| கொடிவேலி | ,, | $\frac{1}{2}$ | திப்பிலி | ,, | $\frac{1}{2}$ |
| கொத்தமல்லி | ,, | $\frac{1}{2}$ | சீரகம் | ,, | $\frac{1}{2}$ |
| நெல்லிவற்றல் | ,, | $\frac{1}{2}$ | செஞ்சந்தனம் | ,, | $\frac{1}{2}$ |
| அதிமதுரம் | ,, | $\frac{1}{2}$ | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 4-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், காலை மாலை 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(5) நட்சத்திரமாணிக்கக்கிருதம்; வேம்பாடம் பட்டையெண்ணெய்; தேற்றாங்கொட்டை மாத்திரை இவைகளி லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(6)

| | | |
|---|---|---|
| போரிக் ஆஸிட் (Boric Acid) | டிராம் | 1 |
| சுடுதண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கலந்து ஆகாரம் சாப்பிட்டவுடன் வாயில் ஊற்றிக் கொப்புளிக்கலாம்.

(7)

| | | |
|---|---|---|
| போரிக் ஆஸிட் (Boric Acid) | டிராம் | 1 |
| சுடுதண்ணீர் | அவுன்ஸ் | 8 |

ஒன்று சேர்த்துக் கலந்து நாள் ஒன்றுக்கு பலதடவை ஊற்றிக் கொப்புளிக்கவும்.

(8)

| | | |
|---|---|---|
| ஆஸிட் போரிக் (Acid Boric) | டிராம் | 1 |
| கிளிசரின் (Glycerine) | ,, | $\frac{1}{2}$ |
| டிஞ்சர் மர் (Tincture Myrrh) | ,, | $\frac{1}{2}$ |
| ஆக்குவா காம்பர் (Aqua Comphor) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு 3-தரம் விழுங்கிவிடாமல் வாயை மட்டும் கொப்புளிக்கச் செய்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (9) | ஆஸிட் சாலிஸிலிக் (Acid Salicylic) | கிரைன்ஸ் | 30 |
| | ஸ்பிரிட் வைனம் ரெக்டிபைட் (Spirit Vinum Rectified) | டிராம் | 3 |
| | ஆக்குவா காம்பர் (Aqua Comphor) | அவுன்ஸ் | 8 |

ஒன்று சேர்த்துக் கலந்துகொண்டு நாள் ஒன்றுக்கு 3-தடவை விழுங்கி விடாமல் வாய் மட்டும் கொப்புளிக்கச் செய்து வரலாம்.

## காமாலை

## JAUNDICE

காமாலைரோகம், பித்தப்பை விகல்பத்தினுலுண்டாவதா யிருக்கிறது. கல்லீரலின் (Liver) வீக்கத்தினுல், பித்தப்பையின் சவ்வு நசுங்கி, பித்தநீர் உடலில் வியாபித்து, நுண்ணிய உருப்புகளை மஞ்சளாகச் செய்துவிடுகிறது. முக்கியமாக கண் வெள்ளைவிழியையும், நகக் கண்களையும், மஞ்சள் நிறமாக்கிவிடும். அடுத்தபடியாக முகத்தையும், கழுத்தையும் மஞ்சளாக மாற்றி, நாளடைவில் உடல் முழுவதுமே மஞ்சளாக்கிவிடும். மூத்திரமானது இறுகிய ஆரஞ்சு நிறமாக அதாவது, தேனைவிட சற்று வெளுரின நிறமாகவோ அல்லது கருங்காலி மரத்தின் நிறமாகவே இறங்கும். மலம் வெளுரின மஞ்சள் நிறமாகவேனும், களிமண் நிறமாகவேனு மிருக்கும். மலச்சிக்கலோ, வயிற்ருேட்டமோ ஏற்படுவதுண்டு. சதா புளித்தேப்பமும், வாய் கசப்பும் உண்டாகும்; சில சமயங்களில் சுரம் காய்வதுமுண்டு; முகவலியும், விலாவில் ஏதோ ஒரு பாரம் அழுத்திக்கொண்டிருப்பதைப் போன்ற உணர்ச்சியுமேற்படும். சில சமயங்களில் வயிற்றுப் பொருமலும், பசிமந்தமு மேற்படுவதுமுண்டு. கல்லீரலானது வீங்கியிருப்பதினுல், இருதயநடைக்கு இடைஞ்சலேற்பட்டு நாடி ஓட்டம் மெதுவாகத் தணிந்திருக்கும்.

காமாலைரோகம் மரணத்திற் கேதுவாக்கும் ரோகவகையில் சேர்ந்த தல்ல. வயது வந்தவர்களுக்கானுல் காமாலைரோகம் கிரந்திரோகம் தாக்கியதினு லேற்பட்டதா யிருக்கலாம். குழந்தைகளுக்கு இவ் வியாதி குளிர் மிகுதியாலும்; ஆகார விகல்பத்திலும்; வாட்சியான காற்ருலும் வரக் காரணமா யிருக்கலாம்.

குழந்தைகளுக்குப் பிறந்த இரண்டு மூன்று தினத்திற்குப் பின் மஞ்சட் காமாலை (Icterus Neonatoram) வருவதுண்டு; ஆனுல், இது குழந்தைகளுக்குச் சாதாரணமாக சம்பவிப்பதல்ல. பிறந்த குழந்தைகளுக்கு மஞ்சட்காமாலை வருமானுல், வியாதியாகப் பாவிப்பதுமில்லை.

காமாலே 13-என்று தமிழ் சாஸ்திரங்கள் கூறுகின்றன; ஆனல், காமாலே ரோகம், பித்தப்பை விகல்பத்தினுல்மட்டும் வருவதாயிருப்பதால், அத்தனையையும் இங்குக் குறிப்பிடாமல், ஊது காமாலே; மஞ்சட் காமாலே; வரட் காமாலே; இவைகளுக்குமட்டும் வியாதி விவரணம் கூறப்பட்டுச் சகல காமாலே ரோகத்திற்கும் அவுஷதப்பாகம் சொல்லப்பட் டிருக்கிறது.

## ஊதுகாமாலே:—

காமாலேரோகக் குறிகளுடனும், முழங்கால் வீங்கியிருக்கும்; பசி, காதடைப்பு, இழுப்புக் காணும். பசியுண்டான இரண்டொரு நிமிஷத்தில் பசி மந்தமேற்படும்; கை கால் அசதியாக விருக்கும்; நாவு புண்பட்டிருக்கும்.

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| * சுத்திசெய்த † அரப்பொடி ரூபாயெடை | $\frac{1}{4}$ | முருங்கையிலே ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| | | கரிசலாங்காணி ,, | $\frac{1}{4}$ |
| ‡ மண்டூரம் ,, | $\frac{1}{4}$ | முற்றின தேங்காய் ,, | $\frac{1}{4}$ |
| வெள்ளேப்பூண்டு ,, | $\frac{1}{4}$ | | |

ஒன்று சேர்த்து, இளநீர்த் தண்ணீரால் மைபோலரைத்து, காலே மாலே கால் ரூபாயெடை மருந்தை ஒரு அவுன்ஸ் நீர்முள்ளிக் கஷாயத்தில் கலக்கிக் கொடுத்து வரலாம்.

காமாலேப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

## மஞ்சட் காமாலே:—

காமாலே ரோகக் குறிகளுடனும், முகம், கைகால் வீக்கமாகத் தெரியும்; மலச்சிக்கலுண்டாகும்; மூத்திரம் கடுத்து, மஞ்சளேக் கரைத்ததைப்போலிறங்கும்; கண் வெள்ளே விழிகளும், கை நகக் கண்களும் மஞ்சள் நிறமாகத் தெரியும்.

### சிகிச்சை

(1) சங்கன்வேர்ப்பட்டை ரூபாயெடை 3 அதிமதூரம் ரூபாயெடை 3

ஒன்று சேர்த்து, எலுமிச்சம்பழச் சாற்றுல் 3-நாள் அரைத்துச் சுண்டக்காயவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து காயவைத்துக்கொண்டு, காலே மாலே பசும்பாலில் 1-மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்

---

* அரப்பொடியை 3-மணி நேரம் எலுமிச்சம்பழச் சாற்றில் ஊறவைத்து பின் பல தடவை சுத்தமான தண்ணீர் விட்டுக் கழுவி எடுத்துக்கொள்ளவும்.

† இரும்பை ராவியத் தூள்.

‡ கொல்லன் உலேக்கிட்டம்.

(2) நாட்டுக்காட்டாமணக்கிலேயை மைபோலரைத்து, நாளொன்றுக்கு 3-தடவை அரை ரூபாயெடை யளவாகவெடுத்து, சமன் எருமை வெண்ணெயில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

காமாலேப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

## வரட் காமாலே:—

காமாலே ரோகக் குறிகளுடனும், உடம்பு மெலிந்து வரட்சியாக விருக்கும்; நாவரட்சிக் காணும்; கண் மஞ்சளாக விருக்கும்.

### சிகிச்சை

கீழ்க்காய்நெல்லி, மணித்தக்காளி இவைகளின் § சமூலத்தைச் சமமாக வெடுத்து, எலுமிச்சம்பழச் சாற்ருல் மைபோலரைத்து, காலே மாலே அரை ரூபாயெடை யளவு எருமைத் தயிரில் கலக்கிக் கொடுத்து வரலாம்.

காமாலேப் பொது மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

## காமாலேப் போது மருந்துகள்:—

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கடுக்காய் | ரூபாயெடை | 1 | சீமை நிலவேம்பு | ரூபாயெடை | 1 |
| தான்றிக்காய் | ,, | 1 | சீந்தில்தண்டு | ,, | 1 |
| நெல்லிவற்றல் | ,, | 1 | கடுகுரோகிணி | ,, | 1 |
| ஆடாதோடையிலே | ,, | 1 | மரமஞ்சள் | ,, | 1 |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலே மாலே ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) மண்டூரச்செந்தூரம்
அயக்காந்தசெந்தூரம்
வீரசூதசிந்தாமணி
திரிபுவனச்செந்தூரம்
துரிசுபஸ்பம்
மகாகூழ்பாண்டக்கிருதம்
ராஜாமிர்த சஞ்சீவி லேகியம்
மகாகூழ்பாண்ட லேகியம்
வில்வாதி லேகியம்
கரிசலாங்கண்ணிச் சூரணம்
சூரிசாலே எண்ணெய்

இவற்றி லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(3)

| | | |
|---|---|---|
| பல்விஸ் ரீயை (Pulvis Rhei) | கிரைன்ஸ் | 10 |
| பொட்டாஷியம் டார்டரேட் (Potassium Tartarate) | டிராம் | 1 |
| ஆக்குவா மெந்தாபிப் (Aqua Menthapip) | அவுன்ஸ் | 2 |

§ வேர், தண்டு, இலே, பூ, காய்.

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | ஆமோனியம் குளோரைட் (Ammonium Chloride) | கிரைன்ஸ் | 2 |
| | எக்ஸ்டிராக்ட் கிளிசரிஸா லிக்குட் (Extract Glycyrrhiae Liquid | அவுன்ஸ் | ½ |
| | ஆக்குவா டிஸ்டில் (Aqua Distill) | ,, | 1 |

ஒன்றுசேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இந்த மருந்து கொடுப்பதற்கு முதல்நாள் இரவில் ஒரு டிராம் சிற்றாமணக்கெண்ணெய் கொடுக்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (5) | சோடியம் பைகார்போனேட் (Soduim Bicarbonate) | கிரைன்ஸ் | 9 |
| | ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) | துளி | 10 |
| | * டிஞ்சர் நக்ஸ் வாமிகா (Tincture Nux Vamica) | ,, | 2 |
| | ஆக்குவா கருய் (Aqua Carui) | டிராம் | 3 |

ஒன்றுசேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இதுவரையில் குழந்தைகளுக்குண்டாகும் கூட்டு வியாதிகளை (Group)ப் பற்றிக் கூறிவந்தோம். இனி, அடுத்த மூன்றாம் பாகத்தில் குழந்தைகளுக் கேற்படக்கூடிய தனித்தனி வியாதிகளையும் அதற்குத்தக்க சிகிச்சை முறைகளையும் கூறுகிறோம்.

இந்த இரண்டாவது பாகத்தில் குழந்தைகளுக்குக் கொடுக்கும்படியாக சொல்லியுள்ள இங்லீஷ் மருந்து அளவுகள் 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டியானல், அதிலிருந்து 3-வயது வரையில் அதாவது 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு 2-தேக்கரண்டியாக, இந்த விதமாய் ஒவ்வொரு 3-வயதுக்கும் ஒவவொரு தேக்கரண்டி அதிகமாகக் கொடுக்கலாம். தூள் மருந்துகளை 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒருபாகம் கொடுக்கச் சொல்லியிருந்தால் அதிகமாகும் ஒவ்வொரு 3-வயதிற்கும் ஒருபாகம் அதிகமாகவே கொடுத்து வரலாம். இந்த அளவுமுறையையே 3-ம் பாகத்திற்கும் கையாளவும்.

---

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்க வேண்டும்.

# ஸ்திரீ பால சிகிச்சை

## மூன்றும் பாகம்

---

## பற்பல பாலர் ரோகங்கள்

## MISCELLANEOUS DISEASES OF INFANTS & CHILDREN

அடிக்கடி பால் எடுத்தல்:—

தாய்ப் பாலாவது, புட்டிப் பாலாவது குடிக்கும் குழந்தைகள் அடிக்கடி பால் எடுப்பதுண்டு. குழந்தை அழும்போதெல்லாம் பால் புகட்டுவதினால், பால் அளவுக் கதிகமாகி இரைப்பையில் அதிகநேரம் தங்கி புளிப்பேறுவதாலும், அஜீரணத்தாலும் இது ஏற்படுவதா யிருக்கலாம். அப்படி வாந்தி செய்த பாலானது முறிந்துத் தயிர் கட்டியைப்போலும், புளித்த நாற்றத்துடனு மிருக்கும். அஜீரணத்தினாலானால், குழந்தைக்கு வயிறு பொருமி வாந்தியாகும்.

சிகிச்சை

(1) வெள்ளைப்பூண்டு ரூபாயெடை $\frac{1}{8}$ ஓமம் ரூபாயெடை $\frac{1}{8}$

ஒன்றுசேர்த்து 6-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 2-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, 2-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

வயிறு பொருமியிருந்தால்:—

(2) வயிறு பொருமியிருந்தால், முதல் இலக்கமுள்ள கஷாயத்தை உள்ளுக்குக் கொடுத்து, அதிமதுரத்தைக் காடியி லரைத்துத் தொப்புளைச் சுற்றிலும் பூசலாம்.

(3) வாந்தி நிற்கும்வரை கொடுக்கும் ஒவ்வொரு அவுன்ஸ் பாலுடனும், ஒரு கிரைன்ஸ் சோடியம் சிட்ரேட் (Soduim Citrate) கலந்து கொடுத்து வரலாம்.

(4) பெப்டோனைஸிங் பவுடரை (Peptonizing Powder) அளவுப் பிரகாரம் உபயோகித்து வரலாம்.

அண்ட வீக்கம்—Hydrocelle

குழந்தைகளுக்கு விரை வீக்கம் இரண்டு வகையாக வருவதுண்டு. அடி வயிற்று சவவின்பேரில் அடிக்கடி குடல்கள் சரிவு உண்டாகிக் குடலைப்

பீஜப்பையில் இறங்கச்செய்வதொன்று. இதைக் குடல்வாத ரோகம், குடல் விருத்தி ரோகம், (Hernia) என்றும், வாயு அதிகரிப்பினாலும், ஒருவித திணச்சத்து மிகுதிப்படுவதினாலும், பீஜப்பையில் நீர் சேருவதினாலும் ஏற்படும் வியாதிக்கு அண்ட வீக்கம் (Hydrocelle) என்றும் சொல்லப்படும்.

குடல் இறங்கி உபத்திரவம் செய்யும் வியாதியை உட்பிரயோக மருந்துகளினால் சொஸ்தம் செய்வது இயலாத காரியம். அந்தக் குடலிறக்க வியாதிக்கு அருவை சிகிச்சையே நல்ல பயன் தரத்தக்கதாகும். உபசாந்தியாகத் தடை வார்களை (Trusses) உபயோகித்து வரலாம். மேலும், அண்ட வீக்கத்திற்குண்டான சிகிச்சைகளையும் விடா முயற்சியுடன் செய்து வரலாம்.

வியாதியினாலுண்டாகும் அண்டவீக்கம்; அதாவது, பீஜக்காய்களைச் சுற்றிக் கொழுப்பதிகரித்தல், பீஜப்பையில் நீர் சேருதல், வாயு அதிகரித்தல் முதலிய கோளாறுகளுக்கும் அருவை சிகிச்சையே செய்யப்படுகிறதென்றாலும், உட்பிரயோக மருந்தினால் சம்பூரண குணமடையவும் செய்யமுடியும்.

குடலிறக்கத்தால் ஏற்படும் அண்ட வீக்கத்தில், இருமும்படிச் செய்து அடிவயிற்றுச் சவ்வு மடிப்பில் விரலால் அமுக்கினால் விரல் சற்று வயிற்றுள் போவதைப்போலிருக்கும். அப்போது வீக்கம் சற்று கம்மிப்பட்டுத் தெரியும். அண்ட வீக்கத்தில் இருமினாலும், பீஜம் சுருங்காமலும் ஏறி இறங்காமலுமிருக்கும்.

### சிகிச்சை

(1) கோழிமுட்டை வெண்கரு அவுன்ஸ் 2 — சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் 12
முடக்கொத்தான்சாறு ,, 12 — கழற்சிப்பருப்பு ரூபாயெடை ½
வெங்காயம் ,, 3

முதலில் கழற்சிப்பருப்பை மைபோலரைத்தும், வெங்காயத்தைக் குறுவ அரிந்தும்போட்டுக் கலக்கிக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டியளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

(2) சாரணத்திவேர் ரூபாயெடை 2 — கழற்சிப்பருப்பு ரூபாயெடை 2
முடக்கொத்தான்வேர் ,, 2 — சுக்கு ,, 2

ஒன்று சேர்த்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், காலை மாலை 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(3) ஓமம் ரூபாயெடை ½ — மிளகு ரூபாயெடை ½
வசம்பு ,, ½ — திப்பிலி ,, ½
சுக்கு ,, ½ — வெள்ளைப்பூண்டு ,, ½
சிற்றாமணக்கெண்ணெய் அவுன்ஸ் 24 — கழற்சிப்பருப்பு ,, ½
வேப்பங்கொழுந்து ,, ½

ஒன்று சேர்த்துப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

(4)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சவரிக்கொடி | ரூபாயெடை | 5 | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | ½ |
| முடக்கொத்தான்வேர் | ,, | 5 | சுக்கு | ,, | ½ |
| தைவேளைவேர் | ,, | 5 | திப்பிலி | ,, | ½ |
| சாரணத்திவேர் | ,, | 5 | மிளகு | ,, | ½ |
| மூக்குரெட்டைவேர் | ,, | 5 | கழற்சிப்பருப்பு | ,, | ½ |
| ஓமம் | ,, | ½ | தேங்காய்ப்பால் | அவுன்ஸ் | 6 |
| | | | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 12 |

முதலில் வேர்களைப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 12-அவுன்ஸாகச் சுண்டிய கஷாயத்துடன், இதர சரக்குகளைத் தூள் செய்து போட்டு, பாலையும் எண்ணெயையும் சேர்த்துக் கலந்து காய்ச்சி வடித்து, காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் 3-நாளைக்குக் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(5) சிற்றாமணக் கிலையில், சிற்றாமணக்கெண்ணெயைத் தடவி வதக்கி பீஜத்தின்மேல் வைத்துக் கட்டி வரலாம்.

(6) தைவேளையிலையையும், மணித்தக்காளியிலையையும் ஒன்றுசேர்த்து வதக்கி பீஜத்தின்மேல் வைத்துக் கட்டி வரலாம்.

(7)

| | | |
|---|---|---|
| நவாச்சாரம் (Salammoniac) | அவுன்ஸ் | 1 |
| ஸ்பிரிட் ரெக்டிபைட் (Spirit Rectified) | ,, | 1 |
| தண்ணீர் | ,, | 2 |

ஒன்றுசேர்த்துக் கரைத்துக்கொண்டு ஒரு துணியில் நனைத்து, மேல் பிரயோகமாக பீஜத்தின்மேல் போட்டு வரலாம்.

(8) அண்டச்சுண்ணம்; முடக்கொத்தான் எண்ணெய்; அகஸ்தியர் குழம்பு; வாதராக்ஷச எண்ணெய் முதலியவைகளிலொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(9)

| | | |
|---|---|---|
| அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) | டிராம் | 1½ |
| ஸ்பிரிட் வைனம் ரெக்டிபைட் (Spirit Vinum Rectified) | ,, | 4 |
| ஆஸிட் அஸிடிக் டில் (Acid Acetic Dil) | ,, | 4 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 10 |

ஒன்றுசேர்த்துக் கரைத்துக்கொண்டு ஒரு துணியில் நனைத்து மேல் பிரயோகமாக மட்டும் பீஜத்தின்மேல் போட்டு வரலாம்.

(10) பிஸ்மத் சப்நைட்ரஸ் (Bismuth Subnitras) இதை வேண்டிய அளவு யெடுத்து தண்ணீர்விட்டுக் குழப்பி மேல் பிரயோகமாகமட்டும் பீஜத்தின் மேல் தடவி வரலாம்.

| | | |
|---|---|---|
| (11) டிஞ்சர் புல்ஸாட்டில்லா (Tincture Pulsatillae) | துளி | 3 |
| * டிஞ்சர் அக்கோனைட் (Tincture Aconite) | ,, | 2 |
| சிரப் சிம்பிள் (Syrup Simple) | டிராம் | ½ |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கலக்கிக்கொண்டு 1-முதல் 3 வயதுக் குழந்தைகளுக்கு 4-மணிநேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டிவீதம் கொடுத்து வரலாம்.

## அபானவெடிப்பு—Anal Fissure

குழந்தைகள் மலம் கழித்தவுடன் சுத்திசெய்யாமல் காயவிட்டு விடுவதினாலாகிலும்; மலக்குடலில் கீரைப்பூச்சி அதிகரித்து, ஆசனவாயிலில் நமச்சலையுண்டுபண்ணி சதா சொறிந்துகொண் டிருப்பதினாலாகிலும்; ஆசனவெடிப்புண்டாகலாம். வெடிப்புகள் அதிகமுண்டா யிருந்தால், சிலசமயம் இரத்தம் கசிவதுமுண்டு.

### சிகிச்சை

(1) வேப்பெண்ணெயை ஆசனவாயில் தடவி வரலாம்.

(2) மாசிக்காயைப் பசுவெண்ணெய்யில் குழைத்துப் போடலாம்.

| | | |
|---|---|---|
| (3) * எக்ஸ்ட்ராக்ட் பெல்லடோனு வெர்டி (Extract Bolladonnae Verdi) | டிராம் | 3 |
| அங்குவண்டம் பிளம்பி அஸிட்டஸ் (Unguentum plumbi Acetas) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து வெளிப் பிரயோகமாக மட்டும் தடவி வரலாம்.

## அமரம்:—

கண்கட்டி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## அம்மைக்கட்டு—Mumps—Parotitis

இதைக் கூகைவீக்கம்; கூகைக்கட்டு; பொன்னுக்கு வீங்கி; புட்டாளம்மை; பொன்னி; நகைக்குவீங்கி; கன்னக்கட்டு என்றெல்லாம் சொல்லப்படும். எச்சலூறும் கோளங்களில் (Parotid Glands) வீக்கம் காணுவதால் அம்மைக்கட் டுண்டாகிறது. அம்மைக்கட்டும் ஒருவரிடமிருந்து மற்றவர்களுக்குத் தாவும் தன்மையுள்ளதாக விருக்கிறது. இது ஒரு கிருமியினுலேற்படுவதாகும். ஐந்து வயதிற்குமேற்பட்ட குழந்தைகளுக்கும், வயது வந்தவர்களுக்கும் மட்டுமே அம்மைக்கட்டுண்டாகலாம். அம்மைக்கட்டு விசேஷமாக மழைக்காலத்திலும், குளிர்காலத்திலுமே வரக்கூடியதாக விருக்கிறது.

---

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

ஆரம்பத்தில் இலேசான காச்சலுடன், தாடையை அசைக்கும்போதும் பேசும்போதும் ஏதோ பிடிப்பாகவும், வலியிருப்பதாகவும் தோன்றும். சாப்பிடும்போதும் தண்ணீர் குடிக்கும்போதும் பெரிய வலியுண்டாகும். பின் காதின் கீழ் சற்று வீங்கித் தெரியும்; இருக்க இருக்க கழுத்து, காதோரமாகவும் வீங்கும். சில சமயங்களில் வீக்கம் நெஞ்சுக்குழிமட்டு மிருக்கும். ஆரம்பத்தில் வீக்கம் ஒரு பக்கம்தான் யேற்படும். இரண்டு மூன்று தினத்திற்குப் பின் அந்தப் பக்கம் மறைந்து மறுபக்கம் வீங்கும். சிலருக்கு ஒருபக்கம் வீக்கம் கண்ட இரண்டு மூன்று தினத்தில் எதிர் பக்கத்திலும் வீக்கம் காணுவதுண்டு. சிலருக்கு காச்சலில்லாமலேற்படுவது முண்டு. சிலருக்குத் தலைவலி யிருக்கும்.

### சிகிச்சை

(1) வேப்பங்கொழுந்தையும், மஞ்சளையும் சமமாயரைத்துப் பூசி வரலாம்.

(2)

| | | |
|---|---|---|
| லைக்கர் அமோனியம் அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) | டிராம் | ½ |
| பொட்டாஷியம் சிட்ரஸ் (Potassium Citras) | கிரைன்ஸ் | 5 |
| ஆக்குவா சின்னமோனி (Aqua Cinnamoni) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, 4-மணி நேரத்திற் கொருதரம் 5-முதல் 12-வயதுக் குழந்தைகளுக்கு இரண்டு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

(3) * லினிமென்ட் பெல்லடோனா (Liniment Belledonnae) இதைப் பஞ்சில் நனைத்து, காலை மாலை வெளிப்பிரயோகமாக வீக்கத்தின்மேல் தடவி வரலாம்.

(4)

| | | |
|---|---|---|
| * டிஞ்சர் ஐயோடின் (Tincture Iodine) | டிராம் | ½ |
| * டிஞ்சர் அக்கோனைட் (Tincture Aconite) | ,, | ½ |
| டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | ,, | 2 |
| லினிமென்ட் குளோரோபாம் (Liniment Chloroform) | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, வெளிப்பிரயோகமாக மட்டும் வீக்கத்தின்மேல் தடவி வரலாம்.

## அரண் கட்டுதல்:—

ஈர்ப்புண் என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## அழுகை—Crying

குழந்தைகள் பேசும்படியான நிலைமையையடையும் வரையில், தங்களுக்குத் தேவையானவைகளை யடைவதற்கு அழுகையே தங்கள் பாஷையாக

* அதிக நஞ்சானதால், வாயில் படாமல் வெளிப்பிரயோகம் மட்டும் செய்து வரவேண்டும்.

வைத்திருக்கின்றன. குழந்தைகளுடைய சுவாசாசயங்கள் வளர்ச்சியடைய அழுகையே பிரதானமானதாயிருக்கும்.

அநேகமாய் குழந்தைகள் அழுவதற்கு வெளிக்காரணங்களே முக்கியமானதாக விருக்கலாம். அதிகமான துணிகளைச் சுற்றிவைத்திருப்பதனால் குழந்தை தன் கைகால்களை உதறி, தன் இஷ்டப்படி இருக்கமுடியாததனாலும், குழந்தைக்குப் போர்த்தியிருக்கும் துணிகள் குழந்தையை அழுத்திக் கொண்டிருப்பதனாலும், மூத்திரம் பெய்து துணிகள் நனைந்துபோயிருப்பதனாலும், அரை குறையான ஆகாரத்தினாலும், அதிகமான ஆகாரத்தினாலும் குழந்தைகள் அடிக்கடியழலாம்.

மேலும் குழந்தைகள் வியாதியின் காரணமாகவும் அழும்படியாக விருக்கிறது. வியாதியின் காரணமாக குழந்தைகள் அழுமானால், அது தனிப்பட்டவிதமாக நன்ருய்த் தெரிந்துகொள்ளும்படியாக விருக்கும். மூளை நரம்பு வலியினால் குழந்தையழுமானால், அது திடீரென்றும், நீட்டியல்லாமல் குறைந்த விதமாக அழும்; ஆனால், சப்தம் மட்டும் அதிகமாயிருக்கும்.

வயிறு, அடிவயிறு முதலியவற்றில் வலியோ இதரக் கோளாறுகளோ உண்டானால், குழந்தை நீட்டியழும். தொண்டை நாளங்களின் கோளாறுகளினாலாவது, தொண்டை வலியினாலாவது, குழந்தை யழுமானால், புகைந்து இருமி யழுவதைப்போ விருக்கும். மேலும், ஒரு ஊது சப்தமு முண்டாகும். கடுமையான தோஷவியாதியினாலாகிலும்; நெஞ்சு வீக்கத்தினாலாகிலுமானால் குழந்தை சரியானவிதமாய் அழமுடியாமல், சுவாசத் தடைபட்டு, அதனால் கஷ்டப்பட்டு அழுவது நன்ருகத் தெரியும்.

குழந்தைகள் அழும்போதெல்லாம், முலைக்கொடுப்பது கெட்டதொரு வழக்கமாகும். குழந்தைகளுக்குக் குறிப்பிட்டநேரங்களில் பால் புகட்டிவந்தால், குழந்தை பாலுக்காக அழவேண்டிய திருக்காது. அப்போது குழந்தை அழுமானல் வேறு காரணத்தால் அழுகிறதென்று தெரிந்துகொள்ள வியலும். தாதிப்பாலும், புகட்டுப்பாலும் குடித்துவரும் குழந்தை அடிக்கடி வயிற்றுவலியும், வயிற்றுப்பொருமலும், அஜீரணமும் கண்டு அழுவதுண்டு.

குழந்தை பசியினாலல்லாமல், இதர காரணங்களினால் அழுவதாயிருந்தால், அந்தக் காரணத்தைச் சரியாய் அறிந்துகொள்ள வேண்டுமானால், சமசீதோஷ்ணமுள்ள ஒரு அறையில் உடைகளொன்று மில்லாது சயனிக்கச் செய்து உற்று கவனித்தால் நன்ருகத் தெரிந்துகொள்ள முடியும். நெஞ்சு வீக்கத்தினாலாவது, வயிற்றுப் பொருமலினாலாவது குழந்தை உபத்திரவப்பட்டால் நெஞ்சும், வயிறும் ஊதியிருப்பது நன்ருகத் தெரியும். துணிகளினால் கஷ்டப்பட்டு அழுததாக விருந்தால் துணிகளை நீக்கியவுடன்

குழந்தை நிம்மதியாக விருக்கும். குளிரினாலோ உஷ்ணத்தினாலோ பாதிக்கப்பட்டிருந்தால், சமசீதோஷ்ண நிலைமையிலிருப்பதால் அதன் அழுகை ஓய்ந்துவிடும். பின்னர் அததன் காரணங்களைத் தெரிந்துகொண்டு சிகிச்சைகள் செய்து வரலாம்.

## அறைவீட்டில் குழந்தைகளுக்குக் கழுத்துவீங்கி யழுதல்:—

குழந்தைப் பிறந்த இரண்டு மூன்று நாட்களுக்குப் பின், அதிகமான குளிர் வாடையினாலாவது, சீதளம் கொள்வதினாலாவது, குழந்தையின் புறங்கழுத்து வீங்கி முழங்கால், முழங்கை சில்லிட்டிருக்கும். அத்துடன் வயிற்றுவலியும் உண்டாகி சதா குழந்தை நச்சுநச்சென் றழுதுகொண்டிருக்கும்.

### சிகிச்சை

(1) ஒரு தேக்கரண்டி வெற்றிலைச்சாற்றில் இரண்டு அரிசியெடை கஸ்தூரியைக் கரைத்துக் கொடுத்து வரலாம்.

(2) ஒரு தேக்கரண்டி வெற்றிலைச்சாற்றில் இரண்டு அரிசியெடை கஸ்தூரியையும் 6-அரிசியெடை திப்பிலித்தூளையும் சேர்த்துக் கொடுத்து வரலாம்.

(3) கஸ்தூரிமாத்திரை கொடுத்து வரலாம். செய்முறை 6-பாகம் பார்க்கவும்.

## ஆகார வெறுப்பு—Anorexia—Loss Of Appetite

குழந்தைகளுக்கு ஆகார வெறுப்பேற்பட, திரேக அசதியும் சுரமும், மலச்சிக்கல், பல் முளைக்கும்போதுண்டாகும் வலி இவைகள் காரணமாயிருக்கலாம். சில குழந்தைகள் பராக்குப் பார்த்துக்கொண்டுகூட பால் குடியாமலும், சாதம் உட்கொள்ளாமலு மிருக்கலாம். தூக்க மிகுதியினாலும் குழந்தை ஆகாரமுண்ணாமலிருக்கலாம். ஆதலால், தக்கக் காரணம் தெரிந்துதான் குழந்தைகளின் ஆகாரவெறுப்புக்குச் சிகிச்சைகள் செய்யவேண்டும்.

மலச்சிக்கலிருந்தால், மலச்சிக்கலைப் போக்கவேண்டியது. வேடிக்கைப்பார்த்துக்கொண்டு பால் குடியாமலோ, சோறுதின்னாமலோ விருந்தால், வேடிக்கைக் காண்பித்துக்கொண்டே ஆகாரம் கொடுக்க வேண்டியது. அசதி, சுரம் இவைகளினால் குழந்தை ஆகாரம் உட்கொள்ளாவிட்டால், அசதி, சுரம் இவைகளுக்குத் தக்க சிகிச்சைகள் செய்யவேண்டும். பல் முளைக்குங் காலத்திலுண்டாகும் நோயினால் ஆகாரம் உட்கொள்ளாவிட்டால் அதற்குத் தக்க சிகிச்சைகள் செய்யவேண்டும்.

### சிகிச்சை

பால் குடிக்கும் குழந்தைகள் எக்காரணத்தினாலாவது பால் குடிக்காமலிருந்தால்:—

(1) அதிமதுரத்தை மூலைப்பாலிலரைத்து, மூலைக்காம்புகளில் தடவி, குழந்தையின் வாயில் வைத்து கொஞ்சநேரம் பிடித்துக்கொண்டிருந்தால்; குழந்தை வேடிக்கையினுலாவது, இதர காரணங்களினுலாவது பால் குடிக்காவிட்டாலும், அதிமதுரத்தின் உருசி வாயில் பட்டவுடன் பால் குடிக்கும்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அமுக்கிராவேர் | ரூபாயெடை | $\frac{1}{8}$ | பறங்கிப்பட்டை | ரூபாயெடை | $\frac{1}{8}$ |
| சத்திச்சாரணைவேர் | ,, | ,, | சுக்கு | ,, | ,, |
| மூக்கிரட்டைவேர் | ,, | ,, | மிளகு | ,, | ,, |
| அவுரிவேர் | ,, | ,, | திப்பிலி | ,, | ,, |
| மிளகரணைவேர் | ,, | ,, | கடுகு | ,, | ,, |
| கருங்காலியிலை | ,, | ,, | சீரகம் | ,, | ,, |
| கஞ்சாங்கோரை | ,, | ,, | பேராத்தை | ,, | ,, |
| சன்னலவங்கப்பட்டை | ,, | ,, | பசும்பால் | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்துப் பசும்பால் விட்டரைத்து வடிகட்டி, காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| காட்டாத்திப்பூ | ரூபாயெடை | $\frac{1}{4}$ | வெள்ளிலோத்திரம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| வில்வப்பழம் | ,, | $\frac{1}{4}$ | யானைத்திப்பிலி | ,, | $\frac{1}{4}$ |
| வெட்டிவேர் | ,, | $\frac{1}{4}$ | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 6-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 2-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், காலை மாலை ஒரு தேக்காண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

மலச்சிக்கலினுல் குழந்தை ஆகாரம் உட்கொள்ளாவிட்டால், 1, 2, 3-இலக்க மருந்துகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

(4) ஐட்ரார்ஜரி கம் கிரீட்டா (Hydrargeri Cum Creta) கிரைன்ஸ் 2
சோடியம் பைகார்ப் (Sodium Bicarb) ,, 4

ஒன்றுசேர்த்து 4-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, காலை மாலை பிறந்தது முதல் ஒரு வயதுக் குழந்தைகளுக்கு ஒருபாகம் வீதமும், 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 2-பாகம் வீதமும், தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(5) பெனுல்ப்தாலின் (Phenolphthalein) கிரைன்ஸ் $\frac{1}{2}$
சக்காரின் லாக்டிஸ் (Saccharine Lactis) ,, 4

ஒன்றுசேர்த்து 4-பாகமாகப் பிரித்து, பிறந்ததுமுதல் ஒரு வயதுக் குழந்தைகளுக்கு ஒரு பாகம் வீதமும்; 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 2-பாகம் வீதமும், காலை மாலை தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(6) சிரப் ஐப்போ பாஸ்பேட் கோ (Syrup Hypophos-pate Co) துளி 40
மால்டின் (Maltine) ,, 45
தண்ணீர் அவுன்ஸ் ½

ஒன்றுசேர்த்து பிறந்ததுமுதல் ஒரு வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி வீதமும், 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 2-தேக்கரண்டி வீதமும் நாள் ஒன்றுக்கு 3-வேளை கொடுத்து வரலாம்.

பல் முளைப்பதினால் குழந்தைகளுக் குண்டாகும் ஆகார வெறுப்புக்கு, 1, 2, 3, 5-இலக்க மருந்துகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

(7) அன்டிபைரின் (Antipyrin) கிரைன்ஸ் ½

இதை இரவில் படுக்கைக்குப் போகுமுன் வாயில் கொட்டி விழுங்கச்செய்து கொஞ்சம் தண்ணீரைக் குடிக்கக் கொடுத்து வரலாம்.

### ஆசனவெடிப்பு:—

அபான வெடிப்பென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

### இரத்தக்குறைவு:—

பாண்டு யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## இருமல்—Cough

இருமலென்பது ஒருதனிப்பட்ட வியாதியல்ல. பிறருக்கு தெரியும்படியாக சப்தம் உண்டுபண்ணும் குணத்திலிருந்து, இது ஒரு வியாதியென்று தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. இருமல் நுரையீரல் (Lungs) வியாதிகளுக்கு முன் அறிவிப்பதான செயலுடையதாக விருக்கிறது.

சளிக் கோளங் (Mucous Membrane) புண்பட்டு விடுவதினாலாகிலும், சுவாசிக்கும்போது உட்செல்லும் தூசிகள், சுவாசப்பாதையிலுள்ள சளிக்கோளங்களில் போய்ப் படிவதினாலாகிலும், வயிற்றுக் கோளாறுகளினாலாகிலும் இருமலேற்படலாம். தொண்டையின் கீழ்ப்பாகம் வீங்குவதினாலும், இருமல் ஏற்படலாம். இருமலுண்டாயிருக்கும்போது தடிமன்பிடித்திருக்கும்; அல்லது தடிமன் பிடித்ததைப்போல் மூக்கில் சளிவடியலாம். நெஞ்சிலும், தொண்டையிலுமுள்ள கோழை (Mucous) களை வெளியேற்றி சுவாசத்திற்கு இடைஞ்சலின்றி சுவாசப்பாதைகளை (Respiratory Passages) சுத்திசெய்து நுரையீரலின் வேலையைச் சரியான விதமாகச் செய்யும்படியாக இருமலானது உதவியாக விருக்கிறது.

சாதாரண இருமலைப்பற்றி அலக்ஷியமாகவிருந்தால் பின் பல கெடுதலுள்ள ரோகங்களைச் சம்பவிக்கும்படியாகச் செய்துவிடும்.

**சிகிச்சை**

(1) இண்டம்வேர் ரூபாயெடை 3 திப்பிலி ரூபாயெடை ¼
தூதுவேளைவேர் ,, 3 வெந்தயம் ,, ¼
சுக்கு ,, ¼

ஒன்று சேர்த்துப் பொடித்து, 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸளவாகக் கொடுத்து வரலாம்.

(2) மாதுளம்பழச்சாறு தேக்கரண்டி ½ இஞ்சிச்சாறு தேக்கரண்டி ½
தேன் ,, ½

ஒன்று சேர்த்து, இந்த அளவாகக் காலே மாலே கொடுத்து வரலாம்.

(3) பயிரவவடி மாத்திரை; லகுகட்டுவாங்க மாத்திரை; சுவர்ண கோரோசனை மாத்திரை; லகுதூதுளேச் சூரணம்; மகாதூதுளேச் சூரணம்; திப்பிலி ரசாயணம்; மகாதூதுளேக் கிருதம்; வஜ்ஜிரவல்லி லேகியம்; இராஜ கேசரிச் சூரணம்; இவைகளி லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(4) * டிஞ்சர் பெல்லடோனு (Tincture Belladonnae) துளி 5
வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) ,, 6
சிரப் டோலு (Syrup Tolu) ,, 13
தண்ணீர் டிராம் 3

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

(5) லிக்கர் அமோனியா அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) டிராம் 2
வைனம் அன்டி மோனியாலிஸ் (Vinum Antimonialis) ,, ½
சிரப் டோலு (Syrup Tolu) ,, 1½
தண்ணீர் அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## இரைப்பூச்சி—Roundworm

இதையே "நாக்குப்பூச்சி, குடர்கிருமி" என்று சொல்லப்படும். இரைப்பூச்சி மிலத்திலுள்ள நாக்குப்பூச்சியைப்போல், நீளமாக விருக்கும். இது நான்கங்குல முதல் பதினைந்தங்குல நீளமுள்ளதாய், தவிட்டு நிறமாக மலக்குடலில் சஞ்சாரம் செய்யும். இரைப்பூச்சி சாதாரணமாக குழந்தை

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

களுக்கோ, வயது வந்தவர்களுக்கோ 30-முதல் 40-வரையில் குடலி லிருப்ப துண்டு. விசேஷமாக இக் கிருமி 12-வயதிற் குட்பட்ட சிறுவர்களிடமே அதிகமாக வாசம் செய்கின்றன.

அசுத்தமான விடங்களிலுள்ள இப் பூச்சிகளின் முட்டைகள் ஆகாரத்தின் வழியாக உட்சென்று, கிருமியாகி, ஆணும் பெண்ணும் கலந்து, அதி லிருந்து கிருமிகள் பரவி விடுகின்றன. அதிகமாகப் பூச்சிகள் பெருகிவிட் டால் மலத்தோடாகிலும், வாந்தியோடாகிலும் வெளிப்பட்டுவிடும். சமயா சமயங்களில் நாசித்துவாரங்களின் வழியாக வெளிப்பட்டு விடுவதுமுண்டு. இப் பூச்சிகள் சில சமயங்களில் ஒன்றுசேர்ந்து சுருண்டுக்கொண்டு தொண் டையின் அடிபாகத்தையாவது, ஆசனத்துவாரத்தையாவது அடைத்து ஆபத்தை விளைவிக்கும்.

இப் பூச்சிகள் பெருக்கத்தினுல், இரப்பையிலும் வாசம் செய்ய ஆரம்பிப்பதி ஞலும், இயற்கையிலேயே இப் பூச்சிகள் ஒருவித நீரைக் கக்குவதினுலும், வயிற்றுவலியும், வாந்தியும் உண்டாகும். மேலும் இப் பூச்சிகளின் விஷத் தால் இராக் காச்சலும், ஆகார வெறுப்பும், வயிற்றுப் பொருமலும், அரோ சிகமும், வயிற்ருேட்டமும் இழுப்பு முண்டாகும். சில சமயங்களில் புழுக் கள் குடலைப் பின்னிக்கொள்ளுவதால், வயிற்றைப் பிசைந்து சொல்ல முடி யாத வயிற்றுவலியை உண்டு பண்ணும்.

இரைப்பூச்சி அதிகம் உள்ளவர்களுக்கு முகம் வெளுத்திருக்கும்; ஆசனவாயி லும், மூக்குத் துவாரங்களிலும் பசபசவென்று நமச்சலிருந்துக் கொண்டே யிருக்கும்; ஓயாத நித்திரையுண்டாகும்; தூக்கத்தில் பற்கடிப்பு யேற்படும்; அயர்ந்த நித்திரையில் குழந்தை திடுக்கிட்டெழுந்திருக்கும்; அடிவயிறு திரண்டு கற்போலிருக்கும்; சில சமயம் வயிற்ருேட்ட மேற்படும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | பிரண்டைதண்டு | ருபாயெடை 3 | ஓமம் | ருபாயெடை | 3 |
| | பேய்ப்பீர்க்குவேர் | ,, 3 | புரசம்விரை | ,, | 3 |

ஒன்று சேர்த்துத் தூள்செய்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன் ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் 3-நாளைக்குக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | சிற்ருமணக்கெண்ணெய் அவுன்ஸ் | 12 | இரசகற்பூரம் | ருபாயெடை | $\frac{1}{4}$ |
| | | | சுக்கு | ,, | $\frac{1}{2}$ |
| | கழற்சியிலைச்சாறு ,, | 6 | வசம்பு | ,, | $\frac{1}{2}$ |
| | பாகவிலைச்சாறு ,, | 6 | வெள்ளைப்பூண்டு | ,, | $\frac{1}{2}$ |
| | சிவகரந்தை ருபாயெடை | $\frac{1}{2}$ | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, 3-நாள் காலை யில் மட்டும் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

குறிப்பு:—இந்த மருந்தினல் கிருமி வெளிப்படவில்லையானல் மறு வாரத்தில் 3-நாளைக்குக் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | சான்டோனின் (Santonine) | கிரைன்ஸ் | 2 |
| | சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 8 |
| | பல்விஸ் ரீயை (Pulvis Rhei) | ,, | 8 |

ஒன்று சேர்த்து, 8-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 1-முதல் 3 வயதுக் குழந்தைகளுக்கு ஒருபாகம் வீதமும், 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு 2-பாகம் வீதமும், 6-முதல் 12-வயதுச் சிறுவர்களுக்கு 4-பாகம் வீதமும் ஒரே ஒரு நாளைக்குமட்டும் காலையிலும் மாலையிலும் சமன் சீனியுடன் சேர்த்துக் கொடுத்து மறுநாள் காலையில் 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி சிற்றுமணக் கெண்ணெயும், 3-முதல் 6 வயதுக் குழந்தைகளுக்கு 2-தேக்கரண்டி சிற்றுமணக்கெண்ணெயும், 6-முதல் 12-வயதுச் சிறுவர்களுக்கு 3, 4-தேக்கரண்டி சிற்றுமணக்கெண்ணையும் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | சான்டோனின் (Santonine) | கிரைன்ஸ் | 2 |
| | சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 8 |

ஒன்று சேர்த்து 8-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு இரவு படுக்கைக்குப் போகும்போது 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ½-தேக்கரண்டி சிற்றுமணக்கெண்ணெயில் ஒருபாகம் வீதமும்; 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி சிற்றுமணக்கெண்ணெயில் 2 பாகம் வீதமும், 6-முதல் 12-வயதுச் சிறுவர்களுக்கு ஒரு தேக்கரண்டி சிற்றும்ணக்கெண்ணெயில் 4-பாகம் வீதமும் குழப்பிக் கொடுத்து, மறுநாள் காலையில் 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி சிற்றுமணக்கெண்ணெயில் ஒருபாகம் வீதமும், 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு 2-தேக்கரண்டி சிற்றுமணக்கெண்ணெயில் 2-பாகம் வீதமும், 6-முதல் 12-வயதுச் சிறுவர்களுக்கு 4-தேக்கரண்டி சிற்றுமணக்கெண்ணெயில் 4-பாகம் வீதமும் கலந்து கொடுக்கலாம்.

குறிப்பு:—இம் மருந்துகளைக் கொடுத்ததில் பூச்சிகள் விழவில்லையானல், 3-நாளைக்குப் பிறகு இதேவிதமாகக் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (5) | ஆஸிட் ஐட்ரோகுளோரிக் டில் (Acid Hydrochloric Dil) | துளி | 15 |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | ,, | 10 |
| | இன்பியூஷன் குவாஷியா (Infusion Quassiae) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 4, 5-இலக்க மருந்துகளால் கிருமிகள் விழுந்த பின் நாள் ஒன்றுக்கு 2-தடவை 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி வீதம் 3-நாள் கொடுத்து வந்தால் மறுபடியும் கிருமிகளுண்டாகாம லிருக்கும்.

## இழுப்பு—Convulsions

இதைப்பற்றி, 80-வது பக்கம் சவிஸ்தாரமாகக் கூறப்பட் டிருக்கிறது.

## ஈரல் பெருக்கும்:—

சுரக்கட்டி யென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## ஈர்ப்புண்—Gum Boil—Parulis

அஜீரணத்தினுலாவது பற்களைச் சுத்தமாக வைத்துக்கொள்ளாததினுலாவது, பல்லீருகளில் வீக்கம் கண்டு சீழ்பிடித்து புண்ணுக்கும். இதை அரணகட்டுதல், பல்லரணையென்றும் சொல்லுவர். பல்லீருகளிலிருந்து இரத்தம் கசிவதுமுண்டு.

### சிகிச்சை

(1) பச்சை நன்னரிவேர் ரூபாயெடை $\frac{1}{2}$, இரண்டவுன்ஸ் சுடுதண்ணீரில் அரைத்துக் கலக்கி வடிகட்டி காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2)

| | | |
|---|---|---|
| பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) | கிரைன்ஸ் | 5 |
| சுடுதண்ணீர் | அவுன்ஸ் | 10 |
| படிகாரம் (Alum) | டிராம் | 1 |
| பன்னீர் (Rose Water) | அவுன்ஸ் | 2 |
| குளிரவைத்த சுடுதண்ணீர் | ,, | 2 |

முதலில், பொட்டாஷியம் குளோரசைச் சுடுதண்ணீரில் கரைத்துக் கொண்டு பின்னர் காயவைத்து ஆரவைத்த தண்ணீருடனும் சேர்த்துப் படிகாரத்தையும் கரைத்து, நாள் ஒன்றுக்குப் பல தடவை வாயில் ஊற்றிக் கொப்புளிக்கச் செய்யலாம்.

(3)

| | | |
|---|---|---|
| குளோரோபாரம் (Chloroform) | டிராம் | 1 |
| ஆஸிட்டானிக் (Acid Tannic) | ,, | 1 |
| மெந்தால் (Menthal) | ,, | $\frac{1}{2}$ |
| டிஞ்சர் கராமெரியா (Tincture krameria) | அவுன்ஸ் | 1 |
| தண்ணீர் | ,, | 3 |

ஒன்று சேர்த்து அதிகமான இரத்தம் வடிந்தால், நாள் ஒன்றுக்குப் பல தடவை வாய் கொப்புளிக்கச் செய்து வரலாம்.

## ஈளை இருமல்—Phthisis

இது தொத்துநோய் இனத்தில் சேர்ந்தது. இதை க்ஷயரோகமென்றும் சொல்லப்படும். க்ஷயரோகஸ்தர்களுடைய எச்சிலிலிருந்தும், மலத்திலிருந்தும், சுவாசத்திலிருந்தும் கிருமிகள் பிறர்க்குத் தொத்தி க்ஷயரோகத்

தைப் பரப்புகின்றது. தாய் க்ஷயரோகியா யிருந்து கர்ப்பம் தரித்துப் பிறந்தாலொழிய, ஒரு வயதுக் குழந்தைகளுக்குச் க்ஷயரோகம் உண்டாவதில்லை. குழந்தைகள் நடக்க வாரம்பித்தபிறகே க்ஷயரோகிகளின் மலம், எச்சில், சுவாசம் இவைகளினுல் வெளிப்படும் கிருமிகள் தொத்துகின்றன.

மூக்கில் சதை வளர்வதினுலும், தொண்டை வீங்குவதினுலும் குழந்தைகளுக்கு இந்நோய் உண்டாகலாம். மூச்சுவிடும்போது நெஞ்சில் ஒருவிதமான சப்தமுண்டாகும். இதைச் சப்தவேணுவால் (Stethoscope) அறிந்துக்கொள்ள முடியும். ஈளை இருமலுண்டானுல், நெஞ்சில் வலியும், நடுமுதுகு வலியும் உண்டாகி சாயந்திரவேளைகளில் இருமல் அதிகமாயும், திரேகோஷ்ணம் மிகுந்துமிருக்கும். இருமும் சமயம் நெஞ்சு பிளந்து போவதைப்போன்ற வலி யேற்பட்டுச் சளிக்கட்டிகள் மஞ்சள் நிறமாகவேனும், அத்துடன் இரத்தம் கலந்தேனும் வெளிப்படும். க்ஷயரோகம், சரீரத்தை வெகு துரிதத்தில் க்ஷீணிக்கச் செய்துவிடுதால், க்ஷீணிக்கச் செய்யும் ரோகமென் (Consumption-Wasting Disease) றும் சொல்லப்படும். இருமலுக்குப் பின் வெளிப்படும் சளியானது துற்நாற்றத்துடனும், அதிகமான இரத்தம் கலந்ததாயு மிருக்குமானுல் அசாத்தியமானதென்றே யெண்ணலாம். க்ஷயரோகிகளுக்கு மரணம் உண்டாகும் அரைமணி நேரத்திற்கு முன்னும் ஒருவித மரணக் குறிகளுமின்றி இருப்பார்கள்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) அதிமதுரம் | ரூபாயெடை | 1 | மிளகு | ரூபாயெடை | 1 |
| கோஷ்டம் | ,, | 1 | கடுகுரோகிணி | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 | அக்ரகாரம் | ,, | 1 |
| இலவங்கப்பட்டை | ,, | 1 | வெளுச்சிப்பிசின் | ,, | 1 |
| நாகேசுரம் | ,, | 1 | தேத்தாவிரை | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | சிற்றரத்தை | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | இந்துப்பு | ,, | 1 |

ஒன்று சேர்த்து, ஆடாதோடையிலைச் சாறுவிட்டு 9-மணிநேரம் மைபோலரைத்து, ஒரு பெரிய பட்டாணிக்கடலைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து, காலை மாலை ஒரு மாத்திரைவீதம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) கண்டங்கத்திரிவேர் | ரூபாயெடை | ½ | இண்டங்கொழுந்து | ரூபாயெடை | ½ |
| | | | திப்பிலி | ,, | ½ |
| தூதுவேளைவேர் | ,, | ½ | வெள்ளைப்பூண்டு | ,, | ½ |

ஒன்று சேர்த்து, 24-அவுன்ஸ் தண்ணீரில்போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(3) ஆடாதோடையிலை — ரூபாயெடை $1\frac{1}{2}$ செம்முள்ளியிலை — ரூபாயெடை $1\frac{1}{2}$
தூதுவேளையிலை — ,, $1\frac{1}{2}$
கண்டங்கத்திரியிலை — ,, $1\frac{1}{2}$ சங்கனிலை — ,, $1\frac{1}{2}$

ஒன்று சேர்த்துப் பிட்டவியலாக அவித்துப் பிழிந்தசாறு அவுன்ஸ் ஒன்றில்:—

சுக்கு — ரூபாயெடை $\frac{1}{4}$ திப்பிலி — ரூபாயெடை $\frac{1}{4}$
மிளகு — ,, $\frac{1}{4}$ இந்துப்பு — ,, $\frac{1}{4}$

இவற்றை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்த சூரணத்தில் 4-குன்றி மணியிடை போட்டுக் கலக்கி, காலை மாலை இந்த அளவாகக் கொடுத்து வரலாம்.

(4) கபாங்குச லேகியம்; அப்பிரகக்கோரோசனை மாத்திரை; ராஜ அப்ரகச் செந்தூரம்; சிங்கிபஸ்பம்; ராஜமார்தாண்ட லேகியம்; சந்திரகாசத்தைலம்; பவளபஸ்பம்; துருசுபஸ்பம்; மகாவில்வாதி லேகியம்; வஜ்ஜிரவல்லி லேகியம்; திரிலோகசூடாமணி மாத்திரை; திரிவிக்ரம ரசச்செந்தூரம்; முதலியவைகளி லொன்றைக் கொடுத்து வரலாம். செயமுறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (5) | டார்டார் எமட்டிக் (Tartar Emetic) | கிரைன் | 1 |
| | வைனம் இப்பிகாக் (Vinum Ipecac) | டிராம் | 4 |
| | சிரப் சிம்பிள் (Syrup Simple) | அவுன்ஸ் | 1 |
| | ஆக்கு டிஸ்டில் (Aqua Distilled) | ,, | 6 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு வாந்தியுண்டாகும் வரை 15-நிமிஷத்திற்கு ஒருதரம், 2-தேக்கரண்டிவீதம் கொடுத்து, வாந்தியான பின் 2-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இதை அதிகமான சளிக்கட்டி உபத்திரவம் செய்யும் சமயம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | பொட்டாஷியம் ஐயோடைட் (Potassium Iodide) | கிரைன்ஸ் | 4 |
| | * லைக்கர் ஆர்சனிக் காலிஸ் (Liquor Arsenicalis) | துளி | 2 |
| | எக்ஸ்ட்ராக்ட் கிளிசரிசா லிக்குட் (Extract Glycyrrhizaa Liquid) | ,, | 15 |
| | ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | டிராம் | 4 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, காலையிலும், மத்தியானத்திலும் ஒவ்வொரு தேக்கரண்டி வீதம் கொஞ்சம் தண்ணீருடன் சேர்த்துக் கொடுத்து இரவு படுக்கைக்குப் போகுமுன்:—

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| பல்விஸ் ரீயை கோ (Pulvis Rhei Co) | கிரைன்ஸ் | 10 |
| தண்ணீர் | டிராம் | 2 |

ஒன்று சேர்த்துக் கொடுத்து வரலாம்.

(7) அதிகமாக சுடுகிறதண்ணீரில் 10, 15-துளி டர்பென்டைனை (Oil Turpentine) போட்டு, அந்த ஆவியை வாயினுல் சுவாசித்து வந்தால் உபசாந்தியாக விருக்கும்.

(8) கடுகெண்ணெயை (Oil Mustard) நடு முதுகில் சூடுபறக்க தேய்த்து வந்தால் நெஞ்சுவலி, முதுகுவலி, சற்று சாந்தப்படும்; கோழையும் இளகி இருமும்போது சளி இலகுவில் வெளிப்பட்டுவிடும்.

## உண்ணுக்கு வளர்தல்—Uvula Elangated—Uvulitis

வயது வந்தவர்களுக்கும் உண்ணுக்கு வளர்தல் உண்டென்றாலும், குழந்தைகளுக்கே விசேஷமாக யேற்படுகிறது. தொண்டை ஆரம்பத்தில், நாசியின் அடிவாரத்துக்கு மேல் தொங்கிக்கொண் டிருக்கும். சிறுநாக்குக்கே உள்நாக்கு, உண்ணுக்கு (Uvula) என்று சொல்லப்படும். வாயைத் திறந்துகொண்டு பார்த்தாலும் வெளித்தோற்றத்திற்கு உள்நாக்கு நன்ருகத் தெரியும்.

அந்த உள் நாக்கின் நுனியானது, சில சமயங்களில் வளர்ந்து நீண்டு, நாக்கின் அடித்தண்டில் தொடுவதால், அரோசிகமான இருமல் ஓயாமலுண்டாகும்; இருமல் வரட்சியாக விருக்கும். சளிவராது.

### சிகிச்சை

(1) ஒரு சிறுதுண்டு காசுக்கட்டியை வாயில் அடக்கி வைத்திருக்கச் செய்யலாம்.

(2) கற்சுண்ணும்பையும், எவாக்ஷாரத்தையும் சமஎடையாக எடுத்து எலுமிச்சம் பழச்சாறுவிட்டு மைபோலரைத்து உள் நாக்கில் தடவி வரலாம்.

(3)

| | | |
|---|---|---|
| சில்வர் நைட்ரேட் (Silver Nitrate) | கிரைன்ஸ் | 8 |
| ஆக்குவா டிஸ்டில் (Aqua Distilled) | டிராம் | 1 |

ஒன்றுசேர்த்துக் கரைத்துக்கொண்டு, காலை மாலை ஒரு மெல்லிய குச்சியில் பஞ்சை சுற்றிக்கொண்டு, அதில் நனைத்து உள்நாக்கில் தடவி வரலாம்.

## உரம்விழுதல்:—

சிசுக்களுக்கு கழுத்துச் சுளுக்கிக்கொள்வதையே உரமென்று சொல்லுவார்கள். ஆறுமாத வயதிற்குட்பட்ட குழந்தைகளுக்குத் தலையின் பாரத்தைத் தாங்கும்படியான சக்தி கழுத்துக்கு இருப்பதில்லை. அதனுல், குழந்தைகளை அஜாக்ரதையாக எடுப்பதினுல், கழுத்துப் பின்புறமாக சாய்ந்து சுளுக்கு உண்டாகிவிடுகிறது. இதனுல் குழந்தைக்கு ஓயாத வலியுண்

டாகி, முக்கி முனைவிக்கொண்டே யிருக்கும்; பால் குடியாது; கழுத்தில் பின்புறம் சிவந்து வீங்கியிருக்கும்.

### சிகிச்சை

(1) கடுகு ரூபாயெடை 20 வெள்ளைப்பூண்டு ரூபாயெடை 20

ஒன்றுசேர்த்து அரைகுறையாக வரைத்து ஒரு மண் கலயத்தில்போட்டு, அதன் வாயை மூடி சீலைமண்செய்து, கலயத்தின் கீழ் பாகத்தில் பல சிறு துளைகளைப் போட்டு, அந்தத் துளைகளுக்கு நேராக ஒரு மங்கு பாத்திரத்தை வைத்து, கலயத்தின் கழுத்துமட்டும் தெரியும்படியாக ஒரு குழித்தோண்டிப் புதைத்து, அந்தக்கலயத்தைச்சுற்றிலும், மேலும் எருவராட்டிகளை அடுக்கிதீயிட்டு எரிக்க காலயத்தின் கீழுள்ள மங்குபாத்திரத்தில் தைலம்வடிந்திருக்கும். அந்தத் தைலத்தை வெளிப்பிரயோகமாக உடம்பெல்லாம் தடவி வரலாம்.

(2) டிஞ்சர் ஆர்னிகா (Tincture Arneca) வை மேல் பிரயோகமாக மட்டும், சிவந்திருக்குமிடங்களில் காலை மாலை தடவி வரலாம்.

(3) அன்டிபிளாஜெஸ்டைன் (Antiphlogistine) என்னு மருந்தை டின்னுடன் சுடுதண்ணீரில் வைத்து சூடுண்டாக்கி துணியில் தடவி, கழுத்தின் பேரில் போட்டு வரலாம்.

## உள்நாக்கு வளர்தல்:—

உண்ணாக்கு வளர்தலென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## எண்ணெய்த் தோங்கல்:—

சில குழந்தைகளுக்கு விரேசனத்திற்காகச் சிற்றாமணக்கெண்ணெயைக் கொடுத்தால் பேதி ஆகாமல், எண்ணெய் வயிற்றுள் தங்கிவிடுவதுண்டு; மேலும், எண்ணெய் சேர்ந்த பலகாரங்களைக் குழந்தைகளுக்குக் கொடுப்பதினால் எண்ணெய்த் தொங்கலேற்படலாம்; எண்ணெய்ச் சேர்ந்த பலகாரங்களினால் எண்ணெய்த் தொங்கலேற்பட்டால் வயிற்றோட்டமுண்டாகும்.

### சிகிச்சை

(1) வெந்தயத்தைக் கஷாயமிட்டுக் கொடுத்து வரலாம்.

(2) ஆவாரைவேரைக் கஷாயமிட்டுக் கொடுத்து வரலாம்.

(3) செம்மண் கட்டியைச் சட்டியில் போட்டு, நெருப்பாக காய்ந்திருக்கும் சமயம் தண்ணீர்விட்டு வடிகட்டி அந்தத் தண்ணீரைக் கொடுத்து வரலாம்.

(4) சிற்றாமணக்கின் வேரைக் கஷாயமிட்டுக் கொடுத்து வரலாம்.

(5) சீயக்காயைப் பொடித்துச் சற்றுநேரம் தண்ணீரில் போட்டிருந்து அந்தத் தண்ணீரை வடிகட்டிக் கொடுத்து வரலாம்.

(6) நாயுருவி வேரைக் கஷாயமிட்டுக் கொடுத்து வரலாம்.

## எலிக்கடி—Rat Bite

குழந்தைகள், ஆகாரம் உட்கொண்டபின், வாய், கை முதலியவைகளை நன்ருகச் சுத்தி செய்து விடவேண்டும். அசுத்தமாக வைத்திருந்தால் இரவில் எலிகள் அந்த வாசனைக்காகக் கடிக்கும்படி நேர்ந்துவிடும். பால் குடிக்கும் குழந்தைகளின் வாயை நன்ருய்த் துடைக்காவிட்டாலும், அந்த பால் மணத்திற்காக எலி கடித்துவிடுவதுமுண்டு. எலியில் பலவகையான விஷத் தன்மை கொண்டவைகளிருக்கின்றன.

எலிக்கடிக்கு ஆரம்ப சிகிச்சையொன்றும் செய்யாவிட்டால், பின்னர் மிகுந்த உபத்திரவத்தை யுண்டுபண்ணும். எலிக்கடியின் விஷத்தன்மை, உடலில் வியாபித்திருந்து வயதாக வயதாக தாளமுடியாத மூச்சுத்திணறலையும், இளைப்பையும் உண்டுபண்ணும்; குளிர் நடுக்கமும், அடிக்கடி சுரமும் காணும்.

### சிகிச்சை

(1) பலவனிலையை அரைத்துக் கடிவாயில் தடவியிருந்து கொஞ்சநேரஞ் சென்றபின் சுடு தண்ணீரால் சமுவலாம்.

(2) பச்சை நன்னாரிவேரை அரைத்துப் பசும்பாலில் கலக்கிக் கொடுத்து வரலாம்.

(3) வெள்ளைப்பூண்டு ரூபாயெடை $\frac{1}{8}$ கொடிக்கள்ளிப்பட்டை ரூபாயெடை $\frac{3}{4}$ ஒன்று சேர்த்தரைத்து நீராகாரத்தில் (பழஞ்சோற்றுத் தண்ணீரில்) 3-நாள் காலையில் மட்டும் இந்த அளவாகக் கொடுத்து வரலாம்.

(4) கார்பாலிக் ஆஸிட் (Acid Carbolic) துளி 6
தண்ணீர் ,, 4
ஒன்று சேர்த்து, கடிவாயில் ஒரு குச்சியில் தொட்டு வைக்கலாம்.

(5) பொட்டாஷியம் பெர்மாங்னேட்டை (Potassium Permanganate) கடிவாயில் சற்றுநேரம் தேய்க்கலாம்.

## ஓயாத சளி—Catarrh

நாசியின் மிருதுவான சதைக்கோளங்களில், வீக்கம் கண்டுவிடுவதினுல், மூக்கில் ஓயாமல் தண்ணீர்போன்ற சளி வடிந்துகொண்டே யிருக்கும்; இதனுல் குழந்தைகள் மூலையுண்ணவும், சுவாசம் விடவும் மிகுதியும் கஷ்டப்படும்.

ஈரமானத் தரையில் குழந்தைகளைச் சயனிக்கச் செய்வதினுலும், விளையாடவிடுவதினுலும், சீதோஷ்ணமாற்ற மேற்படுவதினுலும், குழந்தைகளுக்கு

உடம்பிலும், விசேஷமாகத் தலையிலுமேற்படும் வியர்வையை, அவ்வப் போது துடைக்காததினாலும் குழந்தைகளுக்கு ஓயாத சளி, மூக்கிலிருந்து தண்ணீர்போல் வடிந்துகொண்டிருக்கும். குழந்தைக்குப் பால் கொடுக்கும் தாய்க்குத் தடுமன் பிடித்திருந்தாலும், அதிகமான வியர்வையினால் கஷ்டப்பட்டாலும், சீதளமான வஸ்துக்களை அருந்துவதினாலும், குழந்தைக்கு தடிமன் யேற்படலாம்.

ஆரம்பத்தில் தண்ணீர்போல் வடிந்துகொண்டிருக்கும் சளி பின்னர் தடித்துச் சுவாசிக்கக் கஷ்டத்தை உண்டாக்கும். இதனால் குழந்தை வாய் வழியாகவே சுவாசிக்கவேண்டியதாக விருக்கும். ஓயாத தும்மலுண்டாகும்; கண்ணீர் நீர்வடிந்துகொண்டிருக்கும். சுவாசமிடும்போது கர் புர் என்று கேட்கும். தேகம் கதகதப்பாகவும் கண்சிவந்து மிருக்கும் தலைவலியும், தலையில் யேதோ பாரமிருப்பதுபோற் தோன்றும். சில குழந்தைகளுக்குப் பல்முளைக்கும் சமயத்திலும் இவ்வித சளி யேற்படுவதுண்டு. இந்தச் சளி வியாதி நீடித்திருப்பதில்லை. இரண்டு மூன்று நாட்களில் சளி மறைந்துவிடும் அல்லது தொண்டைப் புகைச்சலையாகிலும் தொண்டைப் புண்ணாகிலுமுண்டாகிவிடும். ஆதலால், ஆரம்பத்திலேயே சளிக்குத் தகுந்த சிகிச்சை செய்யவேண்டும்.

**சிகிச்சை**

(1) தூதுவேளைச் சாற்றில் ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(2) துளசியிலைச் சாற்றில் ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(3) வெற்றிலைச்சாற்றில் குங்குமத்தைக் குழைத்துக் கொதிக்க வைத்து நெற்றி, மூக்கு, மூக்கந்தண்டு இவற்றில் பற்றுப்போட்டு வரலாம்.

(4) செம்மரத்தைத் தண்ணீர்விட்டு உரைத்துக் கொதிக்கவைத்து நெற்றி, மூக்கு, மூக்கந்தண்டு இவைகளில் பற்றுப்போட்டு வரலாம்.

(5) சீமைஓட்டை தண்ணீர்விட்டு உரைத்துக் கொதிக்கவைத்து நெற்றி, மூக்கு, மூக்கந்தண்டு இவைகளில் பற்றுப்போட்டு வரலாம்.

(6) ஜாதிக்காயை முலைப்பாலி லுரைத்துக் கொதிக்கவைத்து நெற்றி, மூக்கு, மூக்கந்தண்டு இவைகளில் பற்றுப்போட்டு வரலாம்.

(7) * கோரோசனைமாத்திரையை வெற்றிலைச்சாற்றில் காலை மாலை கொடுத்து வரலாம்.

* செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(8) வெற்றிலையில் வேப்பெண்ணெயைத் தடவி அனலில் வாட்டி தலை, உச்சி, நெற்றி இவைகளில் ஒற்றிடம் கொடுத்து வரலாம்.

(9) டர்பெண்டைன்னை (Turpentine) நடுமுதுகு, நெற்றி இவைகளில் இலேசாகத் தடவலாம்.

| | | |
|---|---|---|
| (10) ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Sqirit Aether Nitrosi) | துளி | 16 |
| ஸ்பிரிட் அமோனியம் அரோமாட்டிக் (Spirit Ammonium Aromatic) | ,, | 16 |
| டிஞ்சர் ஆரண்டி (Tincture Auranti) | ,, | 12 |
| ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | டிராம் | 4 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (11) அமோனியம் கார்போனஸ் (Ammonium Carbonas) | கிரைன்ஸ் | 12 |
| வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | டிராம் | 1¼ |
| கிளிசரின் (Glycerine) | ,, | 4 |
| ஆக்குவா காம்பர் (Aqua Camphor) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

### ஓயாத வாந்தியும், வயிற்றோட்டமும்:—

210-ம் பக்கம் அதிசார மென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்

### கக்கிருமல்:—

கக்குவானென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

### கக்குவான்—Whooping cough-Pertusis

இதைக் கக்கிருமல், குக்கல்நோய், தாத்தல் என்றும் சொல்லப்படும். கக்குவான் விசேஷமாக மூன்று வயதிற்குட்பட்ட இளங் குழந்தைகளுக்கே அதிகமாகத் தாக்கக்கூடியதொரு தொத்து வியாதியாக விருக்கிறது. பத்து வயதிற்குப் பின்னர் இவ் வியாதி அநேகமாய் ஏற்படுவதேயில்லை. குழந்தை எவ்வளவு வயதிற் குறைந்ததாக விருக்கிறதோ, அவ்வளவிற்கு கக்குவானின் குணம் பயங்கரமா யிருக்கும்; அம்மைரோக முண்டாயிருக்கும்போதும் கக்குவா னிருமலு முண்டாவதுண்டு. இந்த வியாதி குழந்தைகளுக்கு எல்லாக் காலங்களிலும் தாக்கக்கூடியதாக விருப்பினும், விசேஷமாகக் காற்றுக் காலங்களிலும், வசந்த காலங்களிலும் சற்று மட்டாகவே பரவுகின்றதென டாக்டர் ரூடாக்ஸ் (Dr. Ruddocks) அபிப்பிராயப் படுகிறார்.

கக்குவான் குழந்தைகளுக் குண்டாகக்கூடிய வியாதிகளில் மிகவும் கொடுமையுள்ளது. இது தொத்துவியாதி இனத்தில் சேர்ந்தது. இருமும்போது, நெஞ்சில் வீணை வாசிப்பதைப்போன்றதொரு தொனியுண்டாகி, நெடுநேரம் இழுத்து இருமப்படுவதால் இழுப்பும் யேற்பட்டுவிடும். கக்குவானிருமல் இரண்டு மூன்று வாரங்களுக் கோர்தரம் குணத்தில் பேதப்பட்டு, அநேக மாதம்வரையில் நீடித்திருப்பதுண்டு. விசேஷமாக மூன்று மாதம் வரையில்தான் கக்குவானிருமல் நீடித்திருக்கலாமென பலர் அபிப்பிராயம் பட்டாலும், இலேசான இருமலோடு ஆறு மாதம்வரையும் இருப்பதுண்டு; ஆனாலும், குழந்தையின் திரேகத்திடத்தையும், சீதோஷ்ண ஸ்திதியையும் சார்ந்ததாக விருக்கிறது. கக்குவான் தொத்துரோகக் கிருமிகளால் ஏற்படுவதென்றுமட்டும் சொல்ல முடிகிறதே யன்றி, இன்ன கிருமியினாலென்பதைச் சொல்ல வியலாம லிருக்கிறது.

கக்குவா னிருமல் ஆரம்பத்தில் சாதாரணத் தடிமியைப் போலவே காணப்பட்டு, இரண்டு மூன்றுதினத்திற்கு பின்னர் இழுத்து இருமும் குணமேற்படும்; இலேசான சுரத்துடன் நாசியில் நீர் ஒழுகிக்கொண் டிருக்கும்; கண் சிவந்து, கண் பட்டைகள் சற்று வீங்கியிருக்கும்; ஒரு வாரத்துக்குப் பிறகே இருமும்போது இழுப்பு அதிகரித்து, நெஞ்சில் கர் முர் யென்ற சப்தமுண்டாகும்; ஒவ்வொரு இருமலுக்குப் பின்னும் வாந்தி யுண்டாகும்; வாந்தி கக்குவது யாதிரியாக நெடுநேரம் உபத்திரவம் செய்து, பின் கோழை வெளிப்படும். வெளிப்படும் கோழையானது இழுக்க இழுக்கக் கம்பிபோல் வடியும். பகலைவிட இரவிலேயே இருமலும், கக்கலு மதிகமிருக்கும்.

**சிகிச்சை**

(1) மிளகுசாம்பல் ரூபாயெடை $\frac{1}{8}$ மயிலிறகுசாம்பல் ரூபாயெடை $\frac{1}{8}$

ஒன்று சேர்த்து இந்த அளவாக காலை மாலை பசு வெண்ணெய்யில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(2) தூதுவேளைச்சாறு தேக்கரண்டி 1 கோஷ்டம்தூள் ரூபாயெடை $\frac{1}{8}$ பசுநெய் தேக்கரண்டி 1

முதலில் சாற்றையும், நெய்யையும் ஒன்று சேர்த்துக்கொண்டு பின் கோஷ்டம் தூளைச் சேர்த்துக் குழப்பி இந்த அளவாகக் காலை மாலைக் கொடுத்து வரலாம்.

(3) லகுகட்டு வங்கமாத்திரை; வியாக்கிரியாதி ரசாயணம்; இவைகளிலொன்லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(4) ஆலம் (Alum) கிரைன்ஸ் 4
லைக்கர் அட்ரோபைன் சல்பஸ் (Liquor Atropin Sulphus) துளி 2

| | | |
|---|---|---|
| கிளிசரின் (Glycerine) | ,, | 30 |
| ஆக்குவா பெனிகுலி (Aqua Feniculi) | டிராம் | 4 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குக் காலை மாலை 2-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (5) பியூட்டல் குளோரல் ஐட்ரஸ் (Butyl Chloral Hydras) | கிரைன்ஸ் | 3 |
| டிஞ்சர் கார்டமம் கோ (Tincture Cardamom Co) | துளி | 12 |
| கிளிசரின் (Glycerine) | ,, | 12 |
| ஆக்குவா டிஸ்டில் (Aqua Distilled) | டிராம் | 4 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு மூன்று வேளை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம.

கக்குவான் ஆரம்பத்தில் கொடுக்க:—

| | | |
|---|---|---|
| (6) எக்ஸ்ட்ராக்ட் சின்கோனு லிக்குட் (Extract Cinchonnae Liquid) | துளி | 8 |
| * லைக்கர் ஆர்சனிக்காலிஸ் (Liquor Arsenicalis) | ,, | 4 |
| சிரப் டோலு (Syrup Tolu) | டிராம் | ½ |
| ஆக்குவா புலோரா ஆரண்டி (Aqua Florae Auranti) | ,, | 5 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு மூன்று தடவை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

கக்குவானின் இரண்டாம் நிலைமையில் கடுமையான இருமலிருக்கும் சமயம் கொடுக்க:—

| | | |
|---|---|---|
| (7) பல்விஸ் இப்பிக்காக் கோ (Pulvis Ipecac Co) | கிரைன்ஸ் | ½ |
| பல்விஸ் எக்ஸ்ட்ராக்ட் கோனி (Pulvis Extract Conii) | ,, | 1 |
| பல்விஸ் சின்னமோனி (Pulvis Cinnamoni) | ,, | 2 |
| சக்காரின் ஆல்புமின் (Saccharine Albuemin) | ,, | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, இரவு படுக்கைக்குப் போகுமுன் ஒரேதடவையாகத் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

கடுமையான வாந்தியிருந்தால் கொடுக்க:—

| | | |
|---|---|---|
| (8) சீரி ஆக்ஸாலிடிஸ் Cerii Oxalitis) | கிரைன்ஸ் | ½ |
| சக்காரின் லாக்டிஸ் (Saccharine Lactis) | ,, | 9 |

ஒன்று சேர்த்து 4-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, 4-மணி நேரத்திற் கொருதரம், ஒருபாகம் வீதம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

## கடுப்போடு நீரிறங்கல்—Anuria

இதை நீர்க்கடுப்பு; நீர்கட்டு என்றும் சொல்லலாம். நீர் குறைந்து மஞ்சள் நிறமாகி எரிச்சலுடன் இறங்கும்; அல்லது, மூத்திரம் சொட்டுச்சொட்டாகவே இறங்கும். சிலசமயம் மூத்திரம் தடைப்படுவது முண்டு.

குழந்தைகளுக்குத் திரேக உஷ்ணம் மிகுதிப்படுவதினாலாகிலும், ஆகாரத்திற்கு போதியவிதமாய் தண்ணீர் குடியாததினாலாகிலும், மூத்திரத்தை வெகுநேரம் அடக்கிக்கொண் டிருப்பதினாலாகிலும், மூத்திரத்திலுள்ள யூரிக் காஸிட் (Uric Acid) என்றும் உப்பு அதிகரித்துப் போவதினாலாகிலும், இந்த நீர்க்கடுப்பு யேற்படலாம்.

நீர்க்கடுப்பில் மூத்திரம் தடித்து மஞ்சளாகவும் கொஞ்சமாகவுமிறங்கும்; மூத்திரம் பெய்யும்போதும் பெய்தவுடனும், நீர்த்தாரைக் கடுப்புடன் எரிச்சலாகவிருக்கும்; சிலசமயம் மூத்திரம் கடுத்துச் சொட்டுச் சொட்டாக விறங்கும்; அல்லது மூத்திரம் தடைப்பட்டுபோவது முண்டு. பெரியவர்களுக்கு நீர்க்கடுப்பேற்பட்டால் சிலாகையைச் (Catheter) செலுத்தி நீரை வெளிப்படுத்துவதுண்டு. அவ்விதமாகச் சிறு குழந்தைகளுக்குச் சிலாகையைச்செலுத்தக்கூடாது. எதேஷ்டமான தண்ணீரும், பாலும் கொடுத்து வரவேண்டும். அடிவயிற்றில் சூடான ஒற்றிடங்கள் கொடுக்கவேண்டும்.

### சிகிச்சை

(1) பொரித்த வெங்காரம் ரூபாயெடை $\frac{1}{8}$ முலைப்பால் அவுன்ஸ் 2

ஒன்று சேர்த்துக் கொடுத்து:—

வெள்ளரிவிரை ரூபாயெடை 1 எலிபிழுக்கை ரூபாயெடை 1

ஒன்று சேர்த்துத் தண்ணீர் விட்டரைத்துத் தொப்புளைச்சுற்றிலும் அடிவயிற்றிலும் பூசலாம்.

(2) வெடியுப்பைக் கரைத்துத் துணியில் நனைத்து ஆண்குறியின்மேல் போடலாம்.

(3) மகாவல்லாரைக்கிருதம்; புளியாரைக்கிருதம்; மாத்துவெள்ளை நவநீதம்; பவளபஸ்பம் கொடுத்து வரலாம். செய்முறை 6-பாகம் பார்க்கவும்.

(4)

| | | |
|---|---|---|
| நெருஞ்சில்சாறு | அவுன்ஸ் | 1 |
| இளநீர்த்தண்ணீர் | ,, | 1 |
| கற்கண்டுபொடி | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aethr Nitrosi) | துளி | 25 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொருதரம் $\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (5) | லைக்கர் பொட்டாஷ் (Liquor Potassh) | டிராம் | ½ |
| | பொட்டாஷியம் நெட்ரேட் (Potassium Nitrate) | ,, | ½ |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஷி (Spirit Aether Nitrosi) | ,, | ¾ |
| | டிஞ்சர் சில்லி (Tincture Scillae) | ,, | 1½ |
| | சுடு தண்ணீர் | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொருதரம் ½-தேக்கரண்டி வீதம் 2-தேக்கரண்டி தண்ணீருடன் சேர்த்துக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | டிஞ்சர் ஐயோஷியாமஸ் (Tincture Hyoscyamus) | துளி | 3 |
| | லைக்கர் பொட்டாஷ் (Liquor Potassh) | ,, | 3 |
| | டிஞ்சர் பக்கு (Tincture Buchu) | ,, | 6 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | ½ |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## கட்டி—Abscess

இதைச் சிலந்தி, விப்புருதி, கட்டு என்றெல்லாம் சொல்லப்படும். சரீரத்தின் சதைக்கோளங்களிலாகிலும், கொழுப்பு மிகுந்தவிடங்களிலாகிலும், சீழ் கொண்டு வீங்கி, உருண்டையாகப் புறப்படுவதே 'கட்டி' எனப்படும். கட்டிகள் புறப்படும் இடங்களுக்குத் தகுந்தாப்போல் அவைகளுக்கும் தனிப்பட்ட பெயருண்டு. ஆசனவாயின் ஓரங்களில் புறப்பட்டால் அதற்கு விப்புருதி, ஆசனபவுத்திரம், பக்கப்பவுத்திரமெ (Fistula in Ano) ன்றும், நடுமுதுகில் வந்தால் ராஜப்பிளவை (Carbuncle) என்றும் சொல்லப்படும்.

கட்டி, சர்மத்தின் உள்சதைக் கோளங்களில், அன்னிய வஸ்துக்கள் சேர்ந்து விடுவதினாலும், கெட்ட இரத்தம் தங்கி விடுவதினாலும், அங்குள்ள இரத்தம் விஷமித்து, சதை வீங்கி சர்மத்தின் மட்டத்திற்குமேல் வீங்கித் தெரியும்; ஆரம்பத்தில் சர்மம் சிவந்து கல்போல் வீங்கி மேடதாக விருக்கும்; பின்னர் அந்த மேடானபாகத்தின் மத்தியில் முளையாகபுறப்பட்டு, அதில் சீழ்க் கொண்டு வெண்மையாக விருக்கும். அதையே 'ஆணி, முளை' என்று சொல்லப்படும்.

கட்டிக்கு ஆங்கில வைத்தியத்தில் ரண சிகிச்சையே செய்யப்படும். தமிழ் வைத்தியத்திலும் ரண சிகிச்சை செய்வதுண்டு. மேல் பிரயோக மருந்துகளை உபயோகிப்பதால், கட்டிப் பழுத்து உடைந்து முளை வெளிப்படும். பின்னர் ரண சீலைகளால் (பிளாஸ்திரி) (Plaster) புண்ணை ஆற்றிவரலாம்.

### சிகிச்சை

(1) கட்டி ஆரம்பத்தில் நன்ருகப் பெருத்திருக்கும் சமயம், எருக்கம்பாலில் மஞ்சளை உரைத்து கட்டியின் மத்தியில் ஒரு சிறு பொட்டு மாதிரி காலை மாலை வைத்துவந்தால் கட்டி அதிகரிக்காமல் அப்படியே அமுங்கிப் போகும்.

(2) அவரையிலைச்சாற்றைப் பஞ்சியில் ஏதேஷ்டமாகவிட்டு கட்டியின்மேல் போட்டுவந்தால் கட்டிப்பழுத்து உடையும். உடைந்தபின், * ஈயப்பிளாஸ்திரியைத் துணியில் தடவி போட்டுவந்தால் புண் ஆறும்.

(3) இலைக்கள்ளியிலையைச் சிற்ருமணக்கெண்ணெய்த் தடவி அனலில் வாட்டி காலை மாலை கட்டியின்மேல் வைத்துக் கட்டி வந்தால், கட்டிப் பழுத்து உடையும். * பின் ஈயப்பிளாஸ்திரியால் புண்ணை ஆற்றிவரலாம்.

(4) வெங்காயத்தைச் சுட்டு அரைத்து கட்டியின்மேல் கனமாய் தடவியிருந்தால் கட்டிப் பழுத்து உடையும் உடைந்த பின் * ஈயப்பிளாஸ்திரியால் புண்ணை ஆற்றிவரலாம்.

(5) பச்சரிசியாவைக் களிக்கிண்டி சிற்ருமணக்கெண்ணெய்த் தடவி கட்டியில் வைத்துக் கட்டிவந்தால், கட்டிப்பழுத்து உடையும் பின்னர் * ஈயப்பிளாஸ்திரியால் புண்ணை ஆற்றிவரலாம்.

(6) சாம்பிராணி ரூபாயெடை $1\frac{1}{4}$ படிகாரம் ரூபாயெடை 6
கற்பூரம் ,, 1

ஒன்று சேர்த்தரைத்து ரொட்டி உள்சதையுடனுவது மாவுக் களியுடனுவது பிசைந்து வைத்துக் கட்டிவந்தால் கட்டி பழுத்து உடையும். பின்னர் *ஈயப்பிளாஸ்திரியால் புண்ணை ஆற்றி வரலாம்.

(7) இரசப்பிளாஸ்திரி; கால்போனம் பிளாஸ்திரி; மிருதார்சிங் பிளாஸ்திரி முதலியவைகளைத் துணியில் தடவிப் போட்டு வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(8) எக்ஸ்ட்ராக்ட் பெல்லடோனு (Extract Belladonnae) அவுன்ஸ் 1
இக்தியல் (Icthyol) டிராம் 2
கிளிசரின் (Glycerine) போதுமானது.

போதுமான கிளிசரின்விட்டுச் சற்று நெகிழ்தியாகச் செய்துகொண்டு, ஒரு துணியில் தடவி கட்டியின்மேல் போட்டு வரலாம். இதனுல் கட்டி அமுங்கினுலும் அமுங்கும்; கட்டி உடைந்து சீழ் வெளிப்பட்டால், ‡ கார்பாலிக் லோஷனுல் நன்ருகச் சுத்தி செய்துவிட்டு, போரிக் காஸிட் (Acid Boric) தூற்றி பஞ்சுவைத்துக் கட்டி ஆற்றிவரலாம்; அல்லது, * ஈயப்பிளாஸ்திரி போட்டு ரணத்தை ஆற்றலாம்.

---

‡ 236-ம் பக்கம் 3-ம் இலக்கம் பார்க்கவும். * செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(9) டிஞ்சர் ஐயோடின் (Tincture Iodine) அவுன்ஸ் 1
லினிமெண்ட் ஐயோடின் (Liniment Iodine) ,, 1

ஒன்று சேர்த்துக் கட்டியின்மேல் காலை மாலை தடவிவந்தால் கட்டி உடையும். பின்னர் ‡ கார்பாலிக் லோஷனால் சுத்திசெய்து போரிக் காஸிட் (Acid Boric) தூற்றி பஞ்சுவைத்துக் கட்டி ஆற்றிவரலாம்; அல்லது, * ஈயப் பிளாஸ்திரியால் ரணத்தை ஆற்றிவரலாம்.

### கட்டு:—

கட்டி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

### கணைச்சூடு:—

கணைச்சுரமென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

### கண் கட்டி—Stye

கண் இரப்பைகளில், நுண்ணிய விஷக்கிருமிகளால் யேற்படும் சிறு கட்டிகளைக் கண் கட்டியென்று சொல்லப்படும்; இவைகளினால், நமச்சலும், எரிச்சலும் வலியு மதிகமிருக்கும்; சில சமயங்களில் சுரம் ஏற்படுவதுமுண்டு.

#### சிகிச்சை

(1) மூலைப்பாலில் சங்கை உரைத்துப் போடலாம்.

(2) திருநீற்றுப் பச்சையிலை (உருத்திரசடை) சாற்றில் சங்கை யுரைத்துப் பூசலாம்.

(3) கறிவேப்பிலைச் சாற்றில் சங்கை யுரைத்துப் பூசலாம்.

(4) கடுக்காய்த்தூளை ஒரு துணியில் முடிந்து சிற்றாமணக்கெண்ணெயில் போட்டு, கொஞ்சநேரம் வெயிலில் வைத்திருந்து, இரண்டொரு துளி கட்டியில் விடலாம்.

(5) சிறுகீரைவேர் ரூபாயெடை 3 புளியம்பூ ரூபாயெடை 3
பொன்னாங்காணிவேர் ,, 3 திப்பிலி ,, 3
துத்தம் (மயில்துத்தம்) ,, 3

ஒன்று சேர்த்து, எலுமிச்சம் பழச்சாற்றால் மைபோலரைத்து, பென்சல் (Pencil) மாதிரியாக நீண்ட மாத்திரைசெய்து காயவைத்துக்கொண்டு, காலை மாலை எலுமிச்சம்பழச்சாற்றி லுரைத்துக் கட்டியில் தடவி வரலாம்.

(6) பால்துத்தம் ரூபாயெடை 3 வெள்ளைச்சங்கு ரூபாயெடை 3
துத்தம் (மயில்துத்தம்) ,, 3

---

‡ 236-ம் பக்கம் 3-ம் இலக்கம் பார்க்கவும்.
* செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

ஒன்று சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றால் மைபோலரைத்து, பெனிசல் மாதிரியாக நீண்ட மாத்திரைச் செய்துக் காயவைத்துக்கொண்டு காலை மாலை மூலைப்பாலி லுரைத்துக் கட்டியில் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (7) | கொக்கோயின் பியூரிப் (Cocainae Purif) | கிரைன்ஸ் | 4 |
| | ஐட்ராட்ஜரி ஆக்ஸைட் (Hydrargeri Oxide) | ,, | 3 |
| | வாசலின் (Vaseline) | டிராம் | 4 |

ஒன்று சேர்த்துக் களிம்பாக வரைத்துக்கொண்டு நாள் ஒன்றுக்கு 3-வேளை கட்டியின்மேல் தடவி வரலாம்.

## கண்ணிமைவீக்கம்—Ophthalmia Simplex

கண் சற்றே சிவந்து மேலிமைப்பைகள் வீங்கியிருக்கும்; கண் கூசும்; கண் எரிச்சலேற்படும்; கண்ணில் சதா நீர் வடிந்துகொண்டே யிருக்கும்; இது ஈ, கொசு, முதலிய சத்துருக்கள் கண்ணில்வந்து உட்கார்ந்து கிருமிகளைத் தொத்தச்செய்து அதினாலுண்டாகிறது. அல்லது, அதிக சூட்டினாலும், சிறு கல், மண், தூசிமுதலிய அன்னியபதார்த்தங்கள் கண்ணில் விழுவதினாலும் ஏற்படலாம்.

### சிகிச்சை

(1) * அரப்பொடியைச் சங்கனிலைச்சாறுவிட்டு 2-மணி நேரமும், சோற்றுக் கற்றாழைச் சாறுவிட்டு 2-மணி நேரமும், சங்கம்பழச்சாறுவிட்டு 2-மணி நேரமும் அரைத்துக் காயவைத்துப் பின் வேண்டிய அளவு எடுத்து நல்லெண்ணெயுடன் சேர்த்துக் களிம்பாக்கி கண்ணிரப்பையின் மேல் புறத்தில் மட்டும் பற்று போட்டு வரலாம்.

(2) பசும்பாலைக் காய்ச்சி சுடசுட துணியில் நனைத்து ஒற்றிடம் கொடுத்து வரலாம்.

(3) 12-அவுன்ஸ் மழைத் தண்ணீரில் ஒரு டிராம் ஆஸிட் போரிக்கை (Acid Boric) கரைத்துப் பஞ்சில் தொட்டுக் கண்ணிரப்பைகளை நன்றாகச் சுத்தம் செய்துவிட்டுப் பின்னர்:—

ஒரு அவுன்ஸ் மழைத்தண்ணீரில் 5-கிரைன்ஸ் அர்ஜெண்டம் நைட்ரஸை (Urgentum Nitras)க் கரைத்து நீலநிற சீசாவிலடைத்துக்கொண்டு கண்ணிரப்பைகளை மடித்து விரலால் பிடித்துக்கொண்டு, மிருதுவான மயிர் பிரஷால் (Brush) காலையில் மட்டும் இமைகளில் தடவி வரலாம்.

## கண்நோய்—Catarrha Ophthalmia

கண்நோய் தொத்துரோகக் கிருமிகளால் ஏற்படுவதாகும். ஈ, கொசு முதலியவைகள் விஷக்கிருமிகளைத் தங்கள் அசுத்தக்கால்களில் ஒட்டிக்கொண்டு

---

* இரும்பை இராவியத் தூள்.

வந்து கண்ணில் சேர்த்துக் கண்ணோயை உண்டாக்குகின்றன. கண்ணோய் அதிகமான குளிரினாலு முண்டாகலாம்.

கண்ணிமைகள் வீங்கி சிவந்திருக்கும் வெள்ளைவிழி செந்நிறமாக விருக்கும்; கண்ணீர்வடிந்துகொண்டே யிருக்கும். கண் குழியில் மஞ்சள் நிறமான பூழை சேர்ந்திருக்கும்; கண்ணில் நமச்சலும் மண்விழுந்ததைப் போன்ற உறுத்தலும் உண்டாகும்; கண்கூச்சமதிகமாயிருக்கும்; கருவிழியும் இயற்கைக்குச்சற்று சிறுத்தே தெரியும்; காலையில் படுக்கையை விட்டெழுந்திருக்கும்போது கண்ணிரப்பைகளை ஒன்று சேர்த்துப் பிடித்துக் கொள்ளும்; இதனால் சில குழந்தைகளுக்குச் சுரம் காய்வதுமுண்டு.

பிறந்த குழந்தைகளுக்கு பிறந்த 2, 3-நாட்களுக்குப்பின் ஒருவித கண்நோய் யுண்டாவதுண்டு; அதைப்பற்றி "சூடு குத்துதல்" என்றத் தலைப்பின் கீழ் பார்க்கவும்.

கண்ணோய் தொத்தும் தன்மையுள்ளதினால் இதர குழந்தைகளுக்கும் பரவாதிருக்கும்படியான எச்சரிக்கை செய்து கொள்ளவேண்டும். கண்ணோயில் வடியும் பூழையைத் துடைத்துத் அத்துணியால் இதர குழந்தைகளுக்கு முகம் துடைக்கக்கூடாது. கண் துடைப்பதற்கென்று அப்போதைக்கப்போது புதிய மிருதுவான வெள்ளைத்துணியை வைத்துக்கொள்ள வேண்டும். ஒரே துணியை வைத்துக்கொண்டு துடைத்து வந்தால் அந்தத் துணியில் கிருமிகள்தொத்தி கண்ணோயைச் சடுதியில் சொஸ்தம் செய்யாதபடி செய்துவிடும். கண்ணோயில் கண்களை சுத்தம் செய்தவர்கள் தங்கள் கைகளை மிக சுத்தமாகக் கழுவி விடவேண்டும்.

கண்களில்படியும் பூழையை அடிக்கடி சுத்தம் செய்து விடவேண்டும். அவ்வாறு சுத்தம் செய்யப்படாவிட்டால் பூழைகள் அநேக மணிநேரம் கண்ணில் தங்கி விஷமித்து கண்பார்வையைக் குறையச்செய்து விடுவதுந் தவிர கண்குழிகளிலும் இமைகளிலும் புண்படச்செய்து இலகுவில் சொஸ்தமாகாமல் உபத்திரவிக்கும்.

## சிகிச்சை

### கண் கழுவுநீர் (Eye Lotion)

| | | |
|---|---|---|
| (1) மழைத்தண்ணீர் (Rain Water) அல்லது டிஸ்டில் வாட்டர் (Distilled Water) | அவுன்ஸ் | 12 |
| போரிக் காஸிட் (Acid Boric) | டிராம் | 1 |

ஒன்று சேர்த்துக் கரைத்து வைத்துக்கொண்டு, கண்களைச் சுத்தம் செய்த பின்னர் கீழ்கண்ட மருந்துகளை யுபயோகித்து வரலாம்.

(2) துத்தியிலையையும், பொஸ்தக்காயையும் சமமாக நசுக்கி ஒரு துணியில் முடிந்து தண்ணீரில் போட்டு வேகவைத்தெடுத்து, காலை மாலை ஒற்றிடம் கொடுத்து வரலாம்.

(3) எழுதாம் சுத்திசெய்த 5-ரூபாயெடை சோற்றுக்கற்றாழைச் சதையை ஒரு மங்குபாத்திரத்தில் போட்டு, அதில் சீரகம், படிகாரம் வகைக்கு ரூபாயெடை ¼-பொடித்துப்போட்டு கொஞ்சநேரம் மூடிவைத்திருக்க தண்ணீர் கசிந்திருக்கும்; அந்தத் தண்ணீரில் காலை மாலை 1-வது இலக்க கழுவு நீரால் கண்களைக் கழுவியப்பின்னர் இரண்டு மூன்று துளி கண்ணில் விட்டு வரலாம்.

(4)

| | | |
|---|---|---|
| லைக்கர் அமோனியம் அஸிடேடிஸ் (Liquor Ammonia Acetatis) | அவுன்ஸ் | 1 |
| டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | டிராம் | ½ |
| பன்னீர் (Rose Water) | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து 1-வது இலக்க கண் கழுவுநீரால் கண்களைச் சுத்தம்செய்த பின்னர் நாள் ஒன்றுக்கு 4, 5-தடவை ஒரு வெள்ளைத்துணியில் நனைத்துக் கண்ணின்பேரில் போட்டுவைக்கலாம்.

(5)

| | | |
|---|---|---|
| ஸிங் சல்பஸ் (Zinc Sulphus) | கிரைன்ஸ் | 1 |
| போரிக் காஸிட் (Acid Boric) | ,, | 10 |
| கிளிசரின் (Glycerine) | துளி | 40 |
| மழைத்தண்ணீர் (Rain Water) அல்லது ஆவித்தண்ணீர் (Distilled Water) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கரைத்துக்கொண்டு காலை மாலை 1-வது இலக்க கண் கழுவு நீரால் கண்களை நன்றாகச் சுத்தம் செய்த பின்னர் 2, 3-துளி கண்ணில் விட்டு வரலாம்.

(6) இரவில் கண்ணிமை ஒட்டிக்கொள்ளாதபடி இரவு படுக்கைக்குப் போகு முன் 2, 3-துளி சிற்றாமணக்கெண்ணெயை கண்ணில் விடலாம்.

### கம்பளிப்பூச்சி:—

இதை எரிபுழு, எரிபூச்சி, மயிர்பூச்சி என்றெல்லாம் சொல்லப்படும். இப்புழுக்கள் மயிரடர்ந்து 1½, 2-அங்குல நீளத்தில் பூவரசமரம்; முருங்கைமரம்; முதலிய மரங்களில் படையாக அப்பிக்கொண்டிருக்கும். இப்புழுக்கள் சரீரத்தில் பட்டால் தாங்கமுடியாத அரிப்பை யுண்டுபண்ணும்; சொறியச் சொறிய தடித்து நமச்சலு மதிகரிக்கும்; இப்புழுவின் ரோமம் மிகவும் விஷத்தன்மையுள்ளது.

### சிகிச்சை

(1) புகையிலையை ஊறவைத்தத் தண்ணீரால் பட்ட இடத்தைக் கழுவலாம்.

(2) மூத்திரத்தையும் சாம்பிலையும் கரைத்துத் தடவியிருந்து குளிப்பாட்டலாம்.

(3) வெந்நீரால் ஸ்நானஞ் செய்தவுடன் கொஞ்சம் நல்லெண்ணெயைத் தடவலாம்.

## கன்னக்கட்டு:—

அம்மைக் கட்டென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## காச்சல் கட்டி:—

சுரக் கட்டியென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## காதில் ஈ புகுதல்:—

குழந்தைகளின் காதுகளைச் சுத்தமாய் வைத்தில்லாததினால், ஈ, எரும்பு முதலியவைகள் காதில் நுழைந்துவிடலாம்; சில சமயங்களில் மாட்டு ஈ என்று சொல்லப்பட்ட ஒருவித ஈ காதில் புகுந்துவிட்டால் இலகுவில் வெளிப்படாமல், காதின் துளையிலுள்ள ஈரத்தில் முட்டையைப் பீச்சி ஈக்களை விருத்தி செய்துவிடும்; அதனால் ஓயாத வலியும், குடைச்சலுமேற்பட்டுக் காது வீங்கி புண்பட்டுவிடும்.

### சிகிச்சை

(1) குப்பைமேனிச்சாறு அவுன்ஸ் 1 கோழியவரைச்சாறு அவுன்ஸ் 1
ஒன்று சேர்த்து, காதில் 10-துளி விட்டு பஞ்சால் அடைத்து வைக்கலாம்.

(2) குப்பைமேனிச்சாறு அவுன்ஸ் 1 மூத்திரம் அவுன்ஸ் 1
ஒன்று சேர்த்து, 10-துளி காதில் விட்டு வைக்கலாம்.

(3) காதில் எரும்பு புகுந்துகொண்டால், கொஞ்சம் தண்ணீரையாவது, நல்லெண்ணெயையாவது காதில் விட்டிருந்தால், எறும்பு செத்து மிதந்து வெளிப்பட்டுவிடும்.

## காதில் சீழ்வடிதல்—Ottorrhoea

உட்காதில், சிறு சிரங்குகள் உண்டாயிருப்பதினாலாவது, உட்காதின் மெல்லிய சப்த சவ்வு (Drum) வெளித் தள்ளிப்போவதினாலாவது, கபாலக்கரப்பான் ரோகத்தினாலாவது, மண்டையோட்டில் ஏற்பட்டிருக்கும் ஏதாவது ஒரு விகல்பத்தினாலாவது, காதிலிருந்து சீழ் வடியலாம். சில சமயங்களில் காதிலிருந்து இரத்தம் வடிவதுண்டு. காதிலிருந்து இரத்தம் வடிந்தால், அது காதின் உட்பாக நுண்ணிய சவ்வு வெளித் தள்ளப்பட்டிருப்பதினாலாவது, மண்டையோட்டின் கோளாறினாலாவது இருக்கலாம். காதிலிருந்து வடியும் சீழ் துர்கந்தமுடையதாகவிருந்தால் அது உட்காதில்

சீழ் புண்ணுகளுண்டாயிருக்கும் காரணத்தினு லிருக்கலாம். அம்மை ரோகத்தால் பாதிக்கப்பட்ட குழந்தைகளுக்குக் காதிலிருந்து சீழ்வடிதல் சாதாரணமா யுண்டாகும்.

சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | இந்துப்பு | ரூபாயெடை ½ | கோஷ்டம் | ரூபாயெடை ½ |
| | கோரைக்கிழங்கு | ,, ½ | வெள்ளைப்பூண்டு | ,, ½ |
| | சுக்கு | ,, ½ | வசம்பு | ,, ½ |
| | திப்பிலி | ,, ½ | பேரீச்சங்காய் | ,, ½ |
| | நல்லெண்ணெய் | அவுன்ஸ் 6 | | |

ஒன்று சேர்த்துப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்துக் காலை மாலை காதில் 5, 6-துளி விட்டு வரலாம்.

காது கழுவுநீர் (Ear Lotion)

(2) ஆஸிட் போரிக் (Acid Boric) டிராம் 1
இளஞ்சூடான தண்ணீர் அவுன்ஸ் 6

ஒன்று சேர்த்துக் கரைத்துக்கொண்டு காலை மாலை காதுக்குள் பீச்சாங் குழலால் (Syringe) அடித்துச் சுத்தம் செய்து பின் கீழ்கண்ட 3, 4-இலக்க மருந்துகளைக் காதுக்குள் விட்டு வரலாம்.

(3) டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) டிராம் 1
தேங்காயெண்ணெய் (Cocoanut Oil) ,, 1

ஒன்று சேர்த்து. 2-வது இலக்க நீரால் சுத்திசெய்த பின் காலை மாலை காதுக்குள் 5, 6-துளி விட்டு வரலாம்.

(4) ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) டிராம் ½
கிளிசரின் (Glycerine) ,, 9

ஒன்று சேர்த்து, 2-வது இலக்க கழுவு நீரால் சுத்தம்செய்த பின் காலை மாலை 5, 6-துளி காதில் விட்டுப் பஞ்சாலடைத்து வரலாம்.

**காது குத்து:—**

காதுவலி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## காதுவலி—Otalgia—Earache

உட்காதுக்குள் அதிகமாக குரும்பி (Cerumen) சேர்ந்து விடுவதினுலாவது, அதிகமான தூசு படிந்திருப்பதினுலாவது, உள்காது சவ்வு வீக்கம் கண்டு விடுவதினுலாவது, காதுக்குள் கட்டிக் கிளம்பி யிருப்பதினுலாவது, மிகுந்த குளிரினுலாவது, காதுவலியுண்டாக்கலாம். மேலும், பல்வலியுண்டானு லும், பல்முளைக்கும் வேதனையினுலும், அம்மைரோகம் தாக்குவதினுலும், மாந்தம், கக்குவான் விஷ சந்நிசுரமிவைக ளுண்டாவதாலும், காதுவலி

புண்டாவதுண்டு. சிறுமூளை வீக்கத்தினாலும், அதிர்ச்சியினாலும் காது வலி யேற்படலாம்.

சாதாரண காதுவலியானால், கடுமையான வலியும், காதடைப்பும், காதுக்குள் யேதோ ஒன்று அடைந்திருப்பதுபோன்ற உணர்ச்சியு மேற்படும்; பகலை விட இரவில் உபத்திரவம் மிகுதியாக விருக்கும்; குழந்தைகள் காதுவலியினால் பாதிக்கப்படுமானால், தன் கைகளால் காதை தேய்த்துக்கொண்டு அழும்; கண்கள் சிவக்காமல் பூழைமட்டும் சேரும்; காதுவலி குழந்தைகளுகேற்படுமானால், சுரம் 101, 103-டிகிரி வரையிலும் சுரம் காய்வதுண்டு. மேலும், அதனால் வலிப்பும், வாந்தியும்கூட ஏற்படலாம்.

### சிகிச்சை

(1) பட்டைச்சாராயம் அவுன்ஸ் 1 பெருங்காயம் ரூபாயெடை $\frac{1}{4}$
ஒன்று சேர்த்துக் காதுக்குள் 5, 6-துளி விட்டுவரலாம்.

(2)
| | | |
|---|---|---|
| டிஞ்சர் ஒபியம் (Tincture Opuim) | துளி | 15 |
| ஆஸிட் கார்பாலிக் (Acid Carbolic) | ,, | 15 |
| கிளிசரின் (Glycerine) | அவுன்ஸ் | 1 |

ஒன்றுசேர்த்து 305-பக்கம் 2-வது இலக்க கழுவுநீரால் காதுக்குள் அடித்து சுத்தம் செய்த பின்னர் 5, 6-துளி விட்டு வரலாம்.

### கிருமி:—

கீரைப்பூச்சி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கீரைப்பூச்சி—Thread worm

கால் அங்குலத்திற்குமேல் அரை அங்குல நீளத்திற்குள்ளாக நூலிழையைப் போன்று வெண்மையாக மலக்குடலில் வாசம் செய்யும் இப் பூச்சிகளைக் கீரைப்பூச்சி, நெல்வால்பூச்சி, தானப்பூச்சி யென சொல்லுவாகள். தண்ணீர் வழியாக உட்சென்று, ஆசனத்திற்கு 3, 4-அங்குல தூரத்தில் அதாவது, மலக்குடல் இறுதியில் தங்கி வாசம் செய்து, வலுத்துப் பெருகி தொந்திரவை விளைவிக்கும். அதிகமாகிவிட்டால் மலத்துடன் வெளியாகி வரும்.

நாள்பட்ட மலச்சிக்கலுள்ளவர்களுக்கு ஆசன பவுத்திரத்தை உண்டாகும்; இவைகள் ஆசனவாயில்வந்து நெளிவதனல் ஆசனவாய் நமைச்சலும், புண்ணும் உண்டாகிவிடும். இராக்காலங்களில் ஆசனத்துவாரத்திலிருந்து வெளிப்பட்டு யோனியில் பிரவேசித்து அசுத்தப் படுவதினாலேயே சில பெண்களுக்கு வெள்ளை பிரமேகமும், (206-பக்கம் பார்க்கவும்) அரைகரப்பான் போன்ற சர்ம புண்வியாதிகளும் உண்டாகின்றன. இப் பூச்சிகளின் உபாதையினால் ஆசனவாய்ப்புண், பசி மந்தம், வாய் நாற்றம், மூக்கரிப்பு, பல்கடிப்பு, குடலேற்றம், தூக்கமின்மை, சோகை, மலம் கழிக்கும்போது முக்கல் முதலியவைக ளேற்படலாம்,

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | கடுக்காய் | ரூபாயெடை 1 | முருங்கைவேர் | ரூபாயெடை 1 |
| | தான்றிக்காய் | ,, 1 | எலிச்செவியிலை | ,, 1 |
| | நெல்லிவற்றல் | ,, 1 | | |

ஒன்று சேர்த்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில், காலை மாலை ½-அவுன்ஸ் வீதம் 3-நாளைக்குக் கொடுத்து வரலாம்.

(2) அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) கிரைன்ஸ் 72
இன்பியூஷன் சென்னு (Infusion Sennae) டிராம் 4
இன்பியூஷன் ஜென்டைன் கோ (Infusion Gentain Co) அவுன்ஸ் 3

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப் பின் ஒரு தேக்கரண்டி வீதம் ஒரு நாளைக்கு மட்டும் கொடுத்து, மறுநாள் காலையில்:—

காலோமல் (Calomel) கிரைன்ஸ் 1
ரெஸின் ஜாலப் (Resin Jalap) ,, 2
பல்விஸ் ஸ்காமோனி (Pulvis Scammoni) ,, 3

ஒன்று சேர்த்து, ஒரே தடவையாக வாயில் கொட்டி, எச்சில் கூட்டி விழுங்கும்படிச் செய்யலாம்.

(3) 285-ம் பக்கம் நாக்குப்பூச்சிக்குச் சொல்லிய 1, 2, 3, 4-வது இலக்க மருந்துகளையும் கொடுக்கலாம்.

### கீரைப்பூச்சி அதிகரிப்பினால் ஆசனவாய்ப் புண்ணும், நமைச்சலு மேற்பட்டால்:—

(1) வேப்பெண்ணெயைத் தடவி வரலாம்.

(2) அங்குவண்டம் ஹைட்ரார்ஜரி (Unguentum Hydrargeri) டிராம் 4
ஓலியம் கோகாயோ (Oleum Cocao) ,, 1

ஒன்று சேர்த்துப் படுக்கைக்குப் போகுமுன் வெளிப்பிரயோகமாக மட்டும் ஆசன வாயில் தடவி வரலாம்.

### கீரைப்பூச்சி அதிகரிப்பினால் இரத்தக்குறை வேற்பட்டிருந்தால்:—

பெர்ரீ சல்பஸ் (Ferri Sulphus) கிரைன்ஸ் 6
எக்ஸ்டிராக்ட் கிளிசரிஸா லிக்குட் (Extract Glycyrrhiza Liquid) டிராம் 4
இன்பியூஷன் ஆலோஸ் கோ (Infusion Aloes Co) அவுன்ஸ் 3

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு 3-தடவை ஆகாரத்திற்குப் பின் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

**குக்கல் நோய்:—**

கக்குவான் என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**குடல் வாத ரோகம்:—**

அண்டவாதம் என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

**குடல் விப்புருதி—Appendicitis**

குடலின் கீழ் நுனியுடன் சம்பந்தப்பட்டுப் புழுவைப்போல் நீண்டு ஒருபுரம் அடைபட்டிருக்கும் 'உபக்குடல்' (Appendix) என்னும் ஒரு குழலில் புண் படுவதே குடற்படுவன், குடற்கிளை, குடற்புற்று, குடல் விப்புருதி எனச் சொல்லப்படும்.

ஆகாரத்துடன் செல்லும் ஜீரணிக்காத கல், மண் முதலியவைகள் இந்த உபக் குடலில் சேர்ந்து வீங்கி விடுவதனாலேயே குடற்படுவன் உண்டாகிறது. முக்கிய காரணம், நுண்ணிய ரோகக் கிருமிகளேயாகும். மற்றபடியாகக் குளிர்ச்சியினாலும், உபக்குடல் நீளுவதனாலும், ஜீரணிக்கக்கூடாத ஆகாரங்கள் போய் தங்குவதனாலும் உண்டாகலாம்.

குடற்படுவன் உண்டாகியிருந்தால், 100-முதல் 103-டிகிரி வரையில் சுரம் காயும். வயிற்றுவலி, வாந்தி, ஓயாத அரோசிகம் உண்டாகும். ஆரம்பத்தில் இரைப் பையில், அதாவது, நெஞ்சுக்கும் கீழ் வலியுண்டாகி, தொப்புளைச் சுற்றியும் வலித்துப் பின் தொப்புளுக்கு வலப்புறமாக பிசைதலைப் போன்ற வலி ஏற்படும். வலி முதல் உண்டாகி, பின் அடுத்தபடியாக வாந்தி உண்டாகும். மூன்று நான்கு நாட்களுக்குச் சுரம் காய்ந்தபின், படிப்படியாகச் சுரம் குறையும்; நாடி நடையும் சமாசமாகும்; அப்படிக்கின்றி, திடீரென சுரமானது சம சீதளமடையுமானால் (Normal Temperature) உபக்குடல் புண்பட்டு மிகத் தீங்கை விளைவிக்கும் என்று அஞ்சவேண்டியதாகும். திரேகோஷ்ணமானது மிகுதியும் குறைந்து, அதே சமயத்தில் நாடி நடைத் துரிதப்பட்டால் கெட்ட அறிகுறி என்றே சொல்லவேண்டும்; ஆனால், நாடி நடையும், திரேகோஷ்ணமும் திடீரெனச் சமாசப்பட்டு, வியாதியஸ்தன் வலிகளிலிருந்து விடுபட்டு நிம்மதியுடன் இருப்பதாகக் கருதினாலும், உபக்குடல் புண் அதிகரித்திருப்பதாகவே நம்பலாம்.

இடது விலாவில் பொருமியிருப்பதைப்போன்று தோன்றுமானாலும், மறுபடியும் வாந்தி ஆரம்பித்து அடிக்கடி வாந்தி உண்டாகுமானாலும், சிறுகுடலும் அதனால் பாதிக்கப்படுவதாகக் கருதவேண்டும். இவைகளுக்குச் சஸ்திர சிகிச்சை உடனே செய்யவேண்டியது.

குடற்படுவனால் அதிகமான ஹிம்ஸை ஏற்பட்டிருக்கும் சமயத்தில் ரோகியை நிம்மதியாகப் படுக்க வைத்து, ஐஸ் (Ice) ஒற்றிடம் கொடுத்து, இலகுவில் ஜீரணிக்கும் ஆகாரங்களைக் கொடுத்து வரலாம். முக்கியமாய்ப் பட்டினி போடுவதே குடற்படுவனுக் கேற்றதாகும். விரேசன காரிகளொன்றும் கொடுக்கக்கூடாது; ஆனால், ஆசனவழியே நீரேற்றம் செய்து (Fnema)

குடலைச் சுத்தி செய்யலாம். அல்லது காலோமல் (Calomel) 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 1-கிரைன் வீதம் கொடுக்கலாம். உபசாந்தியாகக் கீழ்க்கண்ட மருந்துகளைக் கொடுத்து வரலாம்.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) கோரோசனை | ரூபாயெடை | 3 | சகஸ்திராபேதி | ரூபாயெடை | 3 |
| கோஷ்டம் | ,, | 3 | வெட்டிவேர் | ,, | 3 |
| செண்பகப்பூ | ,, | 3 | விலாமிச்சம்வேர் | ,, | 3 |
| அதிமதுரம் | ,, | 3 | மாசிப்பத்திரி | ,, | 3 |
| ஏலம் | ,, | 3 | | | |

ஒன்று சேர்த்து, ஆடாதோடையிலைச் சாறுவிட்டு, 3-மணிநேரம் அரைத்து பட்டாணிக் கடலை யவ்வளவு பெரிய மாத்திரைகளாகச் செய்து உலர்த்திக் கொண்டு, காலை மாலை ஒரு மாத்திரை வீதம் முலைப்பாலில் கரைத்துக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) சோடியம் சல்பஸ் (Sodium Sulphus) | டிராம் | 1 |
| அக்குவா மெந்தா பிப் (Aqua Mentha Pip) | ,, | 6 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## குடல் விருத்தி ரோகம்:—

அண்டவாதம் என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## குடற்கிளை; குடற்படுவேன்; குடற்புற்று:—

இவைகளுக்கு குடல் விப்புருதி என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## குத்திருமல்—Horseness

சுவாசக்குழலின் மேல்பாகமாவது, சளிக்கோளங்களாவது, சப்த நாதங்களாவது வீக்கங் கண்டாலும், அதிகமான குளிரில் நடமாடினதினுலும், தூசுகளை யதிகமாகச் சுவாசிக்கப்பட்டதினுலும் தொண்டைப் புகைச்சலேற்படலாம்.

தொண்டையில் காகாப்பும், குறு இருமலும் ஓயாது உண்டாகும். இருமுவதால் சளி வராது; ஆனால், நெஞ்சுவலி யுண்டாகலாம்.

**சிகிச்சை**

| | | | |
|---|---|---|---|
| (1) ஆடாதோடையிலைச்சாறு | | சுக்குத்தூள் ரூபாயெடை | $\frac{1}{8}$ |
| | அவுன்ஸ் 3 | திப்பிலித்தூள் ,, | $\frac{1}{8}$ |

ஒன்று சேர்த்துக் கலந்து, அதில் ஒரு இரும்புத்துண்டைப் பழுக்கக் காயவைத்து நனைத்து, அந்தச் சாற்றில், 2, 3-தேக்கரண்டி வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(2) இஞ்சிச்சாறு தேக்கரண்டி 1 தேன் தேக்கரண்டி ½
மாதுளம்பழச்சாறு ,, 1
ஒன்று சேர்த்து, காலை மாலை கொடுத்து வரலாம்.

(3) அப்ரகக் கோரோசனை மாத்திரை; கோரோசனை மாத்திரை இவைகளி லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(4)

| | | |
|---|---|---|
| அமோனியம் புரோமைட் (Ammonium Bromide) | கிரைன்ஸ் | 8 |
| வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | துளி | 8 |
| டிஞ்சர் சில்லி (Tincture Scillae) | ,, | 10 |
| டிஞ்சர் செனிகா (Tincture Senegae) | ,, | 10 |
| சிரப் டோலு (Syrup Tolu) | ,, | 30 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## குழந்தைகள் பால் குடிக்காவிட்டால்:—

ஆகார வெறுப்பு என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## குழந்தைக் கட்டி:—

சுரக்கட்டி என்றதன் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## குளவிக்கொட்டு—Wasp Stings

தேனீ, குளவி முதலியவைகள் கொட்டினால், அதிகமான கடுப்பேற்படும். கொட்டினவிடம் சிவந்திருக்கும். அதன் கொடுக்கின் முள் உடைந்திருந் தால், சிராவணத்தால் (Pinchers) எடுத்துவிட வேண்டும்.

**சிகிச்சை**

(1) பழம் புளியையும், சுண்ணும்பையும் சமமாகச் சேர்த்துக் குழப்பித் தடவலாம்.

(2) நாயுருவியிலையை அரைத்துப் பூசலாம்.

(3) பல்விஸ் இப்பிக்காக் (Pulvis Ipecac) டிராம் 1
தண்ணீர் ,, ½
ஒன்று சேர்த்துக் குழப்பித் தடவலாம்.

(4) ஸ்பிரிட் அமோனியம் அரோமாட்டிக் (Spirit Ammonium Aromatic) இதைக் கடிவாயில் தடவி வரலாம்.

## குளிர்ச்சிரங்கு—Chilblain

குளிர்ச்சிரங்கானது, குளிர்காலத்திலாவது, குளிரில் நடமாடுவதினாலாவது, குழந்தைகளுக்கு கால் விரல்களிடுக்குகளிலும், காது மூக்கு இவைகளிலும்

சிறு சிரங்குபோ லுண்டாகும். வியர்க்கூருபோன்று சிறு நமைச்சல்க ளுண்டாகி, சீழ் பிடியாமல் சற்றுப் பெருத்து அப்படியே நசுங்கிவிடும். நசுங்கிய பின்னர், நீர் வடியாமல் வரட்சியாகவே சிரங்குபோலிருக்கும்.

சிகிச்சை

(1) சந்தன எண்ணெயைத் தடவி வரலாம்.

(2) அர்ஜெண்டம் நைட்ரஸ் (Urgentum Nitras) கிரைன்ஸ் 16
ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்து, காலிலுள்ள சிரங்குக்கு மட்டும் கோழியிறகில் தொட்டு தடவி வரலாம்.

**கூகைக்கட்டு:—**

அம்மைக் கட்டென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**கூகைவீக்கம்:—**

அம்மைக் கட்டென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**கோடைக்கட்டி:—**

இது வேனிர் காலங்களில் மிகுதியும் குழந்தைகளுக்கு வருவதுண்டு. இக் கட்டிகள் தலையிலும் முகத்திலுமே யதிக முண்டாகும். வெக்கை மிகுதி யினால் வியர்த்து வியர்கூருக ளுண்டாகி அதிலிருந்து பெருத்து கட்டிக ளாகி விடும். ஒரு குழந்தைக்கே பல கட்டிகளுண்டாகும். கட்டிகள் சிவந்து வலியுள்ளதாகவிருக்கும். இதற்குச் சஸ்திர சிகிச்சையே யேற்றதாகும்.

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) பளிங்குச்சாம்பிராணி | | கற்பூரம் | ரூபாயெடை 1 |
| | ரூபாயெடை 1 | சாதிலிங்கம் | ,, $\frac{1}{2}$ |

முதலில் சாம்பிராணியைத் தூள் செய்துண்கொடு கற்பூரத்தைச் சேர்த் தரைக்க மெழுகுபோல் வரும் அப்போது லிங்கத்தையும் சேர்த்தரைத்து அன லில் வாட்டி துணியில் தடவிப்போட கட்டியுடையும். கட்டி யுடைந்தபின் போரிக் காஸிடைத் (Boric Acid) தூற்றியாவது இதே பிளாஸ்திரியை மறு படியும் போட்டாவது அல்லது * ஈயப் பிளாஸ்திரியையாவது போட்டு இரணத்தை ஆற்றலாம்.

(2) அவரையிலையையும், அல்லியிலையையும் சமமாக எடுத்து, அரிசி கழுவிய தண்ணீர் விட்டரைத்துப் பூசிவரலாம்.

**சளி:—**

ஓயாத சளி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

---

* செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

**சளி:—**

நெஞ்சுத் தடிமனென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**சாம்பல் மண் தின்றல்:—**

சிறுக்குழந்தைகள் சாம்பல், மண் முதலியவைகளைத் தின்று விடுவது வழக்கம் இவைகளை அதிகமாய் புசிக்கவாரம்பித்தால் சிறு குடலுடன் சம்பந்தப் பட்டுத் தொங்கும் உபக்குடலில் (Appendix) போய்ச்சேர்ந்து குடல் விப்புருதியை (Appendicitis) உண்டாக்கிவிடும். அல்லது, இவைகள் ஜீரணமாகாமல் வயிற்றுப்பொருமலையும், வயிற்றோட்டத்தையுமுண்டாக் கும். சாம்பல், மண் தின்பதினால் இரைப்பையில் கட்டிபோல் திரண்டு உபத்திரவத்தையுண்டாக்கும். ஆதலால் சாம்பல், மண் தின்னும் குழந்தை களுக்கு அடிக்கடி மலத்துடன் அவைகள் கழிந்துபோகும்படி சிகிச்சை கள் செய்து வரவேண்டும்.

**சிகிச்சை**

(1) கத்திரிக்காய்ச்சாறு தேக்கரண்டி-2. சுட்டபெருங்காயம் ரூபாயெடை 1/16 ஒன்று சேர்த்துக் கொடுத்து வரலாம்.

(2) முள்ளங்கிச்சாறு தேக்கரண்டி-2. சுட்டபெருங்காயம் ரூபாயெடை 1/16 ஒன்று சேர்த்துக் கொடுத்து வரலாம்.

(4) மிளகு ரூபாயெடை 1 கீழ்க்காய்நெல்லிவேர் ரூபாயெடை $\frac{1}{2}$
கடுக்காய்த்தோல் ,, $\frac{3}{4}$

ஒன்று சேர்த்துப் புளித்தமோர் விட்டரைத்து 2-அவுன்ஸ் மோரில் $\frac{1}{8}$-ரூபாயெடை மருந்தைக் கரைத்துக் கொடுத்து வரலாம்.

**சிசுக்கண்ணோய்:—**

சூடுகுத்துதல் என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**சிலந்தி:—**

கட்டி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**சிறுநீர்க்கட்டு:—**

கடுப்போடு நீரிறங்க லென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**சீழ்கண்நோய்:—**

சூடுகுத்துதலென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**சுகபேதி—Aperient**

குழந்தைகளுக்கு மாதமொருமுறை அல்லது மூன்றுமாதத்திற் கொருமுறை யாவது மலபிரவர்த்தி செய்யும்படியான சுகபேதி மருந்துகளைப் பிரயோ

கம் செய்யவேண்டும். குழந்தைகளின் திரேகவளர்ச்சிக்கும் கிருமிகளின் உபத்திரவங்களிலிருந்தும், துர்நீர்வியாதிகளிலிருந்தும், தப்பித்துக்கொள்வதற்கு சுகபேதி மருந்துகளைக் கொடுக்கவேண்டியது. அவசியமாகும்.

## சுகபேதி மருந்துகள்

(1) சிற்றாமணக்கெண்ணெய் (Castor Oil) அல்லது வேப்பெண்ணெய் (Neem Oil) இவைகளிலொன்றில் 6-மாதமுதல் ஒரு வயதுக் குழந்தைகளுக்கு $\frac{3}{4}$-தேக்கரண்டி வீதமும், 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு $1\frac{1}{2}$-தேக்கரண்டி வீதமும்; 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு 3-தேக்கரண்டி வீதமும்; 6-முதல் 12-வயதுக் குழந்தைகளுக்கு 4, 6-தேக்கரண்டி வீதமும் காலை நேரங்களில் மட்டும் கொடுத்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஏலம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ | செண்பகப்பூ | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| கிராம்பு | ,, | $\frac{1}{4}$ | கடுகுரோகிணி | ,, | $\frac{1}{4}$ |
| கோஷ்டம் | ,, | $\frac{1}{4}$ | † சுத்திசெய்தநேர்வாளம் | ,, | $1\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்துச் சுடுதண்ணீர் விட்டு மைபோலரைத்து, 12-மாத்திரைகளாகப் பிரித்து, உருட்டி காயவைத்து காலையில் சுக்கு கஷாயத்தில் ஒரு மாத்திரையைக் கொடுக்கலாம்.

(3)

| | | |
|---|---|---|
| எப்சம் சால்ட் (Epsom Salt) | அவுன்ஸ் | 1 |
| டிஞ்சர் சிஞ்ஜிபரிஸ் (Tincture Zingiberis) | டிராம் | 1 |
| தண்ணீர் 2-அவுன்ஸாக்கப் போதுமானது | | |

முதலில் எப்சம் சால்ட்டை ஒரு அவுன்ஸ் தண்ணீர்விட்டு வடிகட்டி அத்துடன் டிஞ்சர் சிஞ்ஜிபரும், மொத்தத்தில் 2-அவுன்ஸாகப் போதுமான தண்ணீர் விட்டுக் கலந்து, $\frac{1}{2}$-முதல் 1-வயதுக் குழந்தைகளுக்கு 1, $1\frac{1}{2}$-தேக்கரண்டியளவும்; 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 2, 3-தேக்கரண்டிவீதமும்; 6-முதல் 12-வயதுக் குழந்தைகளுக்கு 6-தேக்கரண்டிவீதமும் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—டிஞ்சர் சிஞ்ஜிபரிஸுக்குப் பதிலாக, டிஞ்சர் சின்கோனாவாவது (Tincture Cinchonae) அல்லது, இன்பியூஷன் சென்னா (Infusion Sennea) வாவது சேர்த்துக் கொள்ளலாம். இன்பியூஷன் சென்னாவானால், தண்ணீரை நீக்கி 2-அவுன்ஸ் அளவாகச் சேர்த்துக் கொள்ளலாம்.

(4)

| | | |
|---|---|---|
| எப்சம் சால்ட் (Epsom Salt) | அவுன்ஸ் | 1 |
| ஆக்குவா மெந்தா பிப் (Aqua Mentha Pip) | ,, | 3 |
| மெக்னிஷியா கார்போனஸ் (Magnesia Carbonas) | கிரைன்ஸ் | 30 |

ஒன்று சேர்த்து ½-முதல் 1-வயதுக் குழந்தைகளுக்கு $1\frac{1}{2}$-தேக்கரண்டியளவாகவும்; 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 2, $2\frac{1}{2}$ தேக்கரண்டி வீதமும்; 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு 4-தேக்கரண்டி யளவாகவும்; 6-முதல் 12-வயது சிறுவர்களுக்கு 6-தேக்கரண்டி யளவாகவம் கொடுத்து வரலாம்.

† 60-ம் பக்கம் பார்க்கவும்.

## சுரக்கட்டி—Splenitis

இதைக் காச்சல் கட்டி, குலைக் கட்டி, குழந்தைக் கட்டி என்று சொல்லப்படும். இது பீலிகமென்ற மண்ணீரல் (Spleen) வீக்கம் கண்டதாலாவது, (Enlargement of Spleen) அதில் கட்டிப் புறப்படுவதாலாவது யேற்படுகிறது.

அடிக்கடி விஷசுரங்க ளுண்டாவதினாலேயே, மண்ணீரலின் இரத்தப்பசைக் குன்றி வீக்கமேற்படுகிறது. சுரக்கட்டி விசேஷமாக மலேரியா (Malaria) வென்ற விஷசுரத்தில்தான் அதிகம் உண்டாகிறது இதை மலைசுரக் கட்டி (Malarial Splenitis) என்று சொல்லுவர். சாதாரண முறை சுரத்தினாலும் மண்ணீரல் பெருத்தும் காண்பதுண்டு.

சுரக்கட்டி ஏற்பட்டு விட்டபின்பும் காச்சல் ஸ்திரமாகவே யிருக்கும்; சரீர மிளைத்து எலும்பும் தோலுமாகி, தலையும், வயிறுமட்டும் பெருத்திருக்கும்; மலச்சிக்கலேற்படும்; சர்மம் மண்ணிறமாக விருக்கும்; வயிற்றுக்குள் ஏதோ ஒன்று உருளுவதைப்போற் றோன்றும்; ஆகார வெறுப்பும், ஒக்காளமும், எப்பமும் உண்டாகி அகாலமரணத்திற் கேதுவாக்கும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | திப்பிலிமூலம் | ரூபாயெடை 1 | சுக்கு | ரூபாயெடை | 1 |
| | வெட்பாலைப்பட்டை | ,, 1 | மிளகு | ,, | 1 |
| | தேவதாரு | ,, 1 | திப்பிலி | ,, | 1 |
| | பால்சாம்பிராணி | ,, 1 | கொடிவேலி | ,, | 1 |
| | வாய்விளங்கம் | ,, 1 | மதுக்காரை | ,, | 1 |
| | கண்டுபாரங்கி | ,, 1 | கோஷ்டம் | ,, | 1 |
| | கரிசலாங்காணி | ,, 1 | சிற்றரத்தை | ,, | 1 |
| | கடுக்காய்த்தோல் | ,, 1 | ஓமம் | ,, | 1 |
| | சிறுவழுதலை | ,, 1 | கருநொச்சி | ,, | 1 |
| | பெருவழுதலை | ,, 1 | நிலவேம்பு | ,, | 1 |
| | வசம்பு | ,, 1 | செவ்வியம் | ,, | 1 |
| | பொன்முசுட்டை | ,, 1 | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் நாள் ஒன்றுக்கு 3-வேளை ½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) ருத்திர செந்தூரம்; பஞ்சாக்ஷர செந்தூரம்; முதலியவைகளி லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 1 |
| | ஆஸிட் சல்பியூரிக்டில் (Acid Sulphuric Dil) | துளி | 8 |
| | பெர்ரீ எற் அமோனியம் ஸிட்ரஸ் (Ferri et Ammonium Citras) | கிரைன்ஸ் | 4 |

† லைக்கர் ஆர்சனிக்காலிஸ் (Liquor Arsenicalis) துளி 3
தண்ணீர் அவுன்ஸ் 2

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப்பின் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## சூடேகுத்துதல்—Ophthalmia Neonatorum

குழந்தைப் பிறந்த இரண்டு தினத்திற்குப்பின் ஏழுதினத்திற்குள்ளாகச் சிசுக்களுக்கு இந்நோய் வருவதுண்டு. தாய்க்கு வெள்ளைப் பிரயோகம், அரைக்கரப்பான் முதலிய வியாதிகள் இருப்பதினாலும், அவ்வித வியாதியுள்ள ஸ்திரீ பிரசவிக்கும் சமயம் சிசுவின் சிரசு உதயமாகிநெடுநேரம் பிரசவமாகாமல் யோனிப்பாதையில் சிரசு தாமதித்து நின்றதினாலும், பிரசவமாகும் சமயம் சிசுவின் கண்களில் யோனியிலிருந்து கசியும் துற்நீர் படுவதினாலும், சிசுக்களுக்கு இக்கண்ணோய் யுண்டாகக் காரணமா யிருக்கிறது. பிரசவமானவுடனே சிசுவின் கண்களைப்பற்றி மிக்க கவலையுடனும் சுகாதாரவிதியுடனும் மருத்துவச்சி, (36-பக்கம் பார்க்கவும்) கண்களைச் சுத்தம் செய்யாமல் விட்டு விடுவதினாலும், அசூசியும், துற்கந்தமுமுள்ள அறைகளில் பிரசவம் நடப்பதினாலும், கொசு, ஈ, முதலியவைகளைக் கண்ணில் மொய்க்கும்படி அலக்ஷியமாய் விட்டு விடுவதினாலும், சிசுக் கண்ணோ யுண்டாகலாம். இச் சிசுக் கண்ணோயினால் சாஸ்வத குருடு உண்டாகலாம். பிரசவிக்கும் ஸ்திரிக்குப் பிரமேக ரோகமிருந்தாலும் சரி, யில்லையானாலும் சரி பிரசவ வலி கண்டவுடன் யோனிப்பாதையைச் சுடுதண்ணீரினால் சுத்தமாகக் கழுவி விடவேண்டும். இவ்விதம் செய்தால் சிசுக் கண்ணோயுண்டாவதற்குக் காரணமதிக மிருக்க முடியாது.

கண்ணிமைகள் வீங்கி பூழை சேர்ந்திருக்கும்; கண் சிவந்து, கூச்சமும், மணல் கொட்டியதைப் போல் உறுத்தலுமிருக்கும்; தூங்கும்போது கண்ணிமைகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு வலியைக் கொடுக்கும்; சீழ் போன்ற மஞ்சள்நிறமான பூழைகள் குழிகளில் நிறைந்திருக்கும்; கருவிழிகள் சிறுத்துத் தெரியும். இதனால் சில சமயம் சிசுவுக்குத் திரேகம் உஷ்ணமா யிருக்கலாம்.

முதலில், "கழுவதலும் குளிப்பாட்டலும்" என்ற தலைப்பின் கீழ் 36-வது பக்கம் சொல்லியபிரகாரம் கண்களை சுத்திசெய்ய வேண்டியது. கண்களைச் சுத்தம் செய்ய கீழ் கண்ட கண் கழுவுநீரை உபயோகிக்கலாம். ஒரு தரம் கழுவுநீரில் நனைத்து துடைத்த துணியை மறுதரம் உபயோகிக்கக்கூடாது.

### சிகிச்சை

கண் கழுவுநீர்—Eye Lotion

(1) ஆஸிட் போரிக் (Acid Boric) டிராம் 1
மழைத்தண்ணீர் (Rain Water) அல்லது
ஆவித்தண்ணீர் (Distilled Water) அவுன்ஸ் 12

† விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

ஒன்று சேர்த்துக் கரைத்துக்கொண்டு, மிருதுவான வெள்ளைத் துணியில் நனைத்துக் கண்ணைச் சுத்தம் செய்யலாம்.

(2) பன்னீரில் (Rose Water) 2-துளி கண்ணில் விடலாம்.

(3) கற்கண்டைப் பொடித்து ஒரு வெள்ளைத் துணியில் முடிந்து, புளிப்பு மாதுளம்பழச் சாற்றில் ஊறவைத்து 2-துளி கண்ணில் பிழியலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | சிங் சல்பஸ் (Zinc Sulphus) | கிரைன்ஸ் | 1 |
| | ஆஸிட் போரிக் (Acid Boric) | ,, | 5 |
| | கிளிசரின் (Glycerine) | துளி | 30 |
| | டிஸ்டில் வாட்டர் (Aqua·Distilled) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 1.-வது இலக்க கண் கழுவுநீரால் கண்ணைச் சுத்தம் செய்து பின் 2-துளி விட்டு வரலாம்.

கண்ணிரப்பைகள் நித்திரையின்போது ஒட்டிக்கொள்ளாமலிருக்க, சுத்தமான பன்றிக் கொழுப்பையாவது (Lard) பச்சைவெண்ணெயை யாவது, சைதூண் எண்ணெயையாவது தூங்கப்போகும் சமயங்களில் கண்மடலினோத்தில் கொஞ்சமாகத் தொட்டு தடவி வைக்கலாம்.

## செவ்வாப்புக் கட்டி:—

இது குழந்தைகளுக்குண்டாகும் ஓர்வித துர்நீர்க்கட்டி. செவ்வாப்புக் கட்டியும் வேனல் கொப்புளங்களைப்போலவே, அநேகமாக சிரசிலும், முகத்திலும் தானுண்டாகும்; எல்லாவிதத்திலும் இது வேனல் கொப்புளத்தை யொத்ததாகவே யிருக்கும்; இதற்கு சஸ்திர சிகிச்சையே மேலானது.

### சிகிச்சை

கோடைக் கட்டிக்குண்டான சிகிச்சையே செய்யலாம்.

## தடிமன்:—

ஓயாத சளி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## தானப்பூச்சி:—

கீரைப் பூச்சி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## தீப்பட்ட புண்—Burns

அகஸ்மாத்தாய் குழந்தைகளுக்கு நெருப்பாவது, சுடுதண்ணீராவது பட்டுவிட்டால் கீழ்கண்ட சிகிச்சைகள் பயனுள்ளதாயிருக்கும்.

### சிகிச்சை

(1) நெருப்பாவது சுடுதண்ணீராவது பட்டவுடன் கறியுப்பைத் தண்ணீரில் கரைத்துத் தடவி விட்டால் கொப்புளம் கண்டு, புண்ணாகாது.

(2) தேனைப் பூசலாம்.

(3) வாழை மட்டைச் சாற்றைப் பூசலாம்.

(4) ஒரு தேக்கரண்டி சோடா உப்பை (Washing Soda-Sodium Bicarbonate) 10-அவுன்ஸ் தண்ணீரில் கரைத்துத் தடவலாம்.

கொப்புளம் உண்டாகிவிட்டால்:—

| | | | |
|---|---|---|---|
| (5) | கார்பாலிக் காஸிட் (Acid Carbolic) | டிராம் | ½ |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்து, கொம்புளங்களை நன்றாகக் கழுவி விட்டு, பின்னர் கத்திரிக்கோலால் கொப்புளங்களை வெட்டி தோலை நீக்கி, அந்தப் புண்ணின் மேல்:—

பிஸ்மத் சப்நைட்ராஸ் (Bismuth Subnitras) இதைத் தூற்றி பஞ்சுவைத்துக் கட்டிவரலாம்.

கொப்புளம் வெடித்துப் புண்ணுகிவிட்டால்:—

(6) தேங்காயெண்ணெயும், சுண்ணாம்புத் தெளிவு நீரையும் சமமாய்க் கலந்து ஒரு துணியில் நனைத்து புண்ணின மேல் போட்டு வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (7) | கார்பாலிக் காஸிட் (Acid Carbolic) | டிராம் | 1 |
| | தேங்காயெண்ணெய் (Cocoenut Oil) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்துத், துணியில் நானைத்துப் புண்ணின் மேல் போட்டுவரலாம்.

## தூக்கத்தில் பயந்தெழுதல்—Parvo Nocturnus—Night Terrors

குழந்தைகள் நித்திரைசெய்யும்போது திடீரென்று வெருண்டெழுந்து பயத்துடன் சுற்றி சுற்றி பார்க்கும். இது குழந்தைகளுக்கு இரண்டாவது பல்முளைக்கும்போது சாதாரணமாய் ஏற்படுவதுண்டு. இது ஒன்று விட்டொருநாள் ஏற்படும். சற்றுவிவரம் தெரிந்தகுழந்தைள் தூக்கத்தில் பயந்தெழும்.

குழந்தைகள் கனவு காண்பதினாலாவது, தன்னையறியாமல் மூத்திரம் பெய்துக் கொள்வதினாலாவது, பகல் முழுவதும் ஓயாமல் கடினமான விளையாட்டுகள் விளையாடுவதினாலாவது, தூக்கத்தில் பயந்தெழுந்திருக்கலாம். மேலும், நரம்புபலயீனமுள்ள குழந்தைகளுக்கும், மூக்கில் சதைவளர்ந்திருத்தல், மலசிக்கல், அஜீரணம் முதலிய கோளாறுகளுள்ள குழந்தைகளுக்கும் இது உண்டாகலாம். கிருமிகள் விசேஷித்திருப்பதினாலும் குழந்தைகள் தூக்கத்தில் பயந்தெழும்.

### சிகிச்சை

மலசிக்கலினால் பயந்தெழுந்தால்:—

(1) இலகுவிரேசனகாரிகளைக் கொடுத்து மலச்சிக்கலை நீக்கவேண்டியது.

கிருமிகளினால் பயந்தெழுந்தால்:—

(2) கிருமிகளுக்குண்டான சிகிச்சைகளைச் செய்து வர வேண்டியது.

அஜீரணத்தால் பயந்தெழுந்தால்:—

| | | | |
|---|---|---|---|
| (3) | பல்விஸ் ரூபார்ப் (Pulvis Rhubarb) | கிரைன்ஸ் | 9 |
| | சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 5 |

ஒன்று சேர்த்து 3-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப் பின் ஒரு பாகத்தைத் தேனில் கொடுத்து வரலாம்.

(பொது மருந்துகள்)

| | | | |
|---|---|---|---|
| (4) | அமோனியம் புரோமைட் (Ammonium Bromide) | கிரைன்ஸ் | 15 |
| | வைனம் அன்டிமோனியாலிஸ் (Vinum Antimonialis) | துளி | 15 |
| | சிரப் ஆரன்டி (Syrup Auranti) | அவுன்ஸ் | 1 |
| | ஆக்குவா மெந்தா பிப் (Aqua Mentha Pip) | ,, | 1 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு இரவு படுக்கைக்குப் போகுமுன் ஒரு தேக்கரண்டிவீதம் கொடுத்து வரலாம்.

## தூக்கத்தில் மூத்திரம் பெய்தல்—Enuresis Nocturna

இது குழந்தைகளுக்குச் சகஜமாக வேற்படக்கூடியதொன்று. குழந்தைகளுக்கு 3-வயதாரம்பத்திலிருந்தே மலமூத்திரத்தை யடக்கிக்கொள்ளும் தத்துவம் ஏற்பட்டுவிடுகிறது.

நரம்பு பலயீனமுள்ள குழந்தைகள் நித்திரையில் மூத்திரத்தை முழுவதும், அல்லது அரைகுறையாய் நிறுத்த சக்தியற்றுப் போய்விடுகிறது. குழந்தைகள் இரவில் நித்திரையைவிட்டு எழுந்துபோய் மூத்திரம் பெய்வதற்குப் பயந்தோ, அல்லது கனவுகண்டு வெளியில்போய் மூத்திரம் பெய்வதாக கருதியோ, முற்றிலும் தன்னை யறியாமலோ மூத்திரம் பெய்துவிடலாம். சில குழந்தைகளுக்கு இருமும்போதெல்லாம் மூத்திரம் கசிவதுமுண்டு. தன்னை யறியாமல் மூத்திரமபெய்யும் செய்கையானது குழந்தைகளுக்குச் சாதாரணமாக மூன்று அல்லது நான்குவயதிலிருந்து பதினைலு, பதினறு வயது வரையிலிருப்பதுண்டு.

அதிக பலஹீனம், நீரிழிவு, வாதம், காக்கை வலிப்பு, மூளையதிர்ச்சி (Concussion of the Brain) சித்தப்பிரமை (Acromania) குண்டிக்காய் வீக்கம், நீர்தாரையில் சதை வளர்ந்திருத்தல், நீர்ப்பை வீக்கம் (Cystitis) அளவிற்கதிகமாய் தண்ணீர் குடிப்பது, அதிக புளிப்பான வஸ்துக்களைத் தின்பது, கீரைப்பூச்சதிகரிப்பு முதலிய காரணங்களினல் குழந்தைகள் நித்திரையில் மூத்திரம் பெய்யலாம்.

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | கிரைன்ஸ் | 71 |
| | * டிஞ்சர் பெல்லடோனு (Tincture Belladonnae) | டிராம் | 5 |

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

சிரப் சிம்பிள் (Syrup Simple) ,, 2
ஆக்குவா புளோரிஸ் ஆரண்டி (Aqua Floris Auranti) அவன்ஸ் 1

ஒன்று சேர்த்து, 6-முதல் 10-வயதுக் குழந்தைகளுக்குச், சாயந்திரம் ஒரு தேக்கரண்டி வீதமும், இரவு படுக்கைக்குப் போகுமுன் ஒரு தேக்கரண்டி வீதமும் கொடுத்து வரலாம்.

(2) ஆஸிட் பென்சாயிக் (Acid Benzoic) கிரைன்ஸ் 8
காம்பர் (Camphor) ,, 4
* எக்ஸ்ட்ராக்ட் பெல்லடோனு (Extract Belladonnae) ,, 1

ஒன்று சேர்த்து 4-மாத்திரையாகச் செய்துகொண்டு, 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு இரவு படுக்கைக்குப் போகுமுன் ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

### தூக்கமின்மை—Insomnia

தூக்கம வராதிருப்பது மூளை கோளாறுகளி லொன்ருகும். அப்பேர்பட்ட குழந்தைகளுக்கு மயக்கம் தரும்படியான அபின்போன்ற மருந்தும், அபின் சாருயம் கலந்த மருந்துகளும் ஒருபோதும் கொடுக்கக்கூடாது. இராக் காலங்களில் காப்பி தேயிலை பானங்களை கொடுத்தாலும் தூக்கம் வராது. மலச்சிக்கலினுலும் தூக்கம் வருவது கஷ்டமாகும். தலையை அதிவுயரமாக வைத்திருந்தாலும் கிருமிகள் மிகுந்திருந்தாலும் தூக்கம் வராது.

குழந்தைகளுக்த்கு தூக்கம் வராவிட்டால் தாங்கும்படியான வெந்நீரில் ஸ்நானம்செய்வித்துச் சுடசுட கொஞ்சம் பசும்பால்கொடுக்கலாம். ஹாட்வாட்டர் பாட்டிலி (Hot Water Bottle)ல் சுடுதண்ணீர்விட்டு பாதங்களில்வைத்து வரலாம். அதிகமான காற்றுப்படும்படி விசிறியால் விசிறலாம். விளக்கு வெளிச்சத்தால் தூக்கம் வராமலிருக்குமானுல் விளக்கை நிறுத்திவிடலாம். தலையைச் சற்று தாழ்வாக வைக்கலாம். தடவிக் கொடுத்தும் தாலாட்டியும் தூங்கச் செய்யலாம்

### தேனீக்கடி:—

குளவிக்கொட்டு வென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

### தோங்கல்:—

குழந்தைகள் மேய ஆரம்பிக்கும்போது தரையில் கிடப்பவைகளை எடுத்து தின்றுவிடும். மெல்லிய காகிதங்கள் வெற்றிலை முதலியவைகள் குடலில் தங்கிக்கொண்டு வயிற்ருேட்டமேற்படும்; வயிறு பொருமி மடமடவென்ற சப்தத்துடன் வயிறு கழியும்; வயிற்றுவலியும் சற்றுயிருக்கும். இது இப்படியே தங்கிவிடுமானுல் அந்தவிடம் புண்பட்டு ஆபத்தைவிளைவிக்கும்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆவாரங்கொழுந்துரூபாயெடை | 1 | வசம்பு | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| செம்மண் | ,, 1 | ஓமம் | ,, | $1\frac{1}{4}$ |
| வெள்ளாட்டுப்பிழுக்கை ,, | 1 | வெந்தயம் | ,, | $1\frac{1}{4}$ |

முதல் 4-சரக்கையும் சட்டியில் போட்டு நெருப்புப்பற்ற வறுத்து பின் ஓமம் வெந்தயத்தையும் சேத்து, 24-அவுன்ஸ் தண்ணீர் விட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் $\frac{1}{2}$, 1-தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## தொண்டைப் புகைச்சல்;—

குத்திருமமென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## தொண்டைப் புண்—Cynanche—Sore Throat

இது சாதாரண தொண்டை வீக்கத்துடன் உண்டாகும் ஒரு வியாதி. தொண்டை இருபுறமும் சிவந்து வீங்கி ஒன்றையும் விழுங்கவிடாமல் செய்துவிடும். தொண்டைக்குள் கட்டிகள் போன்று கிளம்பி யிருக்கும். தொண்டையில் வெளுரின மஞ்சள் நிறமான புள்ளிகள் காணப்படும். தொண்டைப்புண் ரோகத்தில் சுரம் 103, 104-டிகிரி திரேகோஷ்ணம் வரை யேற்படலாம். சில சமயங்களில் இது மாந்தரோகத்தை ஒத்ததாகவே இருக்கும்.

இவைகள் நுண்ணிய தொத்துவியாதி கிருமிகளினுல் யேற்படலாம். மிகுதியான குளிரினுலும், சுகாதாரக் குறைவான விடங்களிலும், சுற்றிலும் சாக்கடைகள் இருக்கும்படியான இடங்களிலும், வசிப்பதினுலும், இவ்வியாதி சம்பவிக்கலாம். இவ்வியாதியினுல் குழந்தைகளுக்கு வாதம் வந்து சேருமாதலால் எச்சரிக்கையுடன் சிகிச்சை செய்யவேண்டிய தவசியமாகும்.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) கோரோசனை | ரூபாயெடை 1 | சகஸ்திரபேதி | ரூபாயெடை | 1 |
| கோஷ்டம் | ,, 1 | அதிமதுரம் | ,, | 1 |
| ஏலம் | ,, 1 | கிராம்பு | ,, | 1 |
| செண்பகப்பூ | ,, 1 | மாசிக்காய் | ,, | 1 |

ஒன்று சேர்த்து, மாசிப்பத்திரிச் சாற்றுல் இரண்டுமணி நேரமும், கருந்துளசிச்சாறுல் இரண்டுமணி நேரமும், வெட்டிவேர் கஷாயத்தில் இரண்டுமணி நேரமும், விலாமிச்சை வேர் கஷாயத்தால் இரண்டுமணி நேரமும் அரைத்து, குன்றிமணி யவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக்கொண்டு, மாசிப்பத்திரி கஷாயத்தில் காலை மாலை ஒருமாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) டிஞ்சர் அக்கோனைட் (Tincture Aconite) | துளி | 2 |
| லைக்கர் அமோனியம் சிட்ரேட் (Liquor Ammonium Citrate) | டிராம் | $1\frac{1}{2}$ |

| | | | |
|---|---|---|---|
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | ,, | 1 |
| | ஆக்குவா டிஸ்டில் (Aqua Distilled) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்து, தொண்டைப்புண் ஆரம்பத்தில் 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற்கொரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | பொட்டாஷியம் குளோரஸ் (Potassium Chloras) | கிரைன்ஸ் | 30 |
| | டெக்காக்ஷன் ஆல்த்தா (Decoction Althae) | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 5, 6-தடவை விழுங்கிவிடாமல் வாய் கொப்புளிக்கச் செய்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | ஐயோடின் ( Iodine) | கிரைன்ஸ் | 3 |
| | பொட்டாஷியம் ஐயோடைட் (Potassium Iodide) | ,, | 30 |
| | கிளிசரின் (Glycerine) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துத் தொண்டைவீக்கம் அதிகமாயிருக்கும் சமயம் தொண்டைக்குள் பூசலாம்.

| | | | |
|---|---|---|---|
| ) | ஆஸிட் டானிக் (Acid Tannic) | டிராம் | 2 |
| | கிளிசரின் (Glycerine) | ,, | 6 |

ஒன்று சேர்த்துத் தொண்டையில் புண்ணிருந்தால் புண்ணின்மேல் தடவி வரலாம்.

## தொண்டைப்புற்று—Suppurative Tonsillitis

இதுவும் தொண்டைப்புண் வியாதிதானென்றாலும், தொண்டை அதிகமான புண்பட்ட நிலைமைக்கு இந்தப் பெயர் குறிப்பிடப்படுகிறது. இந்த ரோகத்திற்கும் மாந்தரோகத்திற்கும் அதிகமான வித்தியாசங்களிருப்பதில்லை.

தொண்டையின் இருபக்கங்களிலும், கொப்புளங்கள் உண்டாகி வெடித்து, சீழ்ப்பிடித்து மெல்லிய தொண்டையின் ப்பாகங்களையும் தாக்கி, அதிகமான வலிவேதனை, தொண்டைக்கம்மல், தொண்டைக் கமரல், தலைவலி, முதுகு வலி, இடுப்புவலி முதலியவைகளை யுண்டாக்கிவிடுகிறது. நாவில் மாவு படிந்து, வாய் நிணநாற்றமா யிருக்கும்; காச்சல் 104, 105-டிகிரி வரையிலுமிருக்கும்; இதற்குப் பால், கஞ்சி முதலிய ஜலரூபமான ஆகாரங்களைத்தான் கொடுகக வேண்டும.

### சிகிச்சை

தொண்டைப்புண்ணுக் குண்டான சிகிச்சைகளையும், மாந்தப் பொது சிகிச்சைகளையும் செய்து வரலாம்.

## நகைக்கு வீங்கி:—

அம்மைக்கட் டென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

41

**நாக்குப்பூச்சி:—**

இரைப்பூச்சி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**நாய்க் கடி—Dog Bites**

சாதாரணமான நாய் கடிப்பதே ரோகத்தை யுண்டுபண்ணும் விஷத்தன்மை யுள்ளதாகும். அதிலும் வெறி நாய் கடித்தால் கொடிய தீங்கை விளை விக்கும். நாய் கடித்தவர்களுக்கு சில ஆண்டுகளுக்குப் பின்னர், ஒருவித வெறியுண்டாகும். இதற்கு வெறிநாய் கடிரோகம் (Hydrophobia) என்று சொல்லப்படும். இதில் வாயிலிருந்து நுரைத்தள்ளுதல், நாயைப்போன்று உறுமுதல், அடிக்கடி கக்கலேற்படல் முதலிய வெறிநாயின் குணங்க ளெல்லாமுண்டாகும். வெறியில்லாத நாய்கடித்தாலும் கெடுதல் உண்டா காமலிருப்பதில்லை. ஆதலால் நாய் கடித்தவுடன் கடிவாயிக்குமேல் கயிற்றால் இருக்கிக்கட்டிவிட்டு அப்பொழுதே சிகிச்சை செய்யவேண்டுமென்பது மிகவும் அவசியமானதாகும். மேலும் உடனே விரேசனகாரிகளையும் கொடுக்கவேண்டும்.

**சிகிச்சை**

(1) சுத்தமான கத்தியினால் கடிவாயைச் சற்றுப்பெருக்கி சுடுதண்ணீரும் காடியையும் சமனாகக் கலந்து கடிவாயைக் கழுவலாம்.

(2) எருக்கம்வேரை எருக்கம்பால் விட்டரைத்து, 3-நாளைக்கு கடிவாயில் வைத்துக் கட்டி வரலாம்.

(3) நாய் கடித்தவுடன் கார்பாலிக் ஆஸிட்டை (Acid Carbolic) கடிவாயில் 2, 3-துளி விட்டு வேகச்செய்து, பின்னர் போரிக் காஸிடை (Boric Acid) தூற்றி புண்ணை யாற்றிவரலாம்.

**நித்திரையில் மூத்திரம் பெய்தல்:—**

தூக்கத்தில் மூத்திரம் பெய்தலென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**நீரடக்க முடியாதுபோதல்:—**

தூக்கத்தில் மூத்திரம் பெய்தலென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**நீரடைப்பு:—**

கடுப்போடு நீரிறங்க லென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**நீர் கடுப்பு:—**

கடுப்போடு நீரிறங்க லென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**நீர் கலங்கலா யிறங்குதல்—Bacilluria**

இது குழந்தைகளுக்கு அதிகமா யேற்படக்கூடியதோர் வியாதியல்ல. இது விசேஷமாகப் பெண் குழந்தைகளுக்கே யதிகம் சம்பவிக்கலாம். குழந்தை கள் சுகதேகியாக விருக்கும்போதே முன்னறி குறிகளின்றி இது உண்டா

கும். நீர் கலங்கலா யிறங்கும் இவ்வியாதி, தொத்துரோகக் கிருமிகள் மூத்திரப் பையில் (Bladder) போய்ச் சேருவதினாலேயே யுண்டாகலாம்.

மூத்திரத்தில் உப்பு சத்து அதிகரித்து, மூத்திரம் சற்று கருகிறமாகக் கலங்கி, கிண நாற்றத்துடனிறங்கும்; சில சமயம் சிறுநீருடன் சீழ் கலந்து அழுகிய மாமிச அணுக்கள்போன்று கலங்கலாயு மிறங்குவதுண்டு. இது மூத்திரப் பை வீக்கத்தினாலிருக்குமானால், மூத்திரம்அடிக்கடியும் வலியுடனு மிறங்கும். ஆரம்பத்திலேயே நீர்க்கலங்கல் வியாதியாக விருக்குமானால், நோயின் குறி தீவிரமாகப் பரவும்; காச்சல் 103,104-டிகிரிவரை ஏறும். சில சமயங்களில் சன்னி யேற்படுவது மூண்டு. வலதுபக்க அரையில் மிகுதியும் வலியுண்டாகும். பெண் குழந்தைகளின்மலவாயிலுள்ள கீரைப்பூச்சிகள் நித்திரையின்போது, யோனிவழியாய் உட்சென்று நீர்ப்பையில்போய்ச் சேருவதினால் இந்த ரோகம் பெண் குழந்தைகளுக்கு அதிகமா யேற்படக் காரணமா யிருக்கிறது.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | ஆவாரம்பூ | ரூபாயெடை | 1 | நெல்லிவற்றல் | ரூபாயெடை | 1 |
| | ஆவாரம்வேர் | ,, | 1 | மருதம்பட்டை | ,, | 1 |
| | ஆவாரம்பட்டை | ,, | 1 | நாவற்பட்டை | ,, | 1 |
| | கோரைக்கிழங்கு | ,, | 1 | கடலழிஞ்சுப்பட்டை | ,, | 1 |
| | கடுக்காய் | ,, | 1 | கட்டுக்கொடி | ,, | 1 |
| | தான்றிக்காய் | ,, | 1 | போஸ்த்தக்காய் | ,, | 1 |

ஒன்று சேர்த்துத் தூள் செய்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ½, 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) வெண்ணுவற்கொட்டை ரூபாயெடை 5, இதை ஆடுதீண்டாப்பாலையிலைச் சாறுவிட்டு மைபோலரைத்துச் சுண்டக்கா யவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக்கொண்டு ஆவாரம்பட்டை கஷாயத்திலாவது, நெல்லி வற்றல் கஷாயத்திலாவது காலை மாலை ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | ஆஸிட் போரிக் (Acid Boric) | கிரைன்ஸ் | 8 |
| | யூரோடுரோபைன் (Uro Drophyne) | ,, | 5 |
| | இன்பியூஷன் பக்கு (Infusion Buchu) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு, நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

(4) பொட்டாஷியம் சிட்ரேட் (Potassium Citrate) கிரைன்ஸ் 20

இதை 4-பாகமாகப் பிரித்து மடித்துக் கொண்டு, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொருதரம் ½-அவுன்ஸ் தண்ணீரில் கரைத்துக் கொடுத்து வரலாம்.

**நெஞ்சில் கபம்கட்டி திட்டுமுட்டடித்தல்:—**

நெஞ்சுத்தடிமனென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**நெஞ்சுத்தடிமன்—Acute Bronchitis**

நுரையீரல், சிறுகாற்றுக்குழல் இவைகளில் வீக்கம் கண்டு சளிபிடித்துக் கொள்வதினாலேயே நெஞ்சுத்தடிமன் யேற்படுகிறது. இதுசாதாரண நாசித்தடுமனிலிருந்து வித்தியாசப்படுகிறது. நாசித்தடுமன் மூச்சு விடப்படும் நாளங்களில் உண்டாகும் கோளாறுகளில் ஏற்படுவதாகும். நெஞ்சுக்குமேல் வலிகண்டு கோழையிருப்பதாகத் தெரிந்தால் நெஞ்சுத்தடிமன் (Cold in the chest) என்று சொல்லுவர். சுவாச நாளங்களில் சளி சேர்ந்துக்கொள்ளுவதற்கு சிசுக்களின் தேகம் பிரகிருத்திவாய்ந்ததா யிருப்பதினால், குழந்தைகளுக்கு அடிக்கடி சளிபிடித்துக் கொள்ளுகிறது.

குளிர்காற்று அதிகமாகத் தாக்குவதினாலும், ஈரத்தில் நடமாடுவதினாலும், சீதோஷ்ண ஸ்திதி விகல்பப்படுவதினாலும், குழந்தைகளுக்குச் சரியான விதமாகத் துணிகள் போர்த்தாததினாலும், அதிகமான தூசிகளைச் சுவாசிப்பதினாலும், கக்கு இருமல், அம்மை இவைகளாலும், தோஷ ரோகத்தினாலும் குழந்தைகளுக்கு அடிக்கடி தடிமன் பிடித்துக் கொள்ளுகின்றன.

நெஞ்சுத்தடிமன் சாதாரணமாக நாசியில் தண்ணீர்வடிவதே முதல் அறிகுறியாகக்கொண்டு தலைவலி, காச்சல், இருமல் முதலியவைகளும் உண்டாகும். நெஞ்சில் கட்டைபோட்டது போன்ற உணர்ச்சியும், சுவாசம் விடுவதற்குக் கஷ்டமேற்படும். சுவாசம் விடும்போது ஊது சப்தமுண்டாகும். ஆரம்பத்தில் வரட்சி இருமலாகவிருந்து வரவரசளியும் பின் மஞ்சள் நிறமான கட்டிசளியும் வரும். நாடி தீவிரமாக விருக்கும். மூத்திரம் மஞ்சளாகத் தோன்றும். நாவு மாப்படிந்து நெற்றியிலும், கண்களிலும் வலியுண்டாகும். மற்றபடியாக காச்சலுக்குண்டான குணங்களுமிருக்கும்.

நெஞ்சுத்தடிமனில் அசாத்திய குறிகளாவன:—உடம்பு வியர்த்துச் சர்மமெல்லாம் சில்லிட்டிருந்தாலும், கன்னமும் உதடும் வெளுத்து வாடி காணப்பட்டாலும், அரைக்குங் கீழ் குளிர்ந்திருந்தாலும், குறுமூச்சு விடப்பட்டாலும், சுவாசிக்கும்போது மூக்கு அகண்டு சுருங்கினாலும், மயக்கம் உண்டானாலும், கவலைக்கிடமானதாகும். அன்றியும், தொண்டையில் சளியடைத்து வெளியேற்றமுடியாமல் சிரமப்பட்டாலும், திரேக உணர்ச்சியற்றிருந்தாலும், ஒவ்வொரு சுவாசத்திற்கு பின்னும் வலிப்பும், மயக்கமும் கண்டாலும், முழுநம்பிக்கையற்றதாகும்.

சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | தூதுவேளையிலை ரூபாயெடை 2 | | ஆடாதோடையிலை | ரூபாயெடை 2 |
| | கண்டங்கத்திரிவேர் ,, | 2 | சிற்றரத்தை | ,, 2 |

ஒன்று சேர்த்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் ½, 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) கோரோசனை மாத்திரை; அப்ரகக் கோரோசனை மாத்திரை இவைகளிலொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | டார்டர் எமட்டிக் (Tartar Emetic) | கிரைன் | 1 |
| | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | அவுன்ஸ் | ½ |
| | சிரப் சிம்பிள் (Syrup Simple) | ,, | 1 |
| | தண்ணீர் | ,, | 6 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு வாந்தியுண்டாகுமட்டும் ¼-மணி நேரத்திற் கொருமுறை2-தேக்கரண்டியளவு கொடுத்து வாந்தியானபின் 3-மணி நேரத்திற்கொருமுறை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | அமோனியம் கார்போனஸ் (Ammonium Carbonas) | கிரைன்ஸ் | 24 |
| | பொட்டாஷியம் பைகார்போனஸ் (Potassium Bicarbonas) | டிராம் | 2 |
| | எக்ஸ்டிராக்ட் கிளிசரிஸா லிக்குட் (Extract Glycerrhiza Liquid) | ,, | 4 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொருமுறை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

இருமலதிக மிருந்தால்:—

| | | | |
|---|---|---|---|
| (5) | டிஞ்சர் காம்பர் (Tincture Camphor) | துளி | 18 |
| | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | ,, | 18 |
| | பொட்டாஷியம் கார்போனேட் (Potassium Carbonate) | கிரைன்ஸ் | 2 |
| | ஆக்குவா அனிஸி (Aqua Anisi) | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | டர்பென்டைன் (Turpentine) | டிராம் | 1 |
| | இயூகலிபுடஸ் ஆயில் (Oil Eucalyptus) | ,, | 1 |

ஒன்று சேர்த்து வெளிப்பிரயோகமாக நெஞ்சு தொண்டைக்குழி, நடுமுதுகு, இவைகளில் தேய்க்கலாம்.

(7) அன்டிபிளாஜெஸ்டைன் (Antiphlogistine) இதைத் துணியில் கனமாய்த் தடவி நடுமுதுகிலும், நெஞ்சின்பேரிலும் போடலாம்.

நெருப்புச் சுட்டப்புண்:—

தீப்பட்ட புண்ணென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

நெல்வால் பூச்சி:—

கீரைப் பூச்சியென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## பல் முளைக்கும்போதுண்டாகும் கோளாறுகள்—Disorders in Dentition

இரத்தக் குறைவான வியாதிகளிலும், தோஷ வியாதிகளிலும், கிரந்தி ரோகங்களிலும் கஷ்டப்பட்ட குழந்தைகளுக்குப், பற்களின் வளர்ச்சி க்ஷீணப்படுவதுந் தவிர, பல் முளைக்கும் காலங்களில் தொந்திரவு உண்டாகலாம்.

கிரமாதீத ஆகாரங்களினாலும், அசுசியான ஆகாரங்களினாலும், அளவுக்கதிகமான ஆகாரங்களினாலும், ஜீவதாது பொருள் குறைந்திருப்பதினாலும், பல் முளைக்கும்போது தொந்திரவுகளேற்படலாம். மேலும், தாய் பாலைத் தவிர்த்து வயதுக்கிணங்க, தகுதியான ஆகாரங்களைக் கொடுக்காததினாலும், இந்தக் கோளாறுகள் உண்டாகின்றன.

அநேகமாகக் குழந்தைகளுக்குப் பல் முளைக்கும் காலங்களில் யாதொரு உபத்திரவமும் உண்டாவதில்லை. ஒரு சிறு குழந்தைகளுக்கு மட்டுமே பல் முளைக்கும்போது சிற்சில விகற்பங்கள் ஏற்படலாம்; நெஞ்சுத்தடுமன், சர்வாங்க வலி, கை கால்களை முறுக்குவது, தூக்கத்தில் எழுந்து ஓடுவது, இருந்தாப்போ லிருந்து சுரம் காய்வது, திரேகம் மிகுதியும் சூடாயிருப்பது, பல்லீறுகள் வீக்கம், அளவுக்கதிகமான எச்சில் பெருக்கு, ஜீரண கருவிகள் பலயீனமும், அதனால் வயிற்றோட்டம் அல்லது, மலச்சிக்கலும், வலிப்புகளும், நரம்பு பிடித்தங்களும், வாந்தி முதலிய யேதாவதொன்றோ அல்லது பல சேர்ந்தாகிலு மிருக்கும். சில குழந்தைகள் பல் முளைக்கும் கோளாறுகளினால் உயிரிழப்பதுமுண்டு. பல் முளைக்கும்போ துண்டாகும் கோளாறுகளுக்குச் சொல்லிய தனிப்பட்ட சிகிச்சைகளைச் செய்யலாம்.

## பல் முளைக்கும்போதுண்டாகும் இழுப்பு—Convulsions in Dentition

இதைப்பற்றி 88-வது பக்கம் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

### சிகிச்சை

(1) சுவர்ணகோரோசனை மாத்திரை; கோரோசனை மாத்திரை இவைகளிலொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(2)

| | | |
|---|---|---|
| அமோனியம் புரோமைட் (Ammonium Bromide) | கிரைன்ஸ் | 30 |
| ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | டிராம் | 1 |
| குளோரல் ஐட்ரஸ் (Chloral Hydras) | கிரைன்ஸ் | 24 |
| சிரப் ஆரண்டி (Syrup Aurandi) | டிராம் | 2 |
| ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துத், ஒருமணி நேரத்திற்கொரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## பல் முளைக்கும்போதுண்டாகும் சகல வலிகளுக்கும்—Painful Dentition

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | காலோமல் (Calomel) | கிரைன் | ½ |
| | எனோனிமி (Enonymi) | ,, | ½ |
| | சக்காரின் ஆல்பினம் (Saccharine Albinum) | ,, | ½ |

ஒன்று சேர்த்து, 1-வயதுக் குழந்தைகளுக்குச் சாயந்திரவேளைகளில் மட்டும் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | குளோரல் ஐட்ரஸ் (Chloral Hydras) | கிரைன்ஸ் | 6 |
| | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | ,, | 6 |
| | ஆக்குவா லயிரோஸிராஸி (Aqua Laurocerasi) | துளி | 45 |
| | ஆக்குவா டிஸ்டில் (Aqua Distilled) | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து, ஒருவயதுக் குழந்தைகளுக்கு, நோய் மட்டுப்படும் வரை, ஒரு நாளைக்கு மூன்றுவேளை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | ஐட்ரார்ஜரி கம் கிரீட்டா (Hydrargeri Cum Creta) | கிரைன்ஸ் | 10 |
| | சோடியம் பைகார்போனேட் (Sodium Bicarbonate) | ,, | 10 |
| | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | ,, | 10 |

ஒன்று சேர்த்து ½-முதல் 1-வயதுக் குழந்தைகளுக்கு, 3-கிரைன்ஸூம்; 1-முதல் 1½-வயதுக் குழந்தைகளுக்கு 5-கிரைன்ஸூம்; 1½-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 8-கிரைன்ஸூம் இரவில் படுக்கைக்குப் போகும்போது தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | கொக்கோயின் ஐட்ரோ குளோரைட் (Cocain Hydro chloride) | கிரைன்ஸ் | 1½ |
| | டிஞ்சர் கோனி (Tincture Conii) | டிராம் | 1 |
| | கிளிசரின் (Glycerine) | ,, | 2 |

ஒன்று சேர்த்து பல்லீறில் தேய்த்து வந்தால், பல் முளைக்கும்போ துண்டாகும் பல்லீறு வீக்கம், வலி முதலியவைகளைப் போக்கி, பல்லீறுகளை மிருதுவாக்கி வலியின்றி பல் வெளிப்படும்படி செய்யும்.

## பல் முளைக்கும்போதுண்டாகும் சளி—Coryza in Dentition

சில குழந்தைகளுக்குப் பல் முளைக்கும்போ துண்டாகும் இதரக் கோளாறுகளைப் போன்றே சளியும் பிடித்து உபத்திரவிக்கும். இலேசான இருமலிருக்கும்; மூக்கிலிருந்து சதா தண்ணீர் வடிந்துகொண்டே யிருக்கும்; சில சமயம் தும்மலேற்படும்.

சிகிச்சை

| | | |
|---|---|---|
| அமோனியம் கார்போனஸ் (Ammonium Carbonas) | கிரைன்ஸ் | 12 |
| வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | டிராம் | 1½ |
| கிளிசரின் (Glycerine) | ,, | 4 |
| ஆக்குவா கரூய் (Aqua Caruii) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## பல்லரணை, பல்லீறில் இரத்தம் வடிதல்:—

ஈர்ப்புண் என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## பல்வலி—Toothache—Odentalgia

பல்லீறு சிவந்து வீங்கி வலியாயிருக்கும்; பல்லுடன் பல் பட முடியாமல் மிகுந்த வேதனையுண்டாகும்; பல் வலியினால் தாடையும், காதோரமாகவும் வீக்கம் காணும்.

கிசிச்சை

(1) கற்பூரத்தை வலியுள்ளவிடத்தில் வைக்கலாம்.

(2) வேம்பாடம்பட்டை எண்ணெய்; நக்ஷத்திரமாணிக்கக் கிருதம் இவைகளி லொன்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(3)

| | | |
|---|---|---|
| காம்பர் (Camphor) | டிராம் | ½ |
| பெப்பர்மின்ட் கிரிஸ்டல்ஸ் (Peppermint Crystals) | ,, | ½ |

ஒன்று சேர்த்து, அனலில் காட்ட உருகும்; அதை பஞ்சில் நனைத்து வலியுள்ள விடத்தில் வைக்கலாம்.

## பற்சொத்தை—Odontiasis

பற்களைச் சுசிகரமாய் வைத்துக்கொள்ளாத காரணத்தினாலேயே பல் வியாதிகளேற்படுகின்றன. தின்னும் ஆகாரம் பல்லிடுக்குகளில் ஒட்டிக்கொண்டு, விஷமித்துக் கிருமிகளுண்டாகி, அந்தக் கிருமிகளின் விஷமுள்ள திரவம், பல்லின்மேலுள்ள பளபளப்பான வஸ்து (Enamel) வைக் கெடுத்துவிடுகிறது. பின்னர் அது பற்களைத் துளையிடவும் செய்து ஓட்டைகளை யுண்டாக்கிவிடுகிறது.

இந்தக் கிருமிகள் பல்லின் மத்தியிலுள்ள நரம்புகளையும், இரத்தக் குழல்களையும் தாக்கி குடையும்; அப்போதுதான் பல்லில் வலியும், கூச்சமும் குடைவதைப்போன்ற கடுப்பு முண்டாகும்; குளிர்ந்த தண்ணீர் வாயில் பட்டவுடன், பற்கிருமிகள் பின்னும் நரம்புகளில் பிரவேசிப்பதால் சொல்ல முடியாத கூச்சமும், குடைச்சலு மேற்படுகிறது.

சிகிச்சை

(1) 100-கண்டங்கத்திரிப் பழத்தை, கறுகிப்போகாமல், உமிக்காந்தலில் போட்டு வேகவைத்தெடுத்து, பாகலிலைச்சாறு விட்டு மைபோலரைத்து, 12-அவுன்ஸ் நல்லெண்ணெயில் கலக்கி, 3-நாள் கடுமையான வெயிலில் வைத்திருந்தெடுத்துப் பற்களில் பூசிவரலாம்.

| | | |
|---|---|---|
| (2) கிரியோசோட் (Creosote) | துளி | 8 |
| ஓலியம் கரியோபில்லம் (Oleum Caryophyllum) | ,, | 15 |
| ஓலியம் கஜபுட்டி (Oleum Cajuputi) | ,, | 38 |
| டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | ,, | 38 |
| குளோரோபாம் (Chloroform) | ,, | 5 |
| ஆல்கோஹால் (Alcohol) | ,, | 38 |

ஒன்று சேர்த்துப் பஞ்சில் நனைத்துச் சொத்தைப்பல்லின் மேல் வைத்திருக்கலாம்.

## பற்புழு:—

பற்சொத்தை என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## பாண்டு—Anaemia

இரத்தத்தில் சிவந்த இரத்தாணுக்கள் (Red Corpuscles) குறைந்து இந்த வியாதி யேற்படுகிறது. விசேஷமாக பாண்டு 12-வயது முதல் 20-வயது வரை இருக்கக்கூடியதோர் வியாதி. ஆண் குழந்தைகளைவிட பெண் குழந்தைகளுக்கு இந்நோய் அதிகமுண்டாகலாம். பெண் குழந்தைகள் சரியான வயதில் பக்குவமடையாமல் இந்த வியாதியால் பாதிக்கப்படுவார்களேயானல், அதைச் சூதகப்பாண்டு (Chlorosis) என்று சொல்லப்படும்.

பாண்டுயென்ற இந்த இரத்தக்குறைவு ரோகம், விசேஷமாகத் திறந்த வெளி வியாயமங்கள் (Exerises) இல்லாததினலும், ஆகாரத்தில் போதிய ஜீவ சத்துப்பொருள் (Vitamines) கலந்திராததினலும், கீரைப்பூச்சிகளதிகரித்திருப்பதினலும், கணைதோஷ நோய்களால் பாதிக்கப்பட்டிருப்பதினலும், இந்தப் பாண்டுரோக மேற்படுகிறது. இது க்ஷயரோகத்திற்கும் வழிகாட்டியாக வந்துசேரலாம்.

இந்த இரத்தக் குறைவுரோகத்தில் சர்மம் வெளுத்திருக்கும்; நாக்கு, கண் உள்மடல்கள், பல்லீறுகள் இவைகள் வெளுத்திருக்கும்; பசிமந்தம், மலச்சிக்கல், தொண்டைப்புகைச்சல், வயிற்றோட்டம், கிறுகிறுப்பு, குறுமூச்சு முதலியவைகளேற்படும்; இருதயநடை துரிதமாயிருக்கும்; சப்தவேணுவை (Stethoscope) இருதயத்தின் பேரில் வைத்து உற்றுக்கேட்டால், இருதய நடையோடுகூட உரு—உருவென்ற சப்தம் கேட்கும்; கஷ்டமான வேலைகள் செய்தபின்னராயினும், வேகமாய் நடந்த பின்னராயினும்,

மாடிப் படிகளிலேறி இறங்கியதனுலாயினும், திரேகம் விலவிலத்து, மயக்கமும் உண்டாகிவிடும். பொதுவாகப் பாண்டுரோக முள்ளவர்கள் க்ஷீணித்துப்போய் ஒன்றும் செய்வதற்கு லாயக் கற்றவர்களாக விருப் பார்கள்.

**சிகிச்சை**

(1) நாராயண மண்டூர செந்தூரம்; திரிலோக செந்தூரம்; மண்டூர செந்தூரம்; அயமெழுகு; அயக்காந்த செந்தூரம்; ராஜசிந்தாதி லேகியம்; ராஜாங்க கொம்பரக்குத் தைலம்; குமரி சஞ்சீவித் தைலம் முதலியவைகளை உப யோகித்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(2)

| | | |
|---|---|---|
| டிஞ்சர் பெர்ரீ பெர்குளோரைட் (Tincture Ferri Perchloride) | துளி | 15 |
| * லைக்கர் ஆர்சனிக்காலிஸ் (Liquor Arsenicalis) | ,, | 2 |
| கிளிசரின் (Glycerine) | ,, | 30 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 12-முதல் 18-வயதுச் சிறுவர்களுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஆகாரத்திற்கு பின்னர் 3, 3½-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

மலம் கட்டியதோ டிருக்குமானுல்:—

(3)

| | | |
|---|---|---|
| எக்ஸ்ட்ராக்ட் பெல்லடோனு வெர்டி (Extract Belladonnae Verdi) | கிரைன்ஸ் | 1 |
| வைனம் பெர்ரீ (Vinum Ferri) | அவுன்ஸ் | 3 |
| கிளிசரின் (Glycerine) | ,, | 1 |

ஒன்று சேர்த்து, 12-முதல் 18-வயதுச் சிறுவர்களுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஆகாரத்திற்கு பின் 3, 3½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

தொண்டை புகைச்சலு மிருக்குமானுல்:—

(4)

| | | |
|---|---|---|
| பொட்டாஷியம் பைகார்போனேட் (Potassium Bicarbonate) | டிராம் | 1 |
| பெர்ரீ டார்டரேட் (Ferri Tartarate) | ,, | 1 |
| ஆல்கோஹால் (Alcohol 90 °/°) | ,, | 2 |
| சிரப் சிம்பிள் (Syrup Simple) | ,, | 4 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 12-முதல் 18-வயதுச் சிறுவர்களுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை 3, 3½-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

கிரைப்பூச்சியினு லேற்பட்டதாக விருந்தால்:—

| | | | |
|---|---|---|---|
| (5) | பெர்ரீ சல்பஸ் (Ferri Sulphus) | கிரைன்ஸ் | 12 |
| | எக்ஸ்ட்ராக்ட் கிளிசரிசா லிக்குட் (Extract Glycyrrhizae Liquid) | டிராம் | 4 |
| | டெக்காக்ஷன் ஆலோஸ் கோ (Decoction Aloeas Co) | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து 12-முதல் 18-வயதுச் சிறுவர்களுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை 3, 3½-தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

வயிற்றோட்டத்துட னிருக்குமானுல்:—

| | | | |
|---|---|---|---|
| (6) | பொராட்டின் (Ferratin) | கிரைன்ஸ் | 6 |
| | பல்விஸ் கிளிசரிஸா (Pulvis Glycyrrhizae) | ,, | 45 |

ஒன்று சேர்த்து 3-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப்பின் 12-முதல் 18-வயதுச் சிறுவர்களுக்குக் கொடுத்து வரலாம்.

## பாலெடுத்தல்:—

அடிக்கடி பாலெடுத்த லென்றத் தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## பால்குடியாமை:—

ஆகாரவெறுப்பு யென்றத் தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## பித்தக்கோளாறுகள்—Biliousness

பித்தக்கோளாறுகள் கல்லீரல் (Liver) விகல்பத்தினுலேயே யுண்டாகலாம். கல்லீரல் வீக்கம் காணுவதாலோ, இதர கல்லீரல் கோளாறுகளினுலோ, பித்தப்பையிலுள்ள பித்தநீரானது வெளிப்பட்டுப் பித்த கோளாறுகளை யுண்டாக்குகின்றது. மேலும், கடினமான ஆகாரங்களினுல் பித்தநீர் வெளிப்பட்டுவிடுவதாலும் இது யேற்படலாம்.

பித்தநீர் அதிகரித்து உடலில் வியாபிக்குமேயானுல், வாய் கசப்பு, ஆகாரவெறுப்பு, கிறுகிறுப்பு, தலைவலி, தலைமயக்கம், புத்திபேதமை, மிரண்ட பார்வை, அரோசிகம், வாந்தி, ஆகாரம் உட்கொண்டவுடன் வாந்தியாதல் முதலியவைகளுமேற்படும். கண்கள் சிவந்து, உடல் மஞ்சனித்திருக்கும். வாந்தியான வஸ்து மஞ்சள் நிறமாக வழுவழுப்பாக விருக்கும்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | நெல்லிவற்றல் | ரூபாயெடை | 3 | ஏலம் | ரூபாயெடை | 3 |
| | அதிமதுரம் | ,, | 3 | வில்வவேர் | ,, | 3 |
| | இஞ்சி | ,, | 3 | சீரகம் | ,, | 15 |

ஒன்று சேர்த்துச் சூரணித்துக் காலை மாலை ⅛-ரூபாயெடை அளவு பசு வெண்ணெயில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

(2) மாதுளம்பழச்சற்பத்; ராஜஏலாதிச்சூரணம்; ராஜவில்வாதி லேகியம்; மகா கூழ்பாண்டக்கிருதம்; கொடுத்து வரலாம். செய்முறை 6-பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (3) ஆஸிட் நைட்ரோ ஐட்ரோகுளோரிக் டில் (Acid Nitro Hydrochloric Dil) | துளி | 20 |
| * டிஞ்சர் நக்ஸ் வாமிகா (Tincture Nux Vamica) | ,, | 20 |
| சிம்பிள் சிரப் (Syrup Simple) | டிராம் | $1\frac{1}{2}$ |
| இன்பியூஷன் குவாஷியா (Infusion Quassiae) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ½-தேக்கரண்டியளவு கொஞ்சம் தண்ணீரில் கலந்து கொடுத்து வரலாம்.

## புட்டாளம்மை:—

அம்மைக்கட் டென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## புலால் மேகம்:—

நீர் கலங்கலா யிறங்குதலென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## பூரான் கடி—Bites of Myriapoda (Genus Scolopendra)

பூரான் கடித்ததானல் உடம்பெல்லாம் நீண்ட தடிப்புகள் உண்டாகும்; தடிப்புகள் நீடித்திராமல் சிலமணி நேரங்களிலாவது, சில நாளையிலாவது மறைந்துபோகும்; பின்னர் அமாவாசை, பௌர்ணமி தினங்களில் தடிப்பு உண்டாகி, கொடிய நமச்சலைக் கொடுக்கும், செய்யான் கடித்ததானல், உடம்பில் தடிப்புகள் கண்டும், வாய் வழியாக வெண்ணுரை தள்ளியும், மயக்கமும், ஆபத்தையு முண்டாக்கும்.

### சிகிச்சை

(1) குப்பைமேனி யிலையையும், உப்பையும் சமமாக வைத்து அரைத்துத் தடவலாம்.

(2) புகையிலைக் கஷாயத்தைத் தடவலாம்.

| | | |
|---|---|---|
| (3) லைக்கர் அமோனியா (Liquor Ammonia) | டிராம் | 1 |
| ஒயின் (Wine) அல்லது தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயது குழந்தைகளுக்கு ½-மணி நேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டி வீதம் உள்ளுக்கும் கொடுத்து மேலுக்கும் தடவலாம்.

## பேதி யுண்டாக்க—To Make Purging

முன் பக்கங்களில் குழந்தைகளுக்கான "சுகபேதி" முறைகளைக் கூறினேம். ஆனல், குழந்தைகளிக்கு அவசர சமயங்களில் மலத்தை வெளியாக்கும் உபாயங்களை இதன் கீழ் கூறுகிறோம்.

---

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

### சிகிச்சை

(1) காட்டாமணச் கிலேச்சாறு 2-தேக்கரண்டி கொடுக்கலாம்.

(2) சிற்றாமணக்கெண்ணெய் தேக்கரண்டி ஒன்றும், முலைப்பால் தேக்கரண்டி இரண்டும், ஒன்று சேர்த்துக் கொடுக்கலாம்.

(3) காலோமல் (Calomel) கிரைன்ஸ் ஒன்றை தேனில் குழைத்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்குக் கொடுத்து, அதன்மேல் ஒரு குன்றிமணி யளவு கோரோசனையை அரை அவுன்ஸ் வெற்றிலைச்சாற்றில் கரைத்துக் கொடுக்கலாம்.

(4) துணி துவைக்கும் சோப்பை (Washing Soap) பெனிசல் மாதிரியாக நீளமாய் சீவி, ஆசனத்தில் கொஞ்சம் செலுத்தி யிருக்கலாம்.

(5) இளவெந்நீரில் சோப்பைக் கரைத்து, ஆசன வாய்வழியாக நீரேற்றம் (Enema) செய்யலாம்.

## பேதியை நிறுத்த—Stop Purging

குழந்தைகளுக்குச் சாதாரணமாய், மலம் கழிவதைவிட, மலம் அதிகமாகவும், அடிக்கடியும் எக்காரணத்தினாலாவது கழிதலேற்பட்டிருந்தால் உடனே கீழ்கண்ட மருந்து பிரயோகத்தினுல் மலம் கழிவதை தடைசெய்யலாம்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) மாமஞ்சள் | ரூபாயெடை | 3 | சிறுநாகப்பூ | ரூபாயெடை | 3 |
| கடுக்காய்ப்பூ | ,, | 3 | போஸ்தக்காய் | ,, | 3 |
| அதிவிடயம் | ,, | 3 | சடாமாஞ்சில் | ,, | $\frac{3}{4}$ |

ஒன்று சேர்த்துத் தூள்செய்து 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 2, 3-மணி நேரம் ஊறியபின் வடிகட்டி 2, 3-தேக்கரண்டிவீதம் கொடுத்துவரலாம்.

(2) ஓமத்தீநீர் கொடுக்கலாம் செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

## பேன்—Lice

பேன் ஒருவரிடமுள்ள வியாதியை ஒருவருக்குத் தொத்தும்படி செய்யக் கூடிய தொத்துரோகக் கிருமியினத்தில் சேர்ந்ததாகும். இரவில் நித்திரை செய்யும்போது, ஒருவரிடமிருந்து மற்றவர்களிடம் ஊர்ந்து சென்று வியாதியைப் பரப்புகிறது. விசேஷமாக விஷவாதசுரம் (Typhus Fever) பழஞ்சுரம் (Relapsing Fever) முதலிய விஷமான தொத்துநோய்களை உண்டாக்கிவிடும்.

பேன் அதிகமானபின் அதன் உபத்திரவம் தாங்கமுடியாமலே ஜனங்கள் பேனை நாசம்செய்யக் கருதுகிறார்களே தவிர, பேனினுல் உண்டாகும் கெடுதல்களை எண்ணி பேனை அழிப்பதற்காக ஒன்றும் பிரயத்தனப்படுவதில்லை. பேன் அதிகமான இரத்தத்தைக்குடித்தும், இரத்தத்தைக் குடிக்

கும்படியாக அடிக்கடி சர்மங்களை தன் விஷ அலகினுல் குத்துவதினுலும்; தலையில் பொடுகு, புண் முதலியவைகளு முண்டாகலாம்.

பேனை அழிக்க:—

(1) பாதரசம் ½-ரூபாயெடை எடுத்து, குப்பைமேனிச் சாறுவிட்டு இரசம் தோன்ருதவரை அரைத்து, குப்பைமேனிச்சாற்றில் கலக்கி ஒரு குல்லாயின் உட்புறம் தடவி தலையில் கவிழ்த்துக்கொண்டிருக்க, 6-மணி நேரத்தில் பேன் செத்து விழுந்துவிடும்.

(2) * அங்குவண்டம் ஐட்ரார்ஜரி அமோனியேட்டா (Unguentum Hydrargeri Ammoniata) இதைக் கொஞ்சமெடுத்து மயிர் கால்களில் தடவியிருந்து சாயந்திரம் சோப்பினுல் (Soap) சுத்தமாக கழுவி விடவேண்டும்.

## போன்னி, போன்னுக்கிவீங்கி:—

அம்மைக்கட்டென்றத் தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## மச்சைமேகம்:—

நீர் கலங்கலா யிறங்குத லென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## மலச்சிக்கலின்றி வயிற்றுப்பிசம்—Flatulance Without Constipation

குழந்தைகளுக்கு மலச்சிக்க லில்லாதிருக்கும்போதுகூட வயிறு பொருமி இருப்பதுண்டு. பால் குடிக்கும் குழந்தைகளுக்கென்ருல், தாய் வாயுவுள்ள பதார்த்தங்களைத் தின்றிருக்கலாம். ஆகாரம் உட்கொள்ளும் குழந்தைகளாலுல் குடலில் வாயு வதிகரித்ததினுல் வயிறு பொருமி இரைச்சலிருக்கும்.

### சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | நுணயிலை | ஒருபிடி | சுக்கு | ரூபாயெடை $\frac{3}{4}$ |
| | வேப்பங்கொழுந்து | ,, | மிளகு | ,, $\frac{3}{4}$ |
| | ஓமம் | ரூபாயெடை $\frac{3}{4}$ | | |

முதலில் நுணயிலையையும, வேப்பங்கொழுந்தையும் சட்டியிலிட்டு வறுத்து சிவந்துவரும் சமயம் மற்றவைகளையும் போட்டு 6-அவுன்ஸ் தண்ணீர் விட்டு 1, 1½ அவுன்ஸாகச் சுண்டவைத்தக் கஷாயத்தில் ½-அவுன்ஸ் வீதம் 2, 3-தடவை கொடுக்கலாம்.

(2) முருங்கையிலைச் சாற்றையும், உப்பையும், வசம்புக் கரியையும் ஒன்ருய் அரைத்துக் குழப்பி தொப்புளைச்சுற்றி பற்றுப்போடலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | சோடா பைகார்ப் (Soda Bicarb) | கிரைன்ஸ் | 8 |
| | ஸ்பிரிட் அமோனியம் அரோமாட்டிக் (Spirit Ammonium Aromatic) | துளி | 15 |
| | சிரப் சிம்பிள் (Syrup Simple) | ,, | 40 |
| | ஆக்குவா அனிசி (Aqua Anisi) | அவுன்ஸ் | 1 |

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

ஒன்று சேர்த்து 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 3-மணி நேரத்திற் கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (4) மெக்னிஷியம் கார்போனேட் (Magnesium Carbonate) | கிரைன்ஸ் | 24 |
| ஸ்பிரிட் அமோனியம் அரோமாட்டிக் (Spirit Ammonium Aromatic) | டிராம் | ½ |
| ஓலியம் அனிசி (Oleum Anisi) | துளி | 3 |
| ஆக்குவா மெந்தாபிப் (Aqua Mentha Pip) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற் கொரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

## மலச்சிக்கலும் வயிற்றுப்பிசமும்—Flatulance With Constipation

மலச்சிக்கலும் அத்துடன் வயிற்றுப்பொருமலு மிருக்குமானால், வயிறு ஊதி கல்போலிருக்கும்; குழந்தை சுவாசிக்கக் கஷ்டப்படும்.

### சிகிச்சை

"மலச்சிக்கலின்றி வயிற்றுப்பிச" மென்ற தலைப்பின் கீழுள்ள மருந்துகளை யும், மலம் சடுதியில் கழிய வேண்டுமானால், "பேதி யுண்டுபண்ண" வென்ற தலைப்பின் கீழுள்ள மருந்துகளையும் கொடுத்து வரலாம்.

(1) *கோரோசனை மாத்திரையை வெற்றிலைச்சாற்றில் கலந்து கொடுக்கலாம்.

| | | |
|---|---|---|
| (2) பல்விஸ் ரீயை கோ (Pulvis Rhei Co) | கிரைன்ஸ் | 5 |

இதை ஒரு அவுன்ஸ் சுடு தண்ணீரில் 1-முதல் 3-வயது குழந்தைகளுக்குக் கலந்து கொடுக்கலாம்.

குறிப்பு:—இம்மருந்து கொடுத்த 4-மணி நேரத்தில் மலம் கழிந்து சுக மேற்படாவிட்டால் மறுபடியும் கொடுக்கவும்.

| | | |
|---|---|---|
| (3) காலோமல் (Calomel) | கிரைன்ஸ் | 2 |
| சோடா பைகார்ப் (Soda Cicarb) | ,, | 3 |
| பல்விஸ் ரீயை ராடிக்ஸ் (Pulvis Rhei Radix) | ,, | 3 |
| ஓலியம் அனிஸி (Oleum Anisi) | துளி | 1 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3 வயதுக் குழந்தைகளுக்கு ஒரே தடவையாகத் தேனில் கலந்து கொடுத்து மலம் வெளியானவுடன்:—

| | | |
|---|---|---|
| பல்விஸ் ரீயை ராடிக்ஸ் (Pulvis Rhei Radix) | கிரைன்ஸ் | 3 |
| சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 6 |
| ஓலியம் அனிஸி (Oleum Anisi) | துளி | 1 |

ஒன்று சேர்த்து 6-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு 3-மணி நேரத்திற் கொரு தடவை ஒரு பாகத்தை தேனில் கலந்துக் கொடுத்து வரலாம்.

---

* செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

## மலச்சிக்கல்—Constipation

குழந்தைகளுக்கு ஆகார விகல்பத்தினுல் அடிக்கடி மலச்சிக்க லேற்படலாம். சிறுவயதிலிருந்தே, மாவு சம்பந்தப்பட்ட ஆகாரங்களையே அதிகமாய் உபயோகித்ததினுலேயாவது, பால் கொடுக்கும் தாய்மார்களின் ஆகாரக் கெடுதலா லாகிலும், அதிகமான உணவு, அதிக சொற்பமான உணவு, பக்குவப்படாத ஆகாரங்கள், அதிக கொழுப்புக் கலந்த ஆகாரம் இவைகளினுலேயாவது, சிறுகுடல், பெருங்குடல் வீக்கம், இரத்தக் குறைவு முதலிய கோளாறுகளினு லாகிலும், மலச்சிக்க லுண்டாகலாம். மேலும், ஆகாரத்திற் கேற்ற தண்ணீர் குடியாததினுலும், பசிக்காதபோதும், மேலும் மேலும ஆகாரம் உட்கொள்ளுவதினுலும், மலச்சிக்க லுண்டாகும்.

மலச்சிக்க லேற்பட்டால் காச்சல், தலைவலி, வயிற்றுவலி, புளித்தேப்பம், நெஞ்செரிவு, ஆகாரவெறுப்பு, வயிற்றுப் பொருமல், அசதி முதலியவைகளுண்டாகும். சில சமயங்களில் தூக்கமின்மையும், வாந்தியு மேற்படும்; நாவில் மாவு படிந்திருக்கும்.

### சிகிச்சை

(1) இரவில் படுக்கைக்குப் போகுமுன் ஒரு தேக்கரண்டி சிற்றுமணக்கெண்ணெயை நீடித்துக் கொடுத்து வரலாம்.

(2) பேயன் வாழைப்பழத்தைச் சிறு துண்டுகளாக நறுக்கி சிற்றுமணக்கெண்ணெயில்போட்டு வைத்துக்கொண்டு இரவு படுக்கைக்குப் போகுமுன் ஒரு துண்டு வீதம் கொடுத்து வரலாம்.

சிசுக்களுக்கு மலம் கட்டி யமூதால்:—

| | | | |
|---|---|---|---|
| (3) அதிமதுரம் | ரூபாயெடை $\frac{1}{4}$ | வேப்பங்கொழுந்து | ரூபாயெடை $\frac{1}{4}$ |
| சர்க்கரை | ,, $\frac{1}{4}$ | பசுநெய் | ,, 3 |

ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து, $\frac{1}{2}$-தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (4) மாக்னிஷியம் சல்பஸ் (Magnesium Sulphus) | டிராம் | 1 |
| ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | ,, | $\frac{1}{2}$ |
| லைக்கர் மாக்னிஷியம கார்போனஸ் (Liquor Magnesium Carbonas) | அவுன்ஸ் | 2 |
| சிரப் டோலு (Syrup Tolu) | டிராம | 2 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## மலத்தையடக்கச் சக்தியற்றுப் போதல்—Incntinunce of Foecal

குழந்தைகளுக்கு மூன்றுண்டு முடியு முன்னரே, மல மூத்திரத்தை யடக்கும் சக்தி ஏற்பட்டுவிடும். அதன் பின்னும் நித்திரையின் போதும், சாதாரண

சமயங்களிலும் மலம் தன்னை யறியாமலே கழியுமானால், அது நரம்பு பலயீனத்தாலிருக்கும்.

**சிகிச்சை**

(1) ஓமத் தீநீர் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(2) * டிஞ்சர் நக்ஸ் வாமிக (Tincture Nux Vamica) துளி 2
* லைக்கர் ஆர்சனிக்காலிஸ் (Liquor Arsenicalis) ,, 3
தண்ணீர் டிராம் 4

ஒன்று சேர்த்து, 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப் பின் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

(3) * டிஞ்சர் பெல்லடோனு (Tincture Belladonnae) துளி 15
பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) கிரைன்ஸ் 9
சிரப் சிம்பிள் (Syrup Simple) டிராம் 1
தண்ணீர் ,, 1

ஒன்று சேர்த்து வைத்துக்கொண்டு முதலில்:—

பல்விஸ் ரீயை கோ (Pulvis Rhei Co) கிரைன்ஸ் 2

இதை 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்குத் தண்ணீரில் கரைத்துக் கொடுத்த $\frac{1}{4}$-மணி நேரத்திற்குப்பின் மேல் சொல்லிய மருந்தில் ஒரு தேக்கரண்டி வீதம் நாள் ஒன்றுக்கு 3 வேளை கொடுத்து வரலாம்.

### மார்சளி:—

நெஞ்சுத்தடிமனென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

### மூக்கிலிருந்து இரத்தம் வடிதல்:—Epistaxis

அடிபட்டதினாலும், அதிகமான இருமல் உபத்திரவத்தினாலும், மூளை பலயீனத்தினாலும், இரத்தம் நீற்றுப்போயிருப்பதினாலும், மூக்கின் நுண்ணிய சதைக் கோளங்கள் பலயீனமடைந்திருப்பதினாலும், திடீரென்று மூக்கிலிருந்து இரத்தம் வடியலாம் அதிகமான இருமலினாலானால், இருமும்போதுமட்டும் இரத்தம் வடியும். அடிக்கடி மூக்கிலிருந்து இரத்தம் வடியுமானால் மயக்கம், தலை பாரம் முதலியவைகளு மேற்படும்.

**சிகிச்சை**

(1) காடியும் (Vinegar) தண்ணீரும் சமமாய்க் கலந்து துணியில் நனைத்து மூக்கின்மேல் போட்டு வைக்கலாம்.

(2) ஆடாதோடையிலைச்சாறு அவுன்ஸ் $\frac{3}{4}$ நல்லவெல்லம் ரூபாயெடை $\frac{1}{2}$

ஒன்றாய்க் கலந்து உள்ளுக்கும் கொடுத்து, தலை உச்சியிலும் பற்றுப் போடலாம்.

---

* விஷமானது; ஜாக்ரதையாக உபயோகிக்க வேண்டும்.

இரத்தம் தடைபடாது வந்துகொண்டிருந்தால்:—

| | | | |
|---|---|---|---|
| (3) | காடி (Vinegar) | டிராம் | 2 |
| | தண்ணீர் | ,, | 6 |
| | சர்க்கரை | ,, | 1 |

ஒன்று சேர்த்துக் குடிக்கக் கொடுக்கலாம்.

(4) படிகாரத்தைத் தண்ணீரில் கரைத்துத் துணியில் நனைத்து, மூக்கின்பேரில் போட்டு வைக்கலாம்.

(5) டானிக் ஆஸிட் (Acid Tannic) டிராம் $\frac{1}{4}$ இதைத் தூள்செய்து, பொடி மாதிரியாக உருஞ்சக் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (6) | அஸிட்டானிலிடம் (Acetanilidum) | கிரைன்ஸ் | 5 |
| | லைக்கர் அமாமெலிடிஸ் (Liquor Hamamelidis) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துத் துணியில் நனைத்து, மூக்கந்தண்டில் போட்டு வரலாம்.

## மூக்கிலிருந்து நாற்றமான நீர் வடிதல்—Ozaera

கணை ரோகத்தினுலும், நீடித்த நாட்களாகத் தடிமன் பிடித்து, சளி வடிந்து கொண்டிருப்பதனுலும், மூக்கிலிருந்து வடியும் நீர் நாற்றமுள்ளதாக விருக்கும். மூக்கில் அசறுகள் பிடித்திருக்கும்.

### சிகிச்சை

| | | |
|---|---|---|
| பொட்டாஷியம் குளோரேட் (Potassium Chlorate) | கிரைன்ஸ் | 20 |
| மாவு சர்க்கரை (Sugar) | அவுன்ஸ் | $\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்துப் பொடித்து, பொடி மாதிரி உரிஞ்சலாம்.

## மூக்கில் சதை வளர்தல்—Adenoids

உட்புற தொண்டைக்கு மேல், அடி மூக்கிலுள்ள சதைக்கோளங்கள் வீக்கம் கண்டு நீண்டு வளர்ந்து, உட்புற நாசித்துளைகளை யடைத்துக்கொண்டு விடும். அதனுல் சாதாரண தடிமன்போலவே, மூக்கில் சளி வடிந்து கொண்டிருக்கும்; சுவாசம் வாய் வழியாகவே வரும்.

மூக்கில் சதை வளர்ந்துள்ள ரோகஸ்தர்களுக்கு இரவில் நித்திரை செய்யும் போது, குரட்டைச் சப்தம் அதிகமாயிருக்கும். பேச்சின் தொனி சுத்த மாக விராமல், மூக்கடைத்துப் பேசுவதைப்போ லிருக்கும். சுவாசம் துர் நாற்ற மடிக்கும்; காது மந்தம், தொண்டை யதிர்ச்சி, இருமல், அஜீரணம், இழுப்பு முதலியவைக ளேற்படும்; நெஞ்சு கூடுசெட்டி யிருக்கும். இதற்கு ரண சிகிச்சை செய்வதே தகுதியான முறையாகும்.

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | ஐயோடம் (Iodum) | கிரைன்ஸ் | 5 |
| | பொட்டாஷியம் ஐயோடைட் (Potassium Iodide) | ,, | 6 |

| | | |
|---|---|---|
| மெந்தால் (Menthal) | ,, | 1 |
| கிளிசரின் (Glycerine) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து வீங்கித் தெரியும் பாகங்களில் தடவி வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) சோடியம் பைகார்போனேட் (Sodium Bicarbonate) | கிரைன்ஸ் | 15 |
| சோடியம் குளோரேட் (Sodium Chlorate) | ,, | 15 |
| ஆஸிட் போரிக் (Acid Boric) | ,, | 15 |
| கிளிசரின் (Glycerine) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து வைத்துக்கொண்டு நாள் ஒன்றுக்கு 3, 4-தடவை 2-தேக்கரண்டி மருந்துடன் 4-தேக்கரண்டி சுடுதண்ணீர் சேர்த்து, மூக்கினுல் இழுத்து வாய் வழியாகக் கீழே துப்பலாம்.

## மூத்திரம் கலங்கலா யிறங்குதல்:—

நீர் கலங்கலா யிரங்குத லென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## மூத்திரம் முக்கிப் பெய்தல்:—

நீர்க்கடுப்பு யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## வயிற்றுப்பிசம்:—

மலச்சிக்கலின்றி வயிற்றுப்பிச மென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## வயிற்றுவலி:—Colic

குழந்தைகளுக்கு அஜீரணத்தினுலாவது, ஆகார விகல்பத்தினுலாவது அடிக்கடி வயிற்றுவலி யேற்படலாம்.

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) வசம்பு | ரூபாயெடை ½ | ஓமம் | ரூபாயெடை 1 |
| கோஷ்டம் | ,, 1 | | |

முதலில் வசம்பை ஒரு சட்டியில்போட்டு கருக வறுத்து, அத்துடன் கோஷ்டத்தையும், ஓமத்தையும் போட்டு ஓமம் பொரியும்போது 12-அவுன்ஸ் தண்ணீர்விட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் ½, 1-அவுன்ஸ் வீதம் கொடுக்கலாம்.

(2) ஓமத் தீநீர்; கோரோசனை மாத்திரை கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (3) ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | துளி | 12 |
| டிஞ்சர் காம்பர் கோ (Tincture Comphor Co) | ,, | 10 |
| ஆக்குவா கரூய் (Aqua Carui) | டிராம் | 3 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## வாந்தி—Vomiting

சிறு குழந்தைகளுக்கு ஆகார வெறுப்பின் காரணமாக அடிக்கடி வாந்தியுண்டாவதுண்டு. இரைக்குடல் சுருங்கி யிருப்பதனாலும் வாந்தி யுண்டாகலாம். குழந்தைகள் பிறந்த 10-தினங்களுக்குப் பின்தான் வாந்தி எடுக்கும் குணமுண்டாகும்.

சற்று வயது வந்த குழந்தைகளுக்கு பித்த உபரியினாலாவது உபக்குடல் (Appendix) விகல்பத்தினாலாவது அஜீரணத்தினாலாவது வாந்தி யுண்டாகலாம்.

### சிகிச்சை

பால் குடிக்கும் குழந்தைகளுக்கானால், 275-வது பக்கம் "அடிக்கடி பால் எடுத்தல்" என்ற தலைப்பின்கீழுள்ள சிகிச்சைகளைச் செய்யவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | அதிவிடயம் | ரூபாயெடை ½ | திப்பிலி | ரூபாயெடை ½ |
| | மான்கொம்புத் தூள் | ,, ½ | | |

ஒன்று சேர்த்துச் சூரணித்துக்கொண்டு, ⅛-ரூபாயெடை யளவு ½-தேக்கரண்டி தேனில் குழப்பிக் கொடுக்கலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (2) | மிளகு | ரூபாயெடை ½ | நன்னாரிவேர்ப்பட்டை | ரூபாயெடை ½ |
| | வசம்பு | ,, ½ | | |

ஒன்று சேர்த்து, 12-அவுன்ஸ் நீராகாரத்திற் கரைத்துக் கலக்கிக் கஷாயமிட்டு, ½, 1-அவுன்ஸ் வீதம் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | கிரியோசோட் (Creosote) | துளி | 1 |
| | ஸ்பிரிட் ஜுனிபர் (Spirit Juniper) | ,, | 1 |
| | சிம்பிள் சிரப் (Syrup Simple) | ,, | 30 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 4-மணி நேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## வாந்தியும், வயிற்றோட்டமும்:—

221-ம் பக்கம் கழிச்சலும், வாந்தியு மென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## வாந்தியும், விக்கலும்—Vomiting With Hiccough

குழந்தைகளுக்கு வாந்தியுண்டா யிருக்கும்போதே விக்கலு மேற்படுவதுண்டு.

### சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | ஏலம் | ரூபாயெடை ½ | கிராம்பு | ரூபாயெடை ½ |
| | சீரகம் | ,, ½ | மயிலிறகுச்சாம்பல் | ,, ½ |

முதலில் மூன்று சரக்கையும் வறுத்துச் சூரணித்துக்கொண்டு பின் மயி லிறகுச் சாம்பலேயும் சேர்த்து, அதில் $\frac{1}{8}$-ரூபாயெடை சூரணத்தைச் சேர்த்துக் காலே மாலே தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) திப்பிலி | ரூபாயெடை | 1 | ஏலம் | ரூபாயெடை | 1 |
| பருத்திவிரைபருப்பு | ,, | 1 | நெற்பொரி | ,, | 1 |

ஒன்று சேர்த்துச் சூரணித்துக்கொண்டு $\frac{1}{8}$-ரூபாயெடை யளவாகக் காலே மாலே சமன் சர்க்கரை சேர்த்துக் கொடுத்து வரலாம்.

## வாய்ப்புண்—Stomatitis

வாயின் மெல்லிய பாகங்கள் சிவந்து புண்பட்டு எரிச்சலுண்டாகும்; நாவு, கன்னம், பல்லீறு, மேல்வாய் முதலியவைகள் சற்று வீங்கி யிருக்கும்; எச்சில் பெருக்கு அதிகமா யிருக்கும்.

### சிகிச்சை

(1) மாசக்காயை முலேப்பாலி லுரைத்துத் தேனுடன் கலந்து தடவி வரலாம்.

(2) பசு நெய்யில் கோரோசனேயைக் கரைத்துத் தடவி வரலாம்.

(3) நக்ஷத்திரமாணிக்கக் கிருதம்; வேம்பாடம்பட்டை எண்ணெய்; தேற்றுங் கொட்டை மாத்திரை இவற்றிலொன்றைக் கொடுத்து வரலாம். செய் முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (4) ஆஸிட் போரிக் (Acid Boric) | அவுன்ஸ் | 1 |
| கிளிசரின் (Glycerine) | ,, | $2\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்துக் கலந்து கொதிக்க வைத்துக் கரைத்து புண்களில் தடவி வரலாம்.

## விக்கல்—Hiccough

குடல் வரட்சியினுல் விக்கல் உண்டாகும். சற்று வளர்ந்த குழந்தைகளுக்கு ஆகார பேதத்தினுலும், ஜீரணியாத ஆகாரம் வயிற்றுள் ளிருப்பதாலும் விக்கலுண்டாகலாம்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) கடுகுரோகிணி | ரூபாயெடை | $\frac{1}{4}$ | மயிலிறகுச்சாம்பல் | ரூபாயெடை | 1 |
| திப்பிலி | ,, | $\frac{1}{4}$ | | | |

முதலில் கடுகுரோகிணியையும் திப்பிலியையும் வறுத்துச் சூரணித்துக் கொண்டு, பின்னர் மயிலிறகுச் சாம்பலேச் சேர்த்துக் கலந்து, $\frac{1}{8}$ ரூபாயெடை யளவு எடுத்துத் தேனில் குழப்பிக் கொடுக்கலாம்.

| | | |
|---|---|---|
| (2) ஈதர் (Aether) | துளி | 6 |
| தண்ணீர் | டிராம் | 4 |

ஒன்று சேர்த்து, 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு ½-மணி நேரத்திற்கொருதரம் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

### விப்புருதி:—

கட்டி என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

### வெட்டுக் காயம்—Wounds

காயம் பட்டவுடனே அதில் வேறு அன்னியப் பொருளாகிய கல், மண் முதலியவைகளிருந்தால் எடுத்துவிட்டு, தண்ணீரால் கழுவிவிடவேண்டும். பின்னர் பெரும் காயமில்லாதிருந்தால் சாதாரண சிகிச்சை செய்யலாம். சர்மங்களாவது சதையாவது துண்டித்துப்போயிருந்தால் தையல் போடவேண்டும்.

#### சிகிச்சை

(1) ஈயப்பிளாஸ்திரி; மிர்தார்சிங் பிளாஸ்திரி முதலியவைகளை உபயோகிக்கலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(2) டிஞ்சர் பென்சாயின் கோ (Tincture Benzoin Co)
இதைப் பஞ்சில் நனைத்து, காயத்தில் வைத்துக் கட்டலாம்.

| | | |
|---|---|---|
| (3) கார்பாலிக் ஆஸிட் (Acid Carbalic) | டிராம் | 2 |
| தேங்காயெண்ணெ | அவுன்ஸ் | 3½ |

ஒன்று சேர்த்துத் துணியில் நனைத்துப் புண்ணின்மேல் போடலாம்.

புண் சீழ் பிடித்திருந்தால்:—

| | | |
|---|---|---|
| (4) ஆஸிட் போரிக் (Acid Boric) | டிராம் | 1 |
| ஐடோ பாரம் (Idoform) | கிரைன்ஸ் | 5 |

ஒன்று சேர்த்துப் புண்ணைச் சுத்தமாய்க் கழுவிய பின்னர் புண்ணின்மேல் தூற்றிப் பஞ்சு வைத்துக் கட்டி வரலாம்.

### வேனல் கோப்புளம்:—

கோடைக் கட்டி என்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

### ஜல தோஷம், ஜல தோஷம்:—

ஓயாத சளி, நெஞ்சுத்தடிமன் என்ற தலைப்புகளின் கீழ் பார்க்கவும்.

### ஜன்னிக்கட்டு:—

அம்மைக் கட்டு என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.



# நாலாவதைந்தாவது

## பாகங்கள்

## FOURTH AND FIFTH PARTS



# ஸ்திரீ பால சிகிச்சை

## நான்காம் பாகம்

## மாதர் ரோகங்களும், மருத்துவமும்

## DISEASES OF WOMEN AND TREATMENTS

### அதி ஸ்தூல ரோகம்—Obesity

இரோகத்தில் கொழுப்பு அதிகரிப்பதனாலேயே சரீரம் அளவுக் கதிகமாய் ஸ்தூலித்து விடுகிறது. இதையே ஸ்தூலரோகம், மேதோரோகம் என்றும் சொல்லுவர். அளவுக் கதிகமாகப் பெருத்திருப்பவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளும் அவ்வாறே பெருத்திருக்கும். கருப் பையிலும் கொழுப்பு மிகுதிபட்டு விடுவதனால் கருப்பற்றுதொழியும். கருப்பற்றினாலும் அகாலப்பிரசவ முண்டாகும்; அப்படிக்கின்றி கரு சம்பூரணமாய் வளர்ந்தாலும், பிரசவத்தில் மிகுதியும் கஷ்டமேற்படும்.

**சிகிச்சை**

(1) நீராகாரம் அவுன்ஸ் 3 தேன் அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்துக் காலையில் வெறும் வயிற்றில் 41-நாள் கொடுத்து வரலாம்.

(2) கடலைப்புளிப்பு அவுன்ஸ் ½ கொம்பரக்குத்தூள் ரூபாயெடை $\frac{1}{16}$

ஒன்று சேர்த்து, 20-நாள் காலையில் மட்டும் கொடுத்து வரலாம்.

(3)

| | | |
|---|---|---|
| எக்ஸ்டிராக்ட் புகி வாசிகுலோஸி லிக்குட் (Extract Fuci Vasiculose Liquid) | டிராம் | 3 |
| பொட்டாஷியம் ஐயோடைட் (Potassium Iodide) | கிரைன்ஸ் | 12 |
| லைக்கர் தைராய்டி ரெஸின்டிஸ் (Liquor Thyroidei Recentis) | துளி | 18 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 3 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

### அரை கரப்பான்—Eczema of Vulva

துர்நீர் சம்பந்தத்தினாலும், வெள்ளைப் பிரமேகத்தினாலும், கிரைப் பூச்சிகள் அதிகரிப்பினாலும், கடிதடம், யோனித்துவாரம் முதலிய மர்ம ஸ்தான பாகங்களில் தினவு கண்டு, வியர்க்குருபோல வாரம்பித்துப் புண்பட்டு விடும்; புண்கள் சீழ்கொண்டு அதிகமான நமச்சலையும், எரிச்சலையும் உண்டுபண்ணும்.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | கருஞ்சீரகம் | ரூபாயெடை 1 | மஞ்சள் | ரூபாயெடை | 1 |
| | கஸ்தூரிமஞ்சள் | ,, 1 | கல்லுப்பு | ,, | 1 |
| | தேங்காய்ப்பால் | அவுன்ஸ் 12 | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்துப்போட்டு இரும்பு சட்டியில் விட்டுக் காய்ச்சி வடித்துப் புண்ணின்மேல் பூசியிருந்து, சாயந்திரம் இலுப்பை அரப்பும், மாம் பட்டையும் சமமா யரைத்து அதன்மேல் பூசியிருந்து 2-மணி நேரம் சென்ற பின் வெந்நீரால் கழுவி விட்டு மறுபடியும் எண்ணெயைத் தடவி வரலாம்.

(2) பூவரசம்பட்டை எண்ணெய்; உலகோத்தம செந்தூரம் இவைகளை உப யோகித்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | இக்தியால் (Ichthyol) | டிராம் | 2 |
| | ஆயில் அமிக்டாலி டுல்ஸிஸ் (Oil Amygdali Dulcis) | ,, | 1 |
| | ஆக்குவா கால்ஸிஸ் (Aqua Calcis) | ,, | 4 |
| | ஆக்குவா ரோஸா (Aqua Rosae) | ,, | 1 |
| | கிளிசரின் (Glycerine) | ,, | 1 |

ஒன்று சேர்த்து ஒரு வெள்ளைத் துணியில் நனைத்துப் புண்ணின்மேல் போட்டு வரலாம்.

## அஷ்டசூலை—Vaginitis

மர்ம ஸ்தானங்களை அடிக்கடி கழுவி சுத்தமாக வைத்துக்கொள்ளாததினால், அழுக்குப் பற்றிக் காய்ந்து நடக்கும்போது உராய்வுபட்டாவது, விஷக் கிருமிகளாலாவது, பிரமேக ரோகத்தினாலாவது, யோனித் துவாரம் சற்று வீக்கம் கண்டு எரிச்சலும், நமச்சலும் உண்டாகும்.

யோனித் துவாரம் வரட்சியாகவும், நெருப்பு அனல்போன்று மிருக்கும்; கடி தடத்தின் பேரிலும், யோனித் துவாரத்துள்ளும், சிறிய வெள்ளைப் புள்ளி கள் சீழ் கோர்த்துக் காணப்படும். யோனித் துவாரம் சுருங்கி, அதிலிருந்து சீழ்போன்ற கசிவேற்படும். நீர்க்கடுப்பும், ஆசனவாய்க் கடுப்பும், மலச் சிக்கலு மேற்படும்.

**சிகிச்சை**

(1) மேகத்தெண்ணெய்; மகாரஜத பஸ்பம் இவைகளைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (2) | ஐட்ரார் ஜரி பெர் குளோரைட் (Hydrargeri Perchloride) | கிரைன்ஸ் | 90 |
| | அமோனியம் குளோரைட் (Ammonium Chloride) | ,, | 90 |
| | மெத்திலின் புளு (Methylene Blue) | ,, | $\frac{1}{60}$ |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 8 |

ஒன்று சேர்த்துக் கரைத்து வைத்துக்கொண்டு, தினம் 3, 4-தடவை 10-அவுன்ஸ் தண்ணீரில் 2-தேக்கரண்டி மருந்தைக் கலந்து வெளிப்பிரயோகமாக மட்டும் மர்ம ஸ்தானத்தைக் கழுவி வரலாம்.

## அஸ்தி ஸ்ராவம்—Flour Albus—Leucorrhoea

இதைக் கெற்பமேகம்; கெற்பவெட்டை; பிரமேக கசிவு; வெண்துவாலை; வெள்ளை; யோனிஸ்ராவம்; கர்ப்பஸ்ராவம்; எலும்புருக்கி ரோகம்; வெள்ளைக்குசுமார ரோகம்; கர்ப்பமேகம்; கர்ப்பப்பிரமேகம்; வெள்ளைப் பிரமேகம் என்று பலவிதமாய்க் கூறப்படும்.

கருப்பை, யோனி முதலிய விடங்களிலிருந்து வெள்ளையாகவாவது, வெளுறின மஞ்சள் நிறமாகவாவது, சற்று இரத்தம் கலந்தாவது கசிந்துகொண்டிருக்கும். இது கருப்பை, யோனி முதலியவைகளின் வீக்கத்தாலும், துர்நீர் சம்பந்தத்தினுலும், அதிகமான போகத்தினுலும், கருப்பையின் அமித வளர்ச்சி, சுசீகரக்குறைவு, சீரைப்பூச்சி யதிகரிப்பு முதலியவைகளினுலு மேற்படலாம்.

இதனுல் திரேகம் வெளுத்து, அஜீரணம், மலபந்தம், நெஞ்சுத்துடிப்பு, இடது விலா வலி, கிறுகிறுப்பு, வயிற்றுப் பொருமல், கைகா லயர்வு முதலியவைகளும், நாள்பட்டப் பின் "விகார சூதக" மென்ற ரோகமு முண்டாகும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | பசுநெய் | ரூபாயெடை 32 | சடாமாஞ்சில் | ரூபாயெடை | 1 |
| | ஆவாரம்பூ | ,, 30 | சீரகம் | ,, | 1 |
| | சீனுகற்கண்டு | ,, 30 | ஏலம் | ,, | 1 |
| | சந்தனம் | ,, 1 | இலவங்கப்பட்டை | ,, | 1 |

முதலில் நெய்யில் ஆவாரம்பூவைப் போட்டுக் காய்ச்சி வடித்துக்கொண்டு பின் மற்றவைகளைச் சூரணித்துக் கலந்து, காலை மாலை ½-அவுன்ஸ் வீதம் கொடுத்து:—

கருவேலம்பட்டைக் கஷாயம் அவுன்ஸ் 12 படிகாரம் ரூபாயெடை 1

ஒன்றுசேர்த்து வெளிப்பிரயோகமாக யோனிக்குள் அடித்து கழுவிவரலாம்.

(2) கணத்தெண்ணெய்க் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | துளி | 10 |
| | லைக்கர் பிளம்பி சப்அஸிடேட் (Liquor Plumbi Sub-acetate) | ,, | 30 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து யோனிக்குள் அடித்து சுத்தம் செய்து வரலாம்.

## இரத்த சூலை—Dysmenorrhoea

இதைக் குத்துவலியோடு கூடிய சூதகம், ஸோமரோகம், சூதகவாயு, சூசிகாவாயு, சூசிகாசூலை, சூதகச்சூலை, தூரச்சூலை, சூதக வயிற்றுவலி, இரத்தவாத பித்தக்குன்மம், முட்டுக்குட்டு என்று சொல்லப்படும்.

சம்போக இச்சை மிகுதியால் முரட்டுத்தனமாய்ப் புணர்வதனுலாவது; கருப்பையின் வாய் அடைபட்டுப் போவதனுலாவது; கருப்பையின் உட்புறத்தில் பொய் சதை வளர்ந்துபோவதனுலாவது; நாள்பட்ட வயிற்றோட்டம், நரம்புக் கோளாறுகள், ஆகாரக் குறைவுடன் மிகுதியான வேலை செய்வது, அஜீரண ரோகங்கள் முதலியவைகளினுலாவது; இரத்தக் குழல்களில் மிகுதியும் இரத்தம் சேர்ந்து போவதனுலாவது; இரத்தசூலை ஏற்படலாம்.

கருப்பை, அடிவயிறு, இடுப்பு முதலியவைகள் பிரசவ சமயத்தில் வலிப்பதைப்போன்று வலித்து, கட்டிகளாகவேனும், நீற்றுப்போயாயினும், வெண்மையாகவேனும், அளவுக்குக் குறைந்தேனும், கருக்குழி, மூத்திர தாரை, அடிவயிறு, நடுமுதுகு முதலியவைகளின் வலியுடன் மயக்கமும் கண்டு சூதகம் வெளிப்படும்.

சிலருக்கு இடது கை பாரிசத்தில் தாங்க முடியாத வலி வேதனை, தொடை எலும்புவலி, தலைவலி, கஷ்ட சுவாசம், அடி வயிற்றில் குத்துவலி, முதலியவைகளோடு, கண்ணும் கழுத்தும், மர்ம ஸ்தானமும், ஸ்தனங்களும் விம்மி வலியாயுமிருக்கும். சிலருக்கு வயிற்றோட்ட மேற்படுவதுமுண்டு. இவ்வியாதியினுல் கருப் பையில் கழலைகளும் புண்ணுகளு முண்டாகலாம்.

### சிகிச்சை

(1) அஸ்திஸ்ராவ ரோகத்திற்குச் சொல்லிய 1-வது இலக்க மருந்தைக் கொடுத்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெங்காயச்சாறு | அவுன்ஸ் | 12 | இஞ்சிச்சாறு | அவுன்ஸ் | 12 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 24 | குமட்டிக்காய்ச்சாறு | ,, | 12 |
| பேராத்தைக்கஷாயம் | ,, | 12 | புங்கம்பால் | ,, | 8 |

ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து, வீட்டுவிலக்கமாவதற்கு 3-நாளைக்கு முன்னிருந்து, காலையில் மட்டும் 1-அவுன்ஸ் எண்ணெயைக் கொஞ்சம் சுடு தண்ணீரில் கலந்து, 3-நாளைக்குக் கொடுத்து வரலாம்.

(3) குமட்டிக்காய்க் குழம்பு; ஸ்ரீ தேவி எண்ணெய்; கலிங்காதீயுப்பு; ரசலிங்க மெழுகு முதலியவைகளைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(4)

| | | |
|---|---|---|
| ஆஸிட் பார்பரிக் டில் (Acid Phosphoric Dil) | டிராம் | 1 |
| * லிக்கர் ஸ்டிரிக்னைன் (Liquor Strychnine) | துளி | 20 |
| ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) | டிராம் | 2 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | ,, | 2 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

(5) * எக்ஸ்டிராக்ட் ஓபியம் (Extract Opium) கிரைன்ஸ் 1½
* எக்ஸ்டிராக்ட் பெல்லடோனை (Extract Belladonnae) ,, 1½
கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) ,, 24

ஒன்று சேர்த்து, 24-மாத்திரைகளாகப் பிரித்து உருட்டிக்கொண்டு, 3-மணி நேரத்திற் கொரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

## இரத்தப் பெருக்கு—Menorrhagia

இதைப் துவாலை; பெரும்பாடு; சூதகப்பெருக்கு; இரத்தஸ்ராவம்; அஸ்ருக்தரம்; பிரதரம் என்று பலவிதமாய்ச் சொல்லப்படும். சுகதேகியான ஸ்திரீகளுக்கு 28-நாட்களுக் கொருதரம் கிரமமாய் 4-முதல் 6-அவுன்ஸ் வரை சூதகம் வெளிப்படும். இரத்தப்பெருக்கு ரோகத்தில், 28-நாட்களுக்கு முன்னதாகவோ; அல்லது, நாட்கள் சென்றோ சூதகம் வெளிப்படும். அளவிலும் சூதகம் அதிகமாய்க் கழியும்.

கருப்பையி லூறும் இரத்த மிகுதியினலும்; அடிக்கடிக் கரு அழிவேற்படும் காரணத்தினலும்; சீதோஷ்ண மாற்றம், மதுபானம் செய்தல், சரீரத்தில் இரத்தம் அதிகரித்திருத்தல், அளவுக்கதிகமான ஆகாரம் உட்கொள்ளல் முதலிய காரணங்களினலும்; கருப்பை, யோனிப்பாதை இவைகள் வீக்கம், கருப்பையின் உட்புற சவ்வு வீக்கம் கண்டு விடுதல், பிரசவத்தின்போது நஞ்சுப்பிடித்த மேற்படல், கருப்பையி லேற்படும் கட்டி, அடிக்கடி சம்போகம் செய்தல் முதலிய கோளாறுகளினலும்; குண்டிக்காய் வீக்கம், பீலிகை வியாதி, கருப்பையில் சளி சேருதல், மது மூத்திர ரோகம், நாள்பட்ட வயிற்றோட்டம், இருதய வியாதி முதலிய புற அவயவங்களின் விகல்பத்தினலும் இரத்தப்பெருக் கேற்படலாம்.

இரத்தப்பெருக்கு ரோகத்தில் தீண்டலாகும் நாட்கள் சமீபித்தும், சூதகம் வெளிப்படாது, திரேகத்திலோர்வித உணர்ச்சி யேற்பட்டு, இழுப்புக் கண்டு சூதகம் அதிகமான அளவாக பெருகியோடும்; இதனல் சிலருக்கு சுரம் கண்டு, கைகால் குளிர்ந்து போவதுமுண்டு.

### சிகிச்சை

(1) நாவற்பட்டையை எருமை மோர்விட்டிடித்துப் பிழிந்தசாறு அவுன்ஸ் 2-ல் ஒரு ரூபாயெடை சந்தனத்தைக் கரைத்து 3-நாள் கொடுத்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அக்கரகாரம் | ரூபாயெடை | 20 | குரோசாணி ஓமம் | ரூபாயெடை | 20 |
| கோஷ்டம் | ,, | 20 | வெந்தயம் | ,, | 20 |
| அதிமதுரம் | ,, | 20 | வெள்ளைப்பூண்டு | ,, | 20 |
| திப்பிலி | ,, | 20 | ஓமம் | ,, | 20 |
| கிராம்பு | ,, | 20 | சீரகம் | ,, | 20 |
| பெருஞ்சீரகம் | ,, | 20 | அதிவிடயம் | ,, | 20 |
| சகஸ்திரபேதி | ,, | 20 | கொத்தமல்லி | ,, | 20 |

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்க வேண்டும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெருங்காயம் | ரூபாயெடை | 20 | மிளகு | ரூபாயெடை | 20 |
| சிற்றரத்தை | ,, | 20 | சுக்கு | ,, | 20 |
| திப்பிலிமூலம் | ,, | 20 | இந்துப்பு | ,, | 20 |
| ஏலம் | ,, | 20 | | | |

ஒன்று சேர்த்திடித்து 7-முறை புது சட்டியில் போட்டு வறுத்து சூரணித்து வைத்துக்கொண்டு, ஆவாரம் பூவும், பட்டையும் சமமாய்ப் போட்டுக் காய்ச்சிய கஷாயம் அவுன்ஸ் 2-ல் திரிகடி பிரமாணம் சூரணத்தைக் கலக்கிக் கொடுத்து வரலாம்.

(3) காடியில் துணியை நனைத்து யோனிக்குள் வைத்தால் சூதகம் அதிகமாய் ஓடுவதை தடை செய்யும்.

(4)

| | | |
|---|---|---|
| எக்ஸ்டிராக்ட் எர்காட் லிக்குட் (Extract Ergot Liquid) | டிராம் | 2 |
| டிஞ்சர் டிஜிடாலிஸ் (Tincture Digitalis) | துளி | 24 |
| ஆஸிட் காலிக் (Acid Gallic) | டிராம் | 1 |
| எப்சம் சால்ட் (Epsom Salt) | ,, | 3 |
| ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | ,, | 1 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து 6-மணி நேரத்திற் கொருதரம் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## இரத்தவாத குன்மம்—Amenorrhoea

இதை இரத்தக் குன்மகுலை; சூதகக்கட்டு; சூதகப்பந்தம் என்று பலவிதமாய் சொல்லப்படும்; 28-நாட்களுக் கொருதரம் கிரமமாய் வெளியாகவேண்டிய சூதகம் இவ்வியாதியில் தடைப்பட்டுப்போகும்.

கருப்பையில் இயற்கையாகவே சூதகம் சுரக்காமல் போவதினாலாகிலும்; கருப்பையின் வாய் அடைபட்டுப்போ யிருப்பதினாலாகிலும்; முக்கியமாய் சூதகக்கட் டேற்படலாம். மேலும், சரீரப் பிரக்கிருதியின் காரணத்தினாலாகிலும்; இரத்தம் மிகுதியும் வியர்த்தமாய்ப் போவதினாலாகிலும்; நீடித்த வியாதிகளில் கஷ்டப்பட்டதினாலாகிலும்; அளவுக்கதிகமான சம்போகம் முதலியவைகளினாலாகிலும்; அதி ஸ்தூலரோகம், கருப்பையில் துர்மாமிச வளர்ச்சி, கருப்பையில் கட்டி, புண்ணுகளேற்படுதல், முதலிய சில கோளாறுகளினாலாகிலும்; நீண்டல் காலங்களில் குளிரில் நடமாடுதல், அதிக குளிர்ச்சியான பானங்களைக் குடித்தல் முதலிய செய்கைகளினாலும் இரத்தம் கட்டுப்பட்டுவிடலாம்.

சூதகபந்தரோகத்தில் சுரம், வாந்தி, தலைச்சுற்று, தலைவலி, புளித்தேப்பம், மலச்சிக்கல், அடிவயிறு, இடுப்பின் கீழ் பாகங்களில் குடைச்சலான வலி, நாடி நடை துரிதப்படுதல் இவைகளேற்படும். சூதகம் தடித்துக் கருத்துக் கழியும்; தேகம் மெலிந்து யோனி, கருப்பை, நாசி முதலியவைகள்

வரண்டு நாவு உணர்ச்சியற்றிருக்கும்; சிலருக்குத் தீண்டல் சாயத் தண்ணீர் போலும், சிலருக்கு மஞ்சளாகவும், நீலநிறமாகவும், வெண்மையாகவும் சூதகம் கழிவதுண்டு. திரேகம் வெளுத்துச் சோம்பலேற்படும்; உடம்பாதியந்தமும் நச்சுவலி, பதஷ்டம், இழுப்பு, விக்கல், மயக்கம், மாரடைப்பு, அகோரப்பசி, உடலெரிவு, வாய்க் கசப்பு, நீர்க்கடுப்பு, குளிர்நடுக்கம், இரைப்பு, இருமல் முதலிய கோளாறுகளில் சிலவேனும், பலவேனும் உண்டாகும்.

### சிகிச்சை

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கொத்தமல்லி | ரூபாயெடை | 3 | வசம்பு | ரூபாயெடை | 3 |
| வெள்ளைப்பூண்டு | ,, | 3 | கொடிவேலி | ,, | 3 |
| ஓமம் | ,, | 3 | கோஷ்டம் | ,, | 3 |
| செவ்வியம் | ,, | 3 | கடுக்காய் | ,, | 3 |
| வாய்விளங்கம் | ,, | 3 | தான்றிக்காய் | ,, | 3 |
| சுக்கு | ,, | 3 | நெல்லிவற்றல் | ,, | 3 |
| திப்பிலி | ,, | 3 | சிறுதேக்கு | ,, | 3 |
| மிளகு | ,, | 3 | சிவதைவேர் | ,, | 3 |
| திப்பிலிமூலம் | ,, | 3 | கழற்சிப்பருப்பு | ,, | 3 |
| சீரகம் | ,, | 3 | கடுகுரோகிணி | ,, | 3 |
| கருஞ்சீரகம் | ,, | 3 | பெருங்காயம் | ,, | 3 |
| வெட்பாலையரிசி | ,, | 3 | இந்துப்பு | ,, | 3 |
| அதிமதுரம் | ,, | 3 | அட்டுப்பு | ,, | 3 |

ஒன்று சேர்த்து உலர்த்திச் சூரணித்துக்கொண்டு சிற்றாமணக்கெண்ணெயும், பனைவெல்லமும் சமமாய் சேர்த்துப் போதுமான துவிட்டு லேகியம்போல் பிசைந்து வைத்துக்கொண்டு, காலை மாலை ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கும்மட்டிக்காய்ச்சாறு | அவுன்ஸ் | 12 | இந்துப்பு | ரூபாயெடை | ½ |
| | | | கருஞ்சீரகம் | ,, | ½ |
| பெருங்காயம் | ரூபாயெடை | 1½ | கடுகுரோகிணி | ,, | ½ |
| வெங்காரம் | ,, | ½ | வால்மிளகு | ,, | ½ |

முதலில் குமட்டிக்காய்ச் சாற்றை 6-அவுன்ஸாகச் சுண்ட வைத்துக் கொண்டு, இதர சரக்குகளையும் போட்டு, 6-மணி நேரம் அரைத்து வழித்து வைத்துக்கொண்டு, தீண்டலானது முதல் 3-நாளைக்குக் காலையில் ஒரு குன்றி மணியவ்வளவு மருந்தை பனை வெல்லத்தில் வைத்துக் கொடுத்து வரலாம். பேதி அதிகமானல், மருந்தின் அளவை குறைத்துக் கொள்ளலாம்.

(3) ஏகாதசிச் செந்தூரம்; குமட்டிக்காய்க் குழம்பு; ஸ்ரீ தேவி எண்ணெய் இவைகளைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(4)

| | | |
|---|---|---|
| சோடா சாலிஸிலஸ் (Soda Salicylas) | கிரைன்ஸ் | 30 |
| டிஞ்சர் ஜென்ஷன் கோ (Tincture Gentain Co) | துளி | 45 |

| | | |
|---|---|---|
| * டிஞ்சர் நக்ஸ் வாமிகா (Tincture Nux Vamica) | துளி | 20 |
| ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) | ,, | 30 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, நாள் 1-க்கு 3-தரம் ஆகாரத்திற்குப் பின் 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## கரு அழிவு—Abortion

கருப் பையில் உண்டாயிருக்கும் கரு எக்காரணத்தினாலாவது, ஏழு மாதத்திற்கு முன் வெளிப்பட்டு விடுமானால், அதைக் கருச்சிதைவு; கரு அழிவு; காய் விழுதல்; கர்ப்பப்பாதம்; அழிகர்ப்பம்; கர்ப்பவிச்யுதி; கர்ப்ப ஸ்ராவம் என்று சொல்லப்படும். ஏழு மாதத்திற்குப் பின் பிரசவிக்க வேண்டிய கிரம காலத்திற்கு முன் குழந்தை பிறந்து விடுமானால், அதற்கு அகாலப் பிரசவம் (Premature Birth) என்று சொல்லப்படும்.

கருவழிவு ஒருதரம் ஏற்படுமானால், பின்னர் கருப்பற்றும்போதெல்லாம் கரு வழி வேற்படும். சுகாதாரக்குறைவு, அகால உணவு, அகால நித்திரை, அதிகப் பசியுடனிருத்தல், உயரமாகத் தாவி எட்டுதல், அடி வயிற்றில் அடிபடுதல், மெத்தைப் படிகளில் தட தடவென ஏறி இறங்குதல், பாரங்களை முக்கித் தூக்குதல், நெடுந்தூரம் நடத்தல், குதிரை சவாரி, அதிக அதிர்ச்சியுடைய வாடகை பஸ்களில் நெடுந்தூரம் செல்லுதல், நடனமாடுதல், தையல் இயந்திரங்களில் படபடப்பாய் வேலை செய்வது, இடைக் கச்சை (ஒட்டியாணங்களை), இறுகக் கட்டிக்கொள்வது, ஜீரணிக்கக்கூடாத ஆகாரங்களைப் புசிப்பது, கடும் விரேசனகாரிகளை எடுத்துக்கொள்ளுவது, மூளைக்கு அதிக வேலை கொடுப்பது, கர்ப்ப காலத்திலும் முரட்டுத்தனமாய் சம்போகம் செய்வது இவைபோன்ற கர்ப்பகாலத்தில் செய்யத்தகாத காரியங்களைச் செய்வதனாலும்; பிண்டத்தைச் சுற்றியிருக்கும் சவ்வானது கருப்பையில் இலேசாகப் பிடித்திருப்பது, கருப்பையின் பக்கங்களில் கொழுப்பு மிகுந்திருப்பது, கருப்பையின் வாய் ஆரம்பத்திலேயே விரிந்து போதல், தேகம் அதிகம் ஸ்தூலித்தல் முதலிய இயற்கைக்கு விரோதமான கோளாறுகளினாலாகிலும்; மலச்சிக்கல், கிரைப்பூச்சி யதிகரிப்பு, சீதபேதி, பெரும்பாடு, நீடித்த பிரமேக ரோகம், நீடித்த இதர வியாதிகள் முதலிய பல பிணியின் காரணமாகவும் கருவழி வேற்படலாம்.

கருவழிவு சகஜமா யேற்படுபவர்களுக்கு, கருவழிவு உண்டாவதால் யாதொரு விதக் கெடுதலு மேற்படுவதில்லை; புதிதாகக் கருவழிவு ஏற்பட்டவர்களுக்கு இரத்தப்பெருக்கும் இதரக் கோளாறுகளும் நேரிடலாம்.

கருவழிவு ஏற்படுவதற்குமுன், தேகத்தில் ஒருவித வியாதியின் உணர்ச்சியும், மிகுந்த பலஹீனமு மேற்படும்; முதுகின்கீழ் பாகத்திலும், அடிவயிற்றிலும், ஒருவிதமான பிடிப்புப்போன்று யேற்படும்; இவைகளுடனும் கூட சூதகம் இலேசாகக் கசியும்.

---

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

கருவழிவு ஏற்படும்போது, அடிவயிறு, அரை, முதுகு முதலிய விடங்களில் குத்துவலி கண்டு, வலியானது வரவர உக்கிரகமாக உண்டாகி, சூதக கசிவதிக மேற்படும்.

பிண்டம் விழுவதற்குமுன், இடுப்புவலி விட்டுவிட்டு மெதுவாகக் கண்டு, பின் பிரசவ வேதனைப்போன்றதொரே வலியுண்டாகி, தண்ணீர் கசிவு கண்டு பிண்டம் வெளிப்பட்டுவிடும்.

### உப சிகிச்சைகள்

(1) கருவழிவு உண்டாவதற்கான முதல் அறிகுறிகள் தோன்றும்போதே, ரோகியை நிம்மதியாகப் படுக்கவைத்து, இடுப்புவலி கண்டால், இடுப்பின் கீழ் சற்று உயரமான தலையணையை வைத்து, மல்லாக்காய் படுத்திருக்கச் செய்யவேண்டியது. ஈரத்துணியை கடிதடத்தின்மேல் போட்டு வைக்கலாம்; இடுப்புவலி யதிகமிருந்தால், டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) 20, 30-துளி தண்ணீர் அவுன்ஸ்-6 ஒன்று சேர்த்துக் கொடுக்கலாம்; குளிர்ந்த தண்ணீரில் ஸ்நானம் செய்துவைக்கலாம்; உஷ்ணமான காப்பி தேயிலை பானங்களைக் கொடுக்கக்கூடாது.

(2) இடுப்பு வலியும் அதிகரித்து, இரத்தப்பெருக்கு முண்டானால் ரோகியை படுக்கவைத்து, அபினி 3-கிரைன்ஸை 5-அவுன்ஸ் தண்ணீரில் கரைத்து, ஆசனத்தில் பீச்சாங்குழலா லடிக்கலாம்; வாந்தி யில்லாதிருந்தால், பொட்டாஷியம் நைட்ரஸ் (Potassium Nitras) 10-கிரைன்ஸை 2-அவுன்ஸ் தண்ணீரில் கரைத்து, 2-மணி நேரத்திற் கொருதடவை கொடுக்கலாம்; இரத்தப்பெருக் கதிகமாயிருந்தால், குளிர்ந்த தண்ணீரை யோனியில் அடிக்கலாம்; ஈரத்துணியை கடிதடத்தின்மேல் போட்டு வைக்கலாம்; யோனிக்குள் ஐஸ் (Ice) கட்டியை வைத்திருக்கலாம்; 5-அவுன்ஸ் குளிர்ந்த தண்ணீரில் இரண்டு தேக்கரண்டி காடியைக் கலந்து யோனிக்குள் பீச்சாங்குழலா லடிக்கலாம்; ஐஸ் தண்ணீரைக் குடிக்கக் கொடுக்கலாம்.

**குறிப்பு:**—இம்முறைகளால் பிண்டம் தங்காமல் வெளிப்பட்டுவிடும்போலிருந்தால் இச்சிகிச்சைகளைக் கைவிட்டு, பிண்டம் விழுந்தபின் பிரசவத்திற்கு பின் செய்யவேண்டிய உபசாரணையை செய்யவேண்டும்.

### கருவழிவிற்குப் போது மருந்துகள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) ஏலம் | ரூபாயெடை | ½ | அரிசித்திப்பிலி . | ரூபாயெடை | ⅛ |
| தாளிசபத்திரி | ,, | ½ | பகமனேசுருக் | ,, | ,, |
| ஓமம் | ,, | ½ | பகமேனேசுபேத் | ,, | ,, |
| கிராம்பு | ,, | ½ | பருப்புககீரைவிரை | ,, | ,, |
| இலவங்கப்பத்திரி | ,, | ½ | மூங்கிலுப்பு | ,, | ¾ |
| கருவாப்பட்டை | ,, | ½ | சுக்கு | ,, | ¾ |
| கிச்சிலிக்கிழங்கு | ,, | ½ | மூலாம்பழவிரைபருப்பு | ,, | ¾ |
| அக்ரகாரம் | ,, | ⅛ | ரூமிமஸ்தகி | ,, | ¾ |

| | | | | |
|---|---|---|---|---|
| மருதம்பட்டை | ,, | ,, | சர்க்கரை ,, | 15 |
| வெண்சந்தனம் | ,, | ,, | பசுநெய் ,, | 5 |

சரக்குகளையெல்லாம் நன்றாய் சூரணித்துச் சர்க்கரைப் பாகுடன் நெய்யும் சேர்த்துச் சூரணங்களைக் கொட்டி லேகியமாகக் கிண்டி காலை மாலை ½-ரூபா யெடை அளவாகக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—கருவழி வேற்பட்டபின் இதைக் கொடுத்து வந்தால் கருப்பை வலுவடைந்து, கருபற்றி பிண்டத்தை வளர்த்து கருவழிவைத் தடுக்கும். கீழ் கண்ட ஆங்கில மருந்துகளும் இதே குணத்தைச் செய்யும்.

(4) எக்ஸ்டிராக்ட் விபுருணி லிக்குட் (Extract Viburuni Liquid) டிராம் 1
எக்ஸ்டிராக்ட் பிஸிடியா லிக்குட் (Extract Piscidiae Liquid) துளி 45
எக்ஸ்டிராக்ட் இலோனியாடிஸ் லிக்குட் (Extract Heloniadis Liquid) ,, 45
ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) அவுன்ஸ் 2

ஒன்று சேர்த்துக் காலை மாலை ஒரு தேக்கரண்டிவீதம் ஒரு மாதம் கொடுத்து வரலாம்.

## கருவழிவு ஏற்பட்டதினாலுண்டாகும் வாதம்— Paralysis caused by Abortion

இதைக் குணவவதானகவாதமென்று சொல்லுவர். கருப்பற்றிய மூன்றாம் மாதத்தில் கருவழிவேற்பட்டு அதனால், பெரும்பாடு உண்டான ஸ்திரீகளுக்கு இந்த வாதரோகம் தாக்குவதுண்டு.

அடிவயிற்றை இழுத்துப் பிடித்துக்கொண்டு கை கால்களைச் சரியானபடி அசைக்கவொட்டாமல் பிடித்துக்கொள்ளும்; திரேகாதியந்தமும் அசதியும், புண்போன்ற வலியுமிருக்கும்; சுரம் இலேசாகக் காயும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) வெங்காரம் | ரூபாயெடை | ½ | இந்துப்பு | ரூபாயெடை | ½ |
| பெருங்காயம் | ,, | ½ | வசம்பு | ,, | ½ |
| தேவதாரு | ,, | ½ | கடுக்காய் | ,, | ½ |
| சதகுப்பை | ,, | ½ | | | |

ஒன்று சேர்த்துத் தூள் செய்து எருக்கம் பாலால் மைபோலரைத்து வலியுள்ள விடங்களில் பற்றுப் போடலாம்.

(2) அப்ரகக் கோரோசனை மாத்திரை; ஸ்ரீ தேவி எண்ணெய்; வீரமெழுகு; குமட்டிக்காய்க் குழம்பு; அகஸ்தியர் குழம்பு; வாதாராக்ஷச மாத்திரை இவைகளைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | * ஸ்டிரிக்னைன் சல்பஸ் (Strychnine Sulphus) | கிரைன்ஸ் | 1 |
| | * ஆஸிட் ஆர்சனியோசம் (Acid Arseniosum) | ,, | 1 |
| | * எக்ஸ்டிராக்ட் பெல்லடோனு (Extract Belladonnae) | ,, | 5 |
| | கொய்னைன் சல்பஸ் (Quinine Sulphus) | ,, | 40 |
| | எஸ்டிராக்ட் டாராக்ஸாஸி (Extract Taraxaci) | ,, | 20 |

ஒன்று சேர்த்து, 90-மாத்திரைகளாகப் பிரித்து உருட்டிக்கொண்டு, நாள் 1-க்கு 3-வேளை 1-மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | * லினிமென்ட் ஓபியம் (Liniment Opium) | அவுன்ஸ் | 1 |
| | லினிமென்ட் சொபோனிஸ் (Liniment Saponis) | ,, | 1 |

ஒன்று சேர்த்துக்கொண்டு, முதலில் வலி பிடிப்புள்ள பாகங்களைச் சுடு தண்ணீர் விட்டு நன்ருகப் பிடித்துவிட்டுக் கழுவியபின் மேல் பிரயோகமாக மட்டும் தடவி வரலாம்.

குறிப்பு:—இத்தைலம் விஷமுள்ளதாகையால், தேய்த்தவர்கள் கைகளை நன்ருகச் சுத்தஞ் செய்துகொள்ள வேண்டும்.

## கருக்குழி வலி—Metritis

கரு உற்றிருக்கும்போதாவது; அல்லது, பிரசவத்திற்குப் பினனுவது சிலருக்குக் கேர்ப்பப்பை வலியுண்டாகலாம். இதை யோனி சூலை என்று சொல்லப்படும். கருப்பையின் கழுத்துச் சுருங்கிக் கருப்பை உட்புற சவ்வு வீக்கம் கண்டு புண்பட்டு விடுவதனுலாவது; பிரசவத்திற்குப் பின்னுவது, கரு உற்றிருக்கும்போதாவது, ஈரத்தில் நடமாடுவதனுலாவது; கருப்பையில் சூதகம் கட்டிப்படுதல், விப்புருதிகளேற்படல் முதலிய காரணங்களினுலாவது; முரட்டுத்தனமான சம்போகத்தினுல் ஜனநேந்திரிய உட்புற அவயவங்கள் அதிர்ச்சி கண்டும், தேய்வு பட்டும் போவதினுலாவது கருக்குழியில் வலி ஏற்படலாம்.

முதல் முதல் குளிர்காச்சலேற்படும்; நாடி தீவிரமாக இழுத்து நடக்கும்; கருப்பையில் வலியும், கருப்பை பெரிதாகத் தெரிவதுபோன்று மிருக்கும்; நாவரட்சி, வாந்தி, அரோசிகம், வயிற்ருேட்டம் முதலியவைகளேற்படும். ஒருபுறம் சாய்ந்து படுத்திருப்பது ஆரோக்கியமாகத் தெரியும். எழுந்து உட்காரும் சமயம் வலியதிகரிக்கும்; சில சமயங்களில் சன்னிபாத சுரத்திலுண்டாகும் குறிகளும், சூதக வயிற்று வலியில் ஏற்படும் குணங்களுமிருக்கும்; நாவுவரண்டு, அழுக்கு மஞ்சள் நிறமாகவிருக்கும்; சுரமிருந்தால் சுரத்தைத் தணிக்கும் மருந்துகளைப் பிரயோகம் செய்யவேண்டும்.

### சிகிச்சை

(1) நவாச்சாரம் ரூபாயெடை 1 தண்ணீர் அவுன்ஸ் 16

ஒன்று சேர்த்துக் கரைத்துக்கொண்டு, ஒரு துணியில் நனைத்து, அடிவயிற்றில் போட்டுத் துணி காயாமல் கலவைத் தண்ணீரை விட்டு வரலாம்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

(2) கருவேலம்பட்டைக் கஷாயத்தைப் பீச்சாங்குழலால் யோனிக்குள் அடித்து வரலாம்.

(3) லைக்கர் செடான்ஸ் (Liquor Sedans) துளி 90
தண்ணீர் அவுன்ஸ் 3

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஆகாரத்திற்குபின் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(4) காம்பர் (Camphor) கிரைன்ஸ் 45
ஆஸிட் போரிக் (Acid Boric) டிராம் 4
கிளிசரின் (Glycerine) அவுன்ஸ் 5

ஒன்று சேர்த்து அரைத்துக்கொண்டு, பஞ்சில் நனைத்துப் பஞ்சை உருண்டையாகச் செய்து, ஒரு நீண்ட நூலில் கட்டி யோனிக்குள் வைத்திருக்கலாம்; இப்படியே தினந்தோறும் புதிதாகப் பஞ்சை வைக்கலாம.

(5) எக்ஸ்டிராக்ட் பெல்லடோனு லிக்குட் (Extract Belladonnae Liquid) இதை அடிவயிற்றில் தடவி வரலாம்.

குறிப்பு:—4-ம் இலக்க மருந்தையும் உபயோகித்து 5-ம் இலக்க மருந்தையும் பூசி வரலாம்.

## கருப்பை இறக்கம்—Prolapsus Uteri

கருப்பை தன் இயற்கை ஸ்தானத்தை விட்டு அகன்றுபோவதற்கு, கருப்பை இறக்கம்; அண்டம் தள்ளுதல்; கர்ப்பப் பிரம்சம் என்று சொல்லப்படும். (1) கருப்பை சற்று இடத்தைவிட் டகன்றிருத்தல் (Relaxation); (2) யோனி பாதையின்மேல் தொங்கிக்கொண்டிருததல் (Prolapsus); (3) கடிதடத்திற்குமேல் வெளிப்பட்டு, விடபத்தினருகில் தொங்கிக் கொண்டிருத்தல் (Procidentia) ஆக மூன்றுவிதமாகக் கருப்பை தன் ஸ்தானத்தைவிட் டகன்றிருக்கலாம்.

பிரசவித்ததற்குப் பின் சீக்கிரத்தில் எழுந்து நடமாடினதாலாவது; கருப்பையைப்பற்றி யிருக்கும், சவ்வின் பலயீனத்தினுலாவது; பிரசவத்திற்குப் பின் கருப்பை இயற்கைக் கதிகமாய் பெருத்துப் போவதினுலாவது; கருப்பை இறக்க மேற்படலாம். அதி சீக்கிரத்தில் பெண்கள் ருதுவாகி விடுவதினுலாவது; தாமதித்து ருதுவாவதினுலாவது; கர்ப்பாயசத்தில் இரத்தப்பெருக் கேற்பட்டதினுலாவது; அளவுக் கதிகமான புணர்ச்சி, கீழே விழுவதால் கருப்பை யடிப்படுதல், குதித்தல், தாவுதல், பளுவை மூக்கித் தூக்குதல் முதலிய காரணங்களினுலாவது; நீடித்த இருமல், ஓயாத வாந்தி, நாள்பட்ட அஜீரணம், நாள்பட்ட மலச்சிக்கல், மூலம் முதலிய ரோகத்தினுலாவது; சரீர தளர்ச்சியினுலாவது; கருப்பை இடம்விட்டு அகன்று போகலாம். பிரசவத்திற்குப் பின் உண்டாகும் கருப்பை இறக்கத்திற்குச் சஸ்திர சிகிச்சையினுல்மட்டும் பயனடையலாம்.

* விஷமானது வெளிப்பிரயோகமாக மட்டும் உபயோகிக்கவேண்டும்.

### உபகர்ண சிகிச்சை

(1) ரோக ஸ்திரீயை மல்லாக்காய்ப் படுக்க வைத்து முழங்கால்களை வயிற்றோடணைத்துக்கொள்ளும்படிச் செய்து, பிரிஷ்டத்தின் (பிட்டம்) கீழ் உயரமாக ஒரு தலையணையை வைத்து, இடுப்பை உயரப்படுத்திப் பின்னர், கருப்பையின்மேல் சிற்றாமணக்கெண்ணெயைத் தடவி, மெதுவாக யோனிக்குள் தள்ளி விடவேண்டும். அப்படி உள்செலுத்தியவுடன் படிகாரம் ரூபாயெடை 1-ம், தண்ணீர் அவுன்ஸ் 12-ம் சேர்த்துக் கரைத்த தண்ணீரில் கடற் பஞ்சையாவது (Sponge), மிருதுவான துணியையாவது நனைத்து யோனிக்குள் செலுத்தி வைக்கவேண்டும். தினந்தோறும் கடற் பஞ்சியைச்சுத்தம்செய்து படிகாரத்தண்ணீரில் நனைத்து வைக்கலாம். இவ்வித சிகிச்சையால் பயனுண்டானால், ரோக ஸ்திரீயை ஒருபுறம் சாய்ந்து படுக்கும்படி செய்யலாம். இந்த நிலையில் வியாதி தீரும்வரை படுத்திருக்க வேண்டும்.

(2) மேல்சொல்லிய சிகிச்சையால் பயனுண்டானபின்னும், கருப்பை இறங்கி விடாதபடி மெஞ்சி பாசரீஸ் (Menge Passeries), கீரங் பாசரீஸ் (Gehrung Passeries), ஹெவ்விட் பாசரீஸ் (Hawitt Passeries) முதலிய தடை வளையங்களை உபயோகித்து வரலாம்.

## கருவிப்புருதி—Uterine Cancer

இதைக் கர்ப்பவிப்புருதி யென்றும் சொல்லப்படும். பறங்கிரோகம்; பிரமேக ரோகமுள்ள ஆடவர்களின் செயற்கையால் கருக்குழி, கர்ப்பப்பை முதலியவைகள் புண்பட்டு இந்த ரோகம் உண்டாகிறது.

ஆரம்பத்தி லதிகமான தலைவலி, வயிற்றுவலி, அரையின் கீழ் பாகங்களில் குத்துவலி முதலியவைகளும் கண்டு, சம்போகத்தில் அதிகமான இம்சையை யுண்டுபண்ணும்; புணர்ச்சிக்குப் பிறகு வயிற்றுவலி யுண்டாகும்; கடினமான வயிற்றுவலியுடன் சூதகம் கட்டிக்கட்டியாய் வெளிப்படும். சூதகம் வெளிப்பட்டவுடன் வயிற்றுவலி நின்றுவிடும்; சில சமயங்களில் சூதகத்துடன் சீழ் கலந்திறங்கும்; யோனியிலிருந்து கசியும் தண்ணீரானது துர்நாற்றத்துட னிருக்கும். கடிதடம், யோனித்துவாரம் இவைகள் சிவந்து வீங்கி வலியா யிருக்கும்.

### சிகிச்சை

(1) ஒரு முற்றின தேங்காயைத் துளையிட்டு அதனுள் தூதுவேளைப்பழம் ரூபாயெடை 2-ம், எருக்கம்பால், கொடிக்கள்ளிப்பால் வகைக்கு தேக்கரண்டி ஒன்றையும் விட்டு, ஆப்பால் வாயை மூடி சாணியைக் கனமாய் அப்பி, ஓடு கருகும்மட்டும் நெருப்பில் புரட்டியெடுத்து, ஓட்டைநீக்கி தேங்காயையும், மருந்தையும் அப்படியே அரைத்துக் கழற்சிக்காய்ப் பிரமாணம் மாத்திரைகள் செய்து வைத்துக்கொண்டு, தீண்டலானது முதல் 5-நாளைக்கு காலையில் மட்டும் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—பேதியானால் குளிர்ந்த தண்ணீர் கொடுக்கவும். பசுமோர் சாதம் மட்டும்தான் கொடுக்க வேண்டும்.

(2) விழுதியெண்ணெய்; ஸ்ரீதேவியெண்ணெய் இவைகளைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(3)

| | | |
|---|---|---|
| ஆஸிட் சாலிசிலிக் (Acid Salicylic) | கிரைன்ஸ் | 6 |
| சோடியம் சாலிசிலஸ் (Soduim Salicylas) | டிராம் | 3 |
| டிஞ்சர் யூகலிபுடஸ் (Tincture Eucalyptus) | ,, | 6 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்துக் கருப்பைக்குள் பீச்சாங்குழலால் நாள் ஒன்றுக்கு 3, 4-தடவை அடித்துச் சுத்தம் செய்து வரலாம்.

## கர்ப்பசன்னி—Hysterical Fits

இருதய வியாதிக ளிருந்தாலொழிய கர்ப்பசன்னி அநேகமாய் ஏற்படுவதில்லை. பிரசவ காலங்களின் சமீபத்தில் கர்ப்பசன்னி உண்டாகுமானால் பிரசவம்சீர்கேடாகவே முடியும்.

அதி பலயீனத்தால் நரம்பு தளர்ச்சியுடைந்து விடுவதினாலும்; நீடித்த வயிற்றோட்டம், நீண்டநாள் தூக்கமின்றி யிருத்தல், சீலையை அழுத்தமாய்க் கட்டுதல், காற்றோட்டமில்லாத விடங்களில் வசித்தல், பெரும்பாடு, கோபம், பயம் முதலிய காரணங்களினால் இந் நோய் ஏற்படலாம்.

கர்ப்பசன்னி ஏறக்குறைய காக்கைவலியை ஒத்திருந்தாலும், வெகுவான வித்தியாச மிருக்கும்; கர்ப்பசன்னியில் நெஞ்செரிவும், புளித்தேப்ப மூண்டாகும்; ஓயாமல் கொட்டாவி வரும்; முகம் வெளுத்திருக்கும்; பார்வை மந்தப்படும்; காதில் ஓர்வித இரைச்சலேற்படும்; செய்கைகள் பயித்தியம் பிடித்ததைப்போ லிருக்கும்.

### சிகிச்சை

மூர்ச்சயா யிருக்கும்போது:—

(1) குளிர்ந்த தண்ணீரை முகத்தி லடிக்கலாம்.

(2) கஸ்தூரியை முகரக் கொடுக்கலாம்.

(3) அமோனியம் கார்போனசை (Ammonium Carbonas) முகரச் செய்யலாம்.

(4) ஸ்ரீதேவி யெண்ணெயைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(5)

| | | |
|---|---|---|
| குளோரல் ஐட்ரஸ் (Chloral Hydras) | கிரைன்ஸ் | 15 |
| பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | ,, | 20 |
| சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 1 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 2-மணி நேரத்திற் கொருதரம் இப்படிக் கொடுத்து வரலாம்.

## கிரமாதீதச் சூதகம்—Irregular Menses

இருபத்தெட்டு நாட்களுக் கொருமுறை வெளிப்படவேண்டிய சூதகம், குறித்த நாட்களுக்குமுன், 2, 3-தரம் கண்டு மறைந்து போவதையும், இரண்டு மூன்று மாதங்களுக்கு தீண்டலாகாதிருப்பதையும், கிரமாதீத சூதகரோகம், ஒழுங்கீன சூதகரோகமென்று சொல்லப்படும்.

சுகாதாரக் குறைவான வாசம், சதா உட்கார்ந்து பொழுது போக்குதல், சரீர ஆரோக்கியக் குறைவு, ஜீவதாதுப் பொருளற்ற ஆகாரம் முதலியவைகளால் ஏற்படலாம்.

### சிகிச்சை

(1) குமட்டிக்காய் குழம்பு; ஸ்ரீதேவி எண்ணெய் இவற்றைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (2) | கொய்னேன் சல்பஸ் (Quinine Sulphus) | கிரைன்ஸ் | 6 |
| | ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | துளி | 12 |
| | பெர்ரீ சல்பஸ் (Ferri Sulphus) | கிரைன்ஸ் | 6 |
| | எப்சம் சால்ட் (Epsom Salt) | டிராம் | 4 |
| | ஸ்பிரிட் மெந்தா பிப் (Spirit Mentha Pip) | துளி | 15 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

முதலில் கொய்னேன் சல்பசை, சல்பியூரிக் காஸிட்டில் விட்டுக் கரைத்துக்கொண்டு ஸ்பிரிட் மெந்தாபிப் நீங்கலாக மற்றவைகளையும் சேர்த்து தண்ணீர் விட்டரைத்து வடிகட்டிக்கொண்டு, பின் ஸ்பிரிட் மெந்தா பிப்பை சேர்த்துக் கலந்து நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## குய்யத்தில் காணும் தினவு—Pruritis Vulva

"கர்ப்ப ஸ்திரீகள் மர்மஸ்தான எரிவென்ற" தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## சூதகக் கட்டி—Polypus Uteri

கிரமமாய் வெளிப்படவேண்டிய சூதகம் கொஞ்சமேனும் வெளிப்படாமல், அதிக வாயுவினால் கருப்பையில்தானே உருண்டு திரண்டு பெருத்துப் போவதற்கே சூதகக்கட்டி, இரத்தக்கட்டி, உதிரக்கட்டி, கர்ப்பசூலை, கற்சூலை, சூல்மகோதரம், சோணிதக்கட்டி, சோரிக்கட்டி என்று சொல்லப்படும்.

சூதகக்கட்டி யுள்ளவர்களுக்கு, கர்ப்பஸ்திரிக் குண்டான சகல குறி குணங்களு மேற்படும். மேலும் போகத்தில் வெறுப்பு, பசி மந்தம், தேக வெளுப்பு, ஸ்தனம் விம்முதல், ஸ்தனத்தில் கருவளையம் (Areola) ஏற்

படுதல், வயிறு பெருத்தல், மார் துடிப்பு, வாந்தி, ஆயாசம், அரோசிகம், ஸ்தனங்களில் பால் சுரக்குதல், முதலிய கருப்பற்றியதைப்போலுள்ள குறிகளெல்லாம் தோன்றும். கருப்பையில் ஆரம்பத்திலேயே துடிப்பேற் படும்; பிரசவ வலி கண்டு இந்தக் கட்டி வெளிப்படும். சிலருக்கு அவுஷதத் தாலும்; ஆயுதத்தாலும் வெளிப்படுத்த நேரும். இதைப்பற்றி 7-ம் பக்கம், "பொய் கர்ப்பம், மெய்க் கர்ப்ப" மென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | வெடியுப்பு | ரூபாயெடை | 1½ | சீரகம் | ரூபாயெடை | 9 |
| | இந்துப்பு | ,, | 1½ | நவாச்சாரம் | ,, | 9 |
| | கறியுப்பு | ,, | 1½ | சத்திச்சாரம் | ,, | 9 |
| | கல்லுப்பு | ,, | 1½ | வாய்விளங்கம் | ,, | 3 |
| | வளையலுப்பு | ,, | 1½ | வால்மிளகு | ,, | 3 |
| | கடுக்காய் | ,, | 1½ | பெருங்காயம் | ,, | 3 |
| | மிளகு | ,, | 1½ | கோஷ்டம் | ,, | 3 |
| | கடுகுரோகிணி | ,, | 1½ | கருஞ்சீரகம் | ,, | 3 |

ஒன்று சேர்த்துப் பொடித்து, ஒரு முற்றிய தேங்காயைத் துளையிட்டு அதில் செலுத்தி, ஒரு வாரம்வரையில் பூமியில்புதைத்து வைத்திருந்து எடுத்து, ஓட்டை நீக்கி தேங்காயையும் மருந்தையும் மைபோலரைத்துக் காலை மாலை கழற்சிக்கா யளவு கொடுத்து வரலாம். (இச்சா பத்தியம்.)

(2) ஸ்ரீதேவியெண்ணெய்; குமட்டிக்காய் குழம்பு முதலியவை கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | எக்ஸ்டிராக்ட் எர்காட் லிக்குட் (Extract Ergot Liquid) | துளி | 45 |
| | * டிஞ்சர் நக்ஸ் வாமிகா (Tincture Nux Vamica) | ,, | 30 |
| | * டிஞ்சர் டிஜிடாலிஸ் (Tincture Digitalis) | ,, | 15 |
| | டிஞ்சர் கொய்னைன் (Tincture Quinine) | டிராம் | 2½ |
| | ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform) | ,, | 2½ |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 2½ |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை ஆகாரத்திற்குப் பின ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## சூதகக் குறைவு—Menstrua Exilia

கிரமமாகத் தீண்டல் காலங்களில் 5, 6-அவுன்ஸ் வெளியாகவேண்டிய சூதக மானது, கலங்கலாகவும், கருத்தும், தடித்தும், கொஞ்சமாகவும், திரேகாரோக் கியக் குறைவினுல் வெளிப்படுமானுல், அதை சூதகக் குறைவு, சூதகச் சுருக்கம் என்று சொல்லப்படும்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

தீண்டல் காலத்தில் யாதொரு உபத்திரவமுமின்றி சூதகம் கொஞ்சம் அள வில் பட்டால், அது திரேக பிரக்கிருதியின் பயனுயிருக்கலாம். அதற்கு சிகிச்சை தேவையில்லை; தீண்டல் சமயத்தில் உபாதைகளேற்பட்டால் "சூதகக் கட்டு"க்குச் சொல்லிய சிகிச்சைகளைச் செய்யவேண்டும்.

## சூதக சந்நி—Hysteria

அதிகமான நரம்பு பலஹீனம்; கிரமமாக சரீரத்திலிருந்து கழியவேண்டியது கெட்ட இரத்தம், நல்ல இரத்தத்துடன் சேர்ந்து விஷமித்துப் போதல்; இரத்தப்பெருக் கதிகமாகி, இருதயம், மூளை இவைகளைத் தாக்குதல், முத லிய காரணங்களினுலாவது; சூதகக்கட்டு, பெழும்பாடு, பிரமேகம், நீடித்த வயிற்றூட்டம், முதலிய ரோகங்களினுலாவது; அடிக்கடி கருதரித்தல், நீடித்த நாட்களுக்கு பால் கொடுத்தல் முதலிய வழக்கங்களின் காரணமாக வாவது; நரம்புகளின் இயற்கைக்குணம் கெட்டு சந்நிரோகமாக மாறி விடுகிறது.

சூதகச்சந்நி, காக்கை வலிப்பைப்போலின்றி ஆரம்பத்திலேயே, நிதானத்துட னிருக்கும்; ஓயாத சிரிப்போ, அழுகையோ வேற்படும்; நரநரவென்ற பற் கடிப்பும், கைகால்களை முறுக்கு விடுவதைப்போன்று திருப்புதலு மேற் பட்டு, ரோகி தலைமயிரைப்பற்றி இழுத்துக்கொள்ளுவாள்; நாக்கையும், கையையும் கடித்துக்கொள்ளுவாள்; சிலருக்கு இந்த வலிப்பு விட்டு விட்டு வரும்; வலிப்புக் கண்டிருக்கும் சமயம், தலையை ஒருவர் அழுத்திக்கொண் டிருப்பதுபோலாகிலும், மார்பில் ஏதோ உருண்டையாக அடைத்துக் கொண் டிருப்பதுபோலாகிலும் தோன்றும்; இடதுபுற அடிவயிற்றில் வலி யும், இரைச்சலுமுண்டாகும்; சன்னியின் கோளாறுகள் தானுகவே சமரச மடைந்தவுடன், கண்களில் நீர்வடியும்; மூத்திரம் அதிக அளவில் தெளிந்து இறங்கும்; இதையே இந்துக்கள் பேய் பிடித்ததென்றுக் கூறுவர்.

### சிகிச்சை

இழுப்புக் கண்டிருக்கும் சமயம்:—

(1) துணிப்புகை பிடிக்கலாம்.

(2) நெஞ்சிலும், சிரசிலும் குளிர்ந்த தண்ணீரால் அடிக்கலாம்.

(3) அமோனியம் கார்போனஸை (Ammonium Carbonas) முகரச் செய்ய லாம்.

இழுப்புவிட்டபின் இலகு விரேசன காரிகளால் மலத்தைக் கழிக்கச்செய்து கீழ்கண்ட மருந்துகளைக் கொடுத்து வரலாம்.

(4) ஸ்ரீதேவி எண்ணெய்; ஏகாதசிச் செந்தூரம் கொடுத்து வரலாம். செய் முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (5) கொய்னைன் வெலிரியன் (Quinine Valerian) | கிரைன்ஸ் | 24 |
| சிங் வெலிரியன் (Zinc Valerian) | ,, | 24 |
| பெர்ரிவெலிரியன் (Ferri Valerian) | ,, | 24 |

ஒன்று சேர்த்து 24-மாத்திரைகளாகப் பிரித்து உருட்டிக்கொண்டு, நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

## சூதகப்பாண்டு—Chlorosis

இவ்வியாதி சர்மத்தை வெளுக்கச்செய்து, மஞ்சள் அல்லது பச்சை நிறமாக்கி விடுவதால் ஆங்கிலத்தில் பச்சை வியாதி (Green Disease) என்று கூறுவர். சூதகப் பாண்டிற்கும், பாண்டிற்கும் வித்தியாசமுண்டு.

நிண நரம்புகளின் பலயீனத்தால், இரத்தம் நீர்த்துச் சூதகப்பாண்டு உண்டாகுகின்றது. சிறுகுட லுட்புறங்களில் நீடித்த வீக்கம்; சிறுகுடலை சுற்றியிருக்கும் சவ்வின் வீக்கம்; மர்மஸ்தானம் அளவுக்கதிகமாய் பெருத்து விடுதல்; கருப்பை, சினைப்பாதை இவைகளின் கோளாறுகள் முதலிய உருப்புகளின் விகல்பத்தினாலாகிலும்; ஆகாரத்தை ஜீவசத்துப்பொருளாக மாற்றும் பிரக்கிருதி குறைவேற்படுவதினாலாகிலும்; அதிகமான காதல் நினைவுகள் நினைத்தல், அதிகமான நித்திரை முதலிய செய்கைகளினாலாகிலும்; சூதகப்பாண்டேற்படலாம்.

சூதகப்பாண்டு ரோகத்தில் திரேகம் உஷ்ணமற்று, உடல் சில்லிட்டிருக்கும்; சூதகம் தடைப்பட்டாவது, கண்டும் காணுமலுமாவ திருக்கும்; சுவாசம் தளர்ந்திருக்கும்; நாடி நடை க்ஷீணித்திருக்கும்; ஜீரண சக்தியற்று ஆகார வெறுப்புண்டாகும்; சீமைச் சுண்ணும்பு, செங்கற்பொடி, சாம்பல், கரி இவைகளின்பேரில் இச்சையுண்டாகும்; இரைப்பைப் புண்பட்டு இரத்த வாந்தியும், வாய் நாற்றமு மேற்படும்; முகம் ஊதி, கண் குழிவிழுந்து, கண்ணிரப்பைகள் வீங்கி, வெள்ளைவிழி வித்தியாசமாகக் காணப்படும்; கண்ணைச் சுற்றிலும், கருவளையம் ஏற்பட்டு மிருக்கும்; உதடுகள் வெளுத்திருக்கும்; கணுக்கால் வீக்கம் கண்டதைப்போல் பெருத்துத் தெரியும்; கைகள் சுருக்கம் கண்டு, நகங்கள் மிருதுவாகிவிடும்; அடிக்கடி மார் துடிப்பும், அரையின் கீழ் பாகங்கள் வீக்கமு மேற்பட்டு, ஒரு குறித்த நேரத்தில் நடுக்கமும், தலைவலியு முண்டாகும்.

முட்டை, பால், நெய், மாமிச சத்துக்கள் (Soup) முதலிய பலகாரியான ஆகாரங்களைக் கொடுப்பதாலும், கடல் ஸ்நானம், குளிர்ந்த நீர் ஸ்நானம், திறந்தவெளி வியாயமங்கள் (Exercises) முதலியவைகளைச் செய்வதினாலும் பயனுண்டாகும்.

### சிகிச்சை

(1) திரிபுவனச் செந்தூரம்; சித்தாதி லேகியம்; மகா வில்வாதி லேகியம்; மண்டூரச் செந்தூரம்; ராஜசிந்தாதி லேகியம்; அகஸ்தியர் குழம்பு; ராஜ அமிர்த சஞ்சீவி லேகியம்; அசுவகெந்திச் சூரணம்; முதலியவைகளைக் கொடுத்து, குமரி சஞ்சீவித் தைலம்; ராஜாங்கக் கொம்பரக்குத் தைலம் முதலியவைகளால் ஸ்நானம் செய்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(2) டிஞ்சர் பெர்ரீ பெர்குளோரைட் (Tincture Ferri Perchloride) டிராம் 2
ஸ்பிரிட் ஈதர் (Spirit Aether) ,, 2
டிஞ்சர் குவாஷியா (Tincture Quassiae) ,, 2
* டிஞ்சர் நக்ஸ் வாமிகா (Tincture Nux Vamica) ,, 2

ஒன்று சேர்த்து வைத்துக்கொண்டு காலை மாலை ஆகாரத்திற்குப் பின் 2-அவுன்ஸ் தண்ணீரில் ஒரு தேக்கரண்டி மருந்து சேர்த்துக் கொடுத்து வரலாம்.

திரளாத பெண்:—

திரளாத பெண்களைப் பூப்பிலிகளென்பர். மேலும், பரிபக்குவ மடையும் வயதில் ருதுவாகாததினால் தாமத ருது வென்றும் சொல்லப்படும். பெண்களுக்கு 16-வயதே ருதுவாகும் பருவமா யிருந்தாலும், நம் உஷ்ணப் பிரதேசத்தில் 10, 12-வயதில் ருதுவாகி விடுகிறார்கள். பெண்கள் 30-வயது வரை ருதுவாகாம லிருப்பதை (1) போதிய வயதடைந்தும், வெளியுருப்புகளெல்லாம் தக்கவிதமாய் மாறாத லடைந்தும், ருது வாகாதிருத்தல் (Emansio Mensium); (2) முதல் ருது கண்டு எக்காரணத்தினாலாவது மறு ருது காணாதிருத்தல் (Suppressio Mensium); (3) போதிய பருவமடைந்தும், சூதகம் சுரந்தும், சூதகம் வெளிப்பட முடியாமல் யோனிப் படலத்தில் (Hymen) துளைகளில்லா திருத்தல் (2-ம் பக்கம் பார்க்கவும்); அல்லது, கருப்பையிலுண்டாகும் கட்டி, புண் முதலியவைகளால், கருப்பையின் வாய் அடைப்பட்டு சூதகம் வெளிப்படா திருத்தல் (Retentio Mensium); என 3-பிரிவாகப் பிரிக்கலாம். முதல் இரண்டையும் மருந்து பிரயோகத்தால் சொஸ்தம் செய்யலாம். ஏனையதை சஸ்திர சிகிச்சையினால்மட்டும் பயனுண்டாகச் செய்ய முடியும்.

பொதுவாகக் கருப்பையில் அளவுக்கதிகமான குளிர்ச்சியோ, உஷ்ணமோ அதிகரிப்பதினாலாகிலும்; அடிக்கடி விழித்திருத்தல், சிறு வயதிலேயே கஷ்டமான உழைப்பு, சத்தில்லாத ஆகாரம், அநேக சமயங்களில் பசியுடனிருக்க நேருதல், இரத்தம் வாந்தியாகவாவது; மூக்கினாலாவது வெளிப்பட்டு விழுதல் முதலிய காரணங்களினாலாவது; க்ஷயரோகம், மலச்சிக்கல், நாள்பட்ட வயிற்றோட்டம், சூதகப்பாண்டு முதலிய ரோகங்களினாலாவது; 30-வயது வரையில் ருதுவாகாம லிருக்கலாம். ருதுவாகாத பெண்களுக்கு, ஆடவரிடத்தில் வெறுப்பும், சோம்பலும் உண்டாகி உடல் பெருத்து மதத்திருக்கும்.

தக்க வயதடைந்தும் சூதகம் வெளிப்படாமல் அடிவயிற்று வலி, தலையில் ஏதோ நிறைந்திருப்பதைப்போன்ற பாரம், மூக்கிலிருந்து அடிக்கடி இரத்தம் வடிதல், மார் துடிப்பு, குறுமூச்சு, முழங்காலில் வீக்கம், நெஞ்சுக்குழி வலி, முதுகு, தொடையின் உட்புறம் வலி முதலிய கோளாறுகளேற்பட்டால், இயற்கையாகச் சூதகம் வெளிப்படப் பிரயத்தனப்படுவதற்கு அடையாள

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

மாகுமாதலால், இதன் கீழ் குறித்திருக்கும் சிகிச்சை முறைகள் பயனுடையதாக விருக்கும்.

பருவவயதையடைந்தும், ருதுவாகாததினுல் திரேகபிரக்கிருதியில் யாதொரு மாறுதலும், கோளாறுகளு மேற்படாதிருப்பின், அவர்களுக்கு காரமான ருதுவர்த்தனக்காரிகளை (Emmenagogues)க் கொண்டு ருதுவாகச் செய்யப்பிரயத்தனப்படுவது, ஒரு பலனையுமளிக்காமல் விபத்தையே உண்டு பண்ணலாம்.

வயதுவந்தும் ருதுவாகாமலிருக்கும் பெண்களுக்குஆரம்பத்திலேயே சிகிச்சை செய்யவேண்டும். இரத்த விருத்தியை தரும்படியான ஆகாரங்களைக் கொடுத்து, எப்போதும் திரேகத்தை விஷேமாக, பாதங்களையும் அடிவயிற்றையும் உஷ்ணமாக வைத்திருக்கவேண்டும். தாங்கும்படியான (50, 60-டிகிரி உஷ்ணமுள்ள) சுடுதண்ணீரில் ஸ்நானம் செய்யவேண்டும். ஒரு பெரிய தொட்டியில் சுடுதண்ணீரைவிட்டு அதில் தினமானம் 10, 15-நிமிஷநேரம் உட்காரச் செய்யலாம்.

### சிகிச்சை

(1) * அகஸ்தியர் குழம்பு; அயச்செந்தூரம்; அயக்காந்தசெந்தூரம்; இவற்றைக் கொடுத்து இரத்த விருத்தி யுண்டுபண்ண பின்பு, 5-கிரைன்ஸ் மூசாம்பாத்தைப் பாலில் கரைத்துக் காலை மாலை கொடுத்து வரலாம்.

(2)

| | | |
|---|---|---|
| டிஞ்சர் பெர்ரீ பெர் குளோரைட் (Tincture Ferri Perchloride) | துளி | 15 |
| டிஞ்சர் ஆலோஸ் (Tiucture Aloes) | ,, | 15 |
| † லைக்கர் ஸ்டிரிக்னைன் ஐட்ரோகுளோரைட் (Liquor Strychnine Hydrochloride) | துளி | 8 |
| ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) | ,, | 30 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை, ஆகாரத்திற்குப் பின் ஒரு அவுன்ஸ் வீதம் நீடித்துக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இதனுல் வயிற்று வலி யேற்பட்டால் மருந்தை நிறுத்திக் கொள்ளவும்.

நிதம்பச் சூலை:—

அநேகமாக இவ்வியாதி பிள்ளை பெற்றவர்களுக்கு மட்டுமே தாக்கக்கூடியதாகவிருக்கிறது. இது கருப்பையின் வாயில் முளைப்போலுண்டாகி, பிதுங்கி, யோனிப்பாதை வரையில் வளர்ந்து. சம்போகத்திற்கு இடைஞ்சலாகவிருக்கும். நடக்கும்போதும், உட்காரும்போதும் அம்முளை யசைக்கப்படுவதால், தாங்கமுடியாத கூச்சமுண்டாகி, தன்னை யறியாமலே சிறுநீரிறங்கிவிடும்; சதாகாலம், அம்முளையிலிருந்து, நீர் கசிந்துகொண்டே

* செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

† விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

யிருக்கும்; இடுப்பு, அரை, முள்ளந்தண்டு, இவைகளில் வலியுண்டாகும்; இதனால் திரேகமிளைத்து வெளுத்திருக்கும்.

சிகிச்சை

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | 50 | திப்பிலி | ரூபாயெடை | ½ |
| இந்துப்பு | ,, | ½ | கொடிவேலி | ,, | ½ |
| தேவதாரு | ,, | ½ | சிவதைவேர் | ,, | ½ |
| நெல்லிவற்றல் | ,, | ½ | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 48 |
| தான்றிக்காய் | ,, | ½ | வெள்ளாட்டுப்பால் | ,, | 48 |
| கடுகு | ,, | ½ | கொடிக்கள்ளிப்பால் | ,, | 12 |

முதலில் வெள்ளைப்பூண்டை 10-டம்ளர் தண்ணீரில் போட்டு, நாலி லொன்றாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் இதர சரக்குகளை யரைத்து, அந்தக்கஷாயத்தில் கலக்கி, எண்ணெயையும், பால்களையும், சேர்த்துக் காய்ச்சி வடித்து, காலையில் மட்டும் ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம். (பத்தியம்)

(2) கலிங்காதி எண்ணெய்; கும்மட்டிக்காய் குழம்பு; ருத்திர செந்தூரம் இவைகளைக் கொடுத்து வரலாம் செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

## பாண்டு—Anaemia

இரத்தத்திலுள்ள சிவந்த இரத்தாணுக்கள் குறைந்து, இரத்தம் நீற்றுப்போவதால் இந்த இரத்தக் குறைவுரோகம் சம்பவிக்கிறது. பாண்டு ரோகத்திற்கும், ரூதகப்பாண்டு ரோகத்திற்கும் வித்தியாசமுண்டு.

முகம், கண்ணிரைப்பைகள், நாக்கு, உதடு, பல்லீறுகள் இவைகள் நிறமாறி வெளுத்திருக்கும்; அரையின்கீழ் அவையவங்கள் வீக்கம் கண்டிருக்கும்; நாடி நடை க்ஷீணித்து மெலிந்து நடக்கும்; பசிமந்தம், அசதி சோம்பல், மார்துடிப்பு, முதலியவைகளேற்படும்; சர்மம் வரண்டு, தோலுரிந்ததைப் போலிருக்கும்.

சிகிச்சை

(1) திரிபுவன செந்தூரம்; அயக்காந்த செந்தூரம் இவைகள் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(2)

| | | |
|---|---|---|
| கொய்னைன சல்பஸ் (Quinine Sulphus) | டிராம் | 1½ |
| பெர்ரம் ரெட்டாக்டம் (Ferrum Redactum) | ,, | 1 |
| * எக்ஸ்டிராக்ட் நக்ஸ் வாமிகா (Extract Nux Vamica) | கிரைன்ஸ் | 8 |
| * ஆஸிட் ஆர்சனியோசம் (Acid Arseniosum) | ,, | 1 |
| எக்ஸ்டிராக்ட் கலோசிந் கோ (Extract Colocynth Co) | ,, | 10 |
| போடோபிலின் (Podaphyllin) | ,, | 2 |

ஒன்று சேர்த்து 60-மாத்திரைகளாகப் பிரித்து உருட்டிக்கொண்டு நாள் ஒன்றுக்கு மூன்று தடவை ஆகாரத்திற்கு பின் ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

---

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்க வேண்டும்.

### பெரும்பாட்டில் காணும் தாகம்:—

பெரும்பாட்டைப்பற்றி 349-ம் பக்கம் இரத்தப்பெருக்கு என்ற தலைப்பின் கீழ் கூறப்பட்டிருக்கிறது. பெரும்பாடு ரோகத்தில் சூதகம் பிரவாகமாகக் கழியுமானால், தாங்கமுடியாத நாவரட்சியும், மூர்ச்சையு மேற்படும்.

சிகிச்சை

(1) அத்திக்கொழுந்துரூபாயெடை 3 அரசங்கொழுந்து ரூபாயெடை 3
ஆலங்கொழுந்து „ 3 மாந்தளிர் „ 3

ஒன்று சேர்த்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தைக் கொடுத்து வரலாம்.

(2) மகாதாளிச பத்திரிச் சூரணம் கொடுக்கலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(3) ஆஸிட் பாஸ்பரிக் டில் (Acid Phosphoric Dil) டிராம் 2
பார்லி அரிசிக்கஞ்சிநீர் (Barley Water) அவுன்ஸ் 20

ஒன்று சேர்த்து, 2, 3-அவுன்ஸ் கொடுக்கலாம்.

### விகாரசூதகம்—Vicarious Menstruation

மாதாந்திர தீண்டல் காலங்களில் கிரமமாக யோனிவழியாக வெளிப்பட வேண்டிய சூதகமானது; ரோகத்தினால், நாசியின் வழியாகவும் ஆசனத்தின்வழியாகவும், வாய், தொப்புள், காது முதலிய துளையுள்ள பாகங்களின் வழியாகவும் கழிந்து விடும். புண் புரையுள்ளோருக்கு அந்தப் புண்ணுகளின் வழியாகவும், சிலருக்குக் கண்வழியாகவும், சூதகம் வெளிப்படும். நுரையீரல், மார்பு, வயிறு, கை, கால் முதலிய அவையவங்களில் இரத்தப்பொருக்கேற்பட்டுச், சமசரீரத்திலிருந்தும் சற்றுவீங்கி வலியை யுண்டுபண்ணும். சிலருக்குச் சூதகமானது வெள்ளைப் பிரமேகத்தில் வெள்ளைப் பதார்த்தத்தைப்போல நிறம்மாறி அதிக அளவில் வடியும். இதையே விகார சூதக ரோக மென்று சொல்லப்படுகிறது.

விகார சூதக ரோகத்திற்கு ஆரம்பத்திலேயே சிகிச்சைகள் தேடாவிடில் தீங்கே விளையலாம். உபசாந்தியாக ஒரு பெரிய தொட்டியில் சுடுதண்ணீரைவிட்டு, நாள்தோறும் காலை மாலை அதில் குறைந்தது 10, 15-நிமிஷமாகிலும் உட்கார்ந்திருக்கச் செய்யவேண்டும். அவ்வாறே பாதங்களையும் வெந்நீரில் வைத்திருக்கவேண்டும். வியர்வையுண்டாகும்படியான தேகாப்பியாசங்கள் (Exercises) செய்யும்படியாக உத்திரவிடவேண்டும். திரேக புஷ்டியைத் தரும்படியான ஆகாரங்களையும், சூதகபந்தத்திற்குச் சொல்லிய அவுஷதங்களையும் கொடுத்து வரலாம்.

சிகிச்சை

(1) ஸ்ரீதேவி எண்ணெய் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

# ஸ்திரீ பால சிகிச்சை

## ஐந்தாம் பாகம்

---

### கர்ப்ப; பிரசவ ரோகங்கள்

## DISORDERS AND TREATMENTS IN PREGNANCY AND AFTER LABOUR

**கர்ப்பச்சன்னி:—**

358-வது பக்கம் பார்க்கவும்.

**கர்ப்பவதிகள் அரைவலி:—**

கர்ப்பவதிகள் முதுகுவலி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**கர்ப்பவதிகள் ஆகாரவெறுப்பு:—**

கர்ப்பவதிகள் பசிமந்த மென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**கர்ப்பவதிகள் இடுப்புவலி:—**

கர்ப்பவதிகள் முதுகுவலி யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

**கர்ப்பவதிகள் இரத்தபேதி—Dysentery in Pregnancy**

இதைக் கர்ப்பக்கிராணி என்று சொல்லப்படும். திரேகம் காங்கையடைதல், அதிக பசியுடனிருத்தல், அதிக காரமான பதார்த்தங்களைப் புசித்தல், வெயிலிலலைதல் முதலிய காரணங்களினால் இதுயேற்படலாம்.

கர்ப்பக்கிராணி அநேகமாய் எல்லோருக்கு முண்டாவதில்லை. இது பிரசவத்திற்குப்பின் யேற்படுமோனால், எந்த மருந்துக்கும் வசப்படாது. இதில் சாதாரண வயிற்றோட்டத்திற்குண்டான குணங்களே யிருக்குமானாலும், மலத்துடன் இரத்தம் அதிகமாய்க் கழியும். கர்ப்பக்கிராணி சிகிச்சைக்கு வசப்படாவிட்டால், கண்டிப்பாய் கருவழிவேர்ப்படும்.

**சிகிச்சை**

(1)

| | | | |
|---|---|---|---|
| சிற்றாமணக்கெண்ணெய் | தேக்கரண்டி 8 | எலுமிச்சம்பழச்சாறு | தேக்கரண்டி 2 |
| | | சர்க்கரை | ,, 1 |

ஒன்று சேர்த்துக் காலை நேரங்களில் மட்டும் கொடுத்து வரலாம்.

(2)

| | | | |
|---|---|---|---|
| சுக்கு | ரூபாயெடை 1 | மாம்பருப்பு | ரூபாயெடை 1 |
| திப்பிலி | ,, 1 | கறிவேப்பிலையீர்க்கு | ,, 1 |
| சீரகம் | ,, 1 | சுண்டைவற்றல் | ,, 1 |
| ஓமம் | ,, 1 | கருவேலங்கொழுந்து | ,, 1 |
| கழற்சிப்பருப்பு | ,, 1 | | |

ஒன்று சேர்த்து, இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்துக்கொண்டு, காலை மாலை ஒரு திரிகடிபிரமாணம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | டோவர்ஸ் பவுடர் (Dover's Powder) | டிராம் | ½ |
| | சோடியம் கார்போனேட் (Sodium Carbonate) | ,, | ½ |

ஒன்று சேர்த்து, 6-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு காலை மாலை ஒரு பாகம் வீதம் தேனில் குழப்பிக் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் இரத்த வாந்தி—Puerperal Haematemesis

கர்ப்ப ஸ்திரீகளுக்கு நான்காம் மாதம் கடையில் இரத்த நாளங்கள் இரத்தப் பெருக் கதிகரிப்பதினால் இருமலும், சில சமயம் இருமிய பின் இரத்தமும் விழுவதுண்டு. அநேகமாக எல்லா கர்ப்ப ஸ்திரீகளுக்கும் இது உண்டாவதில்லை.

பிரதமத்தில் ரோக ஸ்திரீயை மல்லாக்காய்ப் படுக்க வைத்து, ஈரத் துணியை அடிவயிற்றில் போட்டு வைக்கலாம்.

### சிகிச்சை

(1) பசும்பாலுடன் ஐஸைக் கலந்து கொடுக்கலாம்.

(2) மாதுளம்பழச்சாறு அவுன்ஸ்-½, தேன் அவுன்ஸ்-½ ஒன்று சேர்த்துக் கொடுக்கலாம்.

(3) ஆரஞ்சுப்பழச்சாறு 2, 3-அவுன்ஸ் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | ஆஸிட் டானிக் (Acid Tannic) | கிரைன்ஸ் | 20 |
| | கிளிசரின் (Glycerine) | டிராம் | ½ |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கொடுக்கலாம். தேவையானால் இதே அளவில் 2, 3-தடவை கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் இருமல்—Cough in Pregnancy

கர்ப்பவதிகளுக்கு, ஐந்தா மாதத்திற்குமேல், இருதய இரத்த நாளங்களில் இரத்தப் பெருக்கேற்பட்டு அதினால், சுவா சாசயங்களில் உஷ்ணமுண்டாகி இருமலேற்படலாம். இக் காலங்களிலுண்டாகு மிருமலினால், இடுப்புக்குங் கீழ் பாகங்களில வலி, இரத்தவாந்தி, கருப்பையிலிருந்து இரத்தக கசிவு, நித்திரையின்மை, மயக்கம் முதலியவைகளு முண்டாகும்.

அதிகமான இருமலினால், சுவாச உருப்புகளும், கருப்பை முதலியவைகளும் அதிர்ச்சி காண்பதினாலும், கருப்பை சுருங்குவதாலும், அல்லது, மூத்திரப்பை கருப்பையை அழுத்துவதாலும், கருவுசுருக் கெடுதல் நேரலாமாதலால் பிரதமத்திலேயே சிகிச்சை செய்யவேண்டும். ஆரம்பத்தில் சிற்றாமணக் கெண்ணெய், நிலவாகைக் கஷாயம், சிரகோரிஸ் பவுடர் (Gregoris Powder) முதலிய இலகு விரேசனகாரிகளால் குடலை சுத்தி செய்யவேண்டும்.

சிகிச்சை

(1) சுடவைத்த பசும் பாலில் மஞ்சள் தூள் போட்டுக் கொடுத்து வரலாம்.

(2) இஞ்சிச்சாறு அவுன்ஸ் ½ தேன் அவுன்ஸ் ¼
மாதுளம்பழச்சாறு ,, ½

ஒன்று சேர்த்துக் காலை மாலை கொடுத்து வரலாம்.

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தூதுவேளைவேர் | ரூபாயெடை | 1 | கோஷ்டம் | ரூபாயெடை | 1 |
| கண்டங்கத்திரிவேர் | ,, | 1 | அதிமதுரம் | ,, | 1 |
| வட்டத்திருப்பிவேர் | ,, | 1 | சிற்றரத்தை | ,, | 1 |
| நன்னாரிவேர் | ,, | 1 | அக்ரகாரம் | ,, | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 1 | ஏலம் | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | கிராம்பு | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | சாதிக்காய் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | சிறுநாகப்பூ | ,, | 1 |
| கடுக்காய் | ,, | 1 | இந்துப்பு | ,, | 1 |
| நெல்லிவற்றல் | ,, | 1 | சூடைநீர் | ,, | 1 |
| தான்றிக்காய் | ,, | 1 | வெங்காயம் | ,, | 1 |
| ஓமம் | ,, | 1 | மாசிக்காய் | ,, | 1 |
| கருஞ்சீரகம் | ,, | 1 | தேற்றாவிரை | ,, | 1 |

ஒன்று சேர்த்திடித்துத் தூள்செய்து, ஒரு புது ஓட்டில் போட்டு 9-தரம் வறுத்துச் சூரணித்துக் காலை மாலை ஒரு திரிகடி பிரமாணம் பசு நெய்யிலாவது, தேனிலாவது குழப்பிக் கொடுத்து வரலாம்.

(4)

| | | | |
|---|---|---|---|
| டிஞ்சர் காம்பர் கோ (Tiucture Camphor Co) | டிராம் | 1 |
| ஆஸிட் சிட்ரிக் (Acid Citric) | கிரைன்ஸ் | 20 |
| கிளிசரின் (Glycerine) | டிராம் | 1 |

ஒன்று சேர்த்துக் காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் இழுப்பு:—

இதைப்பற்றி "பிரசவ இழுப்பு" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் எச்சில் பெருக்கு—Puerperal Ptyalism

கருப்பற்றிய முதல் மாதத்திலேயே, கருதரித்திருப்பதான அறிகுறியாக எச்சில் பெருக்கும், காலை வாந்தியுமுண்டாகும். எச்சில் பெருக்கினால் அரோசிகமும், வாய் மழமழப்பு மேற்படும்; சிலருக்குப் பிரசவம் வரையில் எச்சல் பெருக்கிருப்பதுண்டு.

சிகிச்சை

(1) வறுத்த காப்பிக்கொட்டையை மென்றுகொண்டிருக்கலாம்.

(2) படிகாரத்தைக் கரைத்த தண்ணீரால் வாய்வரசிக் கொப்புளிக்கலாம்.

(3) டிஞ்சர் (Tincture Myrrh) துளி 15
தண்ணீர் அவுன்ஸ் 2

ஒன்று சேர்த்து வாய் உரசிக் கொப்புளிக்கலாம்.

## கர்ப்பவதிகள் கல்லடைப்பு—Calculi in Pregnancy

மூத்திரக் குண்டிக்காயில் (Kidney) கற்கள் சேர்ந்து, மூத்திரம் பெய்யும் போது மூத்திரத்தாரை எரிவும், வலியுமுண்டாகும். இடுப்பு, அடிவயிறு, மூத்திரப்பை, அரை இவைகளில் தாங்கமுடியாதவலி யேற்படும். சில சமயம் மூத்திரத்துடன் இரத்தம் கலந்திறங்கும். மூத்திரம் வரும் சமயங்களில் கை கால் குளிர்ந்துவிடும். மூத்திரம் பெய்ய உணர்ச்சியுண்டாகி, மூத்திரம் பாதி பெய்யும்போதே அடைத்துக் கொள்ளும்.

### சிகிச்சை

(1) மாதுளம்பழவிரையைப் பசும்பாலிலரைத்துக் கலக்கி காலை மாலை கொடுத்து வரலாம்.

(2) சிகப்பு நெருஞ்சில் விரையை முலைப்பாலி லரைத்துக் கலக்கி காலை மாலை கொடுத்து வரலாம்.

(3) பொட்டாஷியம் கார்போனேட் (Potassium Carbonate) டிராம் 1
ஆஸிட் சிட்ரிக் (Acid Citric) ,, 7
ஆக்குவா டிஸ்டில் (Aqua Distilled) அவுன்ஸ் 10

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்றுதடவை, 5-தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் காலை வாந்தி—Morning Sickness

இதை மசக்கை; மசக்கை வாந்தி என்று சொல்லுவர். கருதரித்த இரண்டாம் மாதத் துவக்கத்தில், கருதரித்திருப்பதை மெய்ப்பிக்க காலை வாந்தியும், அரோசிகமும், தலைச்சுற்றும், சோம்பலும் ஏற்பட்டு 2, 3-வாரங்களுக்குப் பின் தானாகவே நின்றுவிடும். சிலருக்குப் பிரசவம்வரையி லிருப்பதுண்டு. மசக்கை வாந்தி பிந்திய மாதங்களிலேற்பட்டாலும், சாயந்திரங்களிலுண்டானாலும், கருப்பையின் இறக்கமே காரணமா யிருக்குமாதலால் சிகிச்சை செய்வது உத்தமமாகும்.

### சிகிச்சை

(1) காய்ச்சிய பசும்பால் அவுன்ஸ் 6 சுண்ணாம்பு தெளிவுநீர் அவுன்ஸ் $\frac{1}{8}$

ஒன்று சேர்த்து, தூங்கி விழித்தவுடன் வெறும் வயிற்றில் கொடுத்து வரலாம்.

(2) * பாவனக் கடுக்காய்; இஞ்சி சர்பத்; முதலியவைகளை ஆகாரத்திற்குப் பின் கொடுத்து வரலாம்.

* செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | பெப்சின் (Pepsin) | கிரைன்ஸ் | 10 |
| | இன்பியூஷன் கரியோபில்லம் (Infusion Caryopillum) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் காலைநேரத்தில் மட்டும் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | இங்குளுவின் (Ingluvin) | கிரைன்ஸ் | 10 |
| | பசும்பால் | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்துக் காலையில் மட்டும் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் கால்வீக்கம்—Puerperal Oedema of Legs

கர்ப்பம் தரித்த ஏழு மாதங்களுக்குப் பின்னரே இந்த வியாதி யுண்டாகலாம். வயிறானது பெருத்து, அரையின் கீழ்பாகங்களுக்குச் செல்லும், இரத்தக் குழல்களை அழுத்தி, இரத்தவோட்டத்தை தடை செய்வதால், மர்ம ஸ்தான வெளிபாகம், தொடை, முழங்கால் முதலியவைகளில் வீக்கமுண்டாகும். இந்த வீக்கங்கள் பிரசவத்திற்குப் பின் மறைந்துவிடுமாதலால் பொதுவாக யாதொரு சிகிச்சையும் செய்யத் தேவையில்லை.

மூத்திரத்தில் அதிகப்படியான உப்பு சேர்த்து, வீக்கங்களுண்டாகி யிருக்குமானாலும்; இந்த வீக்கத்துடன், நீரடைப்பு, அரையின் கீழ்பாகங்களைத் தவிர்த்து உடலில் இதரபாகங்களில் வீக்கம் காணுதல்; கண் தெரித்து விழுந்துபோவதைப் போன்ற வலி, நெற்றிவலி, காதிரைச்சல், முதலியவைகளு மிருக்குமானாலும்; பிரசவத்தில் உபத்திரவமாவது, பிரசவத்திற்குப் பின் விபத்தாவது ஏற்படலாம். நீரடைப்பினால் வீக்கம் கண்டிருப்பதாகத் தெரியுமானால், "கர்ப்பவதிகள் நீரடைப்பு" என்ற தலைப்பின் கீழுள்ள சிகிச்சைகளைச் செய்யவும். முதலில் இலகு விரேசன காரிகளைக் கொடுத்து மல சுத்திச் செய்யவேண்டும்.

### சிகிச்சை

(1) காடியை வீக்கமுள்ள விடங்களில் தடவி வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | நீர்முள்ளி | ரூபாயெடை 100 | கொவ்வையிலை | ரூபாயெடை | 100 |
| | ஆலஞ்சருகு | ,, 100 | வீழியிலை | ,, | 100 |
| | காக்கணம் | ,, 100 | | | |

ஒன்று சேர்த்துத்துண்டித்து, 100-டம்ளர் தண்ணீர் விட்டு, 25-டம்ளராகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தை, வீக்கமுள்ள விடங்களில் ஊற்றி பிடித்து விடலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (3) | சுரைத்தண்டு | ரூபாயெடை 5 | நாயுருவி | ரூபாயெடை | 5 |
| | நீர்முள்ளி | ,, 5 | பிரமி | ,, | 5 |
| | கையாந்தகரை | ,, 5 | கோரைக்கிழங்கு | ,, | 5 |
| | நீற்றுப்பூசணித்தண்டு | ,, 5 | சுக்கு | ,, | $1\frac{1}{2}$ |

ஒன்றுசேர்த்து 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை $1\frac{1}{2}$, 2-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(4) ஜின் சாராயம் (Gin) அவுன்ஸ் ½
தண்ணீர் ,, 1

ஒன்று சேர்த்துக் காலை மாலை கொடுத்து வரலாம்.

(5) கிரீம் ஆப் டார்டார் (Cream of Tartar) அவுன்ஸ் 1
சர்க்கரை (Sugar) ,, ½
* எலுமிச்சம் பழத்தோல் கஷாயம் ,, 3

ஒன்று சேர்த்து, நன்றாகக் குலுக்கிக்கொண்டு, 4-மணி நேரத்திற்கொரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(6) டிஞ்சர் பெர்ரீ பெர்குளோரைட் (Tincture Ferri Perchloride) டிராம் 1
† டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) ,, 1
தண்ணீர் ,, 4

ஒன்று சேர்த்து வீக்கமுள்ள விடங்களில் மேல்பிரயோகமாகத் தடவலாம்.

## கர்ப்பவதிகள் குரண்டல் வாதம்—Puerperal Cramps

கர்ப்பவதிகளுக்கு 4-வது மாதத்திற்குப்பின் கர்ப்பாசயம் பொருத்து விடுவதால், அடிவயிற்று நரம்புகள் பிகுத்தப்பட்டு, அடிவயிறு முழங்கால், குதிக்கால் முதலியவைகளில் பலவிதமான வலியும், மறமறப்பு முண்டாகி, சுண்டி இழுத்துப் பிடித்துக்கொள்ளும்; ஈரத்தில் நடமாடினால் இவ்வலியதிகரிக்கும். பிரசவமாகும்வரை இவ்வலி இருக்கத்தான் செய்யும். இவ்வியாதியில் கால்களை வெப்பமாக வைத்திருந்தாலும், கம்பளியினால், கால்களைப் பொதிந்து வைத்திருந்தாலும் உபத்திரவம் மட்டுப்படும்.

### சிகிச்சை

(1) இலுப்பை எண்ணெயை வலி பிடிப்புள்ள விடங்களில் சூடுபிறக்கத் தேய்த்துவரலாம்.

(2) டர்பென்டைன் (Turpentine); அல்லது, ஓலியம் காம்பர் (Oleum Camphor) இவற்றி லொன்றால் வலி பிடிப்புள்ள விடங்களில் சூடு பிறக்கத் தேய்த்து வரலாம்.

## கர்ப்பவதிகள் சூலை எரிவு:—

கர்ப்பவதிகள் நெஞ்செரிவென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் கை காலெரிவு:—

கர்ப்பவதிகளுக்கு இது சாதாரணமாய் 5ம் மாதத் தொடக்கமாய் யாரம்பிப்பதுண்டு; இதற்கு முதலில் இலகு விரேசனகாரிகளைக் கொடுத்து மல சுத்தி

---

* 3 அவுன்ஸ் சுடுதண்ணீரில் ஒரு எலுமிச்சங்காயின் தோலை குறுவ அரிந்து போட்டு ½ மணி நேரம் ஊறவைத்து உபயோகிக்கவும்.

† விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

செய்யவேண்டும்; இரவு படுக்கைக்குப் போகுமுன் குறைந்தது கால்மணி நேரமாகிலும் சுடு தண்ணீரில் கைகால்களை வைத்திருக்கச் செய்தால் எரிவு மட்டுப்படுமென்றாலும்; இது பிரசவம் வரையில் நீடித்திருக்கும்.

சிகிச்சை

(1) சங்கன்வேர் ரூபாயெடை அரைக்கால், 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயம் அவுன்ஸ் 2-ல் கால் ரூபாயெடை பசுவெண்ணெய்யைக் கரைத்துக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) பல்விஸ் ரூபார்ப் கோ (Pulvis Rhubarb Co) | டிராம் | 1 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் கொடுத்தால் 2, 3-தடவை பேதியாகி எரிச்சல் மட்டுப் படும்.

## கர்ப்பவதிகள் சந்து வலி:—

கர்ப்பவதிகள் முதுகு வலியென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் சுரம்—Puerperal Fever

மலச்சிக்கல், குளிர் முதலிய காரணங்களினால் கர்ப்ப ஸ்திரீகளுக்கு எந்த மாதத்திலாவது சுரமுண்டாகலாம். சுரம் கடுமையாக அடிக்க வாரம்பித்தால் கருவழிவு யேற்படலாம். கொய்னேன் (Quinine) என்ற காச்சற்றாளுக்கு ருதுவர்த்தனகாரி குணமுண்டாகையால், கருப்பற்றி யிருக்கும் போது கொய்னேன் சேர்ந்த மருந்துகளைக் கொடுக்கக்கூடாது.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) சிற்றாமுட்டிவேர் | ரூபாயெடை | 1 | சுக்கு | ரூபாயெடை | 1 |
| பேராமுட்டிவேர் | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| சீந்தில்தண்டு | ,, | 1 | கிலவேம்பு | ,, | 1 |

ஒன்று சேர்த்து, 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை 2-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) பிராந்தி (Brandy) | அவுன்ஸ் | ½ |
| தண்ணீர் | ,, | ½ |

ஒன்று சேர்த்துக் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (3) டிஞ்சர் பெர்ரீ பெர்குளோரைட் (Tincture Ferri Perchloride) | துளி | 30 |
| * லைக்கர் ஆர்சனிக்காலிஸ் (Liquor Arsenicalis) | ,, | 9 |
| சிரப் சிஞ்ஜிபர் (Syrup Zingiber) | டிராம் | 3 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து மலச்சிக்கலில்லாத சுரத்துக்கு, நாள் ஒன்றுக்கு 3-வேளைக் கொடுத்து வரலாம்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

மலச்சிக்கலினால் சுர மேற்பட்டால்:—

| | | | |
|---|---|---|---|
| (4) | காலோமல் (Calomel) | கிரைன்ஸ் | 4 |
| | சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 4 |

ஒன்று சேர்த்து இரவில் படுக்கைக்குப் போகுமுன் வாயில் கொட்டி விழுங்கும்படிச் செய்யலாம்.

ஜலதோஷத்தால் சுரமுண்டாயிருந்தால்:—

| | | | |
|---|---|---|---|
| (5) | அமோனியம் கார்போனஸ் (Ammonium Carbonas) | கிரைன்ஸ் | 10 |
| | டிஞ்சர் செனிகா (Tincture Senegae) | துளி | 30 |
| | டிஞ்சர் சின்கோனு கோ (Tincture Cinchonnae Co) | ,, | 40 |
| | டிஞ்சர் சில்லி (Tincture Scillae) | ,, | 10 |
| | வைனம் இப்பிக்காக் (Vinum Ipecac) | ,, | 25 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | ,, | 50 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்றுசேர்த்து 4-மணி நேரத்திற்கு 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் சூதக ஒழுக்கு—Menstrual Discharge in Pregnancy

கருதரித்த பின்னரும் சில ஸ்திரீகளுக்கு 3-ம் மாதத்திற்குமேல் சூதக ஒழுக்குக் காண்பதுண்டு. சிலருக்குப் பெரும்பாடுபோலு மேற்படும். இது இருதய பலயீனம், இருமல், மூத்திரப்பைப் புண், மலக்குடல் வீக்கம் முதலிய கோளாறுகளினாலாவது; கர்ப்பாயச இரத்த நாளங்களில் இரத்தப்பெருக்கதிகப்பட்டதினாலாவது உண்டாகலாம்.

சூதகப்பெருக்கு அதிக முண்டானால் கருவழிவு யேற்படும். இந்த சூதக ஒழுக்கினால் நாவரட்சி, மயக்கம் முதலியவைகளேற்படும்.

### உப சிகிச்சை

ரோக ஸ்திரீயை மல்லாக்காய்ப் படுக்க வைத்து, அடிவயிற்றிலும், கடிதடத்திலும் ஈரத்துணியைப் போட்டுவைக்கலாம். குளிர்ச்சியான பானங்களை அதிகமாய்க் கொடுத்து வரலாம்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | அதிமதுரம் | ரூபாயெடை | $\frac{1}{8}$ | நன்னாரிவேர் | ரூபாயெடை | $\frac{1}{8}$ |
| | நொய்தல்கிழங்கு | ,, | ,, | வெள்ளிலோத்திரம் | ,, | ,, |
| | சந்தனம் | ,, | ,, | | | |

ஒன்று சேர்த்துப் பச்சரிசி கழுவிய தண்ணீரில் அரைத்துக் கலக்கிக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | மாசக்காய் | ரூபாயெடை | $\frac{1}{4}$ | சந்தனம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| | அதிமதுரம் | ,, | $\frac{1}{4}$ | பற்பாடகம் | ,, | $\frac{1}{4}$ |

ஒன்று சேர்த்துப் பசும்பாலி லரைத்துக் கலக்கிக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | லைக்கர் மார்பைன் பிமிகொனுடிஸ் (Liquor Morphine Bime conatis) | துளி | 25 |
| | டிஞ்சர் டிஜிடாலிஸ் (Tincture Digitalis) | டிராம் | ½ |
| | டிஞ்சர் ஹமாமெலிடிஸ் (Tincture Hamamelidis) | துளி | 50 |
| | டிஞ்சர் ஐட்ராஸ்டிஸ் (Tincture Hydrastis) | டிராம் | 1 |
| | கிளிசரின் (Glycerine) | ,, | 1 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்றுசேர்த்து 4-மணி நேரத்திற்கு 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் சூதக ஒழுக்கிலுண்டாகும் தாகம்:—

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | அரசங்கொழுந்து ரூபாயெடை | 2 | மாந்தளிர் | ரூபாயெடை | 2 |
| | ஆலங்கொழுந்து ,, | 2 | அத்திக்கொழுந்து | ,, | 2 |

ஒன்று சேர்த்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 1, 2-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் தடிமன்:—

கர்ப்பவதிகள் ஜலதோஷமென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் தலைவலி—Puerperal Cephalalgia

கருதரித்த சில மாதங்களுக்குப் பின் சில ஸ்திரீகளுக்குத் தலைவலி யேற்படுவதுண்டு. சூதகம் தடைபட்டுப் போவதினால், மெல்லிய இரத்த நாளங்கள் அழலைக்கொண்டு விடுவதினாலாவது, மலச்சிக்கல், அஜீரணம், வெகுநேரம் பசியுடனிருத்தல், கடும் வெயில், மழை, பனி இவைகளின் காரணத்தினாலாவது; காப்பி, தேத்தண்ணீர் போன்ற உஷ்ணபானங்களை அருந்துவதினாலாவது இத் தலை நோயேற்படலாம்.

முகம் வெளுத்து சில்லென்றிருக்கும்; வெளிச்சம், சப்தம் இவைகளால் தலைவலி யதிகரிக்கும்; தலையிலும், பிடரியிலும் பாரமேற்றியதைப்போலிருக்கும்; பசி மந்தமுண்டாகும்.

### சிகிச்சை

(1) மிளகை முலைப்பால்விட் டரைத்துக் கொதிக்க வைத்து பற்று போடலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | அகிற்கட்டை ரூபாயெடை | ¼ | அபின் | ரூபாயெடை | ¼ |
| | சந்தனம் ,, | ¼ | சுக்கு | ,, | ¼ |
| | கஸ்தூரிமஞ்சள் ,, | ¼ | சாம்பிராணி | ,, | ¼ |

ஒன்று சேர்த்துத் தண்ணீர் விட்டரைத்துக் கொதிக்கவைத்துப் பற்று போடலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | பெனசெட்டின் (Phenacetin) | கிரைன்ஸ் | 5 |
| | காபீன் சிட்ரஸ் (Caffein Citras) | ,, | 3 |

ஒன்று சேர்த்து, எச்சில் கூட்டி விழுங்கி, கால்மணி நேரத்திற்குப்பின் சுடச்சுட காப்பிக் குடிக்கலாம்.

(4) கஜபுட் ஆயில் (Oil Cajuput); இயூகலிப்புடஸ் ஆயில் (Oil Euclyptus); டர்பென்டைன் (Turpentine) முதலிய தைலங்களை வலியுள்ள விடங்களில் தடவலாம்.

## கர்ப்பவதிகள் துவாலே:—

கர்ப்பவதிகள் சூதக ஒழுக்கென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் தூக்கமின்மை—Puerperal Insomnia

கர்ப்பிணிகளுக்குத் தூக்கமின்மை, முதல் மாதத்திலேயே ஆரம்பித்து பிரசவம் வரையிலிருக்கும். சிலருக்குக் கடைசி மாதங்களிலேற்படும்; மலச்சிக்கல், வெளிச்சம், சப்தம், இதர வியாதிக்கோளாறுகள் முதலியவைகளினால் தலைவலி யேற்படலாம்.

மலச்சிக்கலிருந்தால் இலகு விரேசனகாரிகளால் மலசுத்தி செய்யவேண்டும். நித்திரையை யுண்டுபண்ணும் பொருட்டு அபினையாவது, அபின் கலந்த இதர மருந்துகளையாவது கொடுக்கக்கூடாது. தேயிலை, காபி முதலிய உஷ்ண பானங்களினாலும் தூக்கம் யேற்படாது.

படுக்கைக்குப் போகுமுன், முகம், கழுத்து முதலியவைகளைச் சுடுதண்ணீரில் நனைத்துப் பிழிந்த துணியால் துவட்டிக்கொண்டு, திரேகாதியந்தமும் மெல்லிய துணியால் போர்த்திக்கொள்ளலாம்; இரவு ஆகாரத்தைக் குறைப்பதினாலும் தூக்கமுண்டாகும்.

## கர்ப்பவதிகள் நீரடைப்பு—Puerperal Anuria

கருதரித்த 5-வது மாதத்திற்கு பின்னர் வயிறு அதிகமாய் பெருத்து, மூத்திர தாரையை அழுத்திக்கொண்டிருப்பதினால் இம்மாதங்களில் அநேகமாய் எல்லோருக்கும் நீரடைப்புண்டாகலாம். மூத்திரம் வரும் சமயங்களில் சோம்பலினாலாவது, இதரக் காரணங்களினாலாவது இக்காலங்களில் அடக்கிக்கொண் டிருந்துவிட்டால், மூத்திரப்பையின் சுவாவப் பிரக்கிருதி கெட்டு, மூத்திரத்தை வெளியாக்காம லிருந்துவிடும்.

மூத்திரப்பையில் அதிகப்படியான நீர் சேர்ந்து, கருப்பையை நசுக்கு மாதலால், கெற்பத்திற்கே தீங்குண்டாகும். மேலும், நீரடைப் யேற்படுவதினால், அரையின் கீழ் பாகங்கள் (371-ம் பக்கம் பார்க்கவும்.) வீங்கி, பிரசவ சமயத்தில் கஷ்டத்தையும் விபத்தையு முண்டு பண்ணும்.

வெங்காரத்திற்கு ருதுவர்த்தனகாரிகுண மிருப்பதால், கர்ப்ப ஸ்திரீகளுக்குண்டாகும் நீர்கட்டு ரோகங்களில், நிதானமாகவே உபயோகிக்க வேண்டும்.

### உப சிகிச்சை

அடிக்கடி வெந்நீரில் ஸ்நானம் செய்யலாம். ஒரு பெரிய தொட்டியில் சுடு தண்ணீர் விட்டு அதில் $\frac{1}{2}$-மணி நேரம் உட்கார்ந்து ஆசன ஸ்நானம் (Hip

Bath) செய்து வரலாம். சுடு தண்ணீரில் ஸ்நானித்தவுடன், தேயிலைக் கஷாயம் (Tea), காப்பிக் கஷாயம், சுடு தண்ணீர், பேய்ப்புடோல் வேர் கஷாயம், பற்பாடகக் கஷாயம் இவற்றிலொன்றைச் சுடசுடவாகிலும்; பல்விஸ் இப்பிக்காக்கோ (Pulvis Ipecac Co) 10-கிரைன்ஸை ஒரு அவுன்ஸ் தண்ணீரில் கரைத்துக் கொடுத்தாகிலும்; உடலாதியந்தமும் போர்த்திக் கொண்டு சற்று நித்திரை செய்பலாம். வியர்வைக் கண்டு நித்திரைத் தெளிந்தவுடன் நீர் சாதாரணமா யிறங்கும்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | சுக்கு | ரூபாயெடை | ½ | குழப்பாலைவேர் | ரூபாயெடை | ½ |
| | மிளகு | ,, | ½ | பேய்ப்புடோல்வேர் | ,, | ½ |
| | திப்பிலி | ,, | ½ | பொன்னுங்காணிவேர் | ,, | ½ |
| | கடுக்காய் | ,, | ½ | கண்டங்கத்திரிவேர் | ,, | ½ |
| | தான்றிக்காய் | ,, | ½ | கோவைவேர் | ,, | ½ |
| | ஏலம் | ,, | ½ | குழப்பாலைச்சாறு | அவுன்ஸ் | 12 |
| | கிராம்பு | ,, | ½ | பொன்னுங்காணிச்சாறு | ,, | 12 |
| | அதிமதுரம் | ,, | ½ | பேய்ப்புடோல்சாறு | ,, | 12 |
| | ஓமம் | ,, | ½ | கோவையிலைச்சாறு | ,, | 12 |
| | சீரகம் | ,, | ½ | அறுகீரைச்சாறு | ,, | 12 |
| | சாதிக்காய் | ,, | ½ | கண்டங்கத்திரிச்சாறு | ,, | 12 |
| | | | | பசுநெய் | ,, | 12 |

பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்துக் காலை மாலை ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரலாம்.

(2) கோழிமுட்டையின் வெண் கருவையும், கடுக்காயையும் அரைத்து அடிவயிற்றில் பூசலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | பொட்டாஷியம் நைட்ரேட் (Potassium Nitrate) | டிராம் | ½ |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | ,, | 3 |
| | டிஞ்சர் ஐயோஸியாமஸ் (Tiucture Hyoscyamus) | ,, | 2 |
| | இன்பியூஷன் பக்கு (Infusion Buchu) | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

மூத்திரக்கட்டுடன் மலக்கட்டு மிருந்தால்:—

| | | | |
|---|---|---|---|
| (4) | எப்சம் சால்ட் (Epsom Salt) | அவுன்ஸ் | 1 |
| | பொட்டாஷியம் பைகார்போநேட் (Potassium Bicarbonate) | டிராம் | 2 |
| | பொட்டாஷியம் நைட்ரேட் (Potassium Nitrate) | ,, | ½ |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 3-தடவை 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் நீர்க்கடுப்பு:—Puerperal Dysuria

கருப்பற்றிய ஆரம்ப காலங்களில் கருப்பை வளர்ந்து விரிவதால்; மூத்திரத் தாரையும், மூத்திரப் பையும் பாதிக்கப்பட்டு அழலைக்கொண்டு நீர்க்கடுப்பு ஏற்படுவதுண்டு. அடிக்கடி மூத்திரம் வருவதைப்போன்ற உணர்ச்சியுண்டாகி, சொட்டுச் சொட்டாக மூத்திரம் கடுப்புடனிறங்கும். நீர்த் தாரையில் கடுப்பும், குத்துவலியு முண்டாகும். ஓங்கிச் சிரிக்கும்போதும், இருமும்போதும், தும்ம லுண்டாகும்போதும் நீர்க்கடுத்துத் தன்னை யறியாமலே நீர் கசிந்துவிடும்.

### உபசிகிச்சை

நீர்க்கட்டுக்குண்டானதையே செய்யலாம். உப்பு அதிகம் சேர்ந்த ஆகாரங்களையும், காபி, தேயிலை பானங்களையும் நீக்கவேண்டியது. தண்ணீர் அதிகம் சேர்ந்த பசும்பாலை ஈதேஷ்டமாகக் கொடுக்கலாம்.

### சிகிச்சை

(1) ரோஜா மொக்குக் கஷாயம் அடிக்கடி கொடுத்து வரலாம்.

(2) ஆளிவிரைக் கஞ்சித்தண்ணீர் (Linseed Water) அடிக்கடி கொடுத்து வரலாம்.

(3)

| | | | |
|---|---|---|---|
| கொத்தமல்லி | ரூபாயெடை 1 | மிளகு | ரூபாயெடை 1 |
| கோஷ்டம் | ,, 1 | * கல்நார் பஸ்பம் | ,, 1 |
| சீரகம | ,, 1 | இலாமிச்சைவேர் | ,, 1 |
| கிராம்பு | ,, 1 | நன்னாரிவேர் | ,, 1 |
| சுக்கு | ,, 1 | கோரைக்கிழங்கு | ,, 1 |
| | | சந்தனம் | ,, 1 |

ஒன்று சேர்த்து செவ்விளநீர் தண்ணீர்விட்டு மைபோலரைத்து மிளகு அவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து, சீரகக் கஷாயத்தில் காலை மாலை ஒரு மாத்திரை வீதம் கொடுத்து வரலாம்.

(4) நீரடைப்புக்குச் சொல்லிய 3-ம் இலக்க ஆங்கில மருந்தையும் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் நீர்க்கட்டு:—

கர்ப்பவதிகள் நீரடைப்பென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் நெஞ்சுத் துடிப்பு—

கருதரித்த எந்த மாதங்களிலாவது அல்லது சிலருக்கு கருதரித்த முதல் மாதங்களிலாவது, கடைசி மாதங்களிலாவது நெஞ்சுத்துடிப் பேற்படலாம்.

---

* செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

இருதய இரத்த நாளங்களில் இரத்தம் அதிகமாகச் செல்லுவதினாலாகிலும்; பயம், கோபம், ஆயாசம், பசியெடுக்கும்போது உண்ணாதிருத்தல், பாரங்களைத் தூக்குதல் முதலிய செய்கைகளாலும் இருதயப் படபடப் பேற்படலாம்.

சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | டிஞ்சர் கலம்பா (Tincture Calumbae) | டிராம் | 1 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | டிஞ்சர் டிஜிடாலிஸ் (Tincture Digitalis) | துளி | 15 |
| | லைக்கர் பெர்ரீ பெர்குளோரைட் (Liquor Ferri Perchloride) | ,, | 15 |
| | ஆஸிட் பாஸ்பரிக் டில் (Acid Phosphoric Dil) | ,, | 15 |
| | சிரப் சிம்பிள் (Syrup Simple) | டிராம் | $1\frac{1}{2}$ |
| | இன்பியூஷன் குவாஷியா (Infusion Quassiae) | அவுன்ஸ் | $1\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்று தடவை $\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் நெஞ்சேரிவு—

கருதரித்திருக்கும்போது கருப்பை விரிவு கண்டு ஜீரணக் கருவிகளை நசுக்குவதால், ஆகாரம் இலகுவில் ஜீரணிக்காமல், இரைப்பையில் தங்கி புளித்துப் போவதினாலாவது; அதிகமான ஆகாரங்களை உட்கொள்ளுவதினாலாவது; கருதரித்த ஆரம்பத்திலேயே நெஞ்செரிவுண்டாகலாம்.

தொண்டை, அடிநாக்கு, நெஞ்சு முதலியவைகளில் எரிச்சலுண்டாகும்; அடிக்கடி வாயில் கரகரப்பான நீர் சுரந்து, புளித்தேப்பமுண்டாகும்; ஏப்பம்விடும் சமயம் எரிச்சலதிகமாயிருக்கும்; இதற்கு ஆகாரத்தை மட்டுப்படுத்தி வரவேண்டும்.

சிகிச்சை

(1) நிலவேம்பு கஷாயம்; வேப்பம்பட்டைக் கஷாயம் இவைகளிலொன்றைக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | லைக்கர் பொட்டாஷ் (Liquor Potassh) | டிராம் | $\frac{1}{2}$ |
| | டிஞ்சர் ஜென்ஷன் கோ (Tincture Gentain Co) | ,, | $\frac{1}{2}$ |
| | லைக்கர் மாக்னிஷியம் கார்போனஸ் (Liquor Magnesium Carbonas) | ,, | $1\frac{1}{2}$ |
| | ஆக்குவா மெந்தாபிப் (Aqua Mentha Pip) | அவுன்ஸ் | 7 |

ஒன்று சேர்த்து, 4 மணி நேரத்திற்கொரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

**கர்ப்பவதிகள் பசி மந்தம்—**

கருவுற்றிருக்கும் சமயம் வயிறு பெருத்து, வயிற்றுள் ஏதோ நிறைந்திருப்பதைப்போல் தெரிவதாலும்; அக்காலங்கள் மலச்சிக்கலு மேற்படுவதாலும்; அதிக ஆகாரங்களை உட்கொள்ளுவதாலும்; கர்ப்பவதிகளுக்கு இயற்கையாயுள்ள பிரீதியினால் மண், சாம்பல் முதலியவற்றைத் தின்பதினாலும் பசி மந்த மேற்படலாம். மலச்சிக்கலிருந்தால் அதற்கான சிகிச்சை செய்ய வேண்டும்.

**சிகிச்சை**

(1) மிளகுக் கஷாயம், நிலவேம்புக் கஷாயம், வேப்பம்பட்டைக் கஷாயம் முதலியவைகளி லொன்றைக் கொடுத்து வரலாம்.

(2) அல்லிக்கிழங்கு ரூபாயெடை 1 தாமரைப்பூ ரூபாயெடை 1

ஒன்று சேர்த்து பசும்பால்விட்டு மைபோலரைத்து ஒரு கொட்டைப்பாக்களவு, காலை மாலை கொடுத்து வரலாம்.

(3)

| | | |
|---|---|---|
| ஆஸிட் நைட்ரோ ஐட்ரோ குளோரிக் டில் (Acid Nitro Hydrochloric Dil) | டிராம் | ½ |
| * டிஞ்சர் நக்ஸ் வாமிகா (Tincture Nux Vamica) | ,, | ½ |
| சிரப் சிம்பிள் (Syrup Simple) | ,, | 1½ |
| இன்பியூஷன் கலம்பா (Infusion Calumbae) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 3-வேளை ஆகாரத்திற்குப் பின் ½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

**கர்ப்பவதிகள் பயித்தியம்—Puerperal Mania**

பித்த அதிகரிப்பினா லுண்டாகும் பயித்தியம் கர்ப்பமா யிருக்கும்போதும்; நரம்பு விகல்பத்தா லேற்படும் பயித்தியம், பிரசவ சமயத்திலும்; பிரசவத்திற்குப் பின்னுமுண்டாகும். மூளைக் கோளாறுகளினா லேற்படும் பயித்தியம் சிசு உதயமாகும் சமயத்திலேற்படும். குழந்தைகளுக்கு நீடித்துப் பால் கொடுப்பதினால் நரம்புக் கோளாறுக ளேற்பட்டு பிரசவமான பின் பயித்திய முண்டாகலாம். பிரசவ பயித்திய ரோகம் பரம்பரையா யிருந்தாலொழிய எல்லோருக்கு முண்டாவதில்லை.

பித்த உபரியினாலுண்டாகும் பயித்தியம் விபத்துண்டுபண்ணக் கூடியதல்ல. இதில் மூர்ச்சை, மனத் தடுமாற்றம், அமைதியின்மை முதலியவைகளுண்டாகி பயித்தியத்தின் சேஷ்டைகளு மிருக்கும்.

மூளைக் கோளாறுகளினா லேற்படும் உன்மத்தம் பிரசவ வேதனைப்படும்போதேற்பட்டு முகம் வெளுத்து, நாடி நடை க்ஷீணித்துவிடும். வரவர வியாதி உக்ரமாகும்; நிதானமற்ற வார்த்தைக ளேற்பட்டு மலம், மூத்திரம், பால்

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்கவேண்டும்.

இவைகள் தடைப்பட்டுப் போம். சர்மம் வரண்டு கடினமாய்த் தோன்றும்; பசி மந்தம், நித்திரையின்மை முதலியவைக ளேற்படும்.

பொதுவாக; கஷ்டப் பிரசவம், பிரசவப் பெரும்பாடு, அழுக்கு அதிகமாய் கழிதல், பயம், பலஹீனம், மஞ்சட் காமாலே, முன் குழந்தைகளுக்கு நீடித்த நாட்களாக பால் கொடுத்தல், இதற்கு முன் கொடிய ரோகங்களால் பாதிக்கப்பட் டிருத்தல் முதலிய காரணங்களினுல் கர்ப்பகாலத்தில் பயித்தியம் உண்டாகின்றன.

பிரசவ சமயத்தில் பயித்தியம் உண்டாகி சிசு வெளிப்படாவிட்டால் ஆயுத பிரயோகத்தால் சிசுவை வெளிப்படுத்தி விடவேண்டும் நாம்புக் கோளாறுகளால் யேற்படும் பயித்தியம் சற்று சமன மடைந்ததும் குழந்தைக்கு முலேக் கொடுக்கலாம்; நாள்பட்ட பயித்திய ரோகமுள்ளவர்கள் குழந்தைக்கு ஒருகாலும் பால் கொடுக்கக்கூடாது.

**உப சிகிச்சை**

தனிமையான அறையில் படுக்கவைத்து தலேயில் ஐஸ் (Ice) ஒற்றிடம் கொடுக்கலாம்; இலகுவில் ஜீரணிக்கும் கஞ்சிகள், மாமிச சூப்புகள் (Soup) சோடாத் தண்ணீர் (Soda Water) பிராந்தி (Brandy) முதலியவைகளேக் கொடுத்து வரலாம்.

**சிகிச்சை**

| | | | |
|---|---|---|---|
| (1) | சல்போனுல் (Sulphonal) | கிரைன்ஸ் | 20 |

இந்த அளவாக 6-மணி நேரத்திற் கொருதரம் கொடுத்து வரலாம்.

நீடித்த நாளாயிருந்துவரும் பைத்தியத்திற்கு:—

| | | | |
|---|---|---|---|
| (2) | குளோரல் ஐட்ரஸ் (Chloral Hydras) | கிரைன்ஸ் | 30 |
| | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | ,, | 90 |
| | சிரப் மோரி (Syrup Mori) | டிராம் | 1 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்று தடவை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

நெடுநாள் பால்கொடுத்ததாலேற்பட்ட பயித்தியத்திற்கு:—

| | | | |
|---|---|---|---|
| (3) | எர்காட்டின் (Ergotine) | கிரைன்ஸ் | 8 |
| | * எக்ஸ்டிராக்ட் நக்ஸ் வாமிகா (Extract Nux Vamica) | ,, | 1 |
| | பெரி ரெட்டாக்டம் (Ferri Redactum) | ,, | 24 |
| | கொய்னேன் சல்பஸ் (Quinine Sulphus) | ,, | 16 |

ஒன்று சேர்த்து 8-மாத்திரைகளாகப் பிரித்து உருட்டிக்கொண்டு, நாள் ஒன்றுக்கு மூன்று தடவை ஒரு மாத்திரை வீதமும், இரவு படுக்கைக்குப்போகும் போது ஒரு மாத்திரை வீதமும் கொடுத்து வரலாம்.

* விஷமானது ஜாக்ரதையாக உபயோகிக்க வேண்டும்.

## கர்ப்பவதிகள் பல் வலி—Puerperal Odentalgia

பல்வலி சிலருக்கு கருதரித்ததின் அறிகுறியாக விருக்கும்; கருதரித்த எந்த மாதத்திலுமிது யேற்படலாம். பல்வேரின் நரம்புக் கோளாறுகளினுலாவது; அஜீரண வியாதிகளினுலாவது பல்வலி யுண்டாகும்.

### சிகிச்சை

(1) சுடு தண்ணீரில் படிகாரத்தைக் கரைத்தாவது, கருவேலம்பட்டை கஷாயத்தில் படிகாரத்தைக் கரைத்தாவது வாய் கொப்புளிக்கலாம்.

(2) அபின் அரிசியெடை 1 கற்பூரம் அரிசியெடை 2

ஒன்ருய் அரைத்து வலியுள்ளவிடத்தில் வைக்கலாம்.

(3) டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) துளி 5
ஸ்பிரிட் ஈதர் (Spirit Aether) ,, 5

இது இரண்டையும் பஞ்சில்விட்டு வலியுள்ளவிடத்தில் வைத்திருக்கலாம்.

(4) ஸ்பிரிட் குளோரோபாரத்தை (Spirit Chloroform) பஞ்சில் நனைத்து வலியுள்ளவிடத்தில் வைத்திருக்கலாம்.

## கர்ப்பவதிகள் பீதி—Puerperal Hypochondriasis

பித்த உபரியினுலும்; நரம்புக் கோளாறுகளினுலும்; கர்ப்பிணிகளுக்கு பீதியுண்டாவதுண்டு. கரு தரித்திருக்கும்போது பயம், கோபம், சந்தோஷம், துக்கம் இவைகளினுலும்; பயங்கர கனவுகளினுல் திடீரென்று பயந்தெழுவதாலும்; மூட்டுகள் அயர்வுற்று நரம்பு பலயீனத்தை யுண்டாக்கி கருவுக்கும் கெடுத லுண்டு பண்ணலாம்.

கர்ப்பவதிகளுக் குண்டாகும் பீதியினுல்; நரம்பு பலஹீனமும், ஆயாசமும், அலுப்பும், தூக்கமின்மையு முண்டாகும். இடது பக்கத்து மார்புக்கு அடியிலும், முதுகிலும் வலியுண்டாகும்; மனவருத்தம், சஞ்சலம், காரணமில்லாத அழுகை, தொண்டையில் ஏதோ ஒன்று உருளுவதைப் போன்ற உணர்ச்சி, நெஞ்சுப் படபடப்பு, தலைவலி, நெஞ்செரிவு முதலிய கோளாறுகளு முண்டாகும்.

### உப சிகிச்சை

மனவமைதியாக விருக்கச்செய்ய வேண்டியதே இதற்குண்டான சிகிச்சை. இரவில் நித்திரையில் பயங்கரக் கனவுகள் தோன்றினுல் கீழ் கண்ட நித்திரை மருந்துகளைக் (Hypnotics) கொடுத்து அயர்ந்த நித்திரையை யுண்டுபண்ணலாம்.

### சிகிச்சை

(1) ஐயோஸின் ஐட்ரோ புரோமைட் (Hyosine Hydro Bromide) கிரைன்ஸ் ½
டிஞ்சர் ஆரண்டி (Tincture Auranti) அவுன்ஸ் 1
ஆக்குவா டிஸ்டில் (Aqua Distilled) ,, 3

ஒன்று சேர்த்து இரவு படுக்கைக்குப் போகுமுன் ஒரு தேக்காண்டி வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | சல்போனல் (Sulphonal) | கிரைன்ஸ் | 20 |
| | சுடுகிற தேயிலைக் கஷாயம் (Tea) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்து இரவு படுக்கைக்குப் போகுமுன் கொடுக்கலாம்.

## கர்ப்பவதிகள் மஞ்சட் காமாலை—Puerperal Icterus

கர்ப்ப காலத்தில் கருப்பை பெருத்து விடுவதினால் மண்ணீரல் (Liver) பாதிக்கப்பட்டு, பித்தப்பைக்குச் செல்லும், பித்தநீரை தடைசெய்வதால், பித்தநீர் இரத்தத்துடன் கலந்து; கண் விழி, கண்ணிரப்பைகள், நகக் கண், சர்மம் இவைகளை மஞ்சள் நிறமாக்கிவிடும். மூத்திரம் சிவந்து, தடித்து, அல்லது இரத்தம்போ லாவதிறங்கும்; சர்மம் தோலுரிந்ததைப் போலிருக்கும்; தலைவலி, சுரம், வயிற்றோட்டம் இவைகளுண்டாகும்.

### சிகிச்சை

(1) வில்வ யிலையுடன் பசு மூத்திரத்தை விட்டு இடித்துப் பிழிந்தசாறு அவுன்ஸ் 2, 3-வீதம் மூன்று நாள் காலையில் மட்டும் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | சோடியம் பைகார்ப் (Sodium Bicarb) | டிராம் | ½ |
| | பல்விஸ் ரீயை ராடிக்ஸ் (Pulvis Rhei Radix) | ,, | 3 |
| | பல்விஸ் ஜிஞ்சிபர் (Pulvis Zingiber) | ,, | 1 |
| | பல்விஸ் கலம்பா (Pulvis Calumbae) | ,, | 1½ |
| | பல்விஸ் இப்பிக்காக் கோ (Pulvis Ipecac Co) | ,, | ¼ |

ஒன்று சேர்த்து, 18-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு பாகத்தை சுடு தண்ணீரில் கலந்துக் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் மர்மஸ்தான எரிவு—Puerperal Pruritus Vulvae

மர்மஸ்தான எரிவு கர்ப்பவதிகளுக்கு மட்டுமின்றி, ஏனையோருக்கு முண்டாகலாம்; விசேஷமாக, மூத்திர ரோகத்தாலும், வெள்ளைப் பிரமேகத்தாலும் பாதிக்கப்பட்டவர்களுக்கே இது உண்டாவதுண்டு.

புருஷரிடமாகவுள்ள துர்நீர் சம்பந்தப்படுவதாலும்; யோனியிலும், கடிதடத்திலுமிருக்கும் சுசியும் ஒரு வழுவழுப்பான பதார்த்தம் உலர்ந்து நடக்கும்போது தேய்வுபடுவதாலும்; கடிதடத்திலுள்ள மயிர் முனைகள் குத்துவதாலும்; கீரைப்பூச்சி, மலச்சிக்கல், ஜீரணக்கருவிகள் கோளாறு முதலியவைகளாலும்; மர்மஸ்தான எரிவு வுண்டாகலாம். கர்ப்பக் காலங்களில் யோனி, கடிதடம் இவைகள் தளர்ச்சி யடைந்திருப்பதினாலேயே அக்காலங்களிலேற்படுகின்றன.

கடிதடத்தில் கண்ணுக்குப் புலப்படாத சிறு நமச்சல்களுண்டாகி, சொறியும் போது தேய்வுபட்டு சிவந்து எரிச்சலுண்டாகும்; பின்னர் அவைகள் வெளுரின புண்களாக மாறி, கருப்பை வரையில் புண்ணாகச் செய்துவிடும்.

### உப சிகிச்சை

மூத்திரம் பெய்தவுடனும், சௌகர்யப்படும்போதும், ஒரு தொட்டியில் சுடு தண்ணீர் விட்டு (Hipbath) $\frac{1}{4}$-மணி நேரம் அதில் உட்கார்ந்து ஆசன ஸ்நானம் செய்து வரலாம்.

### சிகிச்சை

(1) புளியிலைக் கஷாயத்தால் மர்மஸ்தானங்களைக் கழுவியபின், சங்கங் கொழுந்தையும், மிளகையும் சமமாக வைத்தரைத்து பூசி வரலாம்.

(2) அடிக்கடி புகையிலைக் கஷாயத்தால் மர்ம ஸ்தானங்களைக் கழுவி வரலாம்.

(3) கார்பாலிக் காஸிட் (Carbolic Acid) அவுன்ஸ் 4
கிளிசரின் (Glycerine) ,, 8

ஒன்று சேர்த்து வைத்துக்கொண்டு தேவையானபோது 20-அவுன்ஸ் தண்ணீரில் 2-டிராம் மருந்தைக் கலந்து நாள் ஒன்றுக்குப் பலமுறை வெளிப் பிரயோகமாக மர்ம ஸ்தானங்களை கழுவி வரலாம்.

(4) போரக்ஸ் (Borax) கிரைன்ஸ் 45
அமோனியம் கார்போனேட் (Ammonium Carbonate) ,, 45
கிளிசரின் (Glycerine) அவுன்ஸ் $\frac{1}{2}$
ஆஸிட் ஐட்ரோஸினியாக் டில் (Acid Hydrocyniac Dil) டிராம் $1\frac{1}{2}$
தண்ணீர் அவுன்ஸ் 8

ஒன்று சேர்த்து வைத்துக்கொண்டு நாள் ஒன்றுக்கு பலதடவை 1-டிராம் மருந்துக்கு 3-டிராம் தண்ணீர் சேர்த்து மேல் பிரயோகமாகத் தடவி வரலாம்.

(5) காலோமல் (Calomel) டிராம் 1
பச்சரிசி மாவு (Starch) ,, 1

ஒன்று சேர்த்து 3-ம் இலக்க கழுவநீரால் சுத்திசெய்த பின்னர் புண்ணின் மேல் தூற்றி வரலாம்.

## கர்ப்பவதிகள் மலச்சிக்கல்—Constipation In Pregnancy

சாதாரணமாக கர்ப்ப காலத்தில் மலச்சிக்க லேற்படுவதுண்டு. கருக்கொண்டிருக்கும் சமயத்தில் வழக்கமாக மலச்சிக்க லேற்படுமானல் பிரசவ சமயங்களில் துன்பத்தை விளைவிக்கலாம். கடினமான மலச்சிக்க லேற்படுமானல் தலைவலி, நெஞ்செரிவு, வயிற்றுவலி, தூக்கமின்மை, மயக்கம், மூலம், கருவழிவு முதலியவைகளு மேற்படும்.

கருப்பை பெருத்து மலக்குடல்களை நசுக்கிக்கொண்டிருப்பதாலும்; குடல்கள் திமிர்கண்டுவிடுவதாலும்; மலம் வரும் சமயம் அடக்கிக்கொண்டிருந்து விடுவதாலும் கர்ப்ப காலத்தில் மலச்சிக்க லேற்படலாம்.

### உப சிகிச்சை

காலையில் எழுந்தவுடன் ஒரு டம்ளர் குளிர்ந்த தண்ணீரைக் குடிக்கலாம். ஒவ்வொரு ஆகாரங்களுக்குப் பின்னரும் கனிந்த பழங்களையும் புசிக்கலாம். ஒரு

பெரிய தொட்டியில் சுடுதண்ணீர் விட்டு குறைந்தது 15-நிமிஷங்களாவது ஆசன ஸ்நானம் செய்து வரலாம். இவைகளினுலும், கீழ்கண்ட இலகுவிரேசன காரிகளாலும் பயனேற்படவில்லையானல், வாரத்திற் கிருமுறையாகிலும் ஆசன வழியே நீரேற்றம் (Enema) செய்யலாம். ஆசன வழியே நீரேற்றம செய்வதாயிருந்தால் இதர விரேசனகாரிகளைக் கொடுக்கத் தேவையில்லை.

**சிகிச்சை**

(1) நிலாவரைக் கஷாயம்; ரோஜாப்புக் கஷாயம்; நிலாவரைத் துகையில், * பாவனக் கடுக்காய், முதலியவைகளைக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | ப்ல்விஸ் ரீயை கோ (Pulvis Rhei Co) | கிரைன்ஸ் | 60 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துக் காலையில்மட்டும் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | பல்விஸ் கிளிசரிசா கோ (Pulvis Glycerrhizae Co) | கிரைன்ஸ் | 60 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்துக் காலையில் மட்டும் கொடுக்கலாம்.

## கர்ப்பவதிகள் முக வலி—Faceache in Pregnancy

கர்ப்பவதிகளுக் கேற்படும் பல் வலியினுல் முகவலி ஏற்படுகிறது. ஆதலால், பல் வலி யிருந்தால் "கர்ப்பவதிகள் பல் வலி" என்ற தலைப்பின் கீழுள்ள சிகிச்சைகளைச் செய்யலாம். காதோரமாகவும், தாடைகளிலும் வீக்கமிருந்தால் கீழ் கண்ட சிகிச்சையைச் செய்யலாம்.

**சிகிச்சை**

| | | |
|---|---|---|
| டிஞ்சர் பெர்ரீ பெர்குளோரைட் (Tincture Ferri Perchloride) | டிராம் | ½ |
| டிஞ்சர் டிஜிடிலிஸ் (Tincture Digitais) | ,, | ½ |

ஒன்று சேர்த்து மேல்பிரயோகமாக வலியுள்ளவிடங்களில் தடவி வரலாம்.

## கர்ப்பவதிகள் முதுகு வலி—Backache in Pregnancy

கர்ப்ப காலங்களில் கருப்பை பெருத்து பளுவேற்பட்டு விடுவதால் நரம்புகளைப் பிடித்திழுத்து, இடுப்பைச் சுற்றிலும், அடிமுதுகு, அரை, அரைச் சந்துகளிலும், வலியுண்டாகும். பகலைவிட இரவிலதிகமாயிருக்கும். இதற்கான தனிச் சிகிச்சைகளொன்றும் தேவையில்லை; ஆனுலும், கீழ்கண்ட உப சிகிச்சைகளைச் செய்து வரலாம்.

**உப சிகிச்சை**

வலியுள்ள விடங்களில் சுடு தண்ணீர் ஒற்றிடம் கொடுத்து, புங்கெண்ணெய் அல்லது சிற்றாமணக்கெண்ணெயைத் தடவி வாலாம்

* செய்முறை 6-ம் பாகம் ப்பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் முறைக்காச்சல்—Intermittent Fever in Pregnancy

சாதாரண சமயங்களைப்போலவே கருவுற்றிருக்கும் சமயத்திலும், முறைசுர மேற்படுவதுண்டு. சுரத்தின் உக்ரகம் அதிகரிக்குமானால், கருவழியுண்டாக யேதுவாகும். கர்ப்ப காலத்திலுண்டாகும் முறை சுரத்துக்கு கொய்னைன் (Quinine) சேர்ந்த மருந்துகளைக் கொடுக்கக்கூடாது.

**சிகிச்சை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | சீந்தில்தண்டு | ரூபாயெடை 1½ | நிலவேம்பு | ரூபாயெடை | 1½ |
| | சிற்றாமுட்டிவேர் | ,, 1½ | சுக்கு | ,, | ½ |
| | பேராமுட்டிவேர் | ,, 1½ | திப்பிலி | ,, | ½ |

ஒன்று சேர்த்துப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டுக் கஷாயமிட்டுக் காலை மாலை 2-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) பல்விஸ் ரூபார்ப் கோ (Pulvis Rhubarb Co) டிராம் 1
இதைத் தண்ணீரில் கலக்கிக் கொடுத்து மலச்சுத்தியானவுடன்:—
இன்பியூஷன் சின்கோனு (Infusion Cinchonnae) அவுன்ஸ் 1

இந்த அளவுப்படி நாள் ஒன்றுக்கு 3-வேளைக் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் முலையெரிவு—Puerperal Mastitis

கரு தரித்த இரண்டாமாதத் துவக்கத்தில், கர்ப்பாயசத்திற்கு செல்லும் இரத்தம் முலையிற் போய்ச் சேர்வதினாலேயும்; பால் சுரக்கும் நாளங்கள் விரிவு காண்பதினாலேயும் முலை எரிவும், முலை வலியு முண்டாகலாம்.

ஸ்தனமானது பெருத்து விம்மியிருக்கும்; அழுத்தினால் முடிச்சுகள் காணப்படும்; முலைக்காம்பைச் சுற்றிலும், கருவட்ட (Areola) மேற்படும்; முலைக் காம்பை நசுக்கினால், குழகுழப்பான ஒரு வஸ்து வெளிப்படும்; சிலருக்கு முலைக்காம்பு கருத்திருக்கும்.

முலைக்காம்பு எரிவால் கஷ்டப்படுகிறவர்களுக்கு பசிமந்தம், நித்திரையின்மை, தலை வலி, முக வலி முதலியவைக ளுண்டாகும். ஸ்தனமானது விம்மி வெடித்துப்போவதைப்போ லிருக்கும்; இச் சமயத்தில் சிகிச்சைகளொன்றும் செய்யப்படாவிட்டால், பிரசவத்திற்குப் பின் முலைக்காம்பு வெடிப்புண்டாகும்.

**உப சிகிச்சை**

முதலில் இலகுவிரேசனகாரிகளால் மலசுத்தி செய்விக்க வேண்டியது. ரவிக்கையைத் தளர்த்திக்கொள்ள வேண்டும். குளிர்ந்த தண்ணீரில் துணியை நனைத்து முலையின்மேல் போடலாம். தேயிலைக் கஷாயத்துடன் (Tea) கொஞ்சம் தண்ணீரும், படிகாரத்தூளும் சேர்த்துக் கழுவி வந்தால் பிரசவத்திற்குப் பின் முலைக்காம்பு வெடிப் பேற்படாது.

சிகிச்சை

(1) வெள்ளறுகம் புல்லை பசும்பாலி லரைத்துத் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | டிஞ்சர் ஹமா மெலிடிஸ் (Tincture Hamamelidis) | டிராம் | 1 |
| | ஒலியம் ஒலிவா (Oleum Olivae) | ,, | 1 |

ஒன்று சேர்த்துத் தடவி வரலாம்.

## கர்ப்பவதிகள் மூத்திரக்கடுப்பு:—

கர்ப்பவதிகள் நீர்கடுப்பென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் மூத்திரக்கட்டு:—

கர்ப்பவதிகள் நீர்கட்டென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் மூர்ச்சை—Puerperal Insanity

கருப்பையில் பிண்டம் அசைய ஆரம்பமாகும் காலமாகிய மூன்று மாதக் கடைசியில், கருப்பையிலிருந்து மேலுக்கேறும் அதிக இரத்த ஓட்டத்தின் வேகத்தினுலாவது; அசுத்த இரத்தத்தி லிருந்தெழும் ஆவியினுலாவது; திடீரென வேற்படும் சந்தோஷம், கிலேசம் இவைகளின் காரணத்தினுலாவது இம் மூர்ச்சை சிலருக் கேற்படுவதுண்டு. "கர்ப்ப சன்னிக்" குமிதற்கும் அதிக வித்தியாசங்க ளிருப்பதில்லை.

உப சிகிச்சை

மூர்ச்சைக்கண்டிருக்கும்போது ஆடைகளை த்தளர்த்தி குளிர்ந்த தண்ணீரை முகத்திலடிக்கலாம். அதிகமான காற்றுப்படும்படியாகச் செய்யவேண்டியது. மூர்ச்சை தெளிந்தவுடன் இலகுவிரேசனகாரிகளால் மலசுத்தி செய்வித்து, கீழ்கண்ட மருந்துகளைப் பிரயோகம் செய்யலாம்.

சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | சாலாமிசிரி | ரூபாயெடை | 6 | சுக்கு | ரூபாயெடை | 6 |
| | சில்கூஜாபருப்பு | ,, | 6 | பெருங்காயம் | ,, | 6 |
| | போஜிதான்மிஸ்ரி | ,, | 6 | ஆளிவிரை | ,, | 6 |
| | தண்ணீர்விட்டான்கிழங்கு | ,, | 6 | சாக்கரை | ,, | 24 |
| | சிறுபூனைகாலிவிரை | ,, | 6 | தேன் | ,, | 24 |
| | நாயுருவிவிரை | ,, | 6 | பசுநெய் | ,, | 6 |

சூரணிக்கவேண்டியவற்றைச் சூரணித்து,சர்க்கரையும் தேனையும் சேர்த்துப் பாகுபதம் செய்து, சூரணங்களைக் கொட்டிக் கிண்டி, பின் நெய் சேர்த்து மிஸ்ரமித்து, காலை மாலை ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | டுபாய்சைன் சல்பஸ் (Duboisine Sulphus) | கிரைன்ஸ் | $\frac{1}{50}$ |
| | சிரப் ஆரண்டி (Syrup Auranti) | டிராம் | 1 |
| | ஆக்குவா சின்னமோனி (Aqua Cinnamoni) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துப் படுக்கைக்குப் போகுமுன் ஒரே தடவையாகக் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் மூலம்—Puerperal Haemorrhoids

சாதாரணக்காலங்களில் மூலம் இல்லாதவர்களுக்குங்கூட, கருதரித்திருக்கும் சமயங்கள் மூலரோகமேற்படுவதுண்டு; ஆனால், ஒரு சிலருக்கே இது உண்டாகிறது.

கருப்பை பெருத்து வருவதால் திரிகஸ்தான (Pelvic) பாகங்களில் அழுந்தல் ஏற்படுவதாலும்; மலக்குடலில் இரத்தம் தடைப்பட்டு வீக்கம் காணுவதாலும்; அளவுக் கதிகமான வயிற்றோட்டம், கடினமான மலச்சிக்கல் இவைகளேற்படுவதாலும் மூலம் சம்பவிக்கலாம்.

### உப சிகிச்சை

வெளி மூலமுள்ள ரோகஸ்திரியை மல்லாய்க்காப் படுக்கவைத்து, மூலத்தை மெதுவாக உள்ளேத் தள்ளி, ஈரத்துணியை ஆசனவாயில் வைத்துக் கட்டலாம். உள்மூல முள்ளவர்கள் அடிக்கடி முக்கி மலம் கழிக்கச் செய்யாமல், ஆசன வழியே நீரேற்றம் செய்து மலத்தை இலகுவாய் வெளியேற்றவேண்டும்.

### சிகிச்சை

(1) அஷ்டமூல நாசலேகியம் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

மூலத்தில் இரத்தம் கசிந்தால்:—

(2) மாசிக்காய்த்தூள் ரூபாயெடை $\frac{1}{4}$ அபின் ரூபாயெடை $\frac{1}{8}$

இதைப் பசு வெண்ணெய்யில் குழப்பி, மூலத்தில் தடவி வரலாம்.

மூலத்தில் வலி, எரிவு, கடுப்பிருந்தால்:—

(3) வெங்காயத்தைக் குறுவ நறுக்கி சிற்றாமணக்கெண்ணெயில் வதக்கி வைத்துக் கட்டலாம்.

(4) அங்குவண்டம் காலிக் கம் ஓபியம் (Unguentum Gallic Cum Opium) இதை இரத்தம் கசியும் மூலத்திற்கு தடவி வரலாம்.

(5)

| | | |
|---|---|---|
| கொக்கோயின் ஐட்ரோகுளோரேட் (Cocaine Hydrochlorate) | கிரைன்ஸ் | $2\frac{1}{2}$ |
| சொலுஷன் அட்ரிஞலின் குளோரைட் (Solution Adrenaline Chloride) | டிராம் | $\frac{1}{2}$ |
| பிஸ்மத் சப்னைட்ரஸ் (Bismuth Subnitras) | கிரைன்ஸ் | 10 |
| பெட்ரோலாட் (Petrolat) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்துக் களிம்பாகச் செய்துகொண்டு எல்லா மூலங்களுக்கும், மலம் கழித்த ஒவ்வொரு காமும், இரவு படுக்கைக்குப் போகுமுன்னும், மலவாயிலைச் சுத்தம் செய்தபின் தடவி வரலாம்.

## கர்ப்பவதிகள் மேல்மூச்சு—Apnoea in pregnancy

பிரசவகால சமீப மாதங்களில் சிசுவானது, பூரண வளர்ச்சியை யடைந்து, சுவாசாசயங்களில் மோதுவதாலும்; சுவாசக் கருவிகளை யழுத்திக்கொண்டிருப்பதாலும்; இக்காலங்களில் சாதாரணமாக மூச்சுத்திணாலுண்டாவது வழக்கம்.

அடிக்கடி மலமூத்திரம் கழிந்தால் மூச்சுமுட்டுதல் சற்று சாந்தமாகவிருக்கும்; மேலும் மட்டான ஆகாரம் உட்கொள்ளுவதே சிலாக்கியமாகும்.

### சிகிச்சை

(1) 387-வது பக்கம் 1-வது இலக்க லேகியம் கொடுத்து வரலாம்.

(2) டிஞ்சர் காம்பர் கோ (Tincture Camphor Co) துளி 40
தண்ணீர் அவுன்ஸ் 2

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் வயிற்றிழைச்சல்:—

"கர்ப்பவதிகள் இரத்தபேதி" யென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## கர்ப்பவதிகள் வயிற்றுப் பொருமல்—Flatulance In Pregnancy

தகுதியற்ற ஆகாரங்களினால் அஜீரணப்பட்டு, கரு தரித்திருக்கும் 5, 6-வது மாதங்களி லேற்படலாம்.

### சிகிச்சை

(1) வெந்தயம் ரூபாயெடை ½ சூரத்துநிலாவரை ரூபாயெடை 1
ஓமம் ,, ½

ஒன்று சேர்த்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) இஞ்சி லேகியம் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(3) ஆக்குவா குளோரோபாம் (Aqua Chloroform)

இதை நாள் ஒன்று 3-வேளை ஆகாரத்திற்கு முன் ½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் வயிற்று வலி—Colic in Pregnancy

கரு தரித்த 5-ம் மாதக் கடைசியில், இது சிலருக்கு ஆகார விகல்பத்தினால் ஏற்படுகிறது. வயிற்றை இழுத்துப் பிடித்துக்கொண்டு வலிக்கும்; வயிற்றில் வலி ஆரம்பித்து இடுப்பு, தொடை முதலியவைகளும் வலிக்கும்; நீர் சுருக் கேற்படும்; ஆசனயெரிவு முண்டாகும். மலச்சிக்க லிருந்தால், இலகு விரேசனகாரிகளால் மலச்சுத்தி செய்விக்கவேண்டியது.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | சுக்கு | ரூபாயெடை ½ | கொத்தமல்லி | ரூபாயெடை ½ |
| | மிளகு | ,, ½ | | |

ஒன்று சேர்த்துப் பொடித்து 12-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு, 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயம் 2, 3-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) பவன ஓமம் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | மாக்னிஷியம் கார்போனஸ் (Magnesium Carbonas) | கிரைன்ஸ் | 20 |
| | சிரப் ஜிஞ்சிபர் (Syrup Zingiber) | டிராம் | 3 |
| | ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) | ,, | ½ |
| | ஆக்குவா அனிதி (Aqua Anethi) | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்து ஒருமணி நேரத்திற் கொருதரம் 1-தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—இதையே வயிற்றுப்பொருமலிருந்தாலும் கொடுக்கலாம்.

## கர்ப்பவதிகள் வயிற்றோட்டம்—Diarrhoea in Pregnancy

வயிற்றோட்டம்; அஜீரணத்தினாலும், ஆகார விகற்பத்தினாலும், அசுத்தமான தண்ணீரினாலும் யேற்படலாம்; ஆனால், மலச்சிக்கலைப்போல் வயிற்றோட்டம் அவ்வளவு சாதாரணமா யேற்படுவதில்லை. வயிற்றோட்ட மதிகரிக்குமானாலும், மலத்துடன் இரத்தம் கழியுமானாலும் பிண்டத்திற்கு கெடுதி சம்பவிக்க விடமுண்டாகும்.

வயிறரோட்டமுண்டானல், வயிற்றுவலி, வாய்நாற்றம், வாந்தி, புளித்தேப்பம், ஆசனக்கடுப்பு முதலியவைகளு மேற்படும்.

சிகிச்சை

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | கொத்தமல்லி | ரூபாயெடை 1 | சீந்தில்தண்டு | ரூபாயெடை 1 |
| | கோரைக்கிழங்கு | ,, 1 | அதிவிடயம் | ,, 1 |
| | வெட்டிவேர் | ,, 1 | சிற்றாமுட்டி | ,, 1 |
| | குருவிவேர் | ,, 1 | பற்பாடகம் | ,, 1 |
| | பெருமரத்துப்பட்டை | ,, 1 | சிறுபூனைக்காஞ்சொறி | ,, 1 |

ஒன்று சேர்த்துப் பொடித்து, இரவிலேயே 24-அவுன்ஸ் தண்ணீரில் ஊறப்போட்டு, காலையில் 3-அவுன்ஸாகச் சுண்டக்காய்ச்சிய கஷாயம் 3-அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (2) | மாசிக்காய் | ரூபாயெடை 3 | நெல்லிவற்றல் | ரூபாயெடை 3 |
| | கடுக்காய் | ,, 3 | மாதுளம்பழத்தோல் | ,, 3 |
| | தான்றிக்காய் | ,, 3 | | |

ஒன்று சேர்த்துச் சூரணித்துக்கொண்டு, காலை மாலை திரிகடி பிரமாணம், தேனிலாவது, பசு நெய்யிலாவது கொடுத்து வரலாம்.

(3) லகு அதிசார மாத்திரை; லகு கட்டுவாங்க மாத்திரை; ஜாதிபலாதிச் சூரணம் இவைகளைக் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (4) | பிஸ்மத் சப்நைட்ரஸ் (Bismuth Subnitras) | கிரைன்ஸ் | 60 |
| | கிரீட்டா பிரிபரேட்டா (Creta Prepareta) | ,, | 120 |
| | டிஞ்சர் காம்பர் கோ (Tincture Camphor Co) | அவுன்ஸ் | $1\frac{1}{2}$ |
| | டிஞ்சர் கைநோ கோ (Tincture Kino Co) | டிராம் | 2 |
| | பல்விஸ் அக்கேஷியா கம்மி (Pulvis Acacia Gummi) | கிரைன்ஸ் | 60 |
| | ஆக்குவா சின்னமோனி (Aqua Cinnamoni) | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்துக் கலக்கிக்கொண்டு, 3-மணிநேரத்திற் கொருதரம் $\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## கர்ப்பவதிகள் ஜலதோஷம்—Puerperal Catarrh Nasal

இது சாதாரணமாக எல்லோருக்கும் உண்டாகும் தடிமனைப் போன்றதாகும் இதற்கு சாதாரண தடிமனுக்குள்ள சிகிச்சைகளே செய்யலாம்.

## கர்ப்பவதிகள் ஸ்தன மேரிவு:—

கர்ப்பவதிகள் முலை எரிவுயென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## பால்காம்பு இரணம்—Sore Nipple

குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும்போது முலைக்காம்பு வலிகண்டு வெடித்து புண்ணாகிவிடுவதுண்டு. வெடிப்புகள் கண்டால் புண்ணாகிவிடுமென்று தெரிந்து கொள்ளலாம்.

### உப சிகிச்சை

முலைக்காம்பு புண்பட்டு விடலாமென்று தோன்றினால், மாற்றி மாற்றி ஐஸ் (Ice) ஒற்றிடம் கொடுக்கலாம். பிராந்தி (Brandy) ஒயின் (Wine) இவற்றுடன் கொஞ்சம் தண்ணீர் கலந்து, பலதடவை ஸ்தனத்தைக் கழுவி வரலாம். புண்பட்டுவிட்டால் கீழ்கண்ட சிகிச்சைகளைச் செய்து வரலாம்.

### சிகிச்சை

(1) பொரித்தவெங்காரம்ரூபாயெடை $\frac{1}{4}$ சாராயம் அவுன்ஸ் $\frac{1}{2}$
தண்ணீர் அவுன்ஸ் 3

ஒன்று சேர்த்துத் துணியில் நனைத்துப் புண்ணின்மேல் போட்டு வரலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (2) | வெங்காரம் | ரூபாயெடை | $\frac{1}{2}$ | வாதுமைஎண்ணெய் ரூபாயெடை | 1 |
| | பால்சாம்பிரானி | ,, | $\frac{1}{2}$ | கோழிமுட்டைவெள்ளைக்கரு,, | $\frac{1}{2}$ |
| | | | | கோழிமுட்டை மஞ்சள்கரு ,, | $\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்தரைத்துப் புண்ணில் தடவி வரலாம்.

(3) சிட்ரின் ஆய்ன்ட் மென்ட் (Citrin Ointment)

இதைத் தடவி வரலாம்,

| | | | |
|---|---|---|---|
| (4) | ஆஸிட் போரிக் (Acid Boric) | டிராம் | 1 |
| | கிளிசரின் (Glycerine) | ,, | $2\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்துத் தடவி வரலாம்.

## பால்காம்பு வீக்கம்—Mostitis—Mammary Abscess

இது முதல் பிரஸவ ஸ்திரிகளுக்குத்தான் குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் முதல் இரண்டாவது மாதங்களில் ஏற்படுவதுண்டு. சிலருக்கு பிரசவித்த 4, 5-தினங்களிலேயே உண்டாகி விடுகிறது. முலையின் தடித்த சர்மத்தில் கிளம்பும் இக் கட்டிக்கு முலைக்கட்டி, முலைக்காய்பு வீக்கம், பால்காம்பு வீக்கம், மடுவிப்புருதி, ஸ்தனவிப்புருதி, ஸ்தன்ஸ்தாபிதம் என்று சொல்லப்படும்.

பால்தாரை விரிவு, அதிகமான பால் சுரப்பு, நீடித்த நாள் பால் கொடுப்பது, அதிகமான பால் சுரப்பிருக்கும்போதே குழந்தைகளுக்குப் பால் மறக்கச் செய்தல், துர்பலயீனம் முதலியவைகளினுல் முலைக்கட்டி யுண்டாகலாம்.

முலைக்கட்டி யுண்டாயிருக்கும் சமயம், ஸ்தனங்கள் சிவந்து விம்மல் கண்டு, குத்துவலியுண்டாகும். தோள்பட்டையை அசைக்ககூடாத விதமாய் வலியாயிருக்கும். நாடிநடை க்ஷீணித்திருந்தாலும் பேதகமின்றி யிருக்கும். சர்மம் வரண்டு நாவரச்சியும், தலைவலியும், தூக்கமின்மையு முண்டாகும். சிலநாள் சென்ருல், சுரமுண்டாகி இழுப்பும் காணும்.

### சிகிச்சை

முலைக்கடியினுல் சுரமும், இதரக் கோளாறுகளு முண்டானுல்:—

| | | | |
|---|---|---|---|
| (1) | சிட்லிஜ் பவுடர் (Seidlitz Powder) | கிரைன்ஸ் | 45 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து இந்த விதமாய் 2, 3-தடவை கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | இன்பியூஷன் சிரட்டா (Infusion Chirattae) | அவுன்ஸ் | 1 |
| | எப்சம் சால்ட் (Epsom Salt) | டிராம் | 1 |

ஒன்று சேர்த்து, சுரம் நின்றவுடன் பேதியாகக் கொடுக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | அங்குவண்டம் பெல்லடோனு (Unguentum Bella donnae) | அவுன்ஸ் | 1 |
| | அங்குவண்டம் ஐட்ரார்ஜரி (Unguentum Hydrargeri) | டிராம் | 4 |
| | இக்தியால் (Ichthyol) | ,, | 4 |
| | பிளம்பி சப்அசிடேட் (Plumbi Subacetate) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து வீக்கமுள்ளவிடத்தில் தடவி பஞ்சுவைத்துக் கட்டி வரலாம்.

குறிப்பு:—3-ம் இலக்க மருந்து கொடிய விஷமுள்ளதாகையால், அதை உபயோகிக்குங்கால் குழந்தைகளுக்குப் பால் கொடுக்கக் கூடாது.

## பால்காம்பு வெடிப்பு—Mammary Fissure

பால்காம்பு வெடிப்பு விசேஷமாக பால்கண்கள் அடைப்பட்டிருப்பதாலும், இரவிக்கை (கஞ்சுகம்) யை அழுந்தக் கட்டியிருப்பதினாலும், முதல் பிரசவ ஸ்திரீகளுக்கு உண்டாவதுண்டு.

கரு தரித்திருக்கும் சமயங்களில் முக்கியமாகப் பிரசவகால சமீபத்தில் தேயிலை (Tea) கஷாயத்துடன், படிகாரம் சேர்த்து முலைக்காம்புகளைக் கழுவி வந்தால், பிரசவத்திற்குப் பின் பால்காம்பு வெடிப்பு உண்டாவதிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம்.

சிகிச்சை

டிஞ்சர் காட்டிக்கு (Tincture Catechu)
இதைத் தடவி வரலாம்.

## பால் சுரம்—Milk Fever

பால் சுரம் பிரசவமான ஒரு வாரத்திற்குப் பின்தான் உண்டாகும். இதை ஜீரசுர மென்றும் சொல்லப்படும். முலை யமைப்பில், பால் சுரந்து சிறுமாறுதலை யுண்டாக்குவதாலும்; பால் கட்டிக்கொண்டு ஸ்தனம் விம்மி வலியுண்டாவதாலும்; பால் குறைவாகவும், அழுக்குக் குறைவாகவும் வெளிப்படும்போது இந்தச் சுரம் ஏற்படுகிறது.

பால்சுரத்தில் திரேகோஷ்ணம் மிகுதிப்பட்டு; குளிர்நடுக்கமும், வியர்வையுமுண்டாகும். நடுமுதுகு, இடுப்பு, தலை முதலியவைகளில் வலியுண்டாகும். முலை சிறுக சிறுக வீக்கம் கண்டு குத்துவலியுண்டாகும். மூத்திரம், அழுக்கு பால் இவைகள் தடைப்படும். கைவிரல்கள் நீலமாகமாறி யிருக்கும். நாடி நடை க்ஷீணித்தும், படபடப்பாகவு மிருக்கும்.

இலகுவில் ஜீரணிக்கும் ஆகாரங்களைக் குறைந்த அளவில் கொடுத்து வரவேண்டும். ஸ்தனத்தில் பால் கட்டிக்கொண்டிருந்தால் முலைக்குழலால் (Breast Pump) வெளிப்படுத்தலாம். வலியதிகமா யிருந்தால் ஐஸ் ஒற்றிடம் (Ice) கொடுக்சலாம். ஓடிக்கலானை (Eaud o Cologne) துணியில் நனைத்து ஸ்தனத்தின் மேல் போடலாம். சுரமிருக்கும்போது குழந்தைக்குப் பால் கொடுக்கக்கூடாது.

சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) கொத்தமல்லி | ரூபாயெடை | 1 | சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 1 | சிற்றுமுட்டி | ,, | 1 |
| வெட்டிவேர் | ,, | 1 | பற்பாடகம் | ,, | 1 |
| குருவிவேர் | ,, | 1 | அதிவிடயம் | ,, | 1 |
| பெருமாத்துப்பட்டை | ,, | 1 | சிறுபூனைக்காஞ்சொறி | ,, | 1 |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை 2, 3-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | செட்லிஜ்பவுடர் (Seidlitz Powder) | கிரைன்ஸ் | 40 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 2 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு 3-தரம் இந்த விதமாகக் கொடுத்து வரலாம்

## பிரசவ இழுப்பு—Puerperal Convulsions

தலையின் பிரதான பாகங்களில் அழற்சிக்கொண்டு விடுவதினாலாவது; சிரோகங்களால் பாதிக்கப்பட் டிருந்ததினாலாவது; மலக்குடல், மூத்திரப்பை விரிந்திருப்பதினாலாவது; புண்பட்டு விடுவதினாலாவது; கருப்பையின் வாய் அதிகமாய் விரிந்து போவதினாலாவது; சிசு உதயமாகி, யோனிப் பாதையில் அதிகநேரம் நின்றுபோவதினாலாவது; பிரசவ சமயத்திலும், பிரசவத்திற்கு பின்னும், அல்லது முன்னும், சிலசமயம் கருதரித்த 6-மாதத்திற்கு பின்னுவது பிரசவ வலிப்பு காணுவதுண்டு.

இருந்தாப்போலிருந்து, கைகால்கள் இழுப்புக்காணும். தலைபாரம், தலையிலடி பட்டதைப்போன்ற உணர்ச்சி, தலைவலி, உச்சந்தலை எரிவு, முகம் கடுகடுப்பு, கண் சிவத்தல், கைத்திமிர், கிறுகிறுப்பு, காதிரைச்சல், இருதயத் தின்கீழ் வலி முதலிய கோளாறுகளேற்படும். நாடிநடை க்ஷீணித்திருக் கும். இழுப்புச் சரியாக ஆரம்பித்துவிட்டால் பிரக்ஞை யற்றுப்போம்; முகம் கோணல் கோணலாக விழுக்கும்; வாயில் நுரைத்தள்ளும்; பற்கடிப் பேற்பட்டு முகம் வீங்கி, சுவாசம் நின்றுநின்று வரும். மல மூத்திரம் தன்னை யறியாமல் கழியும்; திரேகம் சில்லிட்டு வியர்வையுண்டாகும். இந்த இழுப்பு 5-நிமிஷங்களுக்குமேல் நீடிப்பதில்லை; 20-நிமிஷங்களுக்கு முன்னும் திரும்பி இழுப்புண்டாவதில்லை; இழுப்பு விட்டவுடன் தூக்கத்தி லிருந் தெழுவதைப்போலிருக்கும்.

### உப சிகிச்சை

இழுப்புக் கண்டவுடன் காற்று வீசும்படியாய் ஒரு இருண்ட அறையில் படுக்கவைக்கவேண்டும்; சிரசும் பாதங்களும் உடலிலிருந்து உயரமாக்கி வைக்க வேண்டும். சிரசில் ஐஸ் (Ice) ஒற்றிடம் கொடுக்கலாம். சிசு வெளிப்படும் சமயம் இழுப்புக் கண்டுவிட்டால், சிசுவை ஆயுதத்தால் வெளிப்படுத்தவேண்டும். மலச் சிக்கலிருந்தால் எனிமா கொடுத்து மலசுத்தி செய்யவேண்டும்.

### சிகிச்சை

இழுப்பிருக்கும் சமயம்:—

(1) காடியைத் தண்ணீருடன் கலந்து தலையில் தடவலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | குளோரல் ஐட்ரஸ் (Chloral Hydras) | கிரைன்ஸ் | 20 |
| | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | ,, | 40 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து இந்தவிதமாக 3-மணி நேரத்திற் கொருதரம் ஆசனத்தின் வழியாய் எனிமா (Enema) கொடுக்கலாம்.

இழுப்பு ஆரம்பிக்கும் சமயம்:—

| | | | |
|---|---|---|---|
| (3) | குளோரல் ஐட்ரஸ் (Chloral Hydras) | கிரைன்ஸ் | 20 |
| | பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | ,, | 40 |
| | சிரப் ஆரண்டி (Syrup Aurnti) | டிராம் | 1 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து 2-மணி நேரத்திற் கொருதரம் இந்த வீதம் கொடுக்கலாம்.

## பிரசவ சன்னி—Puerperal Septicaemia

பிரசவ சமயங்களில், கருப்பை, யோனிப்பாதை இவைகளில் அஜாக்ரதையினுல் ஏற்படும் புண்ணுகளில், விஷக்கிருமிகள் தொத்தி, இரத்தத்தை விஷமிக்கச்செய்து, சன்னியை யுண்டுபண்ணுமாளுல், அதை **பிரசவ சன்னி; பிரசவ சன்னி சுரம்; காயாசுவாதம்** என்று சொல்லப்படும்.

பிரசவித்த இரண்டு மூன்று தினங்களுக்குப்பின், இருமலும் குளிர்காச்சலு மேற்படும். அழுக்கு, மலம், மூத்திரம், பால் இவைகள் தடைப்படும். அடிவயிற்றில் வீக்கம் கண்டு, ஓயாத வயிற்றுவலி ஏற்படும். காச்சல் மிகுதியான பின் வயிற்றுப்பொருமலும், வாந்தியும், கழிச்சலு மேற்படும். நெஞ்சு வலியும், பெருமூச்சியும் ஏற்பட்டு, மயக்கமும் மூச்சுத்திணாலும் கண்டு மரண முண்டாகும். பிரசவ சன்னி 5, 7, 9, 18-நாட்களில் மரணத்தை யுண்டாக்கும்; 18-நாட்களுக்கு மேற்சென்றுல் விபத்தொன்று முண்டாவதில்லை.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | நன்னரிவேர் | ரூபாயெடை | 1½ | கோஷ்டம் | ரூபாயெடை | 1½ |
| | தூதுவேளைவேர் | ,, | 1½ | திப்பிலி | ,, | 1½ |
| | கொடிவேலிவேர் | ,, | 1½ | கருஞ்சீரகம் | ,, | 1½ |
| | இலாமிச்சைவேர் | ,, | 1½ | சதகுப்பை | ,, | 1½ |
| | சங்கன்வேர் | ,, | 1½ | செண்பகப்பூ | ,, | 1½ |
| | முருங்கையீர்க்கு | ,, | 1½ | வெளுச்சிப்பிசின் | ,, | 1½ |
| | கோரைக்கிழங்கு | ,, | 1½ | அரிதாரம் | ,, | 1½ |
| | அதிமதுரம் | ,, | 1½ | வேப்பெண்ணெய் | அவுன்ஸ் | 24 |

சரக்குகளை யெல்லாம் ஒன்று சேர்த்துப் பொடித்து, வேப்பெண்ணெயை நன்ருகக் கொதிக்க வைத்து அதில் போட்டிறக்கி, வடித்து; தலை, உடல் இவற்றில் தடவி, தவிடும், கருநொச்சி யிலையையும் போட்டு வறுத்து ஒற்றிடம் கொடுக்கலாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) | சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 | செவ்வியம் | ரூபாயெடை | 1 |
| | கண்டங்கத்திரிவேர் | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| | ஆடாதோடைவேர் | ,, | 1 | மிளகு | ,, | 1 |
| | தூதுவேளைவேர் | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| | கீழ்க்காய்நெல்லி | ,, | 1 | கடுக்காய் | ,, | 1 |
| | சிறுதேக்கு | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்து 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் 3-மணி நேரத்திற்கு ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து, மேல் சண்ட தைலத்தைத் தடவி வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | காலோமல் (Calomel) | கிரைன்ஸ் | 8 |
| | கொய்னேன் சல்பஸ் (Quinine Snlphus) | ,, | 16 |
| | டோவர்ஸ் பவுடர் (Dover's Powder) | ,, | 40 |
| | பல்விஸ் சிஞ்சிபரிஸ் (Pulvis Zingiberis) | ,, | 18 |

ஒன்று சேர்த்து 8-பாகமாகப் பிரித்து மடித்துக்கொண்டு, 4-மணி நேரத்திற்கொருதரம ஒரு பாகம் வீதம் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | கொய்னேன் (Quinine) | கிரைன்ஸ் | 24 |
| | ஆஸிட் ஐட்ரோ புகாமிக் டில் (Acid Hydrobromic Dill) | டிராம் | 3 |
| | பரிகோரிக் (Paregoric) | ,, | 2 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 8 |

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 3-வேளை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## பிரசவத்தில் இழுப்பு—Tetanic Contraction During Labour

இதைப்பற்றி 394-ம் பக்கம் பிரசவ இழுப்பென்ற தலைப்பின் கீழ் கூறப்பட்டிருக்கிறது. விசேஷமாகப் பிரசவ சமயத்தில் இழுப்புண்டானால் கீழ் கண்ட சிகிச்சை செய்யலாம்.

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (1) | டிஞ்சர் ஐயோடிமிட்டிஸ் (Tincture Iodimitis) | துளி | 20 |
| | ஆல்கோஹால் (Alcohol) | ,, | 45 |

ஒன்று சேர்த்து வைத்துக்கொண்டு $\frac{1}{2}$-மணி நேரத்திற் கொருதரம், ஒரு அவுன்ஸ் சுடு தண்ணீரில் 5-துளி மருந்தைக் கலந்துக் கொடுத்து வரலாம்.

## பிரசவத்தில் நடுக்கம்—Shocking During Labour

சிலசமயங்களில் பிரசவமாகும்போது, நடுக்கம்கண்டு, சிசுவை வெளித்தள்ள முடியாத நிலைமை உண்டாகிவிடும்.

### சிகிச்சை

| | | | |
|---|---|---|---|
| (2) | * லைக்கர் மார்பைன் ஐட்ரோகுளோரைட் (Liqur Marphine Hydrochloride) | துளி | 1 |
| | ஸ்பிரிட் அமோனியம பேட்டிட் (Spirit Amonium Fetid) | டிராம் | $\frac{1}{2}$ |
| | ஆக்குவா காம்பர் (Aqua Camphor) | அவுன்ஸ் | $1\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்து, ஒரே தடவையாகக் கொடுக்கலாம்.

## பிரசவத்திற்குப்பின் அடிவயிற்றுவலி—After Pains

இதையே சூண்டுவலி, மண்குத்தி நோய் எனப்படும். சூண்டுவலி இரண்டாவது பிரசவத்திலிருந்து ஆரம்பித்து, பின் எல்லா பிரசவங்களிலு மேற்படும்.

பிரசவத்திற்குப்பின், வெறுமையான கருப்பை தன் இயற்கை அளவிற்கு சுருங்குவதினாலேயே இந்த வலி யேற்படுகிறது. பிரசவ சமயங்களில் குளோரோபாம் (Chloroform) அதிகம் மூகர்ந்தவர்களுக்கு இவ்வலி அதிகமாயேற்படும். பிரசவமான இரண்டுமணி நேரத்திற்கெல்லாம் குழந்தைக்குப்பால் கொடுக்கப்படுமானால் இந்தவலி யுண்டாகாது.

இந்த வலி அடிவயிற்றை இழுத்துப் பிடித்துக்கொண்டு சகிக்கமுடியாமல் வலியையுண்டாகும். வலி சற்று விட்டு சில நிமிஷங்களில் திரும்ப உண்டாகும்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) சுக்கு | ரூபாயெடை | 1 | ஏலம் | ரூபாயெடை | 1 |
| மிளகு | ,, | 1 | இலவங்கப்பத்திரி | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | இலவங்கப்பட்டை | ,, | 1 |

ஒன்று சேர்த்துச் சூரணித்துக்கொண்டு, ஒரு ரூபாயெடை சூரணத்தை பனைவெல்லத்துடனாவது, கழுநீர் தண்ணீரில் கலக்கியாவது 2-மணி நேரத்திற்கொருதரம் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (2) டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | டிராம் | ½ |
| ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி (Spirit Aether Nitrosi) | ,, | 1 |
| ஆக்குவா காம்பர் (Aqua Camphor) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

| | | |
|---|---|---|
| (3) லிக்கர் மார்பைன் ஐட்ரோகுளோரைட் (Liquor Morphine Hydrochloride) | துளி | 15 |
| ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) | ,, | 30 |
| ஆக்குவா காம்பர் (Aqua Camphor) | அவுன்ஸ் | 1½ |

ஒன்று சேர்த்து, வலிவந்திருக்கும் சமயம் ஒரேதடவையாகக் கொடுக்கலாம்.

## பிரசவத்திற்குப்பின் அற்பக்காச்சல்—Sympathetic Faver After Labour

பிரசவிக்கும்போது, இரைப்பை, ஈரல், இவைகளில் அழற்சி யுண்டாவதினாலும்; மனோவியாகூலம், அதிபலஹீனம், பத்திய விகல்பம், தூக்கக்கேடு, அதிகக் குளிர் இவைகளினாலும்; பிரசவித்த 2, 3-நாட்களில் சுரமுண்டகாலாம். இதை சீத சுரமென்றும் சொல்லுவர்.

சுரம் குளிருடன் ஆரம்பித்து சடுதியில் மாறிவிடும்; சிலருக்கு முறை சுரம் போல் குறித்த நேரத்தில் வந்தும், சிலருக்கு ஸ்திரமாக விருந்துவிடுவது முண்டு.

**சிகிச்சை**

(1) பலாதிசாரக் கஷாயம் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(2) காலோமல் (Calomel) கிரைன்ஸ் 2

இதைக் கொடுத்து, $\frac{1}{2}$-மணி நேரத்திற்குப்பின் நிலாவரைக் கஷாயம் (Infusion Sennae) கொடுத்தால் மலமும் கழிந்து, சுரமும் நீங்கும்.

## பிரசவத்திற்குப்பின் ஆபத்தான மயக்கம்—Fatal Syncope After Labour

திரேகத்தில் வட்டமிடும் (Circulation) இரத்தம் தடைப்படுவதினுல் இந்தப் பிரசவ மூர்ச்சை யுண்டாகிறது; அநேகமாக கஷடப் பிரசவத்தில் தான் இது அதிகம் காண்பதுண்டு.

பிரசவித்த ஒருமணி நேரத்திற்குள், நெஞ்சு வலியும், விலாப்பக்கம் சிறு வலியும் கண்டு, குமட்டலுண்டாகி சுவாசம தடைப்பட்டுவிடும்; முகம் சுருங்கி பயங்கரமாயிருக்கும்; நாடி நடை க்ஷீணித்தும், விட்டுவிட்டும் நடக்கும்; நாவை உள்ளுக் கிழுத்துக்கொண்டு, பற்கிட்டி விபத்தை யுண்டாக்கும்.

**சிகிச்சை**

(1) வங்கேஸ்சுர ரசநஸ்யம்; சர்வேஸ்சுர ரசநஸ்யம் இவைகளை யுபயோகித்து மூர்ச்சையைத் தெளிவிக்கலாம்; மூர்ச்சை தெளிந்தபின் வங்கபஸ்பம்; ஸ்ரீதேவி எண்ணெய் கொடுத்துவரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும். மேலும், 387-ம் பக்கம் 1-வது இலக்க லேகியத்தையும் கொடுத்து வரலாம்.

(2) மூர்ச்சையா யிருக்கும்போது அமோனியம் கார்பொனஸ் (Ammonium Carbonas) முகரக் கொடுக்கலாம்.

(3) பிராந்தி (Brandy) யுடன் கொஞ்சம் தண்ணீர் சேர்த்துக் கொடுக்கலாம்.

(4) ஸ்பிரிட் அமோனியம் அரோமாட்டிக் (Spirit Ammonium Aromatic) டிராம் $\frac{1}{2}$

தண்ணீர் அவுன்ஸ் 1

ஒன்று சேர்த்து இந்தவிதமாய் 3-மணி நேரத்திற் கொருதரம் கொடுத்து வரலாம்.

## பிரசவத்திற்குப்பின் இரத்தப் பெருக்கு—Flooding After Labour

பிரசவத்திற்கு முன்னுகவேனும்; பிரசவ சமயத்திலேனும்; பிரசவித்த ஒன்றிரண்டு நிமிஷத்திலேனும் இரத்தப்பெருக் கேற்படுவதுண்டு. இதையே **பிரசவப் பெரும்பாடு** என்று கூறுவர். பிரசவித்த ஒரு மணி நேரம் வரையில் இரத்தப்பெருக் குண்டாகா திருந்தால் பின்னர் ஏற்படாது.

பிரசவித்தவுடன் நாடி நடை சற்று தளர்ந்திருந்து; சற்று நேரத்திற்கெல்லாம் படபடப்பாய் நடக்க வாரம்பித்தாலும்; பிரசவித்த ஸ்திரீ அலுத்துப்போயிருக்கும்போது நாடி தீவிரப்பட்டாலும்; இரத்தப்பெருக் கேற்படலாம்.

படிப்படியாகவாவது, இருந்தாப்போ லிருந்தாவது, சூதகப்பெருக் குண்டாகும். இரத்தப்பெருக்கை அதிகப்பட விட்டால், அதிக களைப்பும், மயக்கமுமுண்டாகி, நாடி நடை க்ஷீணித்து, முகம் வெளுத்து, வியர்வை பெருகி, மேல்மூச்சுக் கண்டு சிகிச்சைக்கு வசப்படா தொளியும்.

### உப சிகிச்சை

ரோகஸ்திரீயைத் தரைமட்டமாய் படுக்கவைத்து இடுப்பு கச்சையை இறுக்கிக் கட்டிவிடவேண்டும். ஐஸ் (Ice) தண்ணீரை யோனிக்குள் அடிக்கலாம்; குளிர்ந்த தண்ணீரில் துணியை நனைத்துக் கடிதம், அடிவயிறு இவற்றில் போடலாம்; ஐஸ் கட்டிகளை யோனிக்குள் செலுத்தி வைக்கலாம். இரத்தப்பெருக்கு நின்றவுடன் அடிவயிற்றில் தடவி பார்க்க கருப்பையில்கட்டிகள் தட்டுப்பட்டால், ஜாக்ரதையாகக் கையினல் அதை அப்புறப்படுத்த வேண்டும். இரத்தப் பெருக்குச் சமனப்பட்டதும், கருப்பையை சுடு தண்ணீரால் கழுவி, அடிவயிறு, முதுகு இவ்விடங்களில் சுடு தண்ணீர் ஒற்றிடம் கொடுக்கலாம்.

இரத்தப்பெருக்கு இருக்கும் சமயம் களைத்துப் போகாமலும், ஊக்கம் குன்றுமலு மிருக்க கொஞ்சம் பிராந்தி (Brandy) யுடன் தண்ணீர் சேர்த்துக் கொடுக்கலாம். மாமிச சூப்புகள் (Soup) கொடுக்கலாம்.

### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | ஓமம் | ரூபாயெடை 1 | வெங்காயம் | ரூபாயெடை | 1 |
| | மிளகு | ,, 1 | வெந்தயம் | ,, | 1 |
| | சுக்கு | ,, 1 | கடுக்காய் | ,, | 1 |
| | மாசிக்காய் | ,, 1 | அதிமதுரம் | ,, | 1 |
| | | | முற்றினபுளியிலைசாறு | அவுன்ஸ் | 12 |

ஒன்று சேர்த்து, மேற்படி சாற்றால் அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி ஒரு அவுன்ஸ் வீதம் காலை மாலை கொடுத்து வரலாம்.

(2) பாலாதிசாரக் கஷாயம் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | எக்ஸ்டிராக்ட் எர்காட் லிக்குட் (Extract Ergot Liquid) | துளி | 20 |
| | டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | ,, | 8 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து, இந்தவிதமாய் கலந்து நாள் ஒன்றுக்கு 3 தடவை கொடுத்து வரலாம்.

## பிரசவத்திற்குப்பின் ஒற்றைத் தலைவலி—Hemicrania After Labour

பிரசவமான சிலநாட்களுக்குப் பின்னர் சிரசின் பின்புறம், நெற்றி, கன்னம், புருவம் முதலிய விடங்களில் வெடித்துப்போவதைப்போன்ற குத்துவலி

யுண்டாகும். இதைச் கிருந்திரசிவாத மென்பர். இவ்வியாதி யுள்ளவர்கள் குழந்தைக்குப் பால் கொடுக்கக்கூடாது.

**சிகிச்சை**

(1) இஞ்சிச்சாறு அவுன்ஸ் 48 நல்லெண்ணை அவுன்ஸ் 48

ஒன்று சேர்த்துக் காய்ச்சிவடித்து ஸ்நானம் செய்து வரலாம்.

(2) எருக்கம்வேர் ரூபாயெடை 1 அரிதாரம் ரூபாயெடை 1

ஒன்று சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றால் அரைத்து ஒரு மெல்லிய துணியில் தடவி திரியாகச்செய்து, உலர்த்தி கொளுத்தி புகையை முகரலாம்.

(3) ராஜாங்கக் கொம்பரக்குத் தயிலத்தால் ஸ்நானம் செய்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(4) பியூட்டல் குளோரல் ஐட்ரஸ் (Butel Chloral Hydros) கிரைன்ஸ் 40
டிஞ்சர் ஜெல்சமி (Tincture Gelesemii) துளி 40
கிளிசரின் (Glycerine) டிராம் 3
தண்ணீர் அவுன்ஸ் 4

ஒன்று சேர்த்து, முதல் தடவை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து, பின் 2-மணி நேரத்திற் கொருதடவை அரை அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

குறிப்பு:—மறுநாளும் வலியிருந்தால் 6-மணி நேரத்திற் கொருதடவை ½-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## பிரசவத்திற்குப் பின்காணும் வியர்கூரு சுரம்—Miliary Feve After Labour

பிரசவத்திற்குப்பின் ஸ்திரீகள், உஷ்ணமான பானங்களையும், காரமான பதார்த்தங்களையும் உட்கொள்ளுவதினால், முகம், கழுத்து, முதுகு, முதலிய விடங்களிலும்; சிலருக்கு திரேகம் முழுவதிலும், தினைப்போன்ற வியர்கூறுகளுடன் சுரம் காய்வதுண்டு. இதைத் தினைச் சுரமென்றும் சொல்லுவர். இச்சுரத்தில் அடிக்கடி வியர்வையுண்டாகும்

**சிகிச்சை**

(1) பல்விஸ் அமைலி (Pulvis Amyli) டிராம் 6
ஸிங் ஆக்ஸைட் (Zinc Oxide) ,, 1½
பல்விஸ் காம்பர் (Pulvis Camphor) ,, 1½

ஒன்று சேர்த்து மேல்பிரயோகமாக வியர்கூருகளில் தடவலாம்.

(2) மாக்னிஷியம் சல்பேட் (Magnesium Sulphate) டிராம் 1
ஓலியம் கஜபுட்டி (Oleum Cajuputi) துளி 1
சிரப் டோலு (Syrup Tolu) டிராம் 2
லிக்கர் மாக்னிஷியம் கார்போனேட் (Liquor Magnesium Carbonate) அவுன்ஸ் 2

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை, கொஞ்சம் தண்ணீரில் ஒரு தேக்கரண்டி மருந்து கலந்துக் கொடுத்து வரலாம்.

## பிரசவத்திற்குப்பின் கால் வீக்கம்—Oedema of Legs After Labour

இரத்தம் கெட்டு மிகுந்த பலயீனமாயிருந்த ஸ்திரீகளுக்கே இது உண்டாகலாம்; முதல் பிரசவத்தில் கால்வீக்கம் கண்டால், பின் எல்லா பிரசவங்களிலும் வீக்கம் காணும்.

தொடையின் முன்பக்கத்திலிருந்து ஆரம்பமாகி, இடுப்பின் கீழ்பாகங்களிலும், சில சமயம் உடல் முழுவதும் வீக்கமுண்டாவதுண்டு; சிலருக்கு ஒரு காலிலாகிலும், சிலருக்கு இரு கால்களிலுலாகிலு முண்டாகும். இவ்வீக்கத்திஞல், சுரம், குளிர் நடுக்கம், திரேகவாட்சி, தலைவலி முதலியவைகளுமிருக்கும்; நாடிநடை தீவிரமாகவிருக்கும்; உடம்பில் வலிகண்டு, வலியுள்ளவிடங்களில் வீக்கம் கண்டு, பளபளப்பாக விருக்கும்; சில சமயம் அரையில் நெறி கட்டுவதுமுண்டு. நாவில் மாவுபடிந்து, முட்கள் முளைத்திருக்கும். இந்த வீக்கம் 15, 20-நாளையில் குணப்பட்டுப் போவதுமுண்டு; சிலருக்கு நீண்டநாளிருப்பதுண்டு.

### சிகிச்சை

(1) நாராயண மண்டூர செந்தூரம்; திரிலோகச் செந்தூரம்; துரிசு பஸ்பம்; அயமெழுகு, ராஜாமிர்த சஞ்சீவி லேகியம்; சிந்தாதி லேகியம்; திரிபுவன செந்தூரம்; கரிசலாங்காணிச் சூரணம்; இவைகள் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (2) | ஸ்பிரிட் ஜூனிபர் (Spirit Juniper) | துளி | 45 |
| | காபீன் சிட்ரஸ் (Caffine Citras) | கிரைன்ஸ் | 3 |
| | டிஞ்சர் கனபிஸ் இன்டிகா (Ticture Cannabis Indica) | துளி | 6 |
| | ஸ்பிரிட் குளோரோபாம் (Spirit Chloroform) | ,, | 15 |
| | இன்பியூஷன் ஸ்கோபாரி (Infusion Scoparii) | அவுன்ஸ் | 1 |

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு அவுன்ஸ் தண்ணீரில் ½-அவுன்ஸ் மருந்து சேர்த்துக் கொடுத்து வரலாம்.

## பிரசவத்திற்குப்பின் கைகால் எரிவு:—

சில ஸ்திரீகளுக்குப் பிரசவத்திற்குப் பின் கை கால் எரிச்சலுண்டாகும். இதை அழல்வாத மென்று கூறுவர்.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | சுக்கு | ரூபாயெடை | 1 | கிராம்பு | ரூபாயெடை | 1 |
| | மிளகு | ,, | 1 | அதிமதூரம் | ,, | 1 |
| | திப்பிலி | ,, | 1 | ஏலம் | ,, | 1 |
| | ஓமம் | ,, | 1 | * கலியாணப்பூசணிவற்றல் | ,, | 1 |

* கலியாண பூசணிக்காயைப் பிளந்து, விரையையும், சோற்றையும் போக்கி, துண்டித்து காயவைத்தது.

ஒன்று சேர்த்துச் சூரணித்து, காலை மாலை ஒரு திரிகடிபிரமாணம் சூரணத்தில் வெண்பாவட்டைச் சாறு 2-துளியும், தேன் 4-துளியும் விட்டுக் கலந்து கொடுத்து வரலாம்.

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஏலம் | ரூபாயெடை | 1 | செங்கழுநீர்க்கிழங்கு | ரூபாயெடை | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | கையாந்தகரைச்சாறு | அவுன்ஸ் | 12 |
| கோஷ்டம் | ,, | 1 | பசும்பால் | ,, | 12 |
| செண்பகப்பூ | ,, | 1 | நல்லெண்ணெய் | ,, | 12 |
| வெட்டிவேர் | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து, தலையிலும் தடவி, கால்களிலும் தடவி வரலாம்.

(3)

| | | |
|---|---|---|
| பொட்டாஷியம் புரோமைட் (Potassium Bromide) | டிராம் | 1 |
| இன்பியூஷன் சார்ஸா (Infusion Sarsae) | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்று தடவை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## பிரசவத்திற்குப்பின் நாவரட்ச்சி—Thirst After Labour

பிரசவத்திற்குப்பின் குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும்போது, ஆகார வேறுபாட்டினால் தாகமும், நாவரட்ச்சியும் காண்பதுண்டு.

### சிகிச்சை

(1) மகா தாளிசப்பத்திரிச் சூரணம் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

(2)

| | | |
|---|---|---|
| ஆஸிட் பாஸ்போரிக் டில் (Acid Phosphoric Dil) | டிராம் | 2 |
| பார்லி அரிசிக் கஞ்சிநீர் (Barley Water) | அவுன்ஸ் | 40 |

ஒன்று சேர்த்து, தாகமுண்டாகும் போதெல்லாம் 2, 3-அவுன்ஸ் கொடுத்து வரலாம்.

## பிரசவத்திற்குப் பின் பயித்தியம்:—

இதைப் **பிரசவப் பயித்திய** மென்று சொல்லப்படும். இதைப் பற்றிய விவரம் 380-ம் பக்கம் "கர்ப்பவதிகள் பயித்தியம்" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## பிரசவத்திற்குப் பின் பிராணமோசமான மயக்கம்:—

பிரசவத்திற்கு பின் ஆபத்தான மயக்க மென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## பிரசவத்திற்குப் பின் வயிறு பழுத்தல்:—

23-ம் பக்கம் "வயிறு பழுத்தல்" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

## பிரசவத்திற்குப் பின் வயிற்றுப் பொருமல்—Flatulance After Labour

பிரசவத்திற்குப்பின் ஆகார விகல்பத்தினால் வயிற்றுப் பொருமலும், வயிற்று வலியு முண்டாவதுண்டு.

### சிகிச்சை

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெருங்காயம் | ரூபாயெடை | $\frac{1}{2}$ | கடுக்காய் | ரூபாயெடை | 2 |
| வசம்பு | ,, | $\frac{3}{4}$ | திப்பிலி | ,, | $2\frac{1}{4}$ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கொடிவேலிவேர்பட்டை | ,, | 1 | கோஷ்டம் | ,, | $2\frac{3}{4}$ |
| சுக்கு | ,, | $1\frac{1}{4}$ | சிவதைவேர் | ,, | 3 |
| ஓமம் | ,, | $1\frac{3}{4}$ | | | |

ஒன்று சேர்த்து இளவறுப்பாய் வறுத்துச் சூரணத்திக்கொண்டு பசு நெய்யில் திரிகடி பிரமாணம் சேர்த்துக் குழப்பிக் கொடுக்கலாம். (பத்தியம்.)

(2) ராஜசிந்தாதி லேகியம்; மகாதாளிசப்பத்திரிச் சூரணம் முதலியவைகள் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | பொட்டாஷியம் கார்போனேட் (Potassium Carbonate) | டிராம் | 1 |
| | டிஞ்சர் ஜென்ஷன் கோ (Tincture Gentain Co) | ,, | 3 |
| | இனபியூஷன் கலம்பா (Infusion Calumbae) | அவுன்ஸ் | 5 |

ஒன்று சேர்த்து, 4-மணி நேரத்திற் கொருதரம் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## பிரசவிக்கக் கஷ்டப்பட்டால்—Difficult in Parturition

சம்பூரண பிரசவ நாட்களில், தகுதியானவிதமாய் இடுப்பு வலி கண்டு பனிக்குட முடைந்தும், சிரசு உதயமாகாம லாவது; அல்லது சிரசு உதயமாகி நீண்டநேரம் சிசு வெளிப்படாதிருந்தால் சிகிச்சை செய்யவேண்டியது அவசியமாகும். பனிக்குட முடைந்த வெகு நேரத்திற்குப் பின்னும், சிரசு உதயமாகாமல் தாமதப்படும்பக்ஷத்தில், உதயமாகப்போகும் உருப்பு இன்னதென அறிந்துகொள்ள வேண்டும். சிரசுமாத்திரம் உதயமாவதுபோ லிருந்தால் கீழ் கண்ட சிகிச்சைகள் பயனுடையதாக விருக்கும். மற்ற விவரங்களுக்கு 16-ம் பக்கம், "தாமதப் பிரசவ" மென்ற தலைப்பின்கீழ் பார்க்கவும்.

### சிகிச்சை

(1) நாய் மண்டை ஓட்டை சூரணித்து, சிற்றாமணக்கெண்ணெயில் குழப்பி உள்ளுக்கும் கொடுத்து அடிவயிற்றிலும் தடவலாம்.

(2) பசலியிலைச்சாறு அவுன்ஸ் 6-ம், நல்லெண்ணெய் அவுன்ஸ் 6-ம் ஒன்று சேர்த்துக் கொடுக்கலாம்.

(3) சிவனார்வேம்பை மூலைப்பாலி லரைத்து அடிவயிற்றில் தடவலாம்.

| | | | |
|---|---|---|---|
| (4) | டார்டார் எமட்டிக் (Tartar Emetic) | கிரைன்ஸ் | 10 |
| | தண்ணீர் | அவுன்ஸ் | 10 |

ஒன்று சேர்த்து 10-நிமிஷத்திற் கொருதரம் ஒரு தேக்கரண்டி யளவாகக் கொடுத்து வந்தால் வாந்தியுண்டாகி, சிரசு உதயமாகும்.

## பிரசவித்தபின் காணும் நீரடைப்பு—Anuria After Labour

பிரசவமான 8, 12-மணி நேரங்களுக்குள் மூத்திரம் கழியவேண்டும். அதற்குள்ளாக மூத்திரம் கழிவதினால் தோஷமில்லை; ஆனால், மூத்திரம் கழியவில்லையானால் சிகிச்சை செய்யவேண்டும். அது அநேகமாய் எல்லோருக்கும் ஏற்படுவதில்லை. கஷ்டப்பிரசவம், தாமதப் பிரசவம் இவைகளினால் பாதை யடைந்தவர்களுக்கு ஒரு சமயம் ஏற்படலாம். குறித்தநேரத்திற்குள் நீரிறங்கவில்லையானால் சிலாகையினால் (Catheter) வெளிப்படுத்தலாம்.

சிகிச்சை

(1) கர்ப்பவதிகள் நீரடைப்புக்குச் சொல்லிய மருந்துகளைக் கொடுத்து வரலாம்.

| | | | |
|---|---|---|---|
| (2) | லைக்கர் பொட்டாஷ் (Liquor Potash) | டிராம் | 2 |
| | பொட்டாஷியம் நைட்ராஸ் (Potassium Nitras) | ,, | 2 |
| | டிஞ்சர் ஷல்லி (Tincture Scillae) | ,, | 6 |
| | ஸ்பிரிட் ஈதர் நைட்ரோசி (Spirit Aether Nitrosi) | ,, | 3 |
| | சுடுதண்ணீர் | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு அவுன்ஸ் தண்ணீரில் 2-தேக்கரண்டி மருந்து கலந்து கொடுத்து வரலாம்.

## பிரசவித்தபின் காணும் மலச்சிக்கல்—Constipation After Labour

பிரசவித்த 4, 5-நாட்களுக்கு மலம் கழியாதிருப்பது ஒரு வகையில் நன்மையைத் தரக்கூடியதாகும்; 4, 5-நாட்களுக்குப்பின் மலம் தானாகவே கழியவில்லையானால் இலகு விரேசன காரிகளால் மலம் கழியும்படியாகச் செய்யவேண்டும்; 4, 5-நாட்களுக்குப்பின் மலம் கழியவில்லையானால் தலைவலி, தலைபாரம், வயிற்றுவலி இவைகளுண்டாகும்.

சிகிச்சை

(1) காய்ந்தரோஜா மொக்குகளை நெய்யில் வறுத்துச் சூரணித்துக்கொண்டு, $\frac{1}{8}$-ரூபாயெடை சூரணத்துடன் சமன் சர்க்கரைச் சேர்த்துக் கொடுக்கலாம்.

(2) நிலாவரை அல்லது சாக்கொன்றை இலையுடன், உப்பு, புளி, மிளகாய் பெருங்காயம் சேர்த்து, துவையலாகவரைத்து ஆகாரத்துடன் உட்கொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| (3) | மாக்னிஷியம் கார்போனேட் (Magnesium Carbonate) | கிரைன்ஸ் | 40 |
| | பல்விஸ் ரீயை (Pulvis Rhei) | ,, | 15 |
| | பல்விஸ் சிஞ்ஜிபரிஸ் (Pulvis Ziugiberis) | ,, | 5 |

ஒன்று சேர்த்துக் கொடுக்கலாம்.

## பிரசவித்தபின் காணும் வயிற்றோட்டம்—Diarrhoea After Labour

பிரசவித்தபின் ஜீரண உறுப்புகள் மிகுந்த பலயீன மடைந்திருக்குமபோது கடினமான ஆகாரங்களை உட்கொண்டதினால் இந்த வயிற்றோட்டமேற்படுகிறது; இந்த வயிற்றோட்டத்தில் குடல்களின் செய்கைகள் பேதப்படுமானால் அசாத்தியமாகவே முடியும்; ஆதலால், ஆரம்ப சிகிச்சை மிகவும் அத்தியாவசியமாகும்.

சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | காட்டாத்திப்பூ | ரூபாயெடை | 1 | நாவற்பழக்கொட்டை | ரூபாயெடை | 1 |
| | நெல்லிவற்றல் | ,, | 1 | மாம்பருப்பு | ,, | 1 |
| | கோரைக்கிழங்கு | ,, | 1 | விளாம்பட்டை | ,, | 1 |
| | வட்டத்திருப்பிவேர் | ,, | 1 | சுக்கு | ,, | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஈசுரமூலிவேர் | ,, | 1 | அதிவிடயம் | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | வெட்பாலையரிசி | ,, | 1 |
| வில்வப்பிஞ்சு | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்துச் சூரணித்து வைத்துக்கொண்டு, காலை மாலை அரிசி கழுவிய தண்ணீர் அவுன்ஸ் 2-ல் திரிகடி பிரமாணம் கலக்கிக் கொடுத்து வரலாம்.

(2) லகு அதிசார மாத்திரை; லகு கட்டுவாங்க மாத்திரை; ராஜவில்வாதி லேகியம்; அயச்செந்தூரம்; ஜாதிபலாதிச் சூரணம் கொடுத்து வரலாம்; செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (3) ஆஸிட் சல்பியூரிக் டில் (Acid Sulphuric Dil) | டிராம் | $1\frac{1}{2}$ |
| டிஞ்சர் ஓபியம் (Tincture Opium) | ,, | 1 |
| டிஞ்சர் சின்னமோனி (Tincture Cinnamoni) | ,, | $\frac{1}{2}$ |
| சிரப் சிம்பிள் (Syrup Simple) | ,, | 3 |
| ஆக்கு காம்பர் (Aqua Camphor) | அவுன்ஸ் | 6 |

ஒன்று சேர்த்து, வயிற்றால் போகும் ஒவ்வொரு தடவையும் ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

### பிரசவித்தபின் மூன்றும் மாதத்திலுண்டாகும் வயிற்றுப்புண்— Intestinal Irritations After Labour

பிரசவித்த மூன்றுமாதத்தில் ஜீரணக் கருவிகள் புண்பட்டு, ஓயாத வயிற்றோட்டத்தையும், வயிற்றுவலியையு முண்டுபண்ணும். சிலசமயம் காச்சல், வாந்தி, தலைவலி முதலியவைகளு மேற்படும். இது சிகிச்சைக்கு வசப்படாவிட்டால் விபத்துண்டாகலாம்.

#### சிகிச்சை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) அதிவிடயம் | ரூபாயெடை | 3 | கொத்தமல்லி | ரூபாயெடை | 3 |
| சிற்றாமுட்டிவேர் | ,, | 3 | வெட்டிவேர் | ,, | 3 |
| சந்தனம் | ,, | 3 | சீந்தில்தண்டு | ,, | 3 |
| பற்பாடகம் | ,, | 3 | பூனைபுழுக்கம்வேர் | ,, | 3 |

ஒன்று சேர்த்துப் பொடித்து, 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு 6-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிய கஷாயத்தில் காலை மாலை 2, 3-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

(2) அயச்செந்தூரம்; ராஜவில்வாதி லேகியம்; ஜாதிபலாதிச்சூரம் கொடுத்து வரலாம். செய்முறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | |
|---|---|---|
| (3) பிஸ்மத் சப்நைட்ரஸ் (Bismuth Subnitras) | கிரைன்ஸ் | 15 |
| சோடா பைகார்ப் (Soda Bicarb) | ,, | 30 |
| டிஞ்சர் ஜெண்ஷன் கோ (Tincture Gentain Co) | துளி | 45 |
| கம் அக்கேஷியா (Gum Acacia) | டிராம் | 1 |
| தண்ணீர் | அவுன்ஸ் | 3 |

ஒன்று சேர்த்து, நாள் ஒன்றுக்கு 3-தடவை ஆகாரத்திற்குப் பின் 1-அவுன்ஸ் வீதம் கொடுத்து வரலாம்.

## பிரசவித்தபின் வரும் சுவாசகாசம்—Asthma Afte Labour

இதைச் சூடா்காச மென்று சொல்லப்படும். அநேகமாக க்ஷயரோகமுள்ளவர்களுக்கும், குடும்பத்தில் காசநோயுள்ளவர்களுக்கு மட்டுமிது உண்டாவதுண்டு.

இந்தக் காசவியாதியில் சுரம் 104, 105-டிகிரிவரை யிருக்கும். வியர்வையதிகம் காணும்; நாவரட்சி யுண்டாகும். கடினமான தலைவலியும், திரேகாதியந்த வலியுமுண்டாகும். வயிற்றுப்பொருமல், வயிற்றோட்டம், மயக்கம், மூச்சுத் திணரல் இவைகளேற்படும்.

சுடர் காசம் 5, 6, 9, 18-நாட்களில் விபத்தையுண்டாக்குமென்றும், 18-நாட்கள் கழிந்தபின சௌகர்யமடையுமென்றும் தமிழ் வைத்திய சாஸ்திரங்கள் கூறுகின்றன.

### சிகிச்சை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | கோரோசனை | ரூபாயெடை | 3 | இலவங்கம் | ரூபாயெடை | 3 |
| | கோரைக்கிழங்கு | ,, | 3 | செண்பகப்பூ | ,, | 3 |
| | கோஷ்டம் | ,, | 3 | மிளகு | ,, | 3 |
| | கொத்தமல்லி | ,, | 3 | கொடிவேலி | ,, | 3 |
| | அதிமதுரம் | ,, | 3 | பேரீச்சம்பழம் | , | 3 |
| | ஏலம் | ,, | 3 | திராக்ஷைப்பழம் | ,, | 3 |

ஒன்று சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றால் மைபோலரைத்துக், கழற்சிக்காய் அவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து வைத்துக்கொண்டு, காலை மாலை சுடு தண்ணீரில் ஒரு மாத்திரை வீதம் 10-தினங்களுக்குக் கொடுத்து வரலாம். (பத்தியம்.)

(2) வியாக்கிரியாதி ரசாயணம்; மகாராஜத பஸ்பம்; உலகோத்தமச் செந்தூரம்; திரிவிக்ரம ரசச் செந்தூரம்; வீரசூதக சிந்தாமணி; பவள பஸ்பம்; துரிசு பஸ்பம்; மகாதாளிசப்பத்திரிச் சூரணம்; சுவர்ண கோரோசனை மாத்திரை; திரிலோக ரக்ஷாமணி மாத்திரை; மகா தூதுளைக் கிருதம்; திப்பிலி ரசாயனம்; ராஜாங்கக் கொம்பரக்குத் தைலம் இவற்றை உபயோகித்து வரலாம். செயமுறை 6-ம் பாகம் பார்க்கவும்.

| | | | |
|---|---|---|---|
| (3) | அமோனியம் ஐயோடைட் (Ammonium Iodide) | டிராம் | 2 |
| | எக்ஸ்டிராக்ட் கிரிண்டிலியா லிக்குட் (Extract Grindilia Liquid) | ,, | ½ |
| | டிஞ்சர் லொபிலியா (Tincture Lobelia) | ,, | 1 |
| | டிஞ்சர் பெல்லடோனு (Tincture Belladonnae) | ,, | 1 |
| | சிரப் புருனி வெர்ஜீனியா (Syrup Pruni Verginianae) | ,, | 1 |
| | ஆக்குவா டிஸ்டில்டு (Aqua Distilled) | அவுன்ஸ் | 4 |

ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 3-தடவை ஒரு அவுன்ஸ் தண்ணீரில் ஒரு தேக்கரண்டி மருந்து சேர்த்துக் கொடுத்து வரலாம்.

# ஸ்திரீ பால சிகிச்சை

## ஆறும் பாகம்

## அவுஷத முறைகள்

## PHARMACOPOEIA

### (1) அகஸ்தியர் குழம்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுத்திசெய்தாசம் | ரூபாயெடை | $\frac{3}{4}$ | கருஞ்சீரகம் | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| சுத்திசெய்தஅரிதாரம் | ,, | $\frac{3}{4}$ | திப்பிலி | ,, | $\frac{3}{4}$ |
| சுத்திசெய்தமனோசிலை | ,, | $\frac{3}{4}$ | பெருங்காயம் | ,, | $\frac{3}{4}$ |
| சுத்திசெய்தகருநாவி | ,, | $\frac{3}{4}$ | இந்துப்பு | ,, | $\frac{3}{4}$ |
| சுத்திசெய்தவெங்காரம் | ,, | $\frac{3}{4}$ | † சுத்திசெய்தநேர்வாளம் | ,, | 8 |
| கடுகுரோகிணி | ,, | $\frac{3}{4}$ | காட்டாமணக்குப்பருப்பு | ,, | 4 |

ஒன்று சேர்த்து 6-மணி நேரம் மைபோலரைத்து, பீங்கான் பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—ஒரு பணவெடை (காலையில் மட்டும்.)

உபயோகம்:—குளிர்சுரம்; பித்தசுரம்; வாதசுரம்; சன்னி; அண்டவாதம்; மூலவாயு; நீர்க்கடுப்பு; நீர்ச்சுருக்கு; கல்லடைப்பு; தேள் கொட்டல்; மகோதரம்; விஷம்; பித்தவெட்டை; இருமல்; அதிசாரம்; இரத்தமூலம்; வாதம்; பாண்டு; தாமத ருது; சூதகவாயு நீங்கும்.

#### அநுபானங்கள்

அண்டவாதத்திற்கு:—இஞ்சிச்சாறு
அதிசாரத்திற்கு:—சாதிக்காய்த் தூள்
இரத்தமூலத்திற்கு:—பசுநெய்
இருமலுக்கு:—கடுக்காய்த் தூள்
கல்லடைப்பிற்கு:—இளநீர் தண்ணீர்
குளிர்சுரத்திற்கு:—இஞ்சிச்சாறு
சன்னிக்கு:—இஞ்சிச்சாறு, வெள்ளைப்பூண்டுச்சாறு
சிலேத்பனசுரத்திற்கு—திப்பிலி கஷாயம்
சூதகவாயுவிற்கு:—வெள்ளாட்டுத் தயிர்
தாமத ருதுவிற்கு:—செம்மறியாட்டுப் பால்
தேள் கொட்டலுக்கு:—வெங்காயச்சாறு
நீர்கடுப்புக்கு:—இளநீர் தண்ணீர்

† சுத்திமுறை 60-ம் பக்கம் பார்க்கவும்.

நீர்சுருக்கிற்கு:—இளநீர் தண்ணீர்
பாண்டுக்கு:—பசும்பால்
பித்தசுரத்திற்கு:—கொத்தமல்லிக் கஷாயம்
பித்தத்திற்கு:—பசும்பால்
பித்தவெட்டைக்கு:—விலாமிச்சவேர் கஷாயம்
மகோதரத்திற்கு:—அகத்தியிலைச்சாறு
மூலவாயுவிற்கு:—இஞ்சிச்சாறு
வாதசுரத்திற்கு:—நொச்சியிலைச்சாறு
வாதத்திற்கு:—தேங்காய்ப் பால்
வாயுவிற்கு:—சிற்றாமணக்கெண்ணெய்
விஷத்திற்கு:—வெற்றிலைச்சாறு
வெட்டைக்கு:—அகத்தியிலைச்சாறு
**பத்தியம்:**—இச்சா பத்தியம்.

## (2) அசுவக்கேந்திச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இலவங்கம் | ரூபாயெடை | 1 | திப்பிலி | ரூபாயெடை | 16 |
| சிறுநாகப்பூ | ,, | 2 | சுக்கு | ,, | 32 |
| காசா ஏலம் | ,, | 4 | ‡ அமுக்கிராக்கிழங்கு | ,, | 64 |
| சீரகம் | ,, | 8 | சீனகற்கண்டுத்தூள் | ,, | 50 |

கற்கண்டு நீங்கலாக மற்றவைகளை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்துக் கொண்டு, பின் கற்கண்டுத்தூளைச் சேர்த்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—திரிகடிப்பிரமாணம். (காலை மாலை)

**உபயோகம்:**—மேகம்; சுவாகாசசம் 5; பாண்டு 5; குன்மம் 8; அஸ்திசுரம் தீரும். இரத்தசுத்தியை யுண்டுபண்ணும்.

**அநுபானம்:**—பசும்பால் அல்லது பசுநெய்.

**பத்தியம்:**—இச்சா பத்தியம்.

## (3) அண்டச் சுண்ணம்

ஒரு கோழிமுட்டைக்குச் சிறு துளையிட்டு, அதில் கொஞ்சம் குப்பைமேனிச்சாறு விட்டு, அந்த முட்டைக்குக் குப்பைமேனியிலையை அரைத்து 3-விரல் கனத்தில் கவசம் செய்து பின் சீலை மண் செய்து, 25-வாட்டியில் புடமிட பஸ்பமாகும்.

**பெரியவர்கள் அளவு:**—6-கிரைன்ஸ். (காலை மாலை)

**உபயோகம்:**—அண்டரோகம் 4-ம் தீரும்.

**அநுபானம்:**—பசுநெய் அல்லது வெண்ணெய்.

**பத்தியம்:**—காப்பான் பதார்த்தம் நீக்கல். இச்சா பத்தியம்.

‡ பசும்பாலில் வேகவைத்து எடுத்துக் கொள்ளவும்.

## (4) அண்டத் தைலம்

கோழிமுட்டையை அவித்து, அதன் மஞ்சள் கருவைமட்டும் ஒரு இரும்புச் சட்டியில் போட்டு வறுக்க எண்ணெய் கசியும்; அந்த எண்ணெயுடன் கோரோசனை; குங்குமப்பூ சேர்த்து வைத்துக் கொள்ளவும்.

**குழந்தைகள் அளவு:**—5, 6 துளி நாக்கில் தடவலாம். உடம்பிலும் தடவலாம்.

**உபயோகம்:**—மாந்தம்; இழுப்பு தீரும்.

**பத்தியம்:**—இச்சா பத்தியம்.

## (5) அதிசார மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சாதிக்காய் | ரூபாயெடை | 1 | கிராம்பு | ரூபாயெடை | 1 |
| சாதிப்பத்திரி | ,, | 1 | அபினி | ,, | 1 |
| மாசிக்காய் | ,, | 1 | வெந்தயம் | ,, | 1 |
| கடுக்காய்ப்பூ | ,, | 1 | கசகசா | ,, | 1 |
| சீரகம் | ,, | 1 | கோரோசனை | ,, | 1 |
| அதிவிடயம் | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்து முலைப்பால் விட்டரைத்து, உளுந்தவ்வளவு பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**அளவு:**—பெரியவர்களுக்கு 2, குழந்தைகளுக்கு ½-மாத்திரை. (காலை மாலை)

**உபயோகம்:**—அதிசாரம் 6; சீதபேதி தீரும்.

**அநுபானம்:**—தேன், முலைப்பால்.

## (6) அப்ரகக் கோரோசனை மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| * அப்ரகச்செந்தூரம் | ரூபாயெடை | 1 | குங்கும்பூ | ரூபாயெடை | 1 |
| | | | ஏலம் | ,, | 1 |
| † ரசசெந்தூரம் | ,, | 1 | கிராம்பு | ,, | 1 |
| ¶ சுத்திசெய்த ரச கற்பூரம் | ,, | 1 | சாதிக்காய் | ,, | 1 |
| | | | கோஷ்டம் | ,, | 1 |
| கோரோசனை | ,, | 1 | அக்ரகாரம் | ,, | 1 |
| பச்சைக்கற்பூரம் | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்து, வெற்றிலைச் சாற்றால் 6-மணி நேரமும், சந்தனக் கஷாயத்தால் 6-மணி நேரமும், செண்பகப்பூக் கஷாயத்தால் 6-மணி நேரமும் அரைத்து, உளுந்து பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

---

* அப்ரகச் செந்தூரம் 7-ம் இலக்கம் பார்க்கவும்.

† இரச செந்தூரமென்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

¶ சுத்தி செய்யவேண்டும்.

**அளவு:**—பெரியவர்களுக்கு 1, சிறுவர்களுக்கு ½, குழந்தைகளுக்கு ¼ (காலை மாலை)

**உபயோகம்:**—சுரம் 64; கபரோகம் 96-ம் தீரும்.

**அநுபானம்:**—தேன், முலைப்பால்.

**பத்தியம்:**—இச்சா பத்தியம்.

## (7) அப்ரகச் சேந்தூரம்

பசுமூத்திரமும் வெள்ளாட்டு மூத்திரமும் சமன்கலந்து, அதில் கிருஷ்ண அப்ரகத்தை 7-முறை காய்ச்சித் தோய்த்து, பொடித்து, தண்ணீரில் கரைத்து, சல்லடையில் வடிகட்டி யெடுத்த தூள் ரூபாயெடை 3; இதை முள்ளங்கி, சாற்றால் 6-மணி நேரம் அரைத்து, பில்லை தட்டி, கலயத்திலிட்டு சீலைமண் செய்து 200-வரட்டியில் புடமிடவும்; இந்தவிதமாகவே, முள்ளங்கிச்சாறு, நாவற்பட்டைச்சாறு, ஆலம்பட்டைச்சாறு, அரசம்பட்டைச்சாறு, அத்திப்பட்டைச்சாறு, (இவைளின் கஷாயமாவது) கொடிவேலிவேர் கஷாயம், எலுமிச்சம்பழச்சாறு, கவுதும்பைச்சாறு, கரந்தைச்சாறு, சிறு செருப்படைச்சாறு, கரிசலாங்காணிச்சாறு, முருங்கைப்பூச்சாறு, இவைகளின் சாற்றால் வகைக்கு மூன்று மூன்று மணிநேரமரைத்து, பத்துப் பத்து விறகால் புடம்போட்டெடுக்கச் செந்தூரமாகும்.

## (8) அப்ரக பஸ்பம்

சுத்திசெய்த அப்ரகப்பொடியை குமிழம்பட்டை சாற்றால் 12-மணி நேரம் அரைத்து பில்லை தட்டி காயவைத்து, கலயத்திலிட்டு சீலை மண்செய்து 25-வரட்டியில் புடமிடவும். இப்படியே ஆலம்பாலால் அரைத்து இரண்டு புடமும்; எலுமிச்சம்பழச்சாற்றால் அரைத்து ஒரு புடமும் போட பஸ்பமாகும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு பணவிடை (காலை மாலை)

**உபயோகம்:**—க்ஷயம் - 4; மேகம் - 20; கிரிச்சரம் - 4; பிரமேகம்-21; கிராணி - 11; சன்னி - 13; மேகவாயு; அஸ்திசுரம்; அஸ்திவெட்டை; கைகாலெரிவு; தீரும்.

**அநுபானம்:**—நெய்; தேன்; வெண்ணெய்.

## (9) அயக்காந்த சேந்தூரம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| § அயப்பொடி | ரூபாயெடை | 8 | லிங்கம் | ரூபாயெடை | 16 |
| § காந்தப்பொடி | ,, | 8 | ¶ ரசம் | ,, | 1 |
| கந்தகம் | ,, | 16 | வெங்காரம் | ,, | 1 |

எலுமிச்சம் பழச்சாற்றால் 6-மணி நேரமும், பொற்றலைக்கையாந் தகரைச் சாற்றால் 6-மணி நேரமுமரைத்து, சிறு பில்லைகளாகத் தட்டி கலயத்திலிட்டு சீலைமண் செய்து 50-எருவில் புடம்போட்டெடுக்கச் செந்தூரமாகும்.

---

§ அரத்தால்ராவிய தூள். ¶ சுத்தி செய்ய வேண்டும்.

பெரியவர்கள் அளவு:— ஒரு பணவிடை (காலை மாலை)

உபயோகம்:—பாண்டு 5; கிராணி 11; பித்தம் 40; வாதம் 80; அக்கினி மந்தம்; வாயு; குன்மம் தீரும்; தாதுபுஷ்டியும் திரேக சிகப்புமுண்டாகும்.

அநுபானம்:—தேன், நெய், வெண்ணெய்.

பத்தியம்:—கரப்பான் பதார்த்தம், புளி, புகையிலை, இச்சாபத்தியம்.

## (10) அயச்சேந்தூரம்

§ அரப்பொடி ரூபாயெடை-10, கெந்தகம் ரூபாயெடை-10, ஒன்று சேர்த்து, எலுமிச்சம்பழச்சாறுவிட்டு, 12-மணி நேரம் அரைத்து காயவைத்து ஒரு இரும்புச் சட்டியில் போட்டு 3-மணிநேரம் வறுக்க செந்தூரமாகும்.

பெரியவர்கள் அளவு:—3, 4-பணவிடை (காலை மாலை)

உபயோகம்:—பாண்டு-5; காமாலை-13; சோகை-5; கிராணி-11; சூலை-18; மேகம்-20; தீரும்.

அநுபானம்:—தேன், பசுநெய்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

## (11) அயமெழுகு

* சுத்திசெய்த அரப்பொடி ரூபாயெடை-3, இதை இன்புருச்சாறு-12 அவுன்ஸ் விட்டு வெயிலில் வைத்துக் காயவைத்து, பின் புளிப்பு மாதுளைச்சாறு விட்டு, 12-மணிநேரம் அரைத்துக் காய்ந்த பின் தேன்விட்டு 3-மணிநேரம் மெழுகுபோலரைத்துக் கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—ஒரு குன்றிமணி பெரிய உருண்டை (காலைமாலை)

உபயோகம்:—சோகை-9, பாண்டு 5, காமாலை-13, பித்தவெட்டை தீரும்.

அநுபானம்:—பனைவெல்லம், பசுநெய்.

பத்தியம்:—புளி, புகையிலை, கருவாடு, மீன்.

## (12) அஷ்டமூல நாசலேகியம்

| | | | |
|---|---|---|---|
| கொடிவேலித்தூள் ரூபாயெடை | 16 | சுக்குத்தூள் ரூபாயெடை | 4 |
| கருணைக்கிழங்குத்தூள் ,, | 32 | மிளகுத்தூள் ,, | 2 |
| வெல்லம் ,, | 108 | | |

கருணைக்கிழங்கை துண்டுகளாக்கி உலர்த்தி சூரணித்துக் கொள்ளவும். பின் வெல்லத்தை பாகாக்கி, தூள்களைக் கொட்டிக் கிண்டிக்கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—ஒரு கொட்டைப்பாக்களவு (காலை, மதியம், சாயந்திரம்.)

உபயோகம்:—மூலம்-21, தீரும்.

பத்தியம்:—காரமான பதார்த்தங்கள்.

§ அரத்தால் ராவியதூள். * சுத்திமுறை 270-ம் பக்கம் பார்க்கவும்.

## (13) இரசச் சேந்தூரம்

இரசம் ரூபாயெடை-3, கெந்தகம் ரூபாயெடை-3, இவைகளைச் சுத்தி செய்து கருந்துளசிச் சாற்றால் 2-நாளரைத்து, காயவைத்து ஒரு கனமான கண்ணாடி சீசாவில் போட்டு, வாயைமூடி 7-சீலை மண்செய்து ஒருபெரிய சட்டியில் 6-விரற்கடை மணல் கொட்டி அதன் மேல் சீசாவை வைத்து மணலால்மூடி தீபாக்கினியாயும், மலாக்கினியாயும், காடாக்கினியாயும் ஒவ்வொரு நாள் எரித்து எடுக்க செந்தூரமாகும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு குன்றிமணியெடை (காலை மாலை)

**உபயோகம்:**—சன்னி-13, வாதம்-80, சுரம்-64, சூலை-18, தீரும்.

**அநுபானம்:**—நெய், வெல்லம்.

**பத்தியம்:**—புளி, புகையிலை, போகம்.

## (14) இராஜகேசரிச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | ரூபாயெடை | 1 | பேரரத்தை | ரூபாயெடை | 1 |
| ஏலம் | ,, | 1 | மாசிக்காய் | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 | வால்மிளகு | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | சாதிக்காய் | ,, | ½ |
| திப்பிலி | ,, | 1 | கஸ்தூரிமஞ்சள் | ,, | ¼ |
| இலவங்கப்பட்டை | ,, | 1 | | | |

ஒவ்வொன்றையும் தனித்தனியே சூரணித்து யெடைபோட்டெடுத்து ஒன்று சேர்த்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—கால் ரூபாயெடை. (காலை, மதியம், மாலை.)

**உபயோகம்:**—காசம் 5; க்ஷயம் 4; சிலேத்பனம் 20; இருமல் தீரும்.

**அநுபானம்:**—தேன், வெற்றிலைச்சாறு

## (15) ஈயப் பிளாஸ்திரி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரசகர்பூரம் | ரூபாயெடை | ½ | * முத்துவெள்ளை | ரூபாயெடை | 1 |
| * ஈயச்செந்தூரம் | ,, | 6 | நல்லெண்ணெய் | அவுன்ஸ் | 10 |
| மிருதார்சிங்கி | ,, | ½ | | | |

ஒன்று சேர்த்துக் கருநிறம் வரும்வரை பதமாய்க் காய்ச்சி எடுத்துக் கொள்ளவும்.

**உபயோகம்:**—இரணங்களுக்குத் துணியில் தடவிப் போடலாம்.

## (16) உலகோத்தமச் சேந்தூரம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மனோசிலை | ரூபாயெடை | 3 | இலிங்கம் | ரூபாயெடை | 3 |
| வெள்ளைப்பாஷாணம் | ,, | 3 | காந்தம் | ,, | 3 |

* கடையில் கிடைக்கும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அரிதாரம் | ,, | 3 | கந்தகம் | ,, | 3 |
| ரசகற்பூரம் | ,, | 3 | | | |

இவற்றைச் சுத்தி செய்து குப்பைமேனிச்சாறு, வெற்றிலைச்சாறு, பருத்தியிலைச்சாறு, வெள்ளெருக்கின் சாறு, துளசிச்சாறு, வேலிப்பருத்திச்சாறு, பொடுதலைச்சாறு இவற்றால் தனித்தனியே ஒவ்வொரு நாள் அரைத்து, பில்லைத் தட்டி நிழலில் காயவைத்து, வெற்றிலையை அரைத்துக் கவசம் செய்து, ஒரு பெரிய சட்டியில் வைத்து மேல் சட்டிமூடி சீலைமண் செய்து, தீயாக்கினியால் ஒரு நாள் எரிக்க மேல்சட்டியில் செந்தூரம் பதங்கி யிருக்கும்.

**பெரியவர்கள் அளவு:**—$\frac{1}{4}$-குன்றிமணி யெடை. (காலை மாலை)

**உபயோகம்:**—சூலை 18; சன்னி 13; மேகம் 20; சுரம் 64; வாதம் 80. கிராணி 11; குன்மம் 8; கண்டமாலை 18; அண்டரோகம் 4; வலிப்பு 5; பவுத்திரம் 15; காசம் 5; குஷ்டம் 18; கரப்பான்; தேமல்; கன்னப்புற்று; அரையாப்பு தீரும்.

**அநுபானம்:**—நெய், வெண்ணெய், தேன்.

**பத்தியம்:**—புளி, நல்லெண்ணெய், புகையிலை. (கடும் பத்தியம்)

## (17) ஏகாதசச் செந்தூரம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுத்திசெய்த இலிங்கம் | | | சுத்திசெய்தவீரம் | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| | ரூபாயெடை | 3 | காடிக்காரம் | ,, | |
| இரசச்செந்தூரம் | ,, | 3 | | காலேயரைக்கால் | |

முதலில் லிங்கத்தையும், பின் செந்தூரத்தையும், பிறகு வீரத்தையும் அரைத்துச் சேர்த்து, கடைசியில் காடிக்காரத்தைச் சேர்த்து அரைக்கவும்; ஈரப்பட்டால் வெயிலில் வைக்கவும்.

**பெரியவர்கள் அளவு:**—1, $1\frac{1}{2}$-நெல்லிடை (காலை மாலை)

**உபயோகம்:**—சூதகவாயு, சூதகக்கட்டு, சூதகசன்னி, சுரம்-64, சன்னி பாதசுரம் தீரும்.

**அநுபானம்:**—தேன்.

**பத்தியம்:**—புளி, புகையிலை, நல்லெண்ணெய் கருவாடு.

## (18) ஓமத்தீனீர்

இரண்டு வீசை ஓமத்தை மெல்லிய துணியில் முடிந்து, ஒரு பாத்திரத்தில் 4-படி தண்ணீர்விட்டு, அடியில் ஓமமுடிச்சி படாதபடி ஒரு நூலில் கட்டி தொங்கவிட்டு, தண்ணீர் சுண்டும்வரை எரிக்க, தண்ணீரில் தயிலம் மிதக்கும்; அதைக் கோழியிறகால் சேகரித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு தேக்கரண்டி (காலை மாலை)

**உபயோகம்:**—சகல வயிற்றோட்டம் அஜீரணம் தீரும்.

**அநுபானம்:**—தண்ணீர்.

## (19) கணத் தைலம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கற்பூரவள்ளிச்சாறு | அவுன்ஸ் | 12 | கருஞ்சீரகம் | ரூபாயெடை | 1 |
| புளியாரைச்சாறு | ,, | 12 | வெந்தயம் | ,, | 1 |
| கோவையிலைச்சாறு | ,, | 12 | கோஷ்டம் | ,, | 1 |
| வெங்காயச்சாறு | ,, | 12 | அக்ரகாரம் | ,, | 1 |
| கற்றாழைச்சாறு | ,, | 12 | மாசிக்காய் | ,, | 1 |
| கையாந்தகரைச்சாறு | ,, | 12 | கடுக்காய்பிஞ்சு | ,, | 1 |
| பொன்னாங்காணிச்சாறு | ,, | 12 | சாதிக்காய் | ,, | 1 |
| பசும்பால் | ,, | 48 | சாதிபத்திரி | ,, | 1 |
| சிற்றாமணக்கெண்ணெ | ,, | 48 | வெள்ளைப்பூண்டு | ,, | 1 |
| இலவங்கப்பட்டை | ரூபாயெடை | 1 | கோரோசனை | ,, | 1 |
| இலவங்கப்பத்திரி | ,, | 1 | குங்குமப்பூ | ,, | 1 |
| சீரகம் | ,, | 1 | சாதிக்காய் | ,, | 1 |

சாறு, எண்ணெ இவற்றை ஒன்று சேர்த்து, பின் கோரோசனை, குங்குமப்பூ, சாதிக்காய் நீங்கலாக மற்ற சரக்குகளை பசும்பாலிலரைத்துக் கரைத்து ஒன்று சேர்த்து காய்ச்சி வடித்து பின் மூன்றையும் பொடித்துச் சேர்த்துக் கொள்ளவும்.

**அளவு:**—பெரியவர்களுக்கு 1-அவுன்ஸ் (காலையில் மட்டும்)

**உபயோகம்:**—கணைச்சுரம், மாந்தம், உப்பிசம், சிரங்கு, இரணம், கர்ப்ப வெட்டை, பாண்டு, நீரிழிவு, விடாதசூடு, கைகால் எரிவு தீரும்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (20) கணை நெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பழம்பாசிச்சாறு | அவுன்ஸ் | 12 | துளசிச்சாறு | அவுன்ஸ் | 12 |
| வல்லாரைச்சாறு | ,, | 12 | கீழ்க்காய்நெல்லிச்சாறு | ,, | 12 |
| பொன்னாங்காணிச்சாறு | ,, | 12 | தண்ணீர்விட்டான்கிழங்குசாறு | ,, | 12 |
| கோவையிலைச்சாறு | ,, | 12 | நெய் | ,, | $2\frac{1}{4}$ |
| வில்வவேர் | ரூபாயெடை | 10 | சாதிக்காய் | ரூபாயெடை | $2\frac{1}{2}$ |
| சிற்றாமுட்டிவேர் | ,, | 10 | கல்நார் பஸ்பம் | ,, | $2\frac{1}{2}$ |
| நன்னாரிவேர் | ,, | 10 | சாதிபத்திரி | ,, | $2\frac{1}{2}$ |
| மருதம்பட்டை | ,, | 10 | அதிமதுரம் | ,, | $2\frac{1}{2}$ |
| கருவேலம்பட்டை | ,, | 10 | திப்பிலி | ,, | $2\frac{1}{2}$ |
| ஆடுதின்னாப்பாலைக்காய் | ,, | 10 | சீரகம் | ,, | $2\frac{1}{2}$ |

எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து, காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

**அளவு:**—1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 1, 2-தேக்கரண்டி

**உபயோகம்:**—சகல கணைக்கும்.

**பத்தியம்:**—காரப்பான் பதார்த்தங்கள் நீக்கவும்.

## (21) கபாங்குச லேகியம்

| | | | |
|---|---|---|---|
| திப்பிலி | ரூபாயெடை 30 | இலவங்கப்பட்டை | ரூபாயெடை 3 |
| மிளகு | ,, 15 | கடுக்காய் | ,, 3 |
| சுக்கு | ,, 15 | தான்றிக்காய் | ,, 3 |
| குரோசாணி ஓமம் | ,, 3 | நெல்லிவற்றல் | ,, 3 |
| சோம்பு | ,, 3 | கிராம்பு | ,, 3 |
| சீரகம் | ,, 3 | ஏலம் | ,, 3 |
| பேராத்தை | ,, 3 | கொடிவேலி | ,, 3 |
| சிற்றரத்தை | ,, 3 | சர்க்கரை | ,, 32 |
| தாளிசபத்திரி | ,, 3 | தேன் | போதுமானது |
| இலவங்கப்பத்திரி | ,, 3 | | |

தனித்தனியே இளவறுப்பாக வறுத்துச் சூரணித்து யெடை போட்டு ஒன்று சேர்த்து, தேன்விட்டு பிசரி லேகிய பதமாக்கிக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு கொட்டைப்பாக்களவு (காலை மாலை)

**உபயோகம்:**—கபரோகம் 96-ம் தீரும்.

## (22) கரப்பான் எண்ணெ

| | | | |
|---|---|---|---|
| பூவரசம்பட்டை | ரூபாயெடை 30 | கண்டங்கத்திரி | ரூபாயெடை 30 |
| செங்கத்தாரிப்பட்டை | ,, 30 | நில்வாகை | ,, 30 |
| பூதகரப்பான்பட்டை | ,, 30 | | |

ஒன்று சேர்த்துப் பொடித்து 48-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு எட்டொன்ருய்க் காய்ச்சிய கஷாயம் அவுன்ஸ் 6-ம்;

| | | | |
|---|---|---|---|
| வெள்ளாட்டுப்பால் | அவுன்ஸ் 48 | கார்போகரிசி | ரூபாயெடை 1 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, 48 | வெள்ளைப்பூண்டு | ,, 1 |
| மிளகு | ரூபாயெடை 1 | வசம்பு | ,, 1 |
| கருஞ்சீரகம் | ,, 1 | சதகுப்பை | ,, 1 |
| வலம்புரிக்காய் | ,, 1 | பறங்கிப்பட்டை | ,, 1 |

சரக்குகளை வெள்ளாட்டுப்பாலில் அரைத்துக் கரைத்துக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

அளவு:—1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 2-தேக்கரண்டி (காலையில் மட்டும்)

**உபயோகம்:**—சகல கரப்பானுக்கும், புண்ணுக்கும்.

**பத்தியம்:**—கரப்பான் பதார்த்தம்.

## (23) கரிசலாங்காணிச் சூரணம்

| | | | |
|---|---|---|---|
| *கரிசலாங்காணி | ரூபாயெடை 3 | தாளிசப்பத்திரி | ரூபாயெடை $\frac{3}{4}$ |
| *மூக்குரெட்டை | ,, $\frac{3}{4}$ | கொத்தமல்லி | ,, $\frac{3}{4}$ |

* நிழலில் காயவைத்துக் கொள்ளவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | ,, | $\frac{3}{4}$ | ஏலம் | ,, | $\frac{3}{4}$ |
| மிளகு | ,, | $\frac{3}{4}$ | அதிமதுரம் | ,, | $\frac{3}{4}$ |
| திப்பிலி | ,, | $\frac{3}{4}$ | மரமஞ்சள் | ,, | $\frac{3}{4}$ |
| சீரகம் | ,, | $\frac{3}{4}$ | கடுக்காய் | ,, | $\frac{3}{4}$ |
| கருஞ்சீரகம் | ,, | $\frac{3}{4}$ | தான்றிக்காய் | ,, | $\frac{3}{4}$ |
| நெல்லிவற்றல் | ,, | $\frac{3}{4}$ | | | |

தனித்தனியே சூரணித்து யெடை போட்டுச் சேர்த்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—திரிகடிப் பிரமாணம் (காலை, மதியம், மாலை)

**உபயோகம்:**—காமாலை, பாண்டு, இரத்தக் குறைவு தீரும்,

**பத்தியம்:**—புளி; இச்சாபத்தியம்.

## (24) கரிசாலை எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கரிசலாங்காணிச்சாறு | அவுன்ஸ் | 12 | வெள்ளைப்பூண்டு | ரூபாயெடை | 3 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 12 | | | |

வெள்ளைப்பூண்டைப் பொடித்துப் பொட்டுக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு அவுன்ஸ் (காலையில் மட்டும்.)

**உபயோகம்:**—காமாலைத் தீரும்.

**பத்தியம்:**—புளி; இச்சாபத்தியம்.

## (25) கலிங்காதி யுப்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| எருமைமோர் | அவுன்ஸ் | 48 | வெடியுப்பு | ரூபாயெடை | 1 |
| வரிகுமட்டிக்காய்ச்சாறு | ,, | 48 | இந்துப்பு | ,, | 1 |
| கறியுப்பு | ரூபாயெடை | 24 | வளையலுப்பு | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | சவுட்டுப்பு | ,, | 1 |
| குரோசாணி யோமம் | ,, | 1 | பெருங்காயம் | ,, | 2 |

ஒன்று சேர்த்துக் காய்ச்சி எடுத்துச் சூரணித்துக்கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—$\frac{3}{4}$-ரூபாயெடை

**உபயோகம்:**—சூதக வயிற்றுவலி, குன்மம், வயிற்றுவலி, அஜீரணம், பொருமல், விக்கல் தீரும்.

**அநுபானம்:**—நீராகாரம்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (26) கல்நார் பஸ்பம்

ஒரு கலயத்தில் வெள்ளெருக்கம்பூவைத் தட்டிப்போட்டு அதில் கல்நார் துண்டுகளை வைத்து, அதன்மேல் பூவைப்போட்டு சீலைமண்செய்து 50-எருவில் புடம்போட வெட்டையாகும். அதை வெற்றிலைச்சாற்றால் 6-மணி நேரம்

அரைத்து பில்லைதட்டி கலயத்தில் போட்டு சீலைமண்செய்து, 50-எருவில் புடம்போட செந்தூரமாகும்.

## (27) கழிச்சல் மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | ரூபாயெடை | 1 | கோரைக்கிழங்கு | ரூபாயெடை | 1 |
| அதிவிடயம் | ,, | 1 | கிராம்பு | ,, | 1 |
| அபின் | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| கஞ்சா | ,, | 1 | வெந்தயம் | ,, | 1 |
| சாதிக்காய் | ,, | 1 | சிறுநாகப்பூ | ,, | 1 |
| சாதிபத்திரி | ,, | 1 | புளியாரை | ,, | 1 |
| ஏலம் | ,, | 1 | காட்டாத்திப்பூ | ,, | 1 |
| குரோசாணி ஓமம் | ,, | 1 | மாதுளம்பிஞ்சு | ,, | 1 |
| வாழைப்பூ | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்து, பிட்டவியலாக அவித்து, நன்றாய் வெந்த பின் வாழைப்பூச்சாறுவிட்டு ஒருமணிநேரம் அரைத்து, மிளகு பெரிய மாத்திரைகளாகச்செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு மாத்திரை. (காலை மாலை)

**உபயோகம்:**—சகல கழிச்சலுக்கும்.

**அநுபானம்:**—மாவு சர்க்கரை.

## (28) கஸ்தூரி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஸ்தூரி | ரூபாயெடை | 1 | சாதிக்காய் | ரூபாயெடை | 2 |
| குங்குமப்பூ | ,, | 3 | கோஷ்டம் | ,, | 2 |
| சுக்கு | ,, | 4 | அக்ரகாரம் | ,, | 2 |
| கிராம்பு | ,, | 2 | | | |

ஒன்று சேர்த்து முலைப்பால் விட்டரைத்து, உளுந்தவ்வளவு பெரிய மாத்திரைகளாக உருட்டி உலர்த்திக் கொள்ளவும்.

**அளவு:**—குழந்தைகளுக்கு ஒரு மாத்திரை பெரியவர்களுக்கு 5, 6- மாத்திரை.

**உபயோகம்:**—மாந்தம், சுரம், சன்னி, வலிப்பு, கபரோகங்கள் தீரும்.

**அநுபானம்:**—முலைப்பால்.

## (29) கிரந்தி எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோடகசாலை | ரூபாயெடை | 5 | விட்டுணுகிரந்தி | ரூபாயெடை | 5 |
| கற்பூரவள்ளி | ,, | 5 | கிரந்திநாயகம் | ,, | 5 |
| கொன்றை | ,, | 5 | ஓரிலைத்தாமரை | ,, | 5 |
| கறிவேப்பிலை | ,, | 5 | பிரமி | ,, | 5 |
| செஞ்சந்தனம் | ,, | 1 | கோஷ்டம் | ,, | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| கருஞ்சீரகம் | ,, | 1 | ஓமம் | ,, | 1 |
| ஏலம் | ,, | 1 | கிராம்பு | ,, | 1 |
| சாதிக்காய் | ,, | 1 | மாசக்காய் | ,, | 1 |
| சாதிபத்திரி | ,, | 1 | சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 24 |
| செம்பரத்தம்பூ | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்துப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு அவுன்ஸ் (காலையில் மட்டும்)

**உபயோகம்:**—கிரந்தி 9-ம் தீரும்.

**பத்தியம்:**—புளி, நல்லெண்ணெய், கடுகு, புகையிலை, போகம்.

## (30) குமட்டிக்காய்க் குழம்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வரிகுமட்டிகாய்சாறு | அவுன்ஸ் | 48 | இந்துப்பு | ரூபாயெடை | 3 |
| இலைக்கள்ளிப்பால் | ,, | 48 | சுக்கு | ,, | 3 |
| கல்லுப்பு | ரூபாயெடை | 24 | திப்பிலி | ,, | 3 |
| வெடியுப்பு | ,, | 3 | பெருங்காயம் | ,, | 3 |
| வளையலுப்பு | ,, | 3 | | | |

ஒன்று சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதத்தி லெடுத்துக்கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—¾-ரூபா யெடை (காலையில் மட்டும்)

**உபயோகம்:**—உதாரோகம், சூதகக்கட்டு, சூதகவலி தீரும்.

**அநுபானம்:**—பனைவெல்லம்.

**பத்தியம்:**—வாயுபதார்த்தங்கள். இச்சாபத்தியம்.

## (31) குமரி சஞ்சீவித் தயிலம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சோற்றுகற்றாழைசாறு | அவுன்ஸ் | 96 | நெல்லிவற்றல் | ரூபாயெடை | 2 |
| நல்லெண்ணெய் | ,, | 96 | கோஷ்டம் | ,, | 2 |
| பசும்பால் | ,, | 96 | சடாமாஞ்சில் | ,, | 2 |
| கடுகுரோகிணி | ரூபாயெடை | 2 | சீரகம் | ,, | 2 |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | 2 | பூஞ்சாந்துப்பட்டை | ,, | 2 |
| சந்தனம் | ,, | 2 | ஏலம் | ,, | 2 |
| கிராம்பு | ,, | 2 | பச்சிலை | ,, | 2 |
| அதிமதுரம் | ,, | 2 | பூலாங்கிழங்கு | ,, | 2 |
| அக்ராகாரம் | ,, | 2 | இலவங்கப்பத்திரி | ,, | 2 |
| செவ்வல்லிக்கிழங்கு | ,, | 2 | இலவங்கப்பட்டை | ,, | 2 |
| சுக்கு | ,, | 2 | செண்பகப்பூ | ,, | 2 |
| மிளகு | ,, | 2 | ஆனைத்திப்பிலி | ,, | 2 |
| திப்பிலி | ,, | 2 | பெருஞ்சீரகம் | ,, | 2 |
| கடுக்காய் | ,, | 2 | மஞ்சிஷ்டிக்கிழங்கு | ,, | 2 |
| தான்றிக்காய் | ,, | 2 | மஞ்சள் | ,, | 2 |

ஒன்று சேர்த்துப் பசும்பாலா லரைத்துக் கரைத்துக் காய்ச்சிவடித்து 24-நாள் நெல்லுக்குள் வைத்திருந்து எடுத்துக் கொள்ளவும்.

**உபயோகம்:**—மேகம்-20, சுரம்-64, பித்தம்-40, குன்மம்-8, பாண்டு-5, பித்த வரட்சி இவைகள் ஸ்நானம் செய்வதால் தீரும்.

## (32) கோவ்வைக்காய் கோரோசனை மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோசனை | ரூபாயெடை | $\frac{1}{2}$ | கருஞ்சீரகம் | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| ஓமம் | ,, | $\frac{1}{2}$ | திப்பிலி | ,, | $\frac{1}{2}$ |
| கிராம்பு | ,, | $\frac{1}{2}$ | | | |

கோரோசனை நீக்கி இதர சரக்குகளைப் பொடித்து கொவ்வைக்காயுள் வைத்து, உமிக்காந்தலில் கருகிப்போகாமல் வேகவைத் தெடுத்து, பின்கோரோசனையையும் சேர்த்து தண்ணீர் விட்டு மைபோலரைத்து மிளகு பிரமாணமாய் மாத்திரை செய்து உலர்த்திக்கொள்ளவும்.

அளவு:—குழந்தைகளுக்கு ஒரு மாத்திரை (காலை மாலை)

**உபயோகம்:**—சுரம், இராச்சுரம்; முறைச்சுரம், சளி தீரும்.

**அநுபானம்:**—முறைக் காச்சலுக்கும், சளிக்கும் முலைப்பால், காச்சல்களுக்கு இஞ்சிச்சாறு; தேன்.

## (33) கோரோசனை மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோசனை | ரூபாயெடை | 1 | கிராம்பு | ரூபாயெடை | 1 |
| குங்குமப்பூ | ,, | 1 | கோஷ்டம் | ,, | 1 |
| கற்பூரம் | ,, | 1 | அக்ரகாரம் | ,, | 1 |
| பச்சைக்கற்பூரம் | ,, | 1 | * இரசபஸ்பம் | ,, | 1 |
| ஏலம் | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்து சந்தனக் கஷாயத்தால் 6-மணிநேரம் அரைத்து, உளுந்து பெரிய மாத்திரைகள் செய்துகொள்ளவும்.

**அளவு:**—6-முதல் 9-வயதுக் குழந்தைகளுக்கு ஒரு மாத்திரை (காலை மாலை)

**உபயோகம்:**—குழந்தைகள் சுரம், ஜலதோஷம், மாந்தம் தீரும்.

**அநுபானம்:**—முலைப்பால்

## (34) சந்திரகாசத் தயிலம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நல்லெண்ணெய் | அவுன்ஸ் | 48 | அதிமதுரம் | ரூபாயெடை | 3 |
| பசும்பால் | ,, | 48 | மிளகு | ,, | 3 |
| சீரகம் | ரூபாயெடை | 3 | சண்பகமொட்டு | ,, | 1 |

சரக்குகளை பசும்பாலால் அரைத்துக் கரைத்து எரித்து வடித்துக்கொள்ளவும்.

**உபயோகம்:**—ஸ்நானம் செய்ய இருமல், ஈளை, காசம் தீரும்.

---

* மகாரசபஸ்பம் பார்க்கவும்.

## (35) சர்வேசுர ரசநஸ்யம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரசம் | ரூபாயெடை | 1 | வெங்காரம் | ரூபாயெடை | 1 |
| கந்தகம் | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| நாவி | ,, | 1 | மிளகு | ,, | 1 |
| மனோசிலை | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |

முதலில் ரசத்தையும் கந்தகத்தையும் ஒன்றித்தரைத்து, பின் மற்றவைகளையும் சேர்த்து அரைத்துக் கொள்ளவும்.

உபயோகம்:—உளுந்தளவு நஸ்யமிட, சன்னி; மயக்கம், மண்டை கபம் தீரும்.

## (36) சிங்கி பஸ்பம்

மான்கொம்பைத் துண்டுகளாக நறுக்கி, மூன்றுநாள் குப்பைமேனிச் சாற்றில் ஊறப்போட்டு, பின் குப்பைமேனி இலையை அரைத்துக் கனமாய் கவசமிட்டு சீலை மண்செய்து 25-வரட்டியில் புடமிட பஸ்பமாகும். அத்துடன் சமன் பவளபஸ்பம் சேர்த்துக் கொள்ளவும்-

பெரியவர்கள் அளவு:—ஒருபணவிடை (காலை மாலை)

உபயோகம்:—இருமல், க்ஷயம், காசம், வெட்டை தீரும்.

அநுபானம்:—கபரோகங்களுக்கு வெண்ணெய், நெய். வெட்டைக்கு நீராகாரம்.

## (37) சிந்தாதி லேகியம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| புளித்தக்காடி | அவுன்ஸ் | 96 | புளியிலை | ரூபாயெடை | 48 |
| புளித்தமோர் | ,, | 96 | இரும்புதுப்பு | ,, | 10 |

ஒன்று சேர்த்து, எட்டொன்றாகச் சுண்டக்காய்ச்சிய:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஷாயம் | அவுன்ஸ் | 12 | சுக்கு | ரூபாயெடை | $\frac{3}{4}$ |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, | 6 | திப்பிலி | ,, | $\frac{3}{4}$ |
| இஞ்சிச்சாறு | ,, | 6 | மிளகு | ,, | $\frac{3}{4}$ |
| தென்னம்பூச்சாறு | ,, | 6 | கடுக்காய் | ,, | $\frac{3}{4}$ |
| கரிசலாங்காணிச்சாறு | ,, | 12 | தான்றிக்காய் | ,, | $\frac{3}{4}$ |
| நெருஞ்சில்சாறு | ,, | 6 | நெல்லிவற்றல் | ,, | $\frac{3}{4}$ |
| கீழ்காய்நெல்லிச்சாறு | ,, | 6 | ஏலம் | ,, | $\frac{3}{4}$ |
| சிறுகீரைச்சாறு | ,, | 6 | கிராம்பு | ,, | $\frac{3}{4}$ |
| சிறுசெருப்படைச்சாறு | ,, | 6 | ஓமம் | ,, | $\frac{3}{4}$ |
| பசும்பால் | ,, | 24 | கோஷ்டம் | ,, | $\frac{3}{4}$ |
| தேன் | ,, | 6 | வால்மிளகு | ,, | $\frac{3}{4}$ |
| நெய் | ,, | 6 | தாளிசபத்திரி | ,, | $\frac{3}{4}$ |
| சடாமாஞ்சில் | ரூபாயெடை | $\frac{3}{4}$ | யானைத்திப்பிலி | ,, | $\frac{3}{4}$ |
| சீரகம் | ,, | $\frac{3}{4}$ | இலவங்கப்பட்டை | ,, | $\frac{3}{4}$ |
| பனைவெல்லம் | ,, | 30 | | | |

சாற்றையும், பாலையும் ஒன்று சேர்த்து, பனைவெல்லத்தைக் கரைத்து பாகு பதமாக்கி, சரக்குகளைத் தனித்தனியே இளவறுப்பாய் வறுத்து சூரணித்து யெடைபோட்டெடுத்துக் கொட்டி நெய், தேன் சேர்த்துப் பதமாய்க் கிண்டிக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—கொட்டைப்பாக்குப் பிரமாணம் (காலை மாலை)

**உபயோகம்:**—பித்தவெட்டை, பாண்டு-5, கிராணி-11, சோகை-9, அக்கினிமந்தம், பொருமல், வாயு, மகோதரம், தீரும்.

**பத்தியம்:**—புளி, புகையிலை, போகம்.

## (38) சுரபூபதி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| * மனோசிலை | ரூபாயெடை | 1 | * இலிங்கம் | ரூபாயெடை | 1 |
| * தாளகம் | ,, | 1 | | | |

ஒன்று சேர்த்து, கறிக்கரணை அல்லது காட்டுக் கரணைக்கிழங்கை குழி செய்து அதற்குள் வைத்து மூடி சீலைமண்செய்து, உமிப்புடம் போட்டெடுத்து, வேலிப்பருத்திச்சாறு விட்டு 24 மணி நேரமரைத்து, உளுந்து பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு மாத்திரை.

**உபயோகம்:**—சுரம்-64, வாதம்-80, கபரோகம் 96-ம் தீரும்.

**அநுபானம்:**—மூலைப்பால்.

**பத்தியம்:**—உப்பு, புளி, நல்லெண்ணெய், புகையிலை.

## (39) சுவர்ணகோரோசனை மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தங்கரேக்கு | ரூபாயெடை | $\frac{1}{2}$ | கோரோசனை | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| † முத்து | ,, | $\frac{1}{2}$ | குங்குமப்பூ | ,, | $\frac{1}{2}$ |
| பவளபஸ்பம் | ,, | $\frac{1}{2}$ | ஏலம் | ,, | $\frac{1}{2}$ |
| இரசச்செந்தூரம் | ,, | $\frac{1}{2}$ | கிராம்பு | ,, | $\frac{1}{2}$ |
| பச்சைக்கற்பூரம் | ,, | $\frac{1}{2}$ | சாதிக்காய் | ,, | $\frac{1}{2}$ |
| * இரசக்கற்பூரம் | ,, | $\frac{1}{2}$ | கோஷ்டம் | ,, | $\frac{1}{2}$ |
| அப்ரகச்செந்தூரம் | ,, | $\frac{1}{2}$ | அக்ரகாரம் | ,, | $\frac{1}{2}$ |

ஒன்று சேர்த்து, வெற்றிலைச்சாறு, சந்தனக் கஷாயம், செண்பகப்பூ கஷாயம் இவற்றால் தனித்தனியே 9-மணி நேரம் அரைத்து, உளுந்து பெரிய மாத்திரையாகச் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒருமாத்திரை குழந்தைகளுக்கு $\frac{1}{2}$-மாத்திரை (காலை மாலை)

* சுத்தி செய்யவேண்டும்.

† ஒரு கலயத்தில் போட்டு சீலைமண்செய்து புடமிட்டு எடுத்துக் கொள்ளவும்.

**உபயோகம்:**—சுரம்-64, சன்னி-13, காசம்-5, வலிப்பு-5, தீரும்.

**அநுபானம்:**—மூலைப்பால்.

## (40) சுவர்ண வெள்ளிபஸ்பம்

அரை ரூபாயெடை சரிகை வெள்ளியையும், ஒரு ரூபாயெடை சுருள் தங்கத்தையும் தனித்தனியே உருக்கி தகடு அடித்து, தனித்தனியே உப்பிலாங் கொடியிலையை அரைத்துக் கவசம் செய்து, பின் சீலைமண்செய்து, 50-எருவில் புடமிட பஸ்பமாகும். இரண்டையும் ஒன்றாக மிஸ்ரமித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு குன்றிமணி யெடை

**உபயோகம்:**—மேகம்-20, சுரம்-64, அதிசாரம்-6, மாந்தம், தாது நஷ்டம் தீரும்.

**அநுபானம்:**—நெய், வெண்ணெய்.

## (41) சௌந்தரியக் கிருதம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நன்னாரிவேர் | ரூபாயெடை | $\frac{1}{4}$ | செம்பரத்தம்பூ | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| கருஞ்சூரைவேர் | ,, | $\frac{1}{4}$ | செம்பரத்தையிலை | ,, | $\frac{1}{4}$ |
| வட்டத்திருப்பிவேர் | ,, | $\frac{1}{4}$ | செங்கத்தாரியிலை | ,, | $\frac{1}{4}$ |
| ஆதண்டைவேர் | ,, | $\frac{1}{4}$ | கிரந்திநாயகம்யிலை | ,, | $\frac{1}{4}$ |
| சிற்றாமுட்டிவேர் | ,, | $\frac{1}{4}$ | செஞ்சந்தனம் | ,, | $\frac{1}{4}$ |
| சீதேவியார்வேர் | ,, | $\frac{1}{4}$ | சீரகம் | ,, | $\frac{1}{4}$ |
| ஆடாதோடையிலை | ,, | $\frac{1}{4}$ | கருஞ்சீரகம் | ,, | $\frac{1}{4}$ |
| மலைதாங்கிவேர் | ,, | $\frac{1}{4}$ | எலுமிச்சையிலை | ,, | $\frac{1}{4}$ |
| அதிமதுரம் | ,, | $\frac{1}{4}$ | வாலுழுவையரிசி | ,, | 1 |
| திப்பிலி | ,, | $\frac{1}{4}$ | கோஷ்டம் | ,, | 1 |
| சாதிக்காய் | ,, | $\frac{1}{4}$ | களிப்பாக்கு | ,, | 1 |
| வெளுச்சிப்பிசின் | ,, | $\frac{1}{4}$ | சதகுப்பை | ,, | 1 |
| ஏலம் | ,, | $\frac{1}{4}$ | செவ்வல்லி | ,, | 1 |
| கிராம்பு | ,, | $\frac{1}{4}$ | கற்றாமரை | ,, | 1 |
| நெய் | அவுன்ஸ் | 12 | | | |

வேர், இலை, சரக்குகளைத் தனித்தனியே சூரணித்து வைத்துக்கொண்டு; நெய்யைக்காய்ச்சி கொஞ்சம் வெங்காயம் சிவக்கும் பதத்தில் இறக்கி; இளஞ் சூடாயிருக்கும்போது, வேர் சூரணங்களைக் கொட்டிக் கிண்டி; பின் இலைச் சூரணங்களையும், அதற்குப் பின் சரக்குச் சூரணங்களையும் கொட்டிக் கிண்டி வடித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—$\frac{1}{2}$, 1-தேக்கரண்டி (காலையில் மட்டும்)

**உபயோகம்:**—சிலந்தி, கரப்பான், கணைச்சூடு, அரையாப்பு, கண்டமாலை, தீரும்.

**பத்தியம்:**—புளி, புகையிலை, நல்லெண்ணெய், கரப்பான் பதார்த்தம்.

## (42) தக்காளிக் கோரோசனை மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோசனை | ரூபாயெடை | ½ | கிராம்பு | ரூபாயெடை | ½ |
| சுக்கு | ,, | ½ | அதிமதுரம் | ,, | ½ |
| மிளகு | ,, | ½ | அக்ரகாரம் | ,, | ½ |
| திப்பிலி | ,, | ½ | கோஷ்டம் | ,, | ½ |
| கடுக்காய் | ,, | ½ | சாதிபத்திரி | ,, | ½ |
| தான்றிக்காய் | ,, | ½ | நன்னாரிவேர் | ,, | ½ |
| நெல்லிவற்றல் | ,, | ½ | சிறுகீரைவேர் | ,, | ½ |
| ஏலம் | ,, | ½ | பொன்னாங்காணிவேர் | ,, | ½ |

ஒன்று சேர்த்து, மணித்தக்காளிச்சாறுவிட்டு, 6-மணி நேரம் அரைத்து இலந்தங்கொட்டைப் பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

அளவு:—குழந்தைகளுக்கு ஒரு மாத்திரை (காலை மாலை)

உபயோகம்:—அச்சரம், சுரம், வயிற்றோட்டம் தீரும்.

அநுபானம்:—இஞ்சிச்சாறு முலைப்பால், தேன்.

## (43) திப்பிலிரசாயனம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திப்பிலி | ரூபாயெடை | 20 | இலவங்கப்பத்திரி | ரூபாயெடை | 2 |
| மிளகு | ,, | 10 | இலவங்கப்பட்டை | ,, | 2 |
| சுக்கு | ,, | 20 | கடுக்காய் | ,, | 2 |
| குரோசாணி ஓமம் | ,, | 2 | தான்றிக்காய் | ,, | 2 |
| சோம்பு | ,, | 2 | நெல்லிவற்றல் | ,, | 2 |
| சிற்றரத்தை | ,, | 2 | கிராம்பு | ,, | 2 |
| பேரரத்தை | ,, | 2 | ஏலம் | ,, | 2 |
| தாளிசபத்திரி | ,, | 2 | கொடிவேலி | ,, | 2 |
| சீரகம் | ,, | 2 | சர்க்கரை | ,, | 50 |
| தேன் | போதுமானது. | | | | |

சரக்குகளை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து சர்க்கரையையும், தேனையும் சேர்த்துப் பிசைந்து கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—கொட்டைப்பாக்களவு (காலை மாலை)

உபயோகம்:—கபரோகம் 96-ம் வாதம் 80-ம் தீரும்.

## (44) திரிபுவனச் செந்தூரம்

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த கந்தகம் ரூபாயெடை 10 | சுத்திசெய்த அரப்பொடி ரூபாயெடை 10 | |
| சுத்திசெய்த காந்தம் ,, 10 | | |

ஒன்று சேர்த்து, சோற்றுக் கற்றாழைச்சாற்றால் 12-மணிநேரம் அரைத்து, ஒரே பில்லையாகத்தட்டி; நன்றாய் வெயிலில் காயவைத்து ஒரு சட்டியில் வைத்து மேல்சட்டி மூடி வாயிக்குச் சீலைமண் செய்து, முதல் நாள் தீபாக்கினி

யாய் எரித்து, பின் இரண்டு நாள் காடாக்கினியாக வெரித்து, 3-நாள் ஆறின பின் எடுத்து பார்க்க பில்லையின் அடியில் பூற்றிருக்கும்; அதை சேகரித்துக் கொள்ளவும். இப்படியே கடைசியாக பூற்கிறவரையில் கற்றாழைச் சாற்றால் அரைத்து அரைத்து மூன்று நாளெரித்து பின் அரைத்து வைத்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—1, $\frac{1}{2}$-குன்றிமணியளவு (காலை மாலை)

**உபயோகம்:**—காமாலை, பாண்டு தீரும்.

**அநுபானம்:**—நெய், தேன்.

**பத்தியம்:**—கடும்பத்தியம். ஆட்டுப்பாலும் சோறும் தான் ஆகும்.

### (45) திரிலோகச் செந்தூரம்

| | | | |
|---|---|---|---|
| சுத்திசெய்த காந்தம் | ரூபாயெடை 5 | சுத்திசெய்தமண்டூரம் | ரூபாயெடை 5 |
| | | சுத்திசெய்த அரப்பொடி | ,, 5 |

ஒன்று சேர்த்து, ஆவாரைச்சாறு, கரிசலாங்காணிச்சாறு, எலுமிச்சம்பழச் சாறு இவைகள் ஒவ்வொரு சாற்றிலும் தனித்தனியே 3-மணிநேரம் அரைத்து, தனித்தனியே ஒவ்வொன்றிலும் 5-வரராகல் புடம்போட செந்தூரமாகும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு பணவிடை (காலை மாலை)

**உபயோகம்:**—பாண்டு, சோபை தீரும். இரத்தம் ஊறும்.

**அநுபானம்:**—தேன், நெய், வெண்ணெய்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

### (46) திரிலோக ரக்ஷாமணி மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| * இலிங்கம் | ரூபாயெடை 6 | * கருநாவி | ரூபாயெடை 6 |
| * தாளகம் | ,, 6 | சுக்கு | ,, 6 |
| * மனோசிலை | ,, 6 | மிளகு | ,, 6 |
| * வெங்காரம் | ,, 6 | திப்பிலி | ,, 6 |

ஒன்று சேர்த்து, இஞ்சிச்சாற்றால் 12-மணி நேரம் அரைத்து, குன்றிமணி பெரிய மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒருமாத்திரை (காலை மாலை)

**உபயோகம்:**—க்ஷயம்-4, காசம்-5, ஈளை, மாந்தாரகாசம் சுரம் 64-ம் தீரும்.

**அநுபானம்:**—இஞ்சிச்சாறு, முலைப்பால்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

### (47) திரிவிக்ரமரசச் செந்தூரம்

| | | | |
|---|---|---|---|
| *இரசம் | ரூபாயெடை 5 | * அரிதாரம் | ரூபாயெடை 5 |
| *வெள்ளைப்பாஷாணம் | ,, 5 | | |

* சுத்தி செய்யவேண்டும்.

ஒன்று சேர்த்து, கையாந்தகரை சாற்றால் 12-மணி நேரம் அரைத்து நிழலில் காயவைத்து, கனத்த கண்ணாடி சீசாவில் போட்டு வாயைமூடி சீலைமண் செய்து, ஒரு பெரிய சட்டியில் மணலைப் பரப்பி சீசாவை வைத்து அதை மணலால் மூடி, தீபாக்கினியாய் 12-மணிநேரம் எரித்து எடுத்து சூரணித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—½-குன்றிமணி யெடை (காலை மாலை)

**உபயோகம்:**—சன்னி-13, சுவாசகாசம்-5, க்ஷயம் 4-ம் தீரும்.

**அநுபானம்:**—நொச்சிச்சாறு.

**பத்தியம்:**—கடும்பத்தியம்.

## (48) துருசு பஸ்பம்

துருசு கட்டிகளை கவுதும்பைச்சாற்றில் ஊறவைத்து, நன்றாய் காயவைத்து பின் கவுதும்பைச் சாற்றால் 3-மணிநேரம் அரைத்துப் பில்லைதட்டி காயவைத்து, மேற்படி இலையை அரைத்துக் கவசம்செய்து பின் 7-சீலைமண் செய்து, 25-வரட்டியில் புடமிட்டு எடுத்து கரு ஊமத்தைச்சாற்றால் 3-மணிநேரம் அரைத்து, மேற்படி யிலையை அரைத்துக் கவசம் செய்து முன்போல் புடமிட பஸ்பமாகும்.

**பெரியவர்கள் அளவு:**—1½, 2-குன்றிமணியளவு

**உபயோகம்:**—சன்னி-13, சுரம்-64, குன்மம்-8, சோகை 5, பாண்டு-5 பித்தம்-40, காசம்-5, காமாலை-13, இரைப்பு, மகோதரம், தோஷம் தீரும்.

**அநுபானம்:**—நெய், வெண்ணெய், வெள்ளாட்டுப்பால்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (49) நக்ஷத்திர மாணிக்கக் கிருதம்

| | | | |
|---|---|---|---|
| தேங்காய்ப்பால் | அவுன்ஸ் 48 | பொடுதலைச்சாறு | அவுன்ஸ் 48 |
| ஆற்றுத்தண்ணீர் | ,, 300 | | |

முதலில் ஆற்றுத்தண்ணீரை மட்டும் எட்டொன்றாகச் சுண்டவைத்து, பின் ஒன்று சேர்த்து, எரித்து நெய்யை வடித்துக்கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—2, 3-தேக்கரண்டி (காலை மாலை)

**உபயோகம்:**— கருநாக்கு சூலை; மேல்வாய்ப் புண்; உள்நாக்கை அரிக்கும் கிரந்தி; பல்லீரை யரிக்கும் கிரந்தி; நாக்கரிப்பு; நாக்குப்புண்; தீரும்.

## (50) நாராயண மண்டூரச் செந்தூரம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| * அரப்பொடி | ரூபாயெடை | 3 | * நவாச்சாரம் | ரூபாயெடை | 3 |
| * மண்டூரம் | ,, | 3 | சங்கு | ,, | 3 |
| * காந்தம் | ,, | 3 | கடல்நுரை | ,, | 3 |
| * கந்தகம் | ,, | 3 | கல்நார் | ,, | 3 |
| * வெங்காரம் | ,, | 3 | | | |

* சுத்தி செய்யவேண்டும்.

ஒன்று சேர்த்து, சோற்றுக் கற்றாழைச்சாற்றால் 24-மணிநேரம் அரைத்து 24-மணிநேரம் கடும்வெயிலில் வைக்க செந்தூரமாகும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு பணவிடை (காலை மாலை)

**உபயோகம்:**—பாண்டு-5, சோகை-5, அக்கினிமாந்தம், வாயு, இரத்தக் குறைவு தீரும்.

**அநுபானம்:**—பசுநெய், வெண்ணெய், பசும்பால், முலைப்பால்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (51) பயிரவவடி (மாத்திரை)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ‡கட்டினலிங்கம் | ரூபாயெடை | 1 | அக்ரகாரம் | ரூபாயெடை | 1 |
| *கருநாவி | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| சாதிபத்திரி | ,, | 1 | திப்பிலி | ,, | 1 |
| சன்னலவங்கப்பட்டை | ,, | 1 | கிராம்பு | ,, | 1 |

ஒன்று சேர்த்து, வெற்றிலைச் சாறு, இஞ்சிச்சாறு இவற்றால் தனித்தனி 3-மணிநேரம் அரைத்து, குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு மாத்திரை (காலை மாலை)

**உபயோகம்:**—இருமல், வாயு, அதிசாரம், குன்மம் தீரும்.

**அநுபானம்:**—முலைப்பால்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (52) பவளபஸ்பம்

பவளங்களைச் சுத்திசெய்து, தேள்கொடுக்கிலையை அரைத்துக் கவசம் செய்து பின் 7-சீலை மண்செய்து 25-வாட்டியில் புடமிட பஸ்பமாகும்.

**பெரியவர்கள் அளவு:**—$\frac{1}{8}$-ரூபாயெடை (காலை மாலை)

**உபயோகம்:**—பித்தம்-40, க்ஷயம்-4, காசம்-5, இருமல், நீர்கடுப்பு, தீரும்.

**அநுபானம்:**—நீர்கடுப்புக்கு நீராகாரம், மற்றவைகளுக்கு பசுநெய், பசு வெண்ணெய்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (53) பாலசஞ்சீவி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோசனை | ரூபாயெடை | 3 | கடுகுரோகிணி | ரூபாயெடை | 3 |
| வெங்காரம் | ,, | 3 | சுக்கு | ,, | 3 |
| † நேர்வாளம் | ,, | 3 | | | |

‡ லிங்கக்கட்டு என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும். * சுத்தி செய்ய வேண்டும். † சுத்திமுறை 60-ம் பக்கம் பார்க்கவும்.

ஒன்று சேர்த்து, முலைப்பாலால் 3-மணிநேரம் அரைத்து கடுகு பிரமாணம் மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**குழந்தைகள் அளவு:**—1, 2-மாத்திரைகள் (காலை மாலை)

**உபயோகம்:**—சுரம், மாந்தம் தீரும்.

**அநுபானம்:**—முலைப்பால்.

## (54) பால சுரகுடோரி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோசனை | ரூபாயெடை | 3 | கோஷ்டம் | ரூபாயெடை | 1 |
| பெருஞ்சீரகம் | ,, | 1 | இலுப்பை அரப்பு | ,, | 1 |
| கருஞ்சீரகம் | ,, | 1 | சகஸ்திரபேதி | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | இந்துப்பு | ,, | 1 |

ஒன்று சேர்த்துச் சோற்றுக் கற்றாழைச் சாற்றால் 6-மணிநேரமும், முலைப் பாலால் 6-மணி நேரமும் அரைத்து, உளுந்து பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**குழந்தைகள் அளவு:**—1, 2-மாத்திரைகள் (காலை மாலை)

**உபயோகம்:**—சகல சுரங்களும் தீரும்.

**அநுபானம்:**—முலைப்பால்.

## (55) பாலசுர விஷஹர மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கருவாப்பட்டை | ரூபாயெடை | 5 | * ஆடுதீண்டாப்பாலை | ரூபாயெடை | 5 |

ஒன்று சேர்த்து எலுமிச்சம்பழச்சாறு விட்டு 3-மணிநேரம் அரைத்து கடுகு பிரமாணம் மாத்திரைகளாக உருட்டி உலர்த்திக் கொள்ளவும்.

**குழந்தைகள் அளவு:**—ஒரு மாத்திரை (காலை மாலை)

**உபயோகம்:**—குழந்தைகள் சகல சுரமும், விஷமும் தீரும்.

**அநுபானம்:**—முலைப்பால்.

## (56) பால சுரஹர மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குங்குமப்பூ | ரூபாயெடை | 3 | திப்பிலி | ரூபாயெடை | 1½ |
| கிராம்பு | ,, | 1½ | கடுக்காய் | ,, | 1½ |
| ஏலம் | ,, | 1½ | தான்றிக்காய் | ,, | 1½ |
| சாதிக்காய் | ,, | 1½ | நெல்லிவற்றல் | ,, | 1½ |
| சந்தனம் | ,, | 1½ | கடுகுரோகிணி | ,, | 1½ |
| சுக்கு | ,, | 1½ | தேவதாரு | ,, | 1½ |
| மிளகு | ,, | 1½ | | | |

ஒன்று சேர்த்து, எலுமிச்சம்பழச்சாற்றால் 6-மணி நேரமும், கண்டங் கத்திரிப்பழச்சாற்றால் 6-மணி நேரமும் அரைத்து, உளுந்து பிரமாணம் மாத் திரைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

---

* நிழலில் காயவைத்துக் கொள்ளவும்.

**குழந்தைகள் அளவு:**—ஒரு மாத்திரை (காலை மாலை)

**உபயோகம்:**—சுரம், குளிர்சுரம், சன்னிதீரும்.

**அநுபானம்:**—முலைப்பால், தேன், இஞ்சிச்சாறு.

## (57) பாலவிநோத சஞ்சீவி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| † நேர்வாளம் | ரூபாயெடை | 3 | சாதிக்காய் | ரூபாயெடை | 3 |
| பச்சைக்கற்பூரம் | ,, | 3 | கருவாப்பட்டை | ,, | 3 |
| சுக்கு | ,, | 3 | | | |

ஒன்று சேர்த்துச் சோற்றுக் கற்றாழைச்சாற்றால் மைபோலரைத்து கடுகளவு மாத்திரைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**குழந்தைகள் அளவு:**—1, 2-மாத்திரைகள்.

**உபயோகம்:**—குழந்தைகள் சுரம், மாந்தம் தீரும்.

**அநுபானம்:**—முலைப்பால், இஞ்சிச்சாறு.

## (58) பாலாதிசாரக் கஷாயம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கொத்தமல்லி | ரூபாயெடை | 1 | சீந்தில்தண்டு | ரூபாயெடை | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 1 | சிற்றாமுட்டி | ,, | 1 |
| வெட்டிவேர் | ,, | 1 | பற்பாடகம் | ,, | 1 |
| குருவிவேர் | ,, | 1 | அதிவிடயம் | ,, | 1 |
| பெருமரத்துப்பட்டை | ,, | 1 | சிறுபூளைக்காஞ்சொறி | ,, | 1 |

ஒன்று சேர்த்திடித்து, இரவிலேயே 24-அவுன்ஸ் தண்ணீரில் போட்டு காலையில் 3-அவுன்ஸாகச் சுண்டக் காய்ச்சிக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—2, 3-அவுன்ஸ்.

**உபயோகம்:**—சுரம், பிரசவித்த பின் உண்டாகும் சுரம், கர்ப்பஸ்திரீகள் சுரம், பிரசவித்த பின் காணும் இரத்தப்பெருக்கு, குழந்தைகள் சுரம், வயிற்றோட்டம் தீரும்.

## (59) பாவன ஓமம்

24 ரூபாயெடை ஓமத்தை இளவறுப்பாய் வறுத்து, கசக்கி உமிநீக்கி 24-மணிநேரம் புளித்தமோரில் ஊறவைத்திருந்து எடுத்து நன்றாய் உலர்த்திய பின் எலுமிச்சம்பழச்சாறு 16-அவுன்ஸூம் இந்துப்பு ரூபாயெடை 10-ஒன்று சேர்த்துக் கரைத்து அதில் 2-நாள் ஊறவைத்து உலர்த்திக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—$\frac{1}{2}$, $\frac{3}{4}$-ரூபாயெடை (காலை மாலை)

**உபயோகம்:**—வயிற்றுவலி, அக்கினிமந்தம், வாயு, வயிற்றுப் பொருமல், அஜீரணம், குன்மம் தீரும்.

---

† சுத்திமுறை 60-ம் பக்கம் பார்க்கவும்.

## (60) நெய்கொட்டான் பழத்தெண்ணெய்

| | | | | |
|---|---|---|---|---|
| * நெய்கொட்டான்பழம் ரூபாயெடை | 3 | வசம்பு | ரூபாயெடை | 3 |
| | | மயிலிறகு சாம்பல் | ,, | 3 |
| வெள்ளைப்பூண்டு ,, | 3 | வேப்பெண்ணெய் | அவுன்ஸ் | 24 |

சரக்குகளைத் தண்ணீர் விட்டரைத்து, எண்ணெயில் கரைத்து எரித்து வடித்துக் கொள்ளவும்.

10, 12-வயதுச் சிறுவர்கள் அளவு:—4, 6-தேக்கரண்டி (காலையில் மட்டும்)

உபயோகம்:—குமரகண்டன் வலிப்பு, காக்கை வலிப்பு தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

குறிப்பு:—வலிப்பு வந்திருக்கும் சமயத்திலும் மற்ற சமயத்திலும் உடம்பில் தடவி வரலாம்.

## (61) புளியாரைக் கிருதம்

| | | | | |
|---|---|---|---|---|
| புளியாரைச்சாறு அவுன்ஸ் | 6 | மாசிக்காய் | ரூபாயெடை | ¼ |
| வள்ளிக்கிழங்குச்சாறு ,, | 6 | அதிமதுரம் | ,, | ¼ |
| பொன்னுங்காணிச்சாறு ,, | 6 | ஏலம் | ,, | ⅛ |
| செவ்விளநீர்தண்ணீர் ,, | 12 | சாதிக்காய் | ,, | ,, |
| பசும்பால் ,, | 30 | சாதிபத்திரி | ,, | ,, |
| பசுநெய் ,, | 30 | கற்கண்டுத்தூள் | ,, | 1 |
| | | சீரகம் | ,, | ¼ |

முதலில் சாறு, நெய், இவற்றை ஒன்றுசேர்த்து சீரகம், மாசிக்காய், அதிமதுரம் இவற்றைப் பசும்பாலிலரைத்துக் கரைத்துக் கலந்து காய்ச்சி வடித்து, அதில் இதர சாக்குகளைச் சூரணித்து கலந்துக் கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—3, 4-தேக்கரண்டி (காலை மாலை)

உபயோகம்:—பித்தவாயு, பித்தவெட்டை, பித்த எரிவு, பித்தமயக்கம், நீர் சுருக்கு, வாந்தி, அரோசிகம் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

## (62) பூவரசம்பட்டை எண்ணெய்

| | | | | |
|---|---|---|---|---|
| பூவரசம்பட்டை ரூபாயெடை | 30 | வாய்விளங்கம் | ரூபாயெடை | 3 |
| பூதகரப்பான்பட்டை ,, | 30 | அமுக்ராக்கிழங்கு | ,, | 3 |
| செங்கத்தாரிப்பட்டை ,, | 30 | கருஞ்சீரகம் | ,, | 3 |
| கண்டங்கத்திரி ,, | 30 | கார்போக அரிசி | ,, | 3 |
| நிலவாகை ,, | 30 | வசம்பு | ,, | 3 |
| பறங்கிப்பட்டை ,, | 3 | சதகுப்பை | ,, | 3 |
| இலவங்கப்பட்டை ,, | 3 | வெள்ளைப்பூண்டு | ,, | 3 |
| மிளகு ,, | 3 | வலம்புரிக்காய் | ,, | 3 |

* பூந்திக்கொட்டை, புங்காங்கொட்டை எனப்படும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திப்பிலி | ,, | 3 | கோவைச்சாறு | அவுன்ஸ் | 24 |
| கடுகுரோகிணி | ,, | 3 | பிநாறிசங்கன்சாறு | ,, | 24 |
| வெள்ளாட்டுப்பால் | அவுன்ஸ் | 48 | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 48 |

பட்டைகளைப் பொடித்தும், சரக்குகளைப் பால் விட்டரைத்தும் எண்ணெயுடன் சேர்த்து, சாறுகளையும் விட்டுக் கலந்து காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—6, 8-தேக்கரண்டி (காலையில் மட்டும்)

**உபயோகம்:**—கரப்பான், மேகப்படை, சொறி சிரங்கு, சர்மரோகங்கள் தீரும்.

**பத்தியம்:**—புளி, உப்பு, நல்லெண்ணெ, கடுகு, கருவாடு, மீன், புகையிலை போகம்.

## (63) மகா கூழ்பாண்ட கிருதம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெரும்பூசணிக்காய்ச்சாறு | அவுன்ஸ் | 48 | சாதிக்காய் | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| | | | சாதிப்பத்திரி | ,, | $\frac{1}{2}$ |
| செவ்விளநீர்தண்ணீர் | ,, | 24 | மாசிக்காய் | ,, | $\frac{1}{2}$ |
| சோற்றுக்கற்றாழைசாறு | ,, | 24 | கடுக்காய் | ,, | $\frac{1}{2}$ |
| தென்னம்பூச்சாறு | ,, | 24 | தான்றிக்காய் | ,, | $\frac{1}{2}$ |
| தாழைவிழுதுச்சாறு | ,, | 24 | நெல்லிவற்றல் | ,, | $\frac{1}{2}$ |
| பசும்பால் | ,, | 48 | வால்மிளகு | ,, | $\frac{1}{2}$ |
| பசுநெய் | ,, | 48 | சீரகம் | ,, | $\frac{1}{2}$ |
| குரோசானி ஓமம் | ரூபாயெடை | $\frac{1}{2}$ | ஏலம் | ,, | $\frac{1}{2}$ |
| கொத்தமல்லி | ,, | $\frac{1}{2}$ | கற்கண்டுபொடி | ,, | 3 |
| கடுக்காய்ப்பூ | ,, | $\frac{1}{2}$ | காட்டாத்திப்பூ | ,, | $\frac{1}{2}$ |

சரக்குகளைப் பசும்பாலால் அரைத்துக்கரைத்து எரித்து வடித்து கற்கண்டு பொடியைச் சேர்த்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—$\frac{1}{2}$, $\frac{3}{4}$-அவுன்ஸ் கிருதத்தில் ஒரு கிரைன்ஸ் அப்ரகச் செந்தூரம் கலந்து காலை மாலை கொடுக்கலாம்.

**உபயோகம்:**—மேகம்-20, பிரமேகம்-21, காமாலை-13, கிராணி-11, பித்தம்-40, உஷ்ணம், கைகாலெரிவு, நீர்கடுப்பு, அஸ்திரவெட்டை தீரும்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (64) மகா கூழ்பாண்ட லேகியம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெரும்பூசணிக்காய்ச்சாறு | அவுன்ஸ் | 48 | தாளிசபத்திரி | ரூபாயெடை | 5 |
| | | | சீரகம் | ,, | 5 |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, | 12 | கோஷ்டம் | ,, | 5 |
| தாழைவிழுதிச்சாறு | ,, | 12 | கொத்தமல்லி | ,, | 5 |
| தென்னம்பூச்சாறு | ,, | 12 | மாசிக்காய் | ,, | 5 |
| பசும்பால் | ,, | 24 | மிளகு | ,, | 5 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நெய் | ,, | 6 | ஏலம் | ,, | 5 |
| தேன் | ,, | 6 | சாதிக்காய் | ,, | 5 |
| சர்க்கரை | ரூபாயெடை | 20 | சாதிபத்திரி | ,, | 5 |
| அதிமதுரம் | ,, | 5 | | | |

முதலில் சாற்றையும், பாலையும் ஒன்று சேர்த்து, சர்க்கரையைக் கொட்டி பாகுசெய்து, பின்னர் சூரணித்துத் தனித்தனியே எடை போட்டெடுத்த சரக்குச் சூரணங்களைக் கொட்டிக் கிண்டி, தேனையும், நெய்யையும் சேர்த்துப் பிசைந்து கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—1, $1\frac{1}{4}$-ரூபாயெடை (காலை மாலை)

**உபயோகம்:**—அஸ்தி சுரம், அஸ்திவெட்டை, சோகை-9, காமாலை-13, பிரமியம்-21, நீர்சுருக்கு, உஷ்ணரோகங்கள் தீரும்.

**பத்தியம்:**—புளி, புகையிலை, போகம்.

## (65) மகா தாளிசப்பத்திரிச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தாளிசபத்திரி | ரூபாயெடை | 15 | திப்பிலி | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| ஏலம் | ,, | $1\frac{1}{2}$ | கோஷ்டம் | ,, | $1\frac{1}{2}$ |
| கிராம்பு | ,, | $1\frac{1}{2}$ | அக்ராகாரம் | ,, | $1\frac{1}{2}$ |
| சாதிக்காய் | ,, | $1\frac{1}{2}$ | கடுக்காய் | ,, | $1\frac{1}{2}$ |
| சாதிபத்திரி | ,, | $1\frac{1}{2}$ | தான்றிக்காய் | ,, | $1\frac{1}{2}$ |
| வால்மிளகு | ,, | $1\frac{1}{2}$ | நெல்லிவற்றல் | ,, | $1\frac{1}{2}$ |
| இலவங்கப்பட்டை | ,, | $1\frac{1}{2}$ | சடாமாஞ்சில் | ,, | $1\frac{1}{2}$ |
| வாய்விளங்கம் | ,, | $1\frac{1}{2}$ | சோம்பு | ,, | $1\frac{1}{2}$ |
| கொத்தமல்லி | ,, | $1\frac{1}{2}$ | சர்க்கரை | ,, | 30 |
| சீரகம் | ,, | $1\frac{1}{2}$ | | | |

சர்க்கரை நீக்கி மற்றவைகளைத் தனித்தனியே இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து, எடைப்போட்டுச் சேர்த்து, சர்க்கரையையும் கலந்து கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—திரிகடிபிரமாணம் (காலை மாலை)

**உபயோகம்:**—காசம், க்ஷயம், பித்தபாண்டு, பித்தவெட்டை, ஈளை, அஸ்தி சுரம், அஸ்திவெட்டை, நாவரட்சி, கைகாலெரிவு, கிராணி, விக்கல், பொருமல் தீரும்.

## (66) மகா தூதுளைக் கிருதம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தூதுளைச்சமூலம் | ரூபாயெடை | 100 | நீர்முள்ளிவேர் | ரூபாயெடை | 50 |
| கண்டங்கத்திரிச்சமூலம் | ,, | 50 | | | |

இவற்றை இடித்து 96-பயின்ட் தண்ணீரில் போட்டு, 12-பயிண்டாகச் சுண்டவைத்த கஷாயம் அவுன்ஸ் 240-ல்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பசும்பால் | அவுன்ஸ் | 120 | திப்பிலி | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| பசுநெய் | ,, | 120 | மிளகு | ,, | $1\frac{1}{2}$ |
| தேன் | ,, | 12 | கடுக்காய் | ,, | $1\frac{1}{2}$ |
| இஞ்சிச்சாறு | ,, | 32 | தான்றிக்காய் | ,, | $1\frac{1}{2}$ |
| செவ்வல்லிக்கொடி | | | நெல்லிக்காய் | ,, | $1\frac{1}{2}$ |
| | ரூபாயெடை | 3 | கோஷ்டம் | ,, | $1\frac{1}{2}$ |
| சிறுகாஞ்சொறிவேர் | ,, | 3 | தாளிசப்பத்திரி | ,, | $1\frac{1}{2}$ |
| ஆடாதோடைவேர் | ,, | 3 | சடாமாஞ்சில் | ,, | 3 |
| கண்டங்கத்திரிவேர் | ,, | 6 | அதிமதுரம் | ,, | 3 |
| முசுமுசுக்கை | ,, | 6 | சீரகம் | ,, | 3 |
| நன்னாரிவேர் | ,, | $1\frac{1}{2}$ | தேற்றாவிரை | ,, | 3 |
| சிறுநாகப்பூ | ,, | $1\frac{1}{2}$ | கற்கண்டு | ,, | 8 |
| கொடிவேலிவேர் | ,, | $1\frac{1}{2}$ | சுக்கு | ,, | $1\frac{1}{2}$ |

வேர்களையும், சரக்குகளையும் பால்விட்டரைத்துக் கரைத்து எரித்து வடித்து, தேனையும், கற்கண்டையும் சேர்த்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—$\frac{1}{2}$, $\frac{3}{4}$-தேக்கரண்டி (காலை மாலை)

**உபயோகம்:**—ஈளை, இருமல், சுவாசகாசம்-5, பொருமல், இரைப்பு தீரும்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (67) மகா தூதுளைச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| *தூதுளைப்பழம் | ரூபாயெடை | 15 | மிளகு | ரூபாயெடை | 3 |
| *கண்டங்கத்திரிப்பழம் | ,, | 15 | சிற்றரத்தை | ,, | 3 |
| *சிவகரந்தைப்பழம் | ,, | 15 | தாளிசப்பத்திரி | ,, | 9 |
| கோரோசனை | ,, | $\frac{3}{4}$ | | | |

முதலில், மிளகு, சிற்றரத்தை, தாளிசபத்திரி இவைகளை தனித்தனியே இளவறுப்பாய் வறுத்து, சூரணித்து, பழங்களையும் தனித்தனியே சூரணித்து யெடை போட்டு எடுத்து, பின் கோரோசனையையும் சேர்த்துக் கலந்து கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—திரிகடிப் பிரமாணம். (காலை மாலை)

**உபயோகம்:**—கபரோகங்கள் தீரும்.

**அநுபானம்:**—நெய்; சர்க்கரை.

## (68) மகா ரஜத பஸ்பம்

அரிதாரத்தை எலுமிச்சம்பழச்சாறு விட்டு நன்றாய் அரைத்து துணியில் தடவி வெள்ளி தகட்டுக்குக் கவசம் செய்து, பின் சீலைமண்செய்து 25-வரட்டியில் புடமிடவும். இவ்விதமாக கவசம் செய்து 14-புடமிட பஸ்பமாகும்.

* உலர்த்திச் சூரணிக்கவும்.

**பெரியவர்கள் அளவு:**—4, 5-கிரைன்ஸ் (காலை மாலை)

**உபயோகம்:**—மேகம், பிரமேகம், கிரிச்சுரம், அஸ்திச்சுரம் தீரும்.

**அநுபானம்:**—நெய்; வெண்ணெய்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (69) மகா ரசபஸ்பம்

ஒரு மண்சட்டியில் 3-ரூபாயெடை கந்தகத்தைப் போட்டு, சடாக்கினியாய் எரிக்க கந்தகம் உருக்கும், அந்தச் சமயம் 21-ரூபாயெடை ரசத்தை விட்டுக் கிண்டிக் கொண்டிருந்தால் கருத்து தூளாகிவிடும். பின் வேறு மண்சட்டியில் பாதிவரை செங்கற்பொடியைப் போட்டு, அதன் மேல் 8-ஆழாக்கு கறியுப்பைக் கொட்டி பரப்பி, அதன்மேல் ரசக்கந்தியை வைத்து மேல் சட்டியால் மூடி, வாயிக்குச் சீலைமண்செய்து 12-மணி நேரம் காடாக்கினியாய் எரிக்க மேல் சட்டியில் ரசம் பதங்கி பஸ்பமா யிருக்கும்.

**பெரியவர்கள் அளவு:**—½-பணவிடை (காலை மாலை)

**உபயோகம்:**—சுரம்-64, மாந்தம்-8, காசம்-5, சன்னி-13, நேத்திர ரோகம்-94, அதிசாரம்-6, மேகம்-20-ம் தீரும்.

**அநுபானம்:**—நெய், வெண்ணெய், மகா வல்லாரைக்கிருதம்.

**பத்தியம்:**—கடும்பத்தியம்.

## (70) மகா வல்லாரைக் கிருதம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வல்லாரைச்சாறு | அவுன்ஸ் | 48 | கிராம்பு | ரூபாயெடை | 1¼ |
| பொடுதலைச்சாறு | ,, | 48 | வால்மிளகு | ,, | 1¼ |
| பொன்னாங்காணிச்சாறு | ,, | 48 | சாதிக்காய் | ,, | 1¼ |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, | 48 | சாதிபத்திரி | ,, | 1¼ |
| பசுநெய் | ,, | 96 | மாசிக்காய் | ,, | 1¼ |
| பசும்பால் | ,, | 96 | கடுக்காய்ப்பூ | ,, | 1¼ |
| அதிமதுரம் | ரூபாயெடை | 1¼ | கற்கண்டு | ,, | 12 |
| ஏலம் | ,, | 1¼ | | | |

சரக்குகளைப் பாலால் அரைத்துக் கரைத்துக் கலந்து, எரித்து வடித்து கற்கண்டைச் சேர்த்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு ரூபாயெடை யளவு கிருதத்தில் ½-பணவிடை ரசபஸ்பம் சேர்த்துக் கொடுக்கலாம்.

**உபயோகம்:**—மேகம் 20, கிரந்தி 9, பிரமேகம் 21, மேகசூலை, சொறி, சிரங்கு, யோனிப்புற்று, நீர்க்கடுப்பு தீரும்.

**பத்தியம்:**—புளி, நல்லெண்ணெய், புகையிலை.

## (71) மகா வில்வாதி லேகியம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வில்வவேர் | ரூபாயெடை | 75 | சிற்றாமுட்டிவேர் | ரூபாயெடை | 1 |
| நன்னாரிவேர் | ,, | 1 | பேராமுட்டிவேர் | ,, | 1 |
| விலாமிச்சைவேர் | ,, | 1 | கொடிவேலிவேர் | ,, | 1 |
| குட்டிவிளாவேர் | ,, | 1 | முன்னைவேர் | ,, | 1 |
| விளாவேர் | ,, | 1 | பாதிரிவேர் | ,, | 1 |
| வாகைவேர் | ,, | 1 | முசுமுசுக்கைவேர் | ,, | 1 |
| நிலவாகைவேர் | ,, | 1 | தேற்றாவேர் | ,, | 1 |

இவற்றைப் பொடித்து 10-பயின்ட் தண்ணீரில் போட்டு, பத்தி லொன்றாகச் சுண்டக் காய்ச்சிய;

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஷாயம் | அவுன்ஸ் | 20 | சந்தனம் | ரூபாயெடை | 1 |
| இஞ்சிச்சாறு | ,, | 12 | சகஸ்திரபேதி | ,, | 1 |
| புளிப்புமாதுளம்பழசாறு | ,, | 12 | சிறுநாகப்பூ | ,, | 1 |
| பசும்பால் | ,, | 12 | செண்பகப்பூ | ,, | 1 |
| தேன் | ,, | 6 | வில்வப்பூ | ,, | 1 |
| பசுநெய் | ,, | 6 | இலுப்பைப்பூ | ,, | 1 |
| ஏலம் | ரூபாயெடை | 1 | சடாமாஞ்சில் | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 | வேப்பம்பருப்பு | ,, | 1 |
| கொத்தமல்லி | ,, | 1 | பருத்திப்பருப்பு | ,, | 1 |
| கோஷ்டம் | ,, | 1 | கடுக்காய் | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | தான்றிக்காய் | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | நெல்லிவற்றல் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | தாளிசபத்திரி | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | சிறுதேக்கு | ,, | 1 |
| அக்ராகாரம் | ,, | 1 | வாலுளுவையரிசி | ,, | 1 |
| சீரகம் | ,, | 1 | திராக்ஷைப்பழம் | ,, | 1 |
| கருஞ்சீரகம் | ,, | 1 | சர்க்கரை | ,, | 25 |
| வாய்விளங்கம் | ,, | 1 | பேரீச்சம்பழம் | ,, | 1 |

முதல் சரக்குகளைத் தனித்தனியே இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து எடை போட்டுக் கலந்து வைத்துக்கொண்டு; பால், கஷாயம், சாறு இவைகளை ஒன்று சேர்த்து, அதில் சர்க்கரையைக் கலந்து பாகுபதமாக்கி, பின்னர் தூளைக் கொட்டிக் கிண்டி, தேனையும், நெய்யையும சேர்த்துப் பிசைந்து கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**-ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் (காலை மாலை)

**உபயோகம்:**—பாண்டு, விஷப்பாண்டு, கைகாலெரிவு, வீக்கம், கிராணி, பொருமல், வயிற்றெரிச்சல், வாந்தி, ஆகாரவெறுப்பு பித்த ரோகங்கள் தீரும்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (72) மாதுளம்பழ சர்பத்

| | | | |
|---|---|---|---|
| மாதுளம்பழச்சாறு | அவுன்ஸ் 48 | சர்க்கரை | ரூபாயெடை 180 |
| பன்னீர் | ,, 12 | | |

ஒன்று சேர்த்து, தேன் பதமாய்க் காய்ச்சிக் கொள்ளவும்.

உபயோகம்:—தண்ணீருடன் கலந்து சாப்பிட பித்தசாந்தி யுண்டாகும்.

## (73) மாந்த மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| ஓமம் | ரூபாயெடை 1 | வசம்பு | ரூபாயெடை 1 |
| சுக்கு | ,, 1 | கொத்தமல்லி | ,, 1 |
| திப்பிலி | ,, 1 | குரோசாணி ஓமம் | ,, 1 |
| சீரகம் | ,, 1 | சாரணைவேர் | ,, 1 |
| கருஞ்சீரகம் | ,, 1 | | |

ஒன்று சேர்த்து, தண்ணீர் விட்டு 6-மணி நேரம் அரைத்து, பட்டாணி பயறு பிரமாணம் மாத்திரைகளாகச் செய்துக் கொள்ளவும்.

குழந்தைகள் அளவு:—1, 2-மாத்திரை (காலை மாலை)

உபயோகம்:—மாந்தம் தீரும்.

அநுபானம்:—சுடுதண்ணீர்; முலைப்பால்.

## (74) மிர்தார்சிங்கு பிளாஸ்திரி

10-ரூபாயெடை மிர்தார்சிங்கி தூளை 40-அவுன்ஸ் சைதூன் எண்ணெய் (Oil Olive) 40-அவுன்ஸ் தண்ணீரும் கலந்ததில் கொட்டி அடுப்பேற்றி, சிறு தீயாக எரித்துக் கிண்டிக் கொண்டிருந்து, பதத்திற்கு வந்தவுடன் இறக்கிக் கொள்ளவும். தண்ணீர் போதாமலிருந்தால் ஆவித் தண்ணீர் (Distilled Water) சேர்த்துக் கொள்ளவும்.

உபயோகம்:—துணியில் தடவி வெட்டுக்காயங்களுக்கும், இரு பிளவை ஒன்றிக்கவும், கட்டிகளைக் கரைக்கவும் உபயோகிக்கலாம்.

## (75) முடக்கோத்தான் எண்ணெய்

| | | | |
|---|---|---|---|
| முடக்கொத்தான் சாறு அவுன்ஸ் | 36 | கடுகுரோகிணி ரூபாயெடை | 3 |
| | | கொடிவேலிவேர் ,, | 3 |
| சிற்றாமணக்கெண்ணெய் ,, | 36 | வெள்ளைக்காகணம்வேர் ,, | 3 |
| *இலைக்கள்ளிச்சாறு ,, | 36 | சிற்றரத்தை ,, | 3 |
| கழற்சிப்பருப்பு ரூபாயெடை | 3 | சதகுப்பை ,, | 3 |
| தேவதாரு ,, | 3 | † சுத்திசெய்த நேர்வாளம் ,, | 20 |
| இந்துப்பு ,, | 3 | வெள்ளைப்பூண்டு ,, | 12 |
| திப்பிலி ,, | 3 | பெருங்காயம் ,, | 3 |

* இலைக்கள்ளி இலையை அனலில் வாட்டிப் பிழியவும்.

† சுத்திமுறை 60-ம் பக்கம் பார்க்கவும்.

ஒன்று சேர்த்து மைபோ லரைத்துக் கரைத்து, எரித்து வடித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:—** $\frac{3}{4}$, 1-அவுன்ஸ் (காலையில் மட்டும்.)

**உபயோகம்:—**குடல்வாதம்; அண்டவாதம் தீரும்.

**பத்தியம்:—**உப்பு, புளி, புகையிலை, நல்லெண்ணெய்.

## முட்டைத் தைலம்

அண்டத்தைல மென்றதுதான்.

## (76) மேகத்தெண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோவையிலைச்சாறு | அவுன்ஸ் | 24 | சாதிக்காய் | ரூபாயெடை | 1 |
| பொன்னுங்காணிச்சாறு | ,, | 24 | சாதிபத்திரி | ,, | 1 |
| வல்லாரைச்சாறு | ,, | 24 | மாசிக்காய் | ,, | 1 |
| சிறுசெருப்படைச்சாறு | ,, | 24 | கடுக்காய்ப்பூ | ,, | 1 |
| பெருநெருஞ்சில்சாறு | ,, | 24 | சிறுநாகப்பூ | ,, | 1 |
| சீந்தில்தண்டுச்சாறு | ,, | 24 | ஏலம் | ,, | 1 |
| அரசம்பட்டைச்சாறு | ,, | 24 | செண்பகப்பூ | ,, | 1 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 32 | காட்டாத்திப்பூ | ,, | 1 |
| நல்லெண்ணெய் | ,, | 32 | கொடிவேலிவேர்பட்டை | ,, | 3 |
| குரோசானிஓமம் | ரூபாயெடை | 1 | கற்கண்டுத்தூள் | ,, | 6 |

சாற்றையும், எண்ணெயையும் ஒன்று சேர்த்துச் சரக்குகளைப் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து கற்கண்டைச் சேர்த்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:—**1, $1\frac{1}{2}$-அவுன்ஸ் வீதம் (41-நாள் காலையில் மட்டும்.)

**உபயோகம்:—**மேகம் 20; இரணம், கிரந்தி, லிங்கப்புற்று, யோனிப்புற்று, வெடிசூலை, மேகஊரல், சொறி, சிரங்கு, பிரமேகங்கள் தீரும்.

**பத்தியம்:—**இச்சா பத்தியம்.

## ரச சேந்தூரம்

இரசச் செந்தூரமென்றதின் கீழ் பார்க்கவும்.

## (77) ரச மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுத்திசெய்தரசம் | ரூபாயெடை | 3 | சுக்கு | ரூபாயெடை | 3 |
| சுத்திசெய்தகந்தகம் | ,, | 3 | † நேர்வாளம் | ,, | 9 |
| சுத்திசெய்தவெங்காரம் | ,, | 3 | | | |

முதலில் ரசத்தையும், கந்தகத்தையும் அரைத்துச் சேர்த்துக்கொண்டு, பின் மற்றவைகளைச் சேர்த்துத் தண்ணீர்விட்டு 6-மணி நேரம் அரைத்து கடுகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து கொள்ளவும்.

† சுத்திமுறை 60-ம் பக்கம் பார்க்கவும்.

பெரியவர்கள் அளவு:—5, 10-மாத்திரை. குழந்தைகளுக்கு 1, 2.

உபயோகம்:—ஊதுமாந்தம், சுரம், வாதம், வாயு தீரும்.

அநுபானம்:—சுடு தண்ணீர்.

## (78) ரசலிங்க மெழுகு

* இரச கற்பூரம், * இலிங்கம், இவை இரண்டையும் சம அளவாக எடுத்து முலைப்பாலால் 3-மணி நேரமும், எலுமிச்சம்பழச்சாற்றால் 3-மணி நேரமும், தேனினால் 3-மணி நேரமும் அரைத்து ஒரு இரும்புக் கரண்டியில் போட்டுக் கொஞ்சம் எலுமிச்சம்பழச்சாறு விட்டு அனலில் பிடிக்க உருகி மெழுகாகும்.

பெரியவர்கள் அளவு:—ஒரு பணவிடை.

உபயோகம்:—சூதகவலி, வயிற்றுவலி, வாயு தீரும்

அநுபானம்:—பனைவெல்லம்.

பத்தியம்:—இச்சா பத்தியம்.

## ராஜ அப்ரக பஸ்பம்

அப்ரக பஸ்பமென்றதைப் பார்க்கவும்.

## (79) ராஜ அம்ஸபோடலி மாத்திரை

சங்கை துண்டுகளாக்கி ஒரு கலயத்தில் போட்டு, குப்பைமேனிசார் விட்டு வாயைமூடி சீலமண் செய்து, 50-வரட்டியில் புடமிட பஸ்பமாகும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அந்தசங்குபஸ்பம் | ரூபாயெடை | 3 | சுத்திசெய்த நாவி | ரூபாயெடை | 3 |
| சுக்கு | ,, | 3 | சுத்திசெய்த கந்தகம் | ,, | 3 |
| மிளகு | ,, | 3 | சுத்திசெய்த ரசம் | ,, | 3 |
| திப்பிலி | ,, | 3 | பொரித்தவெங்காரம் | ,, | 3 |

ஒன்று சேர்த்து, எலுமிச்சம்பழச்சாற்றால் 6-மணிநேரம் அரைத்து, குன்றிமணி யெடை யளவாக மாத்திரைகள் உருட்டி, உலர்த்திக் கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—1, 2-மாத்திரைகள்.

உபயோகம்:—கிராணி 11-ம் தீரும்.

அநுபானம்:—மிளகு தூளும், நெய்யும் கலந்து.

## (80) ராஜ ஏலாதிச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஏலம் | ரூபாயெடை | 20 | சிறு நாகப்பூ | ரூபாயெடை | 1¼ |
| சுக்கு | ,, | 10 | மிளகு | ,, | ¾ |
| கூடைகீறு | ,, | 5 | கிராம்பு | ,, | ½ |
| தாளிசபத்திரி | ,, | 2½ | சர்க்கரை | ,, | 12 |

சரக்குகளைத் தனித்தனியே சூரணித்து எடுத்து எடை போட்டு ஒன்று சேர்த்துக் கொள்ளவும்.

---

* சுத்தி செய்ய வேண்டும்.

பெரியவர்கள் அளவு:—திரிகடிப் பிரமாணம் (காலை மாலை)

உபயோகம்:—இரணம், மேக ஊறல், அரிகிரந்தி, பித்தம்-40, பெரும்பாடு வாதம்-80, எலும்புருக்கி, சொறி சிரங்கு தீரும்

## (81) ராஜாங்கக் கொம்பரக்குத் தயிலம்

30-ரூபாயெடை கொம்பரக்கைப் பொடித்து, 32-படி தண்ணீரில் போட்டு சுண்டக் காய்ச்சிய கஷாயம். படி 4

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பசும்பால் | ,, | 5 | பச்சிலை | ரூபாயெடை | 1 |
| தயிர்தண்ணீர் | ,, | 1 | பூலாங்கிழங்கு | ,, | 1 |
| புளித்தகாடி | ,, | 2 | செவ்வல்லிக்கிழங்கு | ,, | 1 |
| கோஷ்டம் | ரூபாயெடை | 1 | இலவங்கப்பத்திரி | ,, | 1 |
| சடாமாஞ்சில் | ,, | 1 | கஸ்தூரிமஞ்சள் | ,, | 1 |
| இலவங்கப்பட்டை | ,, | 1 | அதிமதுரம் | ,, | 1 |
| சதைகுப்பை | ,, | 1 | சந்தனம் | ,, | 1 |
| கடுகுரோகிணி | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| கிளியூரம்பட்டை | ,, | 1 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| பூஞ்சாந்துப்பட்டை | ,, | 1 | ஏலம் | ,, | 1 |

சரக்குகளை பசும்பாலால் அரைத்துக் கரைத்துக் கலந்து எரித்து வடித்து, 20-நாள் நெல்லுக்குள் வைத்திருந்து உபயோகிக்கவும்.

உபயோகம்:—ஸ்நானம் செய்துவர, சுரம்-64, காசம்-5, பாண்டு-5, சூலை-18, பித்தவெட்டை, பித்தமயக்கம்; வாம் ஊறல், வெட்டை தீரும்.

## ராஜசிந்தாதி லேகியம்

சிந்தாதி லேகிய மென்றதைப் பார்க்கவும்.

## (82) ராஜமார்தாண்ட லேகியம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சங்கம்வேர் | ரூபாயெடை | 36 | கண்டங்கத்திரிவேர் | ரூபாயெடை | 15 |
| செவ்வியம் | ,, | 15 | சிற்றாமுட்டிவேர் | ,, | 8 |
| கொடிவேலிவேர் | ,, | 8 | சீந்தில்வேர் | ,, | 8 |
| வில்வவேர் | ,, | 8 | கிலப்பனைக்கிழங்கு | ,, | 8 |
| திப்பிலிமூலம் | ,, | 8 | | | |

இதில் இடிக்கவேண்டியவற்றை இடித்து, 12-படி தண்ணீரில் போட்டுக் காய்ச்சிய:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஷாயம் | படி | $1\frac{1}{2}$ | கோரைக்கிழங்கு | ரூபாயெடை | 1 |
| சர்க்கரை | ரூபாயெடை | 36 | சீரகம் | ,, | $1\frac{1}{2}$ |
| ஏலம் | ,, | 1 | கருஞ்சீரகம் | ,, | $1\frac{1}{2}$ |
| கிராம்பு | ,, | 1 | சிறுநாகப்பூ | ,, | $1\frac{1}{2}$ |
| பெருங்காயம் | ,, | 1 | கூடைகீறு | ,, | 2 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திப்பிலி | ரூபாயெடை | 1 | சுக்கு | ரூபாயெடை | 6 |
| திப்பிலிமூலம் | ,, | 1 | மிளகு | ,, | 6 |
| சாதிக்காய் | ,, | 1 | தேன் | ,, | 12 |
| சிறுதேக்கு | ,, | 1 | நெய் | ,, | 12 |

கஷாயத்துடன் சர்க்கரையைக் கலந்து பாகுபதமாக்கி, பின் சரக்குகளைத் தனித்தனியே சூரணித்து எடை போட்டுக் கிண்டி, தேன், நெய் சேர்த்துப் பிசைந்து கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—கொட்டைப் பாக்களவு (காலை மாலை.)

**உபயோகம்:**—க்ஷயரோகம் 96; வாதம் 80; பித்தம் 40; குன்மம் 8; விக்கல் 5, பீனிசம் 18; சன்னி 13; சுரம் 64; உப்பிசம்; அஜீரணம்; நெஞ்செரிவு; வாந்தி 5; தீரும்.

**பத்தியம்:**—இச்சா பத்தியம்.

## (83) ராஜாமிர்த சஞ்சீவி லேகியம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தாழைவிழுது | ரூபாயெடை | 36 | சிற்றாமுட்டி | ரூபாயெடை | 36 |
| வல்லாரை | ,, | 36 | சிறுபுள்ளடி | ,, | 36 |
| கொடுப்பை | ,, | 36 | | | |

ஒன்று சேர்த்து இடித்து * 20-மரக்கால் தண்ணீரில் போட்டு, எட்டிலொன்றாகச் சுண்டக் காய்ச்சி, அதில் 60-ரூபாயெடை இஞ்சியைத் தோல் நீக்கி அரைத்துக் கலக்கி, மறுபடி எரித்து ஒரு படியாக வற்ற வைத்த;

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஷாயம் | படி | 1 | திப்பிலி | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| பசும்பால் | ,, | 5 | சிற்றரத்தை | ,, | $1\frac{1}{2}$ |
| இளநீர்தண்ணீர் | ,, | 5 | சாதிபத்திரி | ,, | $1\frac{1}{2}$ |
| சர்க்கரை | ரூபாயெடை | 48 | தாளிசபத்திரி | ,, | $1\frac{1}{2}$ |
| கற்கண்டு | ,, | 48 | அதிவிடயம் | ,, | $1\frac{1}{2}$ |
| கடுக்காய் | ,, | $1\frac{1}{2}$ | வில்வப்பூ | ,, | 12 |
| தான்றிக்காய் | ,, | $1\frac{1}{2}$ | ¶ பறங்கிப்பட்டை | ,, | 12 |
| நெல்லிவற்றல் | ,, | $1\frac{1}{2}$ | பேரீச்சம்பழம் | ,, | 3 |
| ஏலம் | ,, | $1\frac{1}{2}$ | அன்னபேதி | ,, | 3 |
| கிராம்பு | ,, | $1\frac{1}{2}$ | பெருங்காயம் | ,, | 3 |
| சாதிக்காய் | ,, | $1\frac{1}{2}$ | திராக்ஷப்பழம் | ,, | 3 |
| சாதிபத்திரி | ,, | $1\frac{1}{2}$ | கூகைநீறு | ,, | 3 |
| வால்மிளகு | ,, | $1\frac{1}{2}$ | பச்சைக்கற்பூரம் | ,, | $\frac{1}{2}$ |
| கோஷ்டம் | ,, | $1\frac{1}{2}$ | கோரோசனை | ,, | $\frac{1}{2}$ |
| சீரகம் | ,, | $1\frac{1}{2}$ | கஸ்தூரி | ,, | $\frac{1}{2}$ |

* 8-படி 1-மரக்கால். 48-அவுன்ஸ் 1-படி. ¶ பசும்பாலில் வேகவைத்தெடுத்துக் கொள்ளவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அக்ரகாரம் | ரூபாயெடை | $1\frac{1}{2}$ | அபின் | ரூபாயெடை | $\frac{1}{2}$ |
| சிவதைவேர் | ,, | $1\frac{1}{2}$ | ‡ தேற்ருன்விரை | ,, | 3 |
| ஓமம் | ,, | $1\frac{1}{2}$ | சீந்தில் சர்க்கரை | ,, | 24 |
| நறுக்குமூலம் | ,, | $1\frac{1}{2}$ | நெய் | ,, | 24 |
| சுக்கு | ,, | $1\frac{1}{2}$ | குங்குமப்பூ | ,, | $\frac{1}{2}$ |
| மிளகு | ,, | $1\frac{1}{2}$ | தேன் | ,, | 24 |

கடுக்காய்முதல் அதிவிடயம் வரையுள்ள சரக்குகளை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்தும், இதர சரக்குகளை பசும்பாலி லரைத்துக்கொண்டும்; கஷாயம், பால், தண்ணீர் இவற்றுடன் சர்க்கரை, கற்கண்டு இவைகளைச் சேர்த்துப் பாகு பதமாக்கி, சூரணங்களையும்; பாலில் அரைத்து வைத்திருப்பவைகளையும் கொட்டிக் கிண்டி, பின் நெய், தேன் சேர்த்துப் பிசைந்து கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—கொட்டைப்பாக்களவு. (காலை மாலை)

**உபயோகம்:**—மேகம் 20; கிராணி 11; சோகை 9; பாண்டு 5; காமாலை 13; அஸ்திசுரம்; அஸ்தி காங்கை; சீதபேதி தீரும்.

**பத்தியம்:**—இச்சா பத்தியம்.

## (84) ராஜவில்வாதி லேகியம்

75-ரூபாயெடை தோல் நீக்கிய வில்வவேரை, பஞ்சுபோலிடித்து 16-பயின்ட் தண்ணீரில் போட்டு 4-பயிண்டாக சுண்டக் காய்ச்சிய

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஷாயம் | அவுன்ஸ் | 80 | சாதிக்காய் | ரூபாயெடை | 1 |
| சர்க்கரை | ரூபாயெடை | 96 | இலவங்கப்பட்டை | ,, | 1 |
| ஏலம் | ,, | 2 | மிளகு | ,, | 3 |
| கிராம்பு | ,, | 2 | திப்பிலி | ,, | 3 |
| தாளிசபத்திரி | ,, | 2 | செவ்வியம் | ,, | 3 |
| சுக்கு | ,, | 2 | தேன் | அவுன்ஸ் | 6 |
| சிறுநாகப்பூ | ,, | 2 | நெய் | ,, | 6 |

கஷாயத்துடன் சர்க்கரை சேர்த்துப் பாகுசெய்து, சரக்குகளைத் தனித் தனியே சூரணித்து எடை போட்டுக் கொட்டிக் கிண்டி தேன், நெய் சேர்த்து பிசைந்து கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—கொட்டைப்பாக்களவு (காலை மாலை)

**உபயோகம்:**—குன்மம்-8, காசம் 5, கிராணி-11, அதிசாரம்-6, சுரம்-64, வாந்தி-5, பித்தம்-40, விக்கல்-5, இருமல், நெஞ்செரிவு, தேக எரிவு, நீர்க்கட்டு, விஷப்பாண்டு, உப்பிசம், மலசிக்கல் தீரும்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

---

‡ பசும்பாலில் அரைத்துக் கொள்ளவும்.

## (85) லகு அதிசார மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| * கருநாவி | ரூபாயெடை | 1 | அபினி | ரூபாயெடை | 1 |
| கஞ்சாவிரை | ,, | 1 | சாதிக்காய் | ,, | 1 |
| அதிவிடயம் | ,, | 1 | மாங்கொட்டைப்பருப்பு | ,, | 1 |

ஒன்று சேர்த்துச் சீந்தில் சாற்றால் 6-மணிநேரம் அரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—ஒரு மாத்திரை.

உபயோகம்:—அதிசாரம் 6-ம் தீரும்.

## (86) லகுகட்வோங்க மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கொடிக்குறிஞ்சா இலைத் தூள் | ரூபாயெடை | $1\frac{1}{2}$ | அபினி | ரூபாயெடை | $\frac{1}{8}$ |
| | | | விளாம்பிசின் | ,, | $6\frac{3}{4}$ |

ஒன்று சேர்த்து அரைத்து 50-மாத்திரைகளாகப் பங்கிட்டு உருட்டிக் கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—ஒரு மாத்திரை.

உபயோகம்:—சீதபேதி, அதிசாரம், இருமல், கக்குவான் தீரும்.

## (87) லகுக்கிராணி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாதுளம்பிஞ்சி | ரூபாயெடை | 3 | * காந்தம் | ரூபாயெடை | 3 |
| சாதிக்காய் | ,, | 3 | * கல்மதம் | ,, | 3 |
| சாதிபத்திரி | ,, | 3 | * லிங்கம் | ,, | 3 |
| கருவப்பிசின் | ,, | 3 | | | |

ஒன்று சேர்த்து, அத்திப்பாலால் 6-மணிநேரம் அரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—2, 3-மாத்திரை.

உபயோகம்:—கிராணி 11-ம் தீரும்.

அநுபானம்:—வெல்லம்.

## (88) லகுசங்குவடி

புளியிலை, புளியம்பட்டை, புளியம்வேர் இவைகளை எரித்து தண்ணீரில் கரைத்து எரித்து எடுத்த;

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உப்பு | ரூபாயெடை | 15 | வெடியுப்பு | ரூபாயெடை | 1 |
| கல்லுப்பு | ,, | 3 | சங்கு | ,, | 15 |
| இந்துப்பு | ,, | 3 | இரசபஸ்பம் | ,, | 6 |
| சவுட்டுப்பு | ,, | 3 | * கந்தகம் | ,, | 6 |
| வளையலுப்பு | ,, | 3 | * லிங்கம் | ,, | 15 |

* சுத்தி செய்யவேண்டும்.

முதலில் சங்கை எலுமிச்சம்பழச்சாறு விட்டு தூளாகும்வரை கொதிக்க வைத்து எடுத்து, எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து எலுமிச்சம்பழச்சாறு விட்டு 6-மணி நேரம் அரைத்து குன்றிமணி யவ்வளவு பெரிய மாத்திரைகள் உருட்டிக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு மாத்திரை.

**உபயோகம்:**—கிராணி 11; குன்மம் 8; அக்கினிமந்தம்; அஜீரணம்; வாயு; உதரரோகம் தீரும்.

## லகுதூதுளைச் சூரணம்

மகா தூதுளைச்சூரண மென்றதைப் பார்க்கவும்.

## (89) லிங்கக் கட்டு

நத்தச்சூரியிலையை அரைத்து லிங்கத்திற்கு கவசமிட்டு சீலைமண் செய்து 25-வரட்டியில் புடமிடவும்.

## (90) வங்க பஸ்பம்

மனோசிலையை வெற்றிலைச்சாற்றால் அரைத்துச் சுத்தி செய்த வங்க தகடுகளுக்கு கவசம் செய்து, பின் சீலைமண் செய்து 50-வரட்டியில் புடமிடவும். இப்படி புதிது புதிதாக கவசம் செய்து 32-புடமிட பஸ்பமாகும்.

**பெரியவர்கள் அளவு:**—3, 4-கிரைன்ஸ்.

**உபயோகம்:**—மூர்ச்சை, அபஸ்மாரம், கபரோகம், அதிசாரம், கிராணி தீரும்.

**அநுபானம்:**—நெய், வெண்ணெய்.

**பத்தியம்:**—இச்சா பத்தியம்.

## (91) வங்கேசுர ரச நஸ்யம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரசம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ | அக்ராகாரம் | ரூபாயெடை | $\frac{1}{4}$ |
| மனோசிலை | ,, | $\frac{1}{4}$ | வெண்ணாவி | ,, | $\frac{1}{4}$ |
| கந்தகம் | ,, | $\frac{1}{4}$ | கருநாவி | ,, | $\frac{1}{4}$ |
| சுக்கு | ,, | $\frac{1}{4}$ | வெங்காரம் | ,, | $\frac{1}{4}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{4}$ | மிளகு | ,, | $2\frac{1}{4}$ |

முதலில் கந்தகத்தையும், ரசத்தையும் ஒன்று சேர்த்துப் பின் கொஞ்சம் மிளகுத்தூள் சேர்த்தரைத்து மற்ற சரக்குகளையும்போட்டு அரைக்க நீலநிற முண்டாகும், அப்போது மீதியுள்ள மிளகுத்தூளையும் சேர்த்து 12-மணி நேரம் அரைத்து எடுத்துக் கொள்ளவும்.

**உபயோகம்:**—பாசிப்பயறு பிரமாணம் நஸ்யமிட சன்னி தோஷம், மண்டை சிலேத்பனம் தீரும்.

* சுத்தி செய்யவேண்டும்.

## (92) வஜ்ரவல்லி லேகியம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சிற்றரத்தை | ரூபாயெடை | 6 | கண்டங்கத்திரி | ரூபாயெடை | 24 |
| திப்பிலி | ,, | 6 | சர்க்கரை | ,, | 36 |
| தாளிசபத்திரி | ,, | 6 | பசும்பால் | அவுன்ஸ் | 12 |
| அக்ராகாரம் | ,, | 6 | தேன் | ,, | 12 |
| | | | நெய் | ,, | 12 |

சரக்குகளை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்துக்கொண்டு, பாலுடன் சர்க்கரையைச் சேர்த்து பாகு செய்து சூரணங்களைக் கொட்டிக் கிண்டி பின் நெய், தேன் சேர்த்து பிசைந்து கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—ஒரு கொட்டைப்பாக்களவு. (காலை மாலை)

**உபயோகம்:**—இருமல், ஈளை, கபரோகங்கள் தீரும்.

## (93) வாதராக்ஷச எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நல்லெண்ணெய் | அவுன்ஸ் | 48 | பொடுதலைகொழுந்து | ரூபாயெடை | 12 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 48 | முடக்கொத்தான்கொழுந்து | ,, | 12 |
| வேப்பெண்ணெய் | ,, | 48 | வெள்ளைப்பூண்டு | ,, | 12 |
| பசுநெய் | ,, | 48 | கருஞ்சீரகம் | ,, | 3 |
| வாதமடக்கியிலைச்சாறு | ,, | 48 | திப்பிலி | ,, | 3 |
| பிரமியிலைச்சாறு | ,, | 48 | இந்துப்பு | ,, | 3 |
| கழற்சியிலைச்சாறு | ,, | 48 | பெருங்காயம் | ,, | 1¼ |
| | | | கழற்சிபருப்பு | ,, | 4 |

சாற்றாலரைத்துக் கலந்து, காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—3, 4-தேக்கரண்டி. (காலை மாலை)

**உபயோகம்:**—குடல் ரோகங்கள், அண்டவாதம் தீரும்.

**பத்தியம்:**—இச்சா பத்தியம்.

## (94) வாதராக்ஷச மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரசம் | ரூபாயெடை | 3 | அப்ரகம் | ரூபாயெடை | 3 |
| கந்தகம் | ,, | 3 | | | |

இவற்றைச் சுத்தி செய்து, வெள்ளைச்சாரணை சாற்றால் 12-மணி நேரமும்; கோடிவேர் கஷாயத்தால் 3-மணி நேரமும்; துளசிச்சாற்றால் 3-மணி நேரமும்; கடுக்காய், தான்றிக்காய், நெல்லிவற்றல் இவை சேர்ந்த கஷாயத்தால் 3-மணி நேரமும் அரைத்துப் பில்லைதட்டி, வெள்ளைச்சாரணையிலையை அரைத்துக் கனமாய் கவசம் செய்து, கவசம் கருகும்படி புடம்போட்டெடுத்து, கொடிவேலிக் கஷாயத்தால் 12-மணி நேரம் அரைத்து, குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்துக் கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—ஒரு மாத்திரை (காலை மாலை)

உபயோகம்:—சன்னி 13; வாதம் 80; தோஷம் தீரும்.

அநுபானம்:—சுடுதண்ணீர், முலைப்பால்.

பத்தியம்:—இச்சா பத்தியம்.

## (95) வியாக்கிரியாதி ரசாயணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கருந்துளசிச்சாறு | அவுன்ஸ் | 24 | சுக்கு | ரூபாயெடை | 1 |
| கண்டங்கத்திரிச்சாறு | ,, | 12 | மிளகு | ,, | 1 |
| ஆடாதோடைச்சாறு | ,, | 36 | திப்பிலி | ,, | 1 |
| தேன் | ,, | 72 | கடுக்காய் | ,, | 1 |
| ஏலம் | ரூபாயெடை | 1 | தான்றிக்காய் | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 | நெல்லிவற்றல் | ,, | 1 |
| சாதிக்காய் | ,, | 1 | சிற்றரத்தை | ,, | 1 |
| சாதிபத்திரி | ,, | 1 | பேரரத்தை | ,, | 1 |
| இலவங்கப்பட்டை | ,, | 1 | அதிமதுரம் | ,, | 1 |
| தாளிசப்பத்திரி | ,, | 1 | | | |

சரக்குகளைத் தனித்தனியே இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து ஒன்று சேர்த்து நீர்சுண்டும் வரை காய்ச்சிக் கொள்ளவும்.

அளவு:—குழந்தைகளுக்கு $\frac{1}{4}$, $\frac{1}{2}$-தேக்கரண்டி 4-மணிநேரத்திற்கொருதரம்

உபயோகம்:—கக்குவான்; கபரோகங்கள் தீரும்.

## வில்வாதி லேகியம்

"மகா வில்வாதி லேகியம்" "ராஜவில்வாதி லேகியம்" என்றவைகளைப் பார்க்கவும்.

## (96) விழுதி எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விழுதிச்சாறு | அவுன்ஸ் | 48 | வசம்பு | ரூபாயெடை | 1 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 48 | வெங்காயம் | ,, | 1 |
| பசுநெய் | ,, | 48 | கோஷ்டம் | ,, | 1 |
| சுக்கு | ரூபாயெடை | 1 | இலவங்கம் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | ஏலம் | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | | | |

சரக்குகளைப் பசும்பாலால் அரைத்துக் கரைத்து எரித்து வடித்துக் கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—$1\frac{1}{2}$, 2-அவுன்ஸ் (காலை மாலை 3-நாளைக்கு)

உபயோகம்:—கர்ப்பவாயு; சூதகவலி; கர்ப்பப்புழு; கர்ப்பச்சூலை; கர்ப்பவ இசிவு தீரும்.

பத்தியம்:—உப்பில்லாத பத்தியம்.

## (97) வீரக்கட்டு

ரசமும், நாகமும் வகைக்கு ரூபாயெடை 15-சேர்த்தரைத்து பின் வெங்காரம், கந்தகம் வகைக்கு ரூபாயெடை 15-சேர்த்து மூலைப்பால் விட்டரைத்து, வீரத்திற்கு கவசம் செய்து காயவைத்து அதன்மேல் கற்சுண்ணும்பையும், உப்பையும் சமமாக எலுமிச்சம்பழச்சாறுவிட்டு அரைத்து துணியில் தடவி சீலை மண் செய்வதைப்போல் கவசத்தின்மேல் சுற்றி, 25-வாட்டியில் புடமிட வீரம் கட்டுப்படும்.

## (98) வீரசூத சிந்தாமணி

| | | | |
|---|---|---|---|
| மனோசிலை | ரூபாயெடை 3 | ரசம் | ரூபாயெடை 12 |
| இலிங்கம் | ,, 6 | கந்தகம் | ,, 15 |

இவற்றைச் சுத்திசெய்து, கரிசலாங்காணிச்சாறு, முருங்கைப்பூச்சாறு, பிச்சிப்பூச்சாறு, மாதுளம்பூச்சாறு இவைகளால் தனித்தனியே ஒரு நாள் அரைத்து, காயவைத்துப் பொடித்து, கனத்த கண்ணாடி சீசாவில் போட்டு 7-சீலைமண் செய்து; ஒரு சட்டியில் மணல் பரப்பி சீசாவை வைத்து சீசா மறைய மணல் கொட்டி தீபாக்கினியாய் 6-மணி நேரமும் கமலாக்கினியாய் 6-மணி நேரமும்; காடாக்கினியாய் 6-மணி நேரமும் எரித்து ஆறவைத்து எடுத்துப் பார்க்க செந்தூரமா யிருக்கும்.

**பெரியவர்கள் அளவு:**—குன்றிமணி யெடை (காலை மாலை)

### உபயோகமும், அநுபானமும்

அஸ்திசுரத்திற்கு:—வெற்றிலைச்சாறு

இருமல், இளைப்புக்கு:—வில்வாதி லேகியம்

உஷ்ணரோகங்களுக்கு:—தாமரைப்பூச்சாறு

கபாலகுஷ்டத்திற்கு:—குஷ்டத்திற்குண்டானது

காசத்திற்கு:—வில்வாதி லேகியம்

காமாலைக்கு:—வில்வாதி லேகியம்

குன்மத்திற்கு:—வில்வாதி லேகியம், பிரண்டைச் சூரணம்

குஷ்டத்திற்கு:—மெருகன்கிழங்கும் விளாவீர்கமும் சேர்த்து, குழித்தயிலமிறக்கி அதில் ரசகர்ப்பூரமும், செந்தூரமும் ரசத்து.

சுரத்திற்கு:—தாமரைப்பூச்சாறு, வெற்றிலைச்சாறு

சொறி சிரங்கிற்கு:—குஷ்டத்திற் குண்டானது

மாந்தத்திற்கு:—வில்வாதி லேகியம்

மூலத்திற்கு:—மருட்கிழங்குத் தூள் (20-நாள்)

மேகத்திற்கு<br>மேகாணத்திற்கு } பறங்கிப்பட்டைச் சூரணம் (20-நாள்)

வாயுவுக்கு:—பிரண்டைச் சூரணம்

விஷக்கடிக்கு:—குஷ்டத்திற் குண்டானது

பத்தியம்:—புளி, உப்பு, நல்லெண்ணெய், கருவாடு, கடுகு.

### (99) வீர மெழுகு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| * கட்டினவீரம் | ரூபாயெடை | 3 | மிளகு | ரூபாயெடை | 6 |
| சுக்கு | ,, | 6 | திப்பிலி | ,, | 6 |

முதலில் வீரத்தை பிர்மதண்டுச்சாறு விட்டு 12-மணி நேரம் அரைத்துப் பின் சரக்குத் தூள்களைச் சேர்த்துப் போதிய தேன் விட்டு 3-மணி நேரம் அரைத்துக் கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—உளுந்தவ்வளவு.

உபயோகம்:—சன்னி 13; வாதம் 80; சுரம் 64; சூலை 18; மேகம் 20; குஷ்டம் 18; தீரும்.

அநுபானம்:—பனைவெல்லம்.

பத்தியம்:—புளி, புகையிலை.

### (100) வெங்காய எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெங்காயம் | ரூபாயெடை | 3 | சோற்றுக்கற்றாழைசாறு | அவுன்ஸ் | 24 |
| வெந்தயம் | ,, | $1\frac{1}{2}$ | சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 48 |

முதலில் வெங்காயத்தையும், வெந்தயத்தையும் அரைத்து 8-தடவை தண்ணீர் விட்டுக் கழுவி எடுத்து, பின் ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

அளவு:—குழந்தைகளுக்கு 2, 4-தேக்கரண்டி. (காலையில் மட்டும்)

உபயோகம்:—கணை 18; மூலச்சூடு; தேகஎரிவு; கைகாலெரிவு தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

### (101) வெந்தய எண்ணெய்

சோற்றுக்கற்றாழை மடலை இரண்டாகப் பிளந்து அதனுள் 3-ரூபாயெடை வெந்தயத்தை வைத்து மூடி நூலால் சுற்றி மூன்றுநாள் வைத்திருந்து எடுத்து, அந்த வெந்தயத்தைச் சோற்றுக் கற்றாழைச்சாறு விட்டரைத்து 12-அவுன்ஸ் சிற்றாமணக்கெண்ணெயில் கரைத்துக் காய்ச்சி வடித்து அதில்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மிளகு | ரூபாயெடை | $1\frac{1}{2}$ | ஏலம் | ரூபாயெடை | $1\frac{1}{2}$ |
| கசகசா | ,, | $1\frac{1}{2}$ | கற்கண்டு | ,, | $1\frac{1}{2}$ |

சூரணித்துக் கலந்து கொள்ளவும்.

பெரியவர்கள் அளவு:—2 - தேக்கரண்டி குழந்தைகளுக்கு காலை மாலை நாக்கில் தாராளமாய்த் தடவலாம்.

---

* வீரக்கட்டென்றதைப் பார்க்கவும்.

**உபயோகம்:**—கணை-18, தேக எரிவு, கைகாலெரிவு, உஷ்ண ரோகங்கள் தீரும்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (102) வேம்பாடம்பட்டை எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சிற்றாமணக்கெண்ணெய் | அவுன்ஸ் | 96 | கண்டங்கத்திரிவேர் | ரூபாயெடை | 2 |
| | | | நன்னாரிவேர் | ,, | 2 |
| கழற்சிவேர் | ரூபாயெடை | 2 | வேலிப்பருத்திவேர் | ,, | 2 |
| வேம்பாடம்பட்டை | ,, | 2 | கிரந்திநாயகம் | ,, | 2 |
| பெருமரத்துப்பட்டை | ,, | 2 | சுக்கு | ,, | 2 |
| பூதகரப்பான்பட்டை | ,, | 2 | திப்பிலி | ,, | 2 |
| செங்கத்தாரிப்பட்டை | ,, | 2 | கடுக்காய் | ,, | 2 |

இவற்றை எல்லாம் பசும்பால் விட்டரைத்துக் கலக்கி எரித்து வடித்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—3, 4-தேக்கரண்டி (காலை மாலை)

**உபயோகம்:**—வாய், நாக்கு, தொண்டை இவைகளிலுண்டாகும் புற்று; வாய் கிரந்தி; வாய் நாற்றம்; நாக்கு வெடிப்பு; உள்நாக்கு வியாதிகள்; உதடு வெடிப்பு; பல்லீறு வியாதிகள் தீரும்.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## (103) ஜாதிபலாதிச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சாதிக்காய் | ரூபாயெடை | 1 | கடுக்காய் | ரூபாயெடை | 1 |
| ஏலம் | ,, | 1 | நெல்லிவற்றல் | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 | கொடிவேலிவேர் | ,, | 1 |
| இலவங்கப்பட்டை | ,, | 1 | வாய்விளங்கம் | ,, | 1 |
| இலவங்கப்பத்திரி | ,, | 1 | சிறுதேக்கு | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | சோம்பு | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | எள் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | சந்தனம் | ,, | 1 |
| தாளிசபத்திரி | ,, | 1 | கற்பூரம் | ,, | 1 |

கற்பூரம் நீங்கலாக மற்ற சரக்குகளை இளவறுப்பாய் வறுத்துத் தனித் தனியே சூரணித்துப் பின் ஒன்று சேர்த்துக் கொள்ளவும்.

**பெரியவர்கள் அளவு:**—திரிகடிப் பிரமாணம் (காலை, மதியம், மாலை)

**உபயோகம்:**—கிராணி-11, காசம்-5, வாதரோகம், கபரோகம் தீரும்.

## (104) ஸ்ரீ தேவி எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வேலிப்பருத்திவேர் | ரூபாயெடை | 12 | சிவதைவேர் | ரூபாயெடை | 12 |
| | | | சதுரக்கள்ளிவேர் | ,, | 24 |
| வெள்ளைச்சாரணைவேர் | ,, | 12 | திருகுக்கள்ளிவேர் | ,, | 24 |
| முடக்கொத்தான்வேர் | ,, | 12 | கொடிவேலிவேர் | ,, | 12 |

இவைகளைப் பொடித்து 6-படி தண்ணீரில் போட்டு ¾-படியாக சுண்டக் காய்ச்சிய கஷாயம் * அவுன்ஸ் 36.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கடுகு | ரூபாயெடை | 1½ | நிலவேம்பு | ரூபாயெடை | 1½ |
| செவ்வல்லிக்கொடி | ,, | 1½ | செவ்வியம் | ,, | 1½ |
| சுக்கு | ,, | 1½ | கடுக்காய்ப்பிஞ்சு | ,, | 1½ |
| மிளகு | ,, | 1½ | கடுக்காய்ப்பூ | ,, | 1½ |
| திப்பிலி | ,, | 1½ | ஆனைத்திப்பிலி | ,, | 1½ |
| திப்பிலிமூலம் | ,, | 1½ | ஓமம் | ,, | 1½ |
| கடுக்காய் | ,, | 1½ | வெள்ளைப்பூண்டு | ,, | 1½ |
| நெல்லிவற்றல் | ,, | 1½ | பெருங்காயம் | ,, | 1½ |
| தான்றிக்காய் | ,, | 1½ | இந்துப்பு | ,, | 1½ |
| கடுகுரோகிணி | ,, | 1½ | காய்ச்சலவணம் | ,, | 1½ |
| விழாவரிசி | ,, | 1½ | தேங்காய்ப்பால் | அவுன்ஸ் | 48 |
| நல்லெண்ணெய் | ,, | 32 | | | |

சரக்குகளைத் தேங்காய்ப்பாலால் அரைத்துக் கரைத்து எரித்து வடித்து 12-நாள் நெல்லுக்குள் வைத்திருந்து உபயோகிக்கவும்.

**பெரியவர்கள் அளவு:**—2, 3-தேக்கரண்டி. (காலையில் மட்டும்)

**உபயோகம்:**—சூதகசன்னி, சூதகவாயு, சூதகவலி, சூதகசூலை, சகல சூதக ரோகங்களும்; மூர்ச்சை 4, வித்திரிதி 6, குன்மம் 8, உன்மத்தம் 6 தீரும்.

**பத்தியம்:**—கடும் ரோகங்களுக்கு உப்பில்லாப் பத்தியம்; சாதாரணமாக இச்சா பத்தியம்.

## (105) சாதிலிங்கச் சுத்தி

சாதிலிங்கத்தை 3-நாள் குப்பைமேனிச் சாற்றில் ஊறப்போட்டிருந்து பின் எலுமிச்சம்பழச்சாறு விட்டு 3-மணி நேரம் அரைத்து எடுத்துக் கொள்ளவும்.

## (106) ரசகற்பூர சுத்தி

ஒரு பாத்திரத்தில் வெற்றிலையையும், மிளகையும் அரைத்துத் தண்ணீர் அதிகம்விட்டுக் கலக்கிக்கொண்டு, ரசகற்பூரத்தை ஒரு துணியில் முடிந்து, அந்த முடிச்சு பாத்திரத்தி னடிபாகத்தில் படாதபடி கயிற்றால் கட்டித்தொங்கவிட்டு 3-மணி நேரம் பெருந்தீயாய் எரித்து எடுத்துக் கொள்ளவும்.

## ஸ்திரீ பால சிகிச்சை

### சம்பூரணம்.

---

* 48-அவுன்ஸ் 1-படி.

# அளவையும் நிறுவையும்

# WEIGHTS AND MEASURES

| நிறுவைகள் | | | அளவைகள் | | |
|---|---|---|---|---|---|
| 60 கிரைன்ஸ் | = | 1 டிராம் | 60 மினியம் | = | 1 டிராம் |
| 8 டிராம் | = | 1 அவுன்ஸ் | 8 டிராம் | = | 1 அவுன்ஸ் |
| 16 அவுன்ஸ் | = | 1 பவுண்ட் | 20 அவுன்ஸ் | = | 1 பயிண்ட் |

## போது நிறுவைகள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 நெல் (மூன்பின்) | = | 1 கிரைன் | 40 குன்றிமணி | = | 1 களஞ்சு |
| 180 கிரைன்ஸ் | = | 1 தோலா | $1\frac{1}{2}$ விராகனிடை | = | 1 ,, |
| 1 தோலா | = | 1 ரூபாஎடை | $2\frac{1}{4}$ ,, | = | 1 சவரன் |
| 40 தோலா | = | 1 பவுண்ட் | $1\frac{1}{2}$ களஞ்சு | = | 1 ,, |
| 3 பவுண்ட் | = | 1 வீசை | 6 ,, | = | 1 வைத்திய [பலம் |
| 1 பவுண்ட் | = | 1 ராத்தல் | | | |
| 3 டிராம் | = | 1 தோலா | 3 ரூபாயெடை | = | 1 ,, |
| $\frac{1}{5}$ (மூன்பின்) காலே வீச ரூபாயெடை | = | 1 டிராம் | $3\frac{1}{4}$ விராகனிடை | = | 1 தோலா |
| | | | 12 களஞ்சி | = | 1 பலம் (வியாபாரம்) |
| 36 கிரைன்ஸ் | = | 1 விராகனிடை | | | |
| 32 குன்றிமணி | = | 1 ,, | 6 ரூபாயெடை | = | 1 ,, பலம் |
| 2 களஞ்சி | = | 1 ரூபாஎடை | 1 ரூபாய் | = | 180 கிரைன்ஸ் |
| $2\frac{1}{2}$ தோலா | = | 1 அவுன்ஸ் | $\frac{1}{2}$ ,, | = | 90 ,, |
| 1 டிராம் | = | 1 விராகனிடை | $\frac{1}{4}$ ,, | = | 45 ,, |
| $1\frac{1}{4}$ அவுன்ஸ் | = | 1 பலம் | $\frac{1}{8}$ ,, | = | $22\frac{1}{2}$ ,, |
| 8 பலம் | = | 1 சேர் | 1 தாம்பிர $\frac{1}{4}$-அணா | = | 100 ,, |
| 5 சேர் | = | 1 வீசை | | | |
| 24 தோலா | = | 1 சேர் [எடை | 1 சதுர நிக்கல் 2-அணா | = | 90 ,, |
| 4 நெல்லிடை | = | 1 குன்றிமணி | | | |
| 4 குன்றிமணி | = | 1 பணவிடை | 1 நிக்கல் 1-அணா | = | 60 ,, |
| 12 பணவிடை | = | 1 களஞ்சி | 1 கொழும்புசதம் | = | 48 ,, |
| 8 ,, | = | 1 விராகனிடை | 1 தாம்பிரபைசா | = | 24 ,, |
| | | | 1 தங்கப்பவன் (சாவரன்) | = | 123 ,, |

## போது அளவைகள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| $1\frac{1}{2}$ துளி[1](மூன்பின்) | = | 1 மினியம் | 15, 20 அவுன்ஸ் | = | 1 டிமிளர் |
| 60 மினியம் | = | 1 தேக்கரண்டி. | 20 ,, | = | 1 கொத்து |
| 90 துளி | = | 1 ,, | | | |
| 1 தேக்கரண்டி | = | 1 டிராம் | 6 ,, | = | 1 உழக்கு |
| 4 தேக்கரண்டி | = | 1 மேஜைகரண்டி | 12 ,, | = | $\frac{1}{4}$ படி |
| 2 ,, | = | 1 டிசர்ட்ஸ்பூன் | 24 ,, | = | $\frac{1}{2}$ படி |
| 8 தேக்கரண்டி | = | 1 அவுன்ஸ் | 48 ,, | = | 1 படி |
| 2 அவுன்ஸ் | = | 1 ஒயின்கிளாஸ் | 96 ,, | = | $\frac{1}{8}$ குறுணி |
| 7 அவுன்ஸ் | = | 1 தேக்கோப்பை | 192 ,, | = | 2 நாழி |

# மருந்து பிரயோக அளவுகள்

# DOSES OF ADMINISTRATION

## தமிழ் மருந்துகள்

(இந்த அளவை விகிதம் 6-ம் பாகத்திலுள்ள மருந்துகளுக்கு மட்டும்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெரியவர்களுக்கு கொடுக்கும் அளவு | | | | 1 | பாகமானுல் |
| பிறந்தது முதல் 3-மாதம் வரை | | | | $\frac{1}{16}$ | பதினுறில் ஒருபங்கு |
| 4 மாதம் | ,, | 1 வருஷம் வரை | | $\frac{1}{12}$ | பன்னிரண்டில் ஒருபங்கு |
| 1 வருஷ | ,, | 2 ,, | ,, | $\frac{1}{8}$ | அரைக்கால் பங்கு |
| 2 ,, | ,, | 3 ,, | ,, | $\frac{1}{6}$ | ஆறில் ஒருபங்கு |
| 3 ,, | ,, | 4 ,, | ,, | $\frac{1}{4}$ | கால்பங்கு |
| 4 ,, | ,, | 7 ,, | ,, | $\frac{1}{3}$ | மூன்றில் ஒருபங்கு |
| 7 ,, | ,, | 14 ,, | ,, | $\frac{1}{2}$ | அரைபங்கு |
| 14 ,, | ,, | 20 ,, | ,, | $\frac{2}{3}$ | மூன்றிலிரண்டுபங்கு |
| 21 ,, | ,, | 60 ,, | ,, | 1 | முழுப்பங்கு |

## இங்கிலீஸ் கலவை மருந்து

## MIXTURES

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | முதல் | 3-வயதுக் குழந்தைகளுக்கு | | 1 | தேக்கரண்டியானுல் |
| $\frac{1}{2}$ | ,, | 1 ,, | ,, | $\frac{1}{2}$ | தேக்கரண்டி |
| 3 | ,, | 6 ,, | ,, | $1\frac{1}{2}$ | ,, |
| 6 | ,, | 9 ,, | ,, | 2 | ,, |
| 9 | ,, | 12 ,, | சிறுவர்களுக்கு | 3 | ,, |
| 12 | ,, | 15 ,, | ,, | 4 | ,, |
| 15 | ,, | 18 ,, | ,, | 6 | ,, |
| 18 | ,, | 21 ,, | பால்பர்களுக்கு | 8 | ,, |

**குறிப்பு:**—தூள் மருந்துகளுக்கும் இதே பிரகாரம் 1-முதல் 3-வயதுக் குழந்தைகளுக்கு 1-பாகம் சொல்லியிருந்தால் 3-முதல் 6-வயதுக் குழந்தைகளுக்கு 2-பாகமாக; இந்தவிதமே அதிகப்படுத்திக் கொள்ளவும்.

# விஷய சூசிகை

விஷயம் — பக்கம்

முற்றுப்பெற்றன.

வைத்திய வித்வன்மணி

சி. கண்ணுசாமிபிள்ளை அவர்கள் இயற்றிய

# சிகிச்சாரத்நதீபம்

என்னும் வைத்திய நூல்

[வாலையந்திரப் படங்களுடன் விலை ரூபா **2—8—0.**]

சென்னைமாநகரின்கண் "விடோபா" அவிழ்தசாலையை ஸ்தாபித்தவரும், **"கண்ணுசாமியம்"** என்னும் வைத்தியசேகரத்தின் நூலாசிரியருமான ஸ்ரீமான் கண்ணுசாமி பிள்ளையவர்கள் தெக்நாடுமுதல் வடநாடுவரையிலும் அனுசரித்துவரும் அரிய பெரிய பாகங்களையும், யூனனி வைத்திய முறைகளையும், பெரும்பொருள் செலவிட்டு முடித்து பயன்பெற்றவைகளாயுள்ள பாகங்களையெல்லாம் ஒருங்கு தொகுத்து ஒவ்வொருவரும் எளிதிலுணரும் வண்ணம் தேகபஞ்சபூதம், நாடி, ரோகநிதானம், செய்பாகவிளக்கம், கியாழம், சூர்ணம், மாத்திரை, மெழுகு, லேகியம், கிருதம், செந்தூரம், பற்பம், தீநீர், திராவகம், ஆசவம், அரிஷ்டம் பத்தியம் இன்னும் பல பாகங்களையும் இலம்பகங்களாக வரைந்துள்ளார். இந்நூல் சில வருடங்களுக்குமுன் செலவாய்விட்டதை கடிதவிலை யேற்றத்தினால் உடனே அச்சிடக்கூடாமையாக இருந்தது. ஆயினும் பலர் வேண்டுதலுக்கிணங்கி இந்நூலில் விடுபட்டுள்ள சிறிது எடை பாகங்களையும் சில செய்பாக திருத்தங்களையும் ஷை ஆசிரியர் மூலமாக திருத்தி உயர்தரமான கிளேஸ்கடிதத்தில் (மூன்றாம் பதிப்பு) அச்சிட்டு இருக்கின்றோம். இந்நூல் வைத்தியத்தொழிலை கற்க விரும்பும் மாணவர்களுக்கும் வைத்தியர்களுக்கும் மற்ற ஏனையோருக்கும் பெரும் நன்மையைத் தரத்தக்கதென்பது எவரும் அறிந்த உண்மை.

சிகிச்சாரத்நதீபம் இரண்டாம் பாகமாகிய

# வைத்தியசிந்தாமணி

[விலை ரூபா **2.**]

இந்த **"வைத்தியசிந்தாமணி"** என்னும் நூலானது பூர்வாசிரியர்களில் ஒருவராகிய யூகிமாமுனி என்பவரால் கூறப்பட்டது. இதனில் ரோகநிதானங்களை ஏறக்குறைய கூறியிருப்பதினால் இதனை ஆதாரவாகக்கொண்டு வசனகாவியமாக எழுதினதுமல்லாமல், சிலவிடங்களில் சமயத்திற் கேற்றவாறு மற்றும் சில கிரந்தங்களினின்று சிலது சேர்க்கப்பட்டும் ஒவ்வொரு ரோகங்களின் இறுதியில் ஆங்கிலேய மருத்துவத்தில் கூறப்பட்டுள்ள ரோக நிதான விஷயங்களை மதாந்தரமாகவும் அமைத்து, காலதேச வர்த்தமானங்களுக்குத் தக்கவாறு சிகிச்சைகளையும் கூட்டி அநேக அருமைவாய்ந்த முறைகளுடன் எழுதப்பெற்றிருக்கின்றது.

எல்லா புஸ்தகங்கள் அடங்கிய கிரய ஜாபிதா தேவையுள்ளவர்கள் தங்கள் விலாசத்தைத் தெரிவித்தால் இனமாக அனுப்பப்படும்.

**B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,**

நெ. 41, வெங்கடாசுமய்யர் தெரு, மின்ட்பில்டிங் போஸ்டு, சென்னை.

